# அமெரிக்காவின் நவீனப் பொருளாதார வளர்ச்சி

ஆசிரியர் : **K. A. ஜோசப்**

தமிழாக்கம் : **தி. சி. மோகன்**




**தமிழ் வெளியீட்டுக் கழகம்**

தமிழ்நாடு - அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை - 14

# அமெரிக்காவின் நவீனப் பொருளாதார வளர்ச்சி

# Modern Economic Development of U. S. A.

ஆசிரியர் :

கே. ஏ. ஜோசப், எம். ஏ., எல். டி. (Dip. in Adult Education)
பொருளாதாரத்துறைப் பேராசிரியர்,
கிறிஸ்துக் கல்லூரி,
இரிஞ்சாலக்குடா (கேரளா)

தமிழாக்கம் :

தி. சி. மோகன், பி. ஏ. (ஆனர்சு)
பொருளாதாரத்துறை உதவிப் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி,
சென்னை - 5

தமிழ் வெளியீட்டுக் கழகம்
செயின்ட் ஜார்ஜ் கோட்டை, சென்னை-9

# அணிந்துரை

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி. ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், ''தமிழிலேயே கற்பிப்போம்'' என முன் வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன் வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி ஆகிய இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்துணையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில், அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர். இவற்றுள் ஒன்றான 'அமெரிக்காவின் நவீனப் பொருளாதார வளர்ச்சி' என்னும் இந்நூலை அனைவரும் வரவேற்பார்கள் என நம்புகிறோம்.

கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் இதுவரை வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளிலும் 49 நூல்கள் வெளி வந்துள்ளன.

இத்துறையை இன்னும் விரிவு படுத்தச் சென்னை அரசினர், தமிழ் வெளியீட்டுக் கழகம் ஒன்றை நிறுவி யுள்ளனர். அதன் மூலம் இன்னும் வேறு பல நூல்கள் தமிழில் வெளிவர இருக்கின்றன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள்.

எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை ஆதலின் உழைத்து வெற்றி காண் போம்.

தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பல்வகை உதவிகளுக்கும், ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

**எம். பக்தவத்ஸலம்,**
*தமிழக நிதி, கல்வியமைச்சர்.*

# மொழி பெயர்ப்பாளரின் முன்னுரை

ஒரு நாடு பொருளாதாரத் துறைப் பரிணுமத்தின் பல்வேறு படிகளையும் காலப்போக்கில் கடந்துவரும் காட்சியைச் சித்தரிப்பதே அந்நாட்டின் பொருளாதார வளர்ச்சி வரலாருகும். இன்றையப் பொருளாதாரப் பிரச்சினைகளையும், வருங்காலச் சிக்கல்களையும் தீர்க்கும் வழி கண்டறிவதற்குக் கடந்தகாலப் பொருளாதார நிகழ்ச்சி வரலாறு இன்றியமையாததாகும். அதிலும் பொருளாதார வளர்ச்சிப் பாதையில் முன் நிற்கும் நாடுகளின் வரலாறுகள் அப்பாதையில் பின் தங்கிய நாடுகளுக்கு, அவற்றின் முன்னேற்றத்தை விரைவாக்கும் வழி வகைகளைப் புகட்டக் கூடிய முன்மாதிரிகளாகவும் அமையக்கூடும். அன்றியும் முன்னேறிய நாடுகள் செய்துள்ள தவறுகளையும், அறியாமைகளையும் தவிர்த்துக் கொள்ளவும் அவற்றின் வரலாறுகள் பயன்படுபவனவாகும். இவ்வகையில் உலகத்து நாடுகளனைத்துக்கும் எடுத்துக்காட்டாக விளங்கக் கூடிய பொருளாதார வளர்ச்சி வரலாறுகளுள் அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாறு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை யாவரும் ஏற்றுக்கொள்வர்.

அமெரிக்க ஐக்கிய நாட்டின் பொருளாதாரம் உலகத்தின் நல்வாழ்வுக்கு எத்துணை முக்கியத்துவம் வாய்ந்தது என்பதற்கு அமெரிக்க அதிபர் கென்னடி 1962, ஜூன் திங்களில் அமெரிக்காவிலுள்ள ' ஏல் ' பல்கலைக் கழகத்திற்கு அளித்த உரையில் பகர்ந்த கூற்றொன்றே சான்ருகும். அக்கூற்ருவது : ' உலகத்தின் பாதுகாப்பும், சுயேச்சையின் வருங்காலமுங்கூட இதுவரை என்றுமிலாத அளவுக்கு அமெரிக்க ஐக்கிய நாடு தன் உள்நாட்டு வாழ்க்கையை எவ்வளவு ஒழுங்காகவும், நல்லறிவுடனும் நடத்திக் கொள்கின்றதென்பதையே பொறுத்திருக்கிறது '.

தமிழில் பாடங்களை பி. ஏ. வகுப்பிற்குக் கற்பிக்கும் முயற்சிக்குத் துணையாகப் பல்வேறு துறைகளிலும் நூல்கள்

புதிதாக எழுதப்பட்டுள்ளன. பொருளாதாரத் துறை மாணவர்கள் பி. ஏ. வகுப்பில் கற்கவேண்டிய பாடங்களுள் அமெரிக்காவின் நவீனப் பொருளாதார வளர்ச்சியும் ஒன்றாகும். அதற்குரிய ஒரு சிறு நூலைப் பேராசிரியர் கே. ஏ. ஜோசப், எம். ஏ., எல். டி. அவர்கள் ஆங்கிலத்தில் எழுதித் தந்துள்ளார். அந்நூலைத் தமிழில் மொழி பெயர்க்கும் பணி எனக்கிடப்பட்டது. என்னாலியன்ற வரை ஆங்கில உரையின் பொருளும், விறுவிறுப்பும் கெடாதவாறு தமிழ்ப்படுத்தியுள்ளேன். நான் கையாண்டுள்ள நடையும் பி. ஏ. வகுப்பு மாணவர்களுக்கு ஏற்றதாயிருக்குமென நம்புகிறேன். மொழிக் குறை ஏதேனுமிருப்பின் அதற்கு நானே பொறுப்பாவேன்.

இத்தமிழாக்கப் பணியை எனக்களித்துத் தமிழன்னைக்குச் சேவை செய்யும் வாய்ப்பினை எனக்கீந்த தமிழ் நாடு அரசினர்க்கும் 'தமிழ் வெளியீட்டுக் கழகத்திற்கும்' நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன்.

தி. சி. மோகன்

# உள்ளுறை



# 1. முன்னுரை

## புதுக் கண்டம்

அமெரிக்காக் கண்டத்தைக் கண்டு பிடித்ததும், அங்கே மக்கள் குடியேறியதும், அக்கண்டம் வளர்ச்சி பெற்றதும் உலக வரலாற்றின் போக்கையே மாற்றிவிட்ட நிகழ்ச்சிகளாகும். இவற்றால் இடைக் காலத்திலே (*Mediaeval age*) நிலவி வந்த குறுகிய தல மனப்பான்மை (*Parochialism*) தகர்ந்தது. ஐரோப்பிய மறுமலர்ச்சியும் (*Renaissance*), சமயச் சீர்திருத்தமும் (*Reformation*), அப்போது மக்களைப் புதிய இடங்களையும் புதிய செல்வங்களையும் நாடத் தூண்டிக்கொண்டிருந்தன. இவைகளால் மனக் கிளர்ச்சியுற்ற மக்கள் தங்கள் முன்னேற்ற வேட்கைக்கும், இலாப வேட்டைக்கும் அமெரிக்கப் புதுக் கண்டத்திலேதான் அளவிலா வாய்ப்பைக் கண்டனர். அக் கண்டத்தின் ஆதிக் குடிகளான செவ்விந்தியரின் சிறு சமூகமோ, ஐரோப்பியரின் குடியேற்றப் பாய்ச்சலைத் தடுக்கச் சக்தியற்றிருந்தது. இலகு இலாபம், பரந்த நிலப் பரப்பு, மதத்தைப் பரப்பும் வாய்ப்பு, மற்றும் தங்கள் வெற்றுத் துணிச்சல், சுயேச்சை அவா ஆகிய பலதிறப்பட்ட இலௌகிக, ஆத்மிகத் தூண்டுதல்களால் உந்தப்பட்ட குடியேற்றத்தினரை ஆழ்கடல் அச்சமும், காட்டுமிராண்டியினரின் பயமும்கூடத் தடுத்து நிறுத்த இயலவில்லை. அத்துடன் அமெரிக்காவின் தட்பவெப்ப நிலையும் ஐரோப்பியக் குடியேற்றத்தினருக்கு மிகவும் ஏற்றதாயிருந்ததால் ஸ்பானியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர், பிரெஞ்சுக்

காரர் யாவரும் அங்குக் குடியேறத் தொடங்கினர். இக்குடியேற்றத்தினர் ஐரோப்பியர்களுக்குள்ளேயே மிக்க துணிவும் வலிவும் பெற்றவராயிருந்தமையால், புதுக் கண்டத்தின் பிரச்சினைகளை அவர்கள் விரைவில் சமாளித்துக் கொண்டதுடன் அனைத்துலகிற்கும் புரட்சியூட்டியதொரு பொருளாதார வளர்ச்சியையும் அங்குத் தோற்றுவித்தனர்.

மேற்கூறிய அமெரிக்காக் கண்டத்தின் ஒரு பகுதியான ஐக்கிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சி வியப்பூட்டுந் தன்மைத்தாகும். ஐரோப்பாவின் அளவில் மூன்றில் இரண்டு பங்கு, அல்லது இந்தியாவைப்போல் பத்து மடங்கு பெரிதான இந்த ஐக்கிய நாட்டின் பரப்பு 3,026,789 சதுர மைல்கள். இது வட அமெரிக்காக் கண்டத்தில் அட்சரேகைகள் 25-க்கும், 49-க்கும் இடையில் பரவிய பெரியதொரு நாடாகும். பல்வேறு இயற்கை வளங்களிலும் இந்நாடு மற்றெந்த நாட்டையும் விஞ்சியதாகும். உலகத்தின் மொத்த உற்பத்தியில் 70 சதவீதம் எண்ணெயும், 50 சதவீதம் செம்பும், 38 சதவீதம் ஈயமும், 42 சதவீதம் துத்தநாகமும், அதே சதவீதம் நிலக்கரியும், 46 சதவீதம் இரும்பும், 54 சதவீதம் பருத்தியும், 62 சதவீதம் உணவு தானியமும் இந்நாட்டிலேயே உற்பத்தியாகின்றன. மேலும், உலகத்தின் நீர் மின்சக்தி உற்பத்தியில் 36 சதவீதம் குதிரையாற்றல் (*Horse power*) இங்கேயே பெறப்படுகின்றது. உலகத்தின் நிலப் பரப்பிலும் மக்கள் தொகையிலும் ஆறே சதவீதத்தைப் பெற்றிருந்த போதிலும், விவசாயப் பொருள்களின் உற்பத்தியில்—குறிப்பாக பார்லி, ஓட்சு, புகையிலை, பன்றி இறைச்சி இவற்றின் உற்பத்தியில்—இந்நாடு உலகத்தில் முதலிடம் வகிக்கின்றது.[1] இதுவன்றி நிலக்கரி, பெட்ரோலியம், எஃகு, மின்சார சக்தி, செம்பு, பருத்தி, மரம் மற்றும் விவசாயத்திற்கும் தொழிலுக்கும் வேண்டியதாய பலவகையான மூலப் பொருள்களிலும் இந்நாடு முதன்மையுடையதாகும். உலகத்திலுள்ள மோட்டார் வண்டிகளின் எண்ணிக்கையில் (*Automobiles*) ஐந்தில் நான்கு பங்கும், தொலைபேசிக் கருவிகளில் பாதியும், இருப்புப் பாதைகளில் ஐந்தில் இரண்டு பகுதியும், இந்நாட்டிலேயே இருக்கின்றன. போர்க்கால உற்பத்திப் புள்ளிகளை

1. Faulkner: American Economic History, p. 28

நோக்கின் இந்நாடு நாலரை நாட்களுக்குள் ஒரு கப்பலைக் கட்டி முடிக்கவும், சில மாத காலத்தில் இருநூறு ஆயிரம் விமானங்களை உற்பத்தி செய்யவும் முடியுமென்பது புலனாகின்றது.

இந்நாடு தன் செழிப்பான சமவெளிகளிலும் பரந்த நிலப் பிரதேசங்களிலும் தன் தற்போதைய மக்கள் தொகையின் தேவைக்கதிகமாகவே மித வெப்ப, அரை வெப்ப மண்டலங்கள் இரண்டின் உணவுப் பொருள் வகைகளையும் உற்பத்தி செய்ய வியலும். ஒரு தொழிலுற்பத்தி நாட்டுக்கு அவசியமான கனிப் பொருள்கள் அநேகமாக யாவற்றையுமே இந்நாடு மிகுதியாகப் பெற்றிருக்கின்றது. இக் காரணத்தால்தான் இவ் ஐக்கிய நாடுகள் நான்கு நூற்றாண்டு காலம் தனக்குள்ளேயே ஒரு பொருளாதார உலகமாகத் திகழ்ந்திருந்தது. ஆகவே, இன்றும் அமெரிக்கா உலக நாடுகளுக்குள்ளேயே மிகுந்த செல்வமும், செழுமையும் பெற்றுள்ள நாடாக விளங்குகிறது. அமெரிக்காவி லுள்ளதுபோல் மிக உயர்ந்ததோர் தொழிற் கூலியையும் வாழ்க் கைத் தரத்தையும் வேறெங்கிலும் காணவியலாது. இவ் ஐக்கிய நாடுகளின் பொருளாதார வரலாறு மற்ற நாடுகளின் வரலாறு களிலிருந்து மிகவும் வேறுபட்டதாகும். வேறெங்கும் காணாத வகையில் ஒரு நாகரிக மக்கட் கூட்டத்தினர் நிகழ்த்தியதொரு நாடு பெயர்ச்சியே (*Transplantation of a civilised people*) அமெரிக்க வரலாற்றின் தொடக்கமாகும். அபரிமிதமான வளங் களைக் கொண்டதொரு பிரம்மாண்ட நிலப்பரப்பின் குடியேற்றத் திலேதான் இவ்வரலாறு ஆரம்பமாகிறது. உலக வரலாற்று இடைக்காலத்தின் இறுதியில்தான், அதாவது 15-ஆம் நூற் றாண்டின் இடையில்தான், இந்நாட்டின் வரலாறு தோன்றுவ தாகும். கான்ஸ்டான்டிநோபல் நகரத்தைத் துருக்கியர் கைப் பற்றியதும், ஐரோப்பிய மறுமலர்ச்சி, கிறித்துவ சமயச் சீர்திருத்தம், பூகோளத்தின் புதிய கண்டுபிடிப்புக்கள் — இவை யாவும் நிகழ்ந்ததும் அக்காலத்தேயாகும். இந்தியாவுக்கு (*Indies*) ஒரு புதிய கடல் வழியைக் கண்டுபிடித்து, கீழ்த்திசை யின் வாசனைத் திரவிய வாணிகத்தில் பங்கு கொள்ள எண்ணிய கொலம்பஸ், அமெரிக்கோ போன்ற முன்னோடித் துணிச்சல் வீரர் களாலேயே அமெரிக்கா கண்டுபிடிக்கப்பட்டது. இவ்வாறு வாணிகமும், இலாப ஈட்டமும்தான் அமெரிக்கக் காலனிகளின்

ஸ்தாபிதத்திற்குப் பொருளாதாரத் தூண்டுதல்களா யமைந்தன எனலாம்.

## தொடக்கக் குடியேற்றங்கள்

புது உலகத்தின் ஆளுகைக்குப் போட்டியிட்டவை ஸ்பெயின், ஹாலந்து, பிரான்சு, இங்கிலாந்து ஆகிய நான்கு ஐரோப்பிய நாடுகளுமாகும். இவை ஒவ்வொன்றும் இப்போதுள்ள ஐக்கிய அமெரிக்க நாட்டில் குடியேற்றங்களை ஏற்படுத்திக் கொண்டிருந்தன. இவைகள் முறையே அங்கு ஒரு புதிய ஸ்பெயினையும், புதிய ஹாலந்தையும், புதிய பிரான்சையும், புதிய இங்கிலாந்தையும் உருவாக்க முயன்றன. மேலும், இந்நாடுகளின் ராஜ தந்திரிகள் யாவருமே அமெரிக்கக் காலனிகளின் பொருளாதார வாழ்வு முழுதும் தாய்நாட்டின் நன்மைக்கேற்ற முறையிலேயே நிகழ வேண்டும் என்று நம்பினர். இவ்வாறு இக் குடியேற்றங்கள் யாவும் நெடுந்தொலைவிலுள்ள ஆளுகைக்காரர்களின் இலாபத்திற்கான தோட்டப் பண்ணைகளாகவும், எஸ்டேட்டுகளாகவுமே ஆதியில் கருதப்பட்டன. மேலும், புதிதாகக் கைப்பற்றப்பட்ட பரந்த பிரதேசம், அங்கு வாழ்ந்த பிற்போக்கான ஆதிக் குடிகள், குடியேற்ற வீரர்களின் துரித இலாப வேட்கை ஆகிய சூழ்நிலைகள் சேர்ந்து ஐரோப்பாவில் அப்போது நிலவி வந்த அதே நிலமானிய முறையை (*Feudalism*) அமெரிக்காவிலும் புகுத்தச் செய்தன. ஐக்கிய நாட்டை முதல் முதலில் கண்டு ஆராய்ந்தவர்கள் ஸ்பானியர்களேயாவர். ஸ்பானிய நாகரிகத்தின் செல்வாக்கு 'இலத்தீன் அமெரிக்கா'வில்தான் (*Latin America*) முக்கியமாகக் காணப்பட்டதாயினும், இப்போதைய ஐக்கிய நாட்டின் சில பகுதிகளிலும் அச் செல்வாக்கு காணப்படாமலில்லை. ஸ்பானியர்தான் பிளாரிடா, கலிபோர்னியா பிரதேசங்களில் எலுமிச்சை வகைப் பழச் (*Citrus Fruit*) சாகுபடியையும், மேற்கிந்தியத் தீவுகளில் சர்க்கரை உற்பத்தியையும், தென்மேற்கில் ஆட்டுப் பண்ணை, கால்நடைப் பண்ணைகளையும் ஆரம்பித்து வைத்தவர்கள். இந்நாட்டின் சட்ட முறையிலும், சிற்பக் கலையிலும் கூட அவர்களின் செல்வாக்கைக் காணலாம்.

அமெரிக்க வாணிக இலாபத்தில் பங்கு பெற டச்சுக்காரர்கள் செய்த முயற்சிகள்தாம் அவர்களை ஹட்சன் விரிகுடாக் (*Hud-*

son Bay) கரையில் குடியேற்றம் புரியச் செய்தன. டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனியின் நலத்திற்காக 1609-ஆம் ஆண்டில் ஹென்ரி ஹட்சன் என்பார் தம் பெயருடன் இப்போது விளங்கும் ஹட்சன் நதியை ஆராய்ந்தார். ஆம்ஸ்டர்டாமிலிருந்து இங்கு வந்த சில துணிச்சல் வணிகர்களே 1614-இல் புதிய ஆம்ஸ்டர் டாம் என்றதோர் வர்த்தகத் துறையை இங்கு நிறுவினர். டச்சு மேற்கிந்தியக் கம்பெனி அமெரிக்காவிலுள்ள டச்சு உரிமை களையும், நலன்களையும் பாதுகாத்து வரும் அதிகாரத்தை 1621-இல் பெற்றது. இப்பெரும் நிறுவனம் தனக்கென ஒரு காலாட் படையையும் கப்பற் படையையும் வைத்துக்கொண்டு ஹட்சன் சமவெளிப் பிரதேசத்தில் தன் வர்த்தகச் சர்வாதீனங்களைப் பாதுகாக்கும் முகமாக ஸ்பானியர், போர்ச்சுக்கேசியர் முதலியவர் களுடன் போர் நடத்தியது. டச்சுக்காரர் தங்கள் ஆதிக் குடியேற் றங்களை போர்ட் ஆரஞ்சு, மன்ஹாட்டன் தீவு, ஹட்சன் சமவெளி, மோகாக் சமவெளி, லாங் தீவு (Long Island) டெலவேர் போன்ற இடங்களில் ஏற்படுத்தியிருந்தனர். ஆயி னும், வணிக இலாபத்திலேயே அக்கறை காட்டிய டச்சு மேற் கிந்தியக் கம்பெனி இப் புதிய குடியேற்றங்களின் வளர்ச்சியில் போதிய கருத்துச் செலுத்தாமல் விட்டது. மேலும் ஆங்கிலக் காலனிகளான நியூ இங்கிலாந்தையும், தென் குடியேற்றத்தையும் பிரிக்கும் ஓர் ஆப்புப் போன்றிருந்த புதிய ஹாலந்து குடியேற் றங்கள் இங்கிலாந்தின் அவாவிற்கு இலக்காயின. இறுதியாக 1664-இல் இந்த டச்சுப் பற்றிடங்கள் (Settlements) யாவும் பிரிட்டனால் கைப்பற்றப்பட்டன. புதிய ஆம்ஸ்டர்டாம் (யார்க் கோமகனின் நினைவாகப் பின்னர் நியூ யார்க் என்று பெயர் சூட்டப் பட்டது.) பிரிட்டனின் கைக்கு வந்தபோது அங்கு வாழ்ந்த மக்க ளின் எண்ணிக்கை 10,000 தான். ஆனால், இம்மக்கள் 19 மொழிகளைப் பேசுவோராயிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வனைத்துலகப் பாங்கு (Cosmopolitanism) நியூ யார்க்கின் தலையாய அம்சமாக என்றுமிருந்து வருகிறது.

நாட்டுப் பற்று, சமயத் தூதார்வம், தங்கள் வணிகப் பெருக் கம் இவற்றால் தூண்டப்பெற்ற பிரெஞ்சுக்காரர்களும் அவர் களின் புது உலக ஆராய்வாளர்களுமே அமெரிக்காவில் கியூபெக் குடியேற்றத்தை நிறுவினர். பின்னர், அவர்கள் அங்கிருந்து

செயின்ட்லாரான்சு நதி வழியே முன்னேறி, பெரும் ஏரிகள் (*Great Lakes*) ஓரமாக மிசிசிப்பி நதியையும், அடுத்து சுபீரியர் ஏரியின் (*Lake Superior*) மேற்கு முனையையும், இறுதியில் நோவாஸ் கோசியாவின் கிழக்குப் பக்கத்தையும் அடைந்தனர். ஆயினும், பிரெஞ்சுக்காரர்கள் தங்கள் குடியேற்றத்தில் அவ்வளவாகக் கவனம் செலுத்தவில்லை. அவர்கள் வேளாண்மையைவிட வர்த்தகத்தையே மிக விரும்பியதால் புதிய பற்றிடங்களைப் புறக்கணித்து விட்டனர். அத்துடன் நிலப்பிரபுத்துவ முறை எதேச்சாதிகாரத்தைப் புதிய உலகத்தில் புகுத்தப் பிரான்சு செய்த முயற்சிகளும் வீணாயின. பிரெஞ்சுக் குடியேற்றத்தினர் தங்கள் ஆற்றலையே நம்பிச் செயலாற்றும் திறமை பெற்றிராமல் எல்லாவற்றுக்கும் தாய்நாட்டின் அரசாங்கத்தை நாடுபவராயிருந்தார்களாதலால் பொருளாதாரப் பிரச்சினைகளுக்கெதிரே இவர்கள் முனைப்பிழந்து பிந்திவிட்டனர். இதுவே அவர்களுடைய பிற்காலத் தோல்விக்கும் வழிகோலியது எனலாம். இறுதியில் பிரான்சுடன் புரிந்த ஏழாண்டுப் போரின் போது (*Seven years war*) பிரிட்டன் இப்பிரெஞ்சுக் குடியேற்றங்களைக் கைப்பற்றிக் கொண்டது.

இங்கிலாந்து ஆரம்ப முதலே புது உலகத்தின் இட ஆராய்விலும், குடியேற்றத்திலும் மிக்க கவனம் காட்டியது. ஏழாம் ஹென்றி மன்னன் 1496-இல் முதன் முதலாக ஜான் கேபாட் என்பவருக்குப் பற்றுரிமை (*First Patent*) அளித்ததும் அவர் புரிந்த கடற் பயணங்களே வட அமெரிக்காவில் ஆங்கிலக் குடியேற்றங்களுக்கு அஸ்திவாரமிட்டன. சர் ஹம்பிரே ஜில்பர்ட், சர் வால்டர் ராலே என்போருக்குக் குடியேற்றங்களை நிறுவுவதற்கு இராணி எலிசபெத் சாசனங்களை வழங்கிய பின்னர், வர்ஜீனியா ஒரு தோட்ட வேளாண்மைக் குடியேற்றமாக நிறுவப்பட்டது. இருப்பினும் இத்துறையில் ராலே அடைந்த தோல்வி, குடியேற்றங்களையும் பற்றிடங்களையும் ஏற்படுத்துவதில் தனி மனிதர்களின் இயலாமையை நிரூபித்தது. ஆகவே, 17-ஆம் நூற்றாண்டில் ஆங்கில வணிகர் குழுக்களும், கிழக்கிந்தியக் கம்பெனி போன்ற கூட்டுப் பங்கு கம்பெனிகளுமே (*Joint Stock Companies*) இக்குடியேற்ற முயற்சியை மேற்கொண்டன. 1606-ஆம் ஆண்டு அளிக்கப்

பட்ட அரச சாசனமே அட்லாண்டிக் கடற்கரையில் ஆங்கிலக் குடியேற்றத்திற்கு வழி செய்தது. ஐக்கிய நாட்டின் கீழ்க் கரையில் தோட்டக்கால் ஏற்படுத்தும் உரிமை இரண்டு கம்பெனிகளுக்கு வழங்கப்பட்டது. ஆகவே, இலண்டன் கம்பெனி 1607-இல் ஜேம்ஸ்டன் என்ற பற்றிடத்தை (**Settlement**) நிறுவியது. வர்ஜீனியா, பிளிமத் என்ற இரு ஆரம்பக் காலனிகளும் பின்னர் மசாசுசட்சு போன்ற வலிவான காலனிகளால் சேர்த்துக் கொள்ளப்பட்டன. 1607-க்கும் 1732-க்கு மிடையில்தான் ஆங்கிலக் குடியேற்றத்தினர் புதிய இங்கிலாந்துக்கு அலை அலையாகச் சென்று அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு அஸ்திவாரமிட்டனர். இவர்கள் நிறுவிய பதின்மூன்று ஆங்கிலக் காலனிகளுமே பின்னர் 1776-ஆம் ஆண்டில் ஆங்கில மன்னனை எதிர்த்துக் கலகம் செய்தன. இவ்வாறு யாத்திரைப் பெரியோர்கள் (**Pilgrim Fathers**) போன்ற தூய்மை மதவாதிகளும், மதச் சீர்திருத்தக்காரர்களும், மனங் கலங்கிய கத்தோலிக்கர்களும், துணிச்சல் வணிகர்களும், பேராசைக்கார அரசியல் வாதிகளும்தாம் பிற்காலத்திய ஐக்கிய நாட்டிற்கு அஸ்திவாரமிட்டனர் என்று கூறுதல் பொருந்தும்.

## குடியேற்றத்தின் விவசாயம்

அட்லாண்டிக் கடற்கரையில் முதல் ஆங்கிலக் குடியேற்றம் ஏற்பட்டு இருநூறு ஆண்டுகள் வரை வேளாண்மையே இக் குடியேற்ற நாட்டின் பொருளாதாரத்தில் பெரும் பங்கு வகித்து வந்தது. செவ்விந்தியரிடம் கண்ட சுதேச முறைகள் சில இவ் வேளாண்மையில் கைக்கொள்ளப்பட்டதாயினும், ஐரோப்பாவிலிருந்து குடியேற்றத்தினரால் கொணரப்பட்ட எளியதொரு தொழில் முறையே அவ்வுழவின் அடிப்படையாக இருந்தது எனலாம். ஆதிக் குடியேற்றத்தினர் நிறுவிய இவ் எளிய வேளாண்மை சமூகத்தில் தொழிலாளரும், முதற் கருவிகளும் பற்றாக்குறையாயிருந்தமையால் குடியேற்றங்களுக்குள் நிகழ்ந்து வந்த வணிகம் மிகக் குறைவாயிருந்ததோடு தொழில்களும் தோன்றாதிருந்தன. இதனால் இக்குடியேற்றங்கள் தங்கள் மூலப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் வாணிகத்திலேயே மிகவும் ஈடுபடவேண்டியதாயிற்று. ஆயினும், இங்கும் போக்குவரத்து

வசதியின்மை, பணமுறைப் பொருளாதாரமின்மை, தாய்நாட்டின் தலையீடு முதலியவற்றால் ஏற்றுமதி வாணிகத்திற்குக் குந்தகம் விளைந்தது. மக்களில் 90 சதவீதம் கிராமங்களிலேயே வசித்து வந்தார்கள். நகரங்களின் எண்ணிக்கை மிகக் குறைவாயிருந்தது. வாழ்க்கைத்தரமோ மிகவும் கீழான மட்டத்திலிருந்தது. கல்வி வசதியோ இல்லை. வேலை நேரம் மிகவும் நீண்டதாயிருந்தது. அமெரிக்கக் குடியேற்றத்தினரின் வாழ்க்கை உண்மையில் கடினமானதாய், கவர்ச்சியற்றதாயிருந்தது. அத்துடன் தொடக்கத்தில் அமெரிக்காவில் குடியிறக்கம் (*Immigration*) மிக மெதுவாகவே நிகழ்ந்தமையால் தேவைக்குப் போதுமான தொழிலாளர்கள் கிடைக்காமலிருந்தது. இப் பற்றாக்குறையைப் போக்கிக் கொள்ளுதற்குக் காலனி மக்கள் ஒப்பந்தத் தொழிலாளர்களையும் (*Indentured Labour*) அடிமைத் தொழிலாளர்களையும் இறக்குமதி செய்யவேண்டியதாயிற்று.

ஆரம்பகால முதலே வட குடியேற்றங்களுக்கும் தென் குடியேற்றங்களுக்கும் இடையே பொருளாதார சமூக வாழ்வில் வேறுபாடு தோன்றலாயிற்று. வடக்கே சீவன விவசாயம் (*Subsistence Farming*) புரியும் சிறு குடியிருப்புக்களே தோன்றின ; ஆனால் தெற்கிலோ வியாபாரத்திற்கான புகையிலை, அவுரி, நெல் போன்ற பயிர்கள் விளைவிக்கும் பெருந் தோட்ட விவசாயம் நிறுவப்பட்டது. வடக்கே பண்ணைகளின் சராசரி அளவு 100 ஏக்கராக்களே ; ஆனால், தெற்கில் அவற்றின் சராசரி அளவு 5000 ஏக்கராக்களாயிருந்தது. அப்போதிருந்த தொழில்கள் ஆதிக் குடியேற்றத்தினரின் அடிப்படையான தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கான நூல்நூற்பு, நெசவு, மரம் அறுத்தல், காகிதம் செய்தல், கண்ணாடி தயாரித்தல், பாதரட்சை செய்தல் போன்றவைகள் மட்டுமேயாகும். முதலும் உழைப்பும் பற்றாக்குறையாயிருந்தமையால் தொழிலுக்கு மிக்க சங்கடமேற்பட்டது. ஆகவே அடிமைகள் வியாபாரம் (*Slave Trade*) ஆதி முதல் டச்சுக்காரர்களாலும், போர்ச்சுக்கேசியர்களாலும் தொடங்கப்பட்டுத் துரிதமாகப் பெருகியது. உண்மையில் இக்குடியேற்றங்களின் ஆரம்பப் பொருளாதாரம் அடிமை உழைப்பின் அடிப்படையில் அமைந்த பொருளாதாரமே எனலாம்.

ஆதியில் ஆங்கிலக் குடியேற்ற வீரர்களில் சிலரும் அடிமை வியாபாரிகளாய்த்தான் இருந்தனர். டிரேக், ராலே, பிரோபிசர், ஹாக்கின்சு—இவர்கள் யாவருமே ஸ்பானியர், போர்ச்சுக்கேசியர் களின் அடிமை வியாபார சர்வாதீனத்தைத் தகர்த்த ஆங்கில அடிமை வியாபாரிகளேயாவர். இவ்வடிமை வியாபாரம் அவ்வளவு இலாபகரமானதாயிருந்தது. புதுக் குடியேற்ற மக்கள் தாங்கள் அமெரிக்கா வந்து சேர்ந்தபோது செவ்விந்தியர்களால் அங்கு நன்கு நிறுவப்பட்டிருந்த வேளாண்மை முறையைக் கண்டனர். ஆதியில் அமெரிக்கக் குடியேற்ற விவசாயிகள் சுதேசக் குடிகளான செவ்விந்தியரிடமிருந்தே பலவற்றைக் கற்றுக் கொள்ள வேண்டியிருந்தது. முக்கியமாக உணவு தானிய வேளாண்மையை அவர்களிடமிருந்தே அறிந்துகொண்டார்கள். அதேபோல சர்க்கரை வள்ளிக் கிழங்கு, தக்காளி, அவரை, பரங்கி, மிளகு, திராட்சை, கொட்டைப் பருப்புக்கள், பருத்தி, புகையிலை —இவையாவற்றின் வேளாண்மையும் செவ்விந்தியரிடமிருந்தே அறியப்பட்டது.

## குடியேற்றத்தின் தொழில்

குடியேற்றங்களின் பொருளாதாரத்தில் விவசாயமே மேலோங்கியிருந்தமையால் தொழிலும் எந்திர முறை உற்பத்தியும் தொடக்கத்தில் முக்கியமற்றிருந்தன. இப்போது நாம் காணும் தொழிற்சாலை முறை அப்போது அங்கில்லை; பக்குவமற்றதோர் பூர்வ முறைத் தொழில்தான் இருந்தது. முக்கியமாக வீட்டுத் தயாரிப்புத் தொழில்களே நிகழ்ந்தன. ஒவ்வொரு வீட்டிலும் குடும்பத்திற்கு வேண்டிய கம்பளி, நார், பருத்தி நூல் நூற்பு, நெசவு; இறைச்சி - உப்பிடல், வாட்டல்; பழங்கள், காய்கறிகளை உலர வைத்து வற்றல் செய்தல்; குடும்பத்திற்கு வேண்டிய சோப்பு, மெழுகுவர்த்தி தயாரித்தல்; பானத்திற்கான பீர் காய்ச்சுதல் (*Brewing Beer*); பாதரட்சைகள், கையுறைகள் முதலியவற்றிற்கு வேண்டிய தோல் தயாரித்தல்; வேலை நேரத்தில் அணியும் ஆடைகள் செய்தல் முதலிய எல்லாவற்றையும் அவ் வீட்டின் இல்லாளே மேற்கொண்டாள். ஒவ்வொரு விவசாயியும் தன் வீடமைப்பதற்கு வேண்டிய மரத்தையும், கருவிகள், மரச்சாமான்கள், பீப்பாய்கள் முதலியவை செய்

வதற்குத் தேவையான கடின மர வகைகளையும் காட்டிலிருந்து தானே தயாரித்துக்கொண்டான். சுருங்கக் கூறின், ஒவ்வொரு விவசாயியின் குடும்பமும் தனக்கு வேண்டிய சாமான்களையெல்லாம் தன் தேவை நிர்ப்பந்தத்தின்பொருட்டே தயாரித்துக் கொண்டதேயன்றி, வியாபாரத்தின்பொருட்டு அவற்றின் உற்பத்தியை மேற்கொள்ளவில்லை என்பது உணரத் தக்கது. அப் பண்டங்கள் விற்பனைக்காகத் தயாரிக்கப்படவில்லை; குடும்பத் தேவைக்கெனவே உற்பத்தி செய்யப்பட்டன.

ஆயினும் ஒரு சில பண்டங்கள் விற்பனைக்கெனவே தயாரிக்கப்பட்டன என்பதும் உண்மையே. பல விவசாயிகள் ஆணிகள், வீட்டுக்கூரைக்கான மரப் பலகைகள், மரப்பேழைகள், பீப்பாய் கட்டும் சட்டங்கள் போன்ற சந்தையில் விற்பனையாகக் கூடிய சாமான்களைத் தயாரித்தார்கள். மெதுவாக இத் தயாரிப்புக்கள் சிறிய தொழிற்கடைகளாக மாறின. இவ்வாறு விரிவடைந்த தொழில் தயாரிப்பும் வர்த்தகமும் இவற்றிலீடுபட்ட விவசாயிகளுக்கு நல்ல இலாபத்தையும் அளித்தன,

இக் காலனிகளின் சிற்சில பகுதிகளில் மரத் துண்டுகளைத் தயாரிக்கும் அறுவை ஆலை, தானியமரைக்கும் மாவு ஆலை, துணிகளை வழவழப்பாக்கிச் சாயமேற்றும் துணி ஆலை போன்ற கிராமப்புறத் தொழில்கள் முளைக்கலாயின. சில சமயங்களில் இக் கிராம சமூகங்களின் தேவைக்கேற்பப் பண்டங்களைத் தயாரிப்பதற்கெனத் தனியே ஒரு சக்கிலியன், ஒரு தையற்காரன், ஒரு பேழை தயாரிப்போன் முதலியோர் தோன்றினர்.

குடியேற்றங்களின் ஆரம்பத் தொழில்கள் மிக மெதுவாகவே வளர்ந்தன வென்றால் அதற்குப் போக்குவரத்து வசதியின்மையும், செலாவணித் திட்டமின்மையும், கடன் அளிப்பு வசதியின்மையும் ஓரளவுக்குக் காரணமெனலாம். என்றாலும், இதற்கு மிக முக்கியமான காரணம் இக் குடியேற்றங்களின் தாய்நாடு கடைப்பிடித்து வந்த மிக்க பாதகமானதொரு மெர்க்கன்டிலிசக் கொள்கையே (*Policy of Mercantilism*) யாகும். மெர்க்கன்டிலிசப் பொருளாதாரத்தின் கருத்து காலனிகளைத் தாய் நாட்டிற்குத் தேவையான பண்டங்களை உற்பத்தி செய்யும்

பண்ணைகளாகவும், பதிலுக்குத் தாய்நாட்டுச் சரக்குகளை வாங்கிக் கொள்ளும் சந்தைகளாகவுமே எண்ணுவதாகும். அமெரிக்காவின் காடுகளிலிருந்தும் விளைநிலங்களிலிருந்தும் தயாரிக்கப்பட்ட சில பொருட்கள் இங்கிலாந்திற்குத் தேவைப்பட்டன. அதே சமயத்தில் அமெரிக்கக் காலனி மக்கள் ஐரோப்பாவின் சில தயாரிப்புப் பொருட்களை வேண்டினர். பண்டங்களைக் கடத்துதற்கு அமெரிக்கா அப்போது நல்ல சாலைகளையும் இருப்புப் பாதைகளையும் பெற்றிருக்கவில்லையாயினும் நல்ல நீர் வழிகளையும், சிறந்த துறைமுகங்களையும், கப்பல் போக்குவரத்திற்கேற்ற பிளவுகள் நிறைந்த கடற்கரையையும் இயற்கைப் பேறுகளாகப் பெற்றிருந்தது. இருப்பினும் பிரிட்டனின் உற்பத்திகளுக்குப் போட்டியாகி விடக்கூடிய காலனி தயாரிப்புக்களையெல்லாம் தடை படுத்துவதே பிரிட்டிஷ் மெர்க்கன்டிலிசவாதிகளின் கொள்கையாயிருந்தது. ஆரம்பத்தில் வர்த்தகம், பண்டத் தயாரிப்பு இவைகளின்பேரில் எவ்விதத் தடைகளுமில்லாமலிருந்தது. ஆனால், சிறிது சிறிதாகப் பிரிட்டிஷ் அரசாங்கம் தடைகளையும் விலக்குகளையும் விதித்து, காலனிகளின் தொழில் வளர்ச்சியையும் வாணிப வளர்ச்சியையும் பெரும் இக்கட்டுகளுக்குள்ளாக்கியது.

## வர்த்தகம்

1624-ஆம் ஆண்டு பிரிட்டிஷ் சட்டமொன்று அமெரிக்கப் புகையிலையை இங்கிலாந்துக்கு மட்டிலுமே ஏற்றுமதி செய்ய வேண்டும் என்று விதித்தது. ஆயினும், 1651-ஆம் ஆண்டின் கப்பல் சட்டம்தான் இங்கிலாந்தின் குறுக்கீட்டைத் தெளிவாக்கியது. இச்சட்டத்தின்படி இங்கிலாந்துக்கோ அல்லது காலனிகளுக்கோ கொண்டுவரப்படும் சரக்குக்கள் யாவும் இங்கிலாந்திலேயே கட்டப்பட்டு, ஆங்கில மாலுமிகளாலேயே செலுத்தப்படும் கப்பல்களில்தான் கொணரப்பட வேண்டும் என்று கூறப்பட்டது. ஆயினும், இச்சட்டத்தில் கண்ட ‘இங்கிலாந்து’ என்னும் பெயரில் காலனிகளும் அடங்குமாகையால், இச்சட்டத்தின் பயனாகக் காலனிகளின் கப்பல் கட்டும் தொழிலும் அதனோடு தொடர்புடைய பிற தொழில்களும் மிக்க ஊக்கம் பெற்றன.

ஆனால் 1660-ஆம் ஆண்டில் பிறந்த சட்டமோ காலனி வணிகத்தின்பேரில் மேலும் ஒரு தடை போட்டது. அதன் படி இங்கிலாந்தில் உற்பத்தியாகாத காலனிப் பொருட்களை யெல்லாம் காலனிகள் இங்கிலாந்திற்கென்று ஒதுக்கி வைத்துவிட வேண்டும், அவற்றைப் பிறநாடுகளுக்கு அளித்தல் கூடாது என்று விதிக்கப்பட்டது. மேலும் ஆங்கில சுங்கவரித் திட்டமும் தானியச் சட்டமும் (*Tariff and Cornlaws*) காலனிகளின் வாணி பத்தைப் பெரிதும் பாதிப்பதாயிருந்தன. 1663-ஆம் ஆண்டில் கொண்டு வரப்பட்ட சட்டத்தின்படி காலனிகளுக்குப் போகும் எல்லாச் சரக்குக்களும் முதலில் இங்கிலாந்துக்குள் இறக்குமதி செய்யப்பட்டு, அதன் பின்புதான் அங்கிருந்து ஆங்கிலக் கப்பல் களில் காலனிகளுக்கு எடுத்துச் செல்லப்பட வேண்டுமென்ப தாயிற்று.

இதைவிட இன்னும் தீவிரமானதொரு சட்டம் 1673-இல் வந்தது. அமெரிக்கக் காலனிகளுக்கிடையே நிகழும் வர்த்தகமும் கூட இங்கிலாந்தின் வழியாகவே நடைபெற வேண்டுமென்று இதன்படி விதிக்கப்பட்டது. அடுத்து, பிரிட்டனிலுள்ள கம்பளத் தயாரிப்பாளர்களின் முறையீட்டின்பேரில் 1699-ஆம் ஆண்டில் மற்றொரு தடைச் சட்டமும் பிறந்தது. இது காலனிகளில் உற் பத்தியாகும் உரோமம், உரோம நூல், உரோமத் துணி முதலிய வைகள் காலனிகள் ஒன்றிலிருந்து மற்றொன்றிற்கோ அல்லது வேறெந்த நாட்டிற்கோ ஏற்றுமதி செய்யப்படக்கூடாதென்று விதித்தது.

1732-இல் காலனிகளிலிருந்து தொப்பிகளின் ஏற்று மதியும் ஒரு தடைக்குள்ளாகியது. இரும்புப் பட்டைகள் அல்லது சட்டங்கள் தயாரிக்கும் ஆலைகளோ, இரும்பு உருக்கு அல்லது எஃகு தயாரிக்கும் அடுப்புக்களோ காலனிகளில் அமைக்கப்படக் கூடாதென 1750-இல் ஒரு சட்டமூலம் விதிக்கப்பட்டது. இரும்பு வார்ப்படங்களைத் தயாரிக்கும் அடுப்புக்களை இவ்விதி தடை செய்யவில்லையாதலால் காலனி மக்கள் இரும்புப் பீரங்கிகளையும், கொப்பரைகளையும் (*Kettles*), உப்புக் காய்ச்சும் சட்டிகளையும்

மற்றும் குடும்பத்திற்கான இரும்புப் பாத்திரங்களையும் செய்து கொள்ளக்கூடும் என்றாகியது.

## காலனிகளுக்கும், தாய்நாட்டுக்குமிடையே உறவு நிலை

பிரிட்டனின் அரசாங்கம் அவ்வப்போது காலனிகளின் கவர்னர்களுக்கு அனுப்பி வந்த உத்தரவுச் சுருள்களிலிருந்து காலனிகளின் பொருளாதார வளர்ச்சியைத் தடைபடுத்த விரும்பிய பிரிட்டனின் திண்ணமான கொள்கை புலப்படுவதாகும். இவ்வுத்தரவுகளின்படி காலனிகளுக்குள் கொண்டுவரப்படும் பிரிட்டிஷ் தயாரிப்புக்களின்பேரில் எவ்வித வரியும் விதிக்கப்படக் கூடாது; ஆனால் அதே சமயத்தில் காலனிகளின் தயாரிப்புக்களுக்கு எவ்வித ஆதரவும் அளிக்கப்படக் கூடாது என்பதும் தெளிவாகியது. இதனால் மேற்கூறிய தடை நடவடிக்கைகள் பிரிட்டிஷ் அரசியலின் தற்செயலான நிகழ்ச்சிகள் அல்லவென்பதும், அவை யாவும் ஒரு மெர்க்கன்டிலிசக் கோட்பாட்டின் முதிர்ந்த விளைவுகளே என்பதும் நன்கு விளங்கும். இக் கோட்பாட்டின்படி காலனிகளின் வர்த்தகம் இராசதானியின் (*Metropolis*) உடைமை எனக் கருதப்பட்டது. மேலும், இவ் வர்த்தகம் இராசதானி மக்களுக்குரியதொரு சர்வாதீனமாகவும் (*Monopoly*) அது அவர்களின் சுயநலனுக்குட்பட்டு நடத்தப்பட வேண்டிய ஒன்றாகவுமே கருதப்பட்டது.[1]

காலனிகளுக்கும் தாய்நாட்டுக்குமிடையே பல துறைகளிலும் பெருத்த வேறுபாடு காணப்பட்டது. இயற்கை வளங்கள் இங்கிலாந்தில் அரிதாயிருந்தன; ஆனால் அவை காலனிகளில் நிறைந்திருந்தன. இங்கிலாந்திலோ நிலம் போதிய அளவில் இல்லை; காலனிகளிலோ அது அபரிமிதமாயிருந்தது. தாய் நாட்டில் தொழிலாளிகளுக்குக் குறைவில்லை; ஆனால் புதுக் கண்டத்தில் ஆட்கள் கிடைக்கவில்லை. பழைய உலகத்தில் மக்கள் தொகை அளவுக்கதிகமாயிருந்தது; புது உலகத்திலோ அது மிக்க குறைவாயிருந்தது. இங்கிலாந்து தன் சரக்குக்களுக்குப்

1. Beards: Rise of American Civilisation, p. 193

புதிய சந்தைகளைத் தேடிக்கொண்டிருந்த அதே சமயத்தில் காலனிகளிலே உள்நாட்டுச் சந்தை பெருகிக்கொண்டே சென்றது.[1] பொருளாதாரத் துறைகளில் தங்கள் சுயேச்சை ஒடுக்கப்பட்டதைக் காலனிகள் முதலில் அவ்வளவாக உணரவில்லை என்பது உண்மையே. மேற்கூறிய தடைச் சட்டங்கள் பலவும் கடுரமாக நடைமுறைக்குக் கொண்டுவரப்படாதவரை காலனி மக்கள் அவற்றைப் பொறுத்துக் கொண்டனர். தவிரவும் பிரிட்டிஷ் அதிகாரிகளின் கண்சாடையுடனேயே காலனிகளில் கள்ள ஏற்றுமதி வியாபாரமொன்று இலாபகரமாக வளர்ந் திருந்தது. மேலும் செவ்விந்தியர், பிரெஞ்சுக்காரர் ஆகியவர் களின் ஆபத்திலிருந்து பிரிட்டன் தங்களுக்குப் பாதுகாப்பளித்து வந்தமையால் மேற்கூறப்பட்ட சங்கடங்கள் யாவற்றையும் காலனி மக்கள் சகித்துக் கொண்டனர் என்றும் கூறவேண்டும்.

17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் காலனிகளின் மக்கள் தொகை கால் மில்லியனாக அதிகரித்ததுடன் அது வடக்கு, தெற்கு, இடைப்பிரதேசக் காலனிகள் யாவற்றிலும் சரி சமமாகப் பரவியிருந்தது. அப்போது நகரங்கள் ஒரு சிலவே இருந்தன. அவற்றுள் முக்கியமானவை போஸ்டன், மன்காட்டன், பிலடெல்பியா, சார்லஸ்டவுன் என்பவைகள்தாம். 18-ஆம் நூற்றாண்டின் இடையில் காலனிகளின் மக்கள் தொகை மொத் தத்தில் ஆறில் ஒரு பங்கு அடிமைகள்தாம் என்பது குறிப்பிடத் தக்கது. இவ்வடிமைகளின் உழைப்பு தென் காலனிகளின் பெருந் தோட்டப் பண்ணைகளுக்குப் பெரிதும் தேவைப்பட்டதால் இவர்கள் பெரும்பாலும் அங்கேயே காணப்பட்டனர். ஆரம்பத் தில் ஒப்பந்த அடிப்படையில் கொண்டுவரப்பட்ட வெள்ளைத் தொழிலாளர்கள் யாவரும் (*White Labour*) பெரும்பாலும் சுயேச்சை அடைந்துவிட்டனர். உழைப்பாளி பிரச்சினை ஒன்றும் பெரிதாக இல்லை. காரணம் தொழிலாளர்கள் மிகவும் பரவலாகக் காணப்பட்டதுடன் உழைத்துச் சொத்துப் பெற விரும்பியோர் யாவருக்கும் கிடைக்குமளவுக்கு நிலம் கிடந்தது. மக்களில் பெருந்தொகையினர் ஓரளவு சொத்துடையவரா யிருந்தனர்.

1. Carman: Social and Economic History of the United States, Vol. I

கோடீசுவரர்கள் ஒரு சிலரே காணப்பட்டனர். கூலிகளோ மிக உயர்வாயிருந்தன. சாதாரண மக்களுக்கும் மேல் வகுப்பின ருக்கும் இடையே ஒரு சமூகப் பிளவு காணப்பட்டது. உயர் வகுப்புக்கள் என்பவை நிலச் சொத்துடைய கனவான்களையும், தொழிலுற்பத்தியிலீடுபட்ட வணிகர்களையுமே கொண்டதா யிருந்தன. இச் சூழ்நிலையில் காலனிகள் பொருளாதாரத் துறையில் முன்னேற முன்னேற. அவற்றின் சுயேச்சையைப் பாதித்து வளர்ச்சியைக் கட்டுப்படுத்தி வந்த தடைகள் யாவும் பொறுக்க முடியாதவையாகிவிட்டன.

# 2. அமெரிக்கப் புரட்சியின் பொருளாதாரக் காரணங்கள்

## பொதுக் காரணங்கள்

அமெரிக்கப் புரட்சிக்கு அநேக காரணங்கள் உண்டு. அவற்றை அரசியல், சமூக, பொருளாதார காரணங்களெனப் பாகுபடுத்திக் கூறலாம். பொதுவாகக் கூறவேண்டுமானால் ஓர் ஏகாதிபத்தியத்தை, குடியேற்றத்தின்பேரில் ஆதிக்கம் செலுத்தி அடக்கி ஆள முனைந்த ஒரு கொற்றத்தை எதிர்த்து அக் குடியேற்ற மக்கள் நடத்திய ஒரு போராட்டமே அமெரிக்கப் புரட்சி என்று சொல்ல வேண்டும். இவ்வகையில் நவீன காலத்தின் முதல் புரட்சி அதுவேயாகும். திக்குத் தெரியாத கடல்கள், புலந்தெரியாத நிலப் பரப்புக்கள் முதலியவற்றின் ஆபத்துக்களையெல்லாம் சமாளிக்கும் மனத்துணிவு பெற்ற குடியேற்றத்தினர் தங்கள் புதிய நாட்டில் அடிமைகளாக வாழ்வதை ஒரு சிறிதும் விரும்பவில்லை. அக்காலத்தில் நிலவிய புரட்சிகரமான இலட்சியங்களால் எழுச்சி பெற்ற அமெரிக்க மக்கள் தங்களுக்கான அரசாங்கத்தைத் தாங்களே அமைத்துக் கொள்ளவும், தங்கள் நலனுக்கேற்ற முறையில் ஆட்சியைத் தாங்களே நடத்திக் கொள்ளவும் தங்களுக்குப் பிறப்புரிமை உண்டு என்று திண்ணமாக நம்பினர். இவ்வகையில் மசாசுசட்ஸ் பிரதேசக் குடியேற்றத்தினர் தயாரித்த உரிமை மசோதா அமெரிக்க மக்களின் மனப்போக்கைப் பின்வருமாறு தெளிவு படுத்தியது: 'அரசாங்கம் ஏற்படுவது மக்களின் பொது நன்மை, பாதுகாப்பு, நல்வாழ்வு, மகிழ்வு இவைகளுக்காகவேயாகும். அப்படியின்றி அது ஒரு தனி மனிதன்,

குடும்பம், அல்லது வகுப்பினரின் இலாபத்திற்காகவோ, பெருமைக்காகவோ, சுயநலனுக்காகவோ ஏற்படுவதில்லை. ஆகவே, அரசாங்கத்தை அமைக்கவும், சீர்திருத்தவும், மாற்றவும் மக்களுக்குத்தான் உரிமை உண்டு. தங்களுடைய பாதுகாப்பையும், பத்திரத்தையும், நல்வாழ்வையும், மகிழ்வையும் கருதி, ஓர் அரசாங்கத்தை அமைக்கவோ, சீர்திருத்தவோ, முழுதும் மாற்றிக் கொள்ளவோ மக்களுக்கிருக்கும் உரிமை மறுக்க முடியாதது, பிரிக்க முடியாதது, அழிக்க முடியாதது.' குடியேற்ற மக்களின் மனத்தில் எழுந்த சுயேச்சைக் கனலை தாமஸ் ஜெபர்சன் என்ற விடுதலை வீரரின் சொற்களும் பின்வருமாறு பிரதிபலித்தன: 'விடுதலைச் செடியின் வளர்ச்சிக்கு அவ்வப்போது விடுதலை வீரர்களுடையவும், எதேச்சாதிகாரிகளுடையவும் இரத்தம் தேவைப்படும். இக்குருதியே அச்செடிக்கு எருவாகும்.' மேலும் பிரிட்டனுக்கும் அதன் குடியேற்றங்களுக்குமிடையே நிகழ்ந்த ஒரு குறுகிய போராட்டமே அமெரிக்கப் புரட்சி எனக் கருதுதல் தவறாகும். உண்மையில் புது உலக மக்கள் தங்களுக்கு எவ்வகையிலும் ஒவ்வாத ஒரு சமூக அமைப்பையும் அரசியல் திட்டத்தையும் எதிர்த்துப் போராடிய மாபெரும் புரட்சியே அதுவாகும். இதுவரை இருந்து வந்த செவ்விந்தியர் பயமும், பிரெஞ்சுக்காரரின் அச்சமும் 1763-க்குப் பின் ஒழிந்து போகவே காலனி மக்கள் இனி பிரிட்டனின் பாதுகாப்பை நாட வேண்டிய அவசியமில்லாமல் போயிற்று. எனவே, பிரிட்டனுக்கு எதிராகக் காலனி மக்கள் எழுதற்குத் தக்கதோர் சூழ்நிலையும் ஏற்பட்டது.

## பொருளாதாரப் போட்டி

பொருளாதாரத் துறையில் எழுந்ததான கொந்தளிப்பே அமெரிக்க சுதந்திரப் போராட்டத்தின் முக்கிய அம்சமாகும். இதற்குக் காரணம் தாய் அரசின் மெர்க்கன்டிலிசக் கொள்கையே என்பது விளங்கும். இக்கொள்கை தாய்நாட்டின் நலனைப் பாதுகாப்பதையே குறிக்கோளாகக் கொண்டிருந்தது. தாய்நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்குத் துணை செய்யும் சாதனங்களாகத்தான் காலனிகள் கருதப்பட்டன. 'தாய்நாட்டில் கிடைக்காத பொருட்களை, முக்கியமாக மூலப் பொருட்களை உற்பத்தி செய்து அனுப்பவும், தாய்நாட்டில் தயாரிக்கப்படும் எந்திர

உற்பத்திப் பொருட்களைத் தான் வாங்கிக் கொள்ளவும்தான் காலனிகள் இருக்கின்றன, அதற்காகவே அவைகள் ஏற்பட்டன’ என்பது மெர்க்கன்டிலிசத்தின் விடாப்பிடியான நம்பிக்கை. இக் காலனிகளின் கடமைகளாகக் கருதப்பட்டவை பின்வருமாறு: ‘தாய்நாட்டின் வாணிகக் கப்பற் படை வளர்ச்சிக்குக் காலனிகள் வாய்ப்பளிக்க வேண்டும்; தாய்நாட்டுச் சரக்குக் கப்பல் சொந்தக் காரர்களுக்குப் போதிய இலாபம் கிடைக்க உதவ வேண்டும்; தாய்நாட்டின் இறக்குமதி ஏற்றுமதி வணிகர்கள் யாவரும் செல்வம் ஈட்டிக்கொள்ளவும், முதலுடையோர்கள் இலாபகரமான முதலீடுகள் செய்துகொள்ளவும் காலனிகள் தக்க வாய்ப்புக்கள் அளிக்க வேண்டும். மேலும், காலனிகள் தாய்நாட்டின் நலன் களுக்குப் பயன்படுவதுடன்கூட, தாய்நாட்டின் நலன்களுக்கும் தங்கள் நலன்களுக்கும் இடையே வேறுபாடு தோன்றும் போதெல்லாம், காலனிகளின் நலன்கள்தாம் தாய்நாட்டின் நலன் களுக்காகத் தியாகம் செய்யப்பட வேண்டும் என்பதும் மெர்க் கன்டிலிசத்தின் தத்துவமாயிருந்தது.’ இத்தகைய பொறுக்க முடியாத பொருளாதார சூழ்நிலைகள்தாம் தாய்நாட்டை எதிர்த்து எழக் காலனிகளைத் தூண்டின என்பது வெளிப்படை.

பிரிட்டிஷ் பொருளாதாரக் கொள்கை மிக்க சுயநலம் பேணுவதாயும், ஒரு தரப்பினதாயுமிருந்ததாயினும் இங்கிலாந் தில் தொழிற்புரட்சி ஏற்படும் வரை அமெரிக்கக் காலனிகள் இக்கொள்கையினால் அவ்வளவாகச் சங்கட மனுபவிக்கவில்லை. மேலும் ‘பழைய காலனி முறை’ என்று அழைக்கப்படும் இத் திட்டத்தின் கீழ் அமெரிக்கக் காலனிகள் மக்கட் பெருக்கத்திலும், செல்வப் பெருக்கிலும் விரைவாக வளர்ந்தன என்பது உண்மையே. ஏனெனில், இத்திட்டத்தின் கீழ் காலனிகளின் உற்பத்திகளுக்கு ஓர் உறுதியான சந்தை கிடைத்ததுடன் அவை களின் கப்பல் கட்டும் தொழிலுக்கும் ஆதரவு கிட்டியது. மேலும், இங்கிலாந்தின் தயாரிப்புக்களுடன் போட்டியிடாத காலனி தயாரிப்புக்கள் சில இத்திட்டத்தின் கீழ் தூண்டுதல் பெற்றன. இந்நன்மைகள் காலனிகளுக்குக் கிடைத்தனவாயினும் ‘பழைய காலனி முறை’யினால் ஒரு சில கேடுகளும் விளைந்தன. அவை யாவன: (1) சரக்கு சுமந்து செல்லும் வாணிகம் ஆங்கிலக் கப்பல்களுடையவும் காலனி கப்பல்களுடையவும் சர்வாதீனமாக

ஆகிவிட்டபடியால் பிற நாட்டுப் போட்டிகள் இல்லாமல் போய், கப்பல் கட்டணங்கள் வெகுவாக உயர்ந்தன. (2) காலனி தயாரிப்புக்கள் யாவும் ஆங்கில வணிகர்களுடைய பண்டக சாலைகளின் (*Ware houses*) மூலமாகவே வேற்றிடங்களுக்குச் செல்ல வேண்டுமென்றிருந்தமையால் அவ் வணிகர்களுக் கெல்லாம் காலனி உற்பத்தியாளர் இலாபத்தில் பங்கு கொடுக்க வேண்டி வந்தது. (3) ஆங்கிலத் தயாரிப்புத் தொழில்களுக்குத் தேவைப்படும் மூலப் பொருட்களை மலிவாக உற்பத்தி செய்து அளிக்கும் பண்ணைகளாகவும், பதிலுக்கு ஆங்கிலச் சரக்குக்களைப் பெற்றுக்கொள்ளும் சந்தைகளாகவுமே காலனிகள் இருக்க வேண்டியதாயிற்று. (4) இறக்குமதிகளுக்காகச் செலுத்தத் தேவைப்படும் பொன்னும் வெள்ளியும் போதிய அளவில் காலனிகளிடம் இல்லாதிருந்தும் ஸ்பானியர், டச்சுக்காரர், பிரெஞ்சுக்காரர் முதலியவர்களிடமிருந்து காலனிகள் அவற்றைப் பெறுவதற்கு அனுமதிதரப்படவில்லை. (5) செலாவணி வசதியும், கடன் வசதிகளும் மிக்க இக்கட்டான நிலையிலிருந்தும்கூட, காலனிகள் இக்குறைகளைப் போக்கிக்கொள்ளத் தாங்களே எடுத்த முயற்சிகளையும் பிரிட்டிஷ் பார்லிமெண்டு நிராகரித்தது.

## ஏழாண்டுப் போருக்குப் பின் பிரிட்டிஷ் கொள்கை

மேற்கூறப்பட்ட பல்வேறு தடைகளையும் காலனிகளின் பொருளாதாரம் ஓரளவுக்குச் சமாளித்துக்கொண்டு வந்தது. எனினும், மேலும் மேலும் தாய்நாட்டிலிருந்து வந்துகொண் டிருந்ததடைபாடுகள் காலனிகளின் பொறுமையைச் சோதித்தன; சினத்தை வளர்த்தன. இதற்கு முன்புகூட, தடை விதிகளும் சட்டங்களும் இருந்தனவாயினும், அவை நடைமுறையில் அவ் வளவு கண்டிப்பாக அமுல் நடத்தப்படவில்லை. ஆனால், பிரெஞ் சுக்காரர்களிடம் புரிந்த ஏழாண்டுப் போரில் பிரிட்டன் அடைந்த வெற்றியும், இங்கிலாந்தில் தொழிற்புரட்சியின் தோற்றமும் காலனிக் கொள்கையை மிகவும் கெடுபிடியாக நடத்தத் தாய் நாட்டைத் தூண்டின. ஆகவே, காலனிகளுக்கான தடைச் சட்டங்களையும் கட்டுப்பாட்டு விதிகளையும் இது முதல் தாய்நாடு மிகவும் கண்டிப்பாக அமுல் நடத்தத் தொடங்கியது.

1763-க்குப் பின்னர் பிரிட்டிஷ் கொள்கையில் எவ்விதப் புது மாறுதலும் ஏற்படவில்லை. ஆனல், முன்பே ஆக்கப்பட்டிருந்த சட்டங்களையும் விதிகளையும் பிரிட்டன் கண்டிப்பாக அமுல் நடத்த ஆரம்பித்ததுதான் புதுமையாகும். பிரிட்டிஷ் பேரரசை வலுப்படுத்துவதும், பிரிட்டிஷ் வணிக முதலாளித்துவத்திற்குக் காலனிகளைப் பயன்படுத்திக் கொள்வதுமே இப்புதிய கண்டிப்பான போக்கின் நோக்கமாகும். இப்போக்கின் காரணமாக, பிரிட்டன் அமெரிக்க வடக்குக் காலனிகளின் பொருளாதார நலன்களுக்கெதிராகத் தெற்கிந்தியத் தீவுகளின் சர்க்கரைத் தொழில் வளர்ச்சியில் காட்டிய அக்கறை அமெரிக்கக் காலனி மக்களின் எதிர்ப்பை மூட்டியது. இவ்வெதிர்ப்பினுல் தோன்றிய போராட்டமே இறுதியாக அமெரிக்கப் புரட்சியில் முடிந்தது எனலாம்.

18-ஆம் நூற்றுண்டின் காலனி வாணிகத்தில் சர்க்கரையே முதன்மையான இடம் வகித்தது. பிரிட்டிஷ்காரர்கள் ஜமெய்க்கா, பார்படோசு போன்ற மேற்கிந்தியத் தீவுகளில் சுமார் 60 மில்லியன் டாலர்கள் வரை சர்க்கரைத் தொழிலில் முதலீடு செய்திருந்தனர். இது அமெரிக்கக் காலனிகளில் பிரிட்டிஷார் செய்திருந்த முதலீட்டைவிட ஆறு மடங்கு அதிகமானதாகும். பிரிட்டிஷ் பார்லிமெண்டில் 'சர்க்கரைப் பிரபுக்கள்' எழுபது பேர்கள் இச்சர்க்கரைத் தொழிலைப் பாதுகாப்பதற்காக வீற்றிருந்தனர். இருப்பினும் பிரிட்டிஷ் சர்க்கரை உற்பத்தியாளர்களுக்கு மிகவும் பாதகமான ஒரு நிலை தோன்றலாயிற்று. இத்தொழில் முதலாளிகள் உற்பத்தித்தலத்தில் இல்லாமையாலும், திறமையற்ற நிர்வாகத்தாலும், நில வளம் வரவரக் குன்றியமையாலும், ஏற்றுமதி வரி உயர்விலுைம் இம்மேற்கிந்தியத் தீவுகளின் சர்க்கரைத் தொழில் பாதிக்கப்பட்டுச் சர்க்கரையின் விலையும் அதிகரித்தது. ஆனுல் பிரெஞ்சுக்காரர்களிடம் குறைவான விலைகளுக்குச் சர்க்கரை கிடைத்தமையால் அமெரிக்கக் காலனிகள் யாவும் அவர்களிடமிருந்தே தங்கள் தேவைகளைப் பெற்றுக்கொண்டன. இதற்கிடையில் பிரிட்டனுக்கும் பிரான்சுக்குமிடையே மூண்ட ஏழாண்டுப் போரின்போது பிரிட்டிஷ் பிரதம மந்திரி வில்லியம் பிட், காலனிகளுடன் பிற நாடுகள் நடத்தி வந்த கள்ள வணிகத்தை ஒழிக்குமாறு பிரிட்டிஷ் கடற்படைக்கு 1761-இல் உத்தர

விட்டார். இந்நடவடிக்கைக்குத் துணையாகக் காலனி நீதிமன்றங்கள் பொதுச் சோதனை உத்தரவுகளை வழங்கி, கள்ள வணிகர்களைப் பிடிப்பதற்கு உதவ வேண்டுமெனவும் கோரப்பட்டது. இவ்வாறு வணிகக் கட்டுப்பாடுகளை இறுக்கும் பிரிட்டிஷ் கொள்கையின் உட்குறிப்பைக் காலனி மக்கள் முன் கூட்டியே புரிந்து கொண்டனர். இச்சோதனை உத்தரவுகளை எதிர்த்து ஜேம்ஸ் ஓடிஸ் என்னும் காலனிப் பிரமுகர் செய்த பெரு முழக்கம் மிகவும் குறிப்பிடத்தக்கது. இம்முழக்கத்தையே பின்னர் ஜான் ஆதம்ஸ் என்பவர் 'புரட்சியின் துவக்கக் குண்டு' என்று குறிப்பிட்டார்.

## வரி விதிப்பு

பிரான்சுடன் போர் முடிந்த பின் புதிய பிரிட்டிஷ் பிரதமர் கிரென்வில் என்பாரும், வர்த்தக போர்டின் *(Board of Trade)* தலைவர் டவுன்செண்டு என்பாரும் காலனிகளின் பேரில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தை வலுப்படுத்த முடிவு செய்தனர். இதற்குப் பிரிட்டிஷ் மன்னர் மூன்றும் ஜார்ஜின் ஆதரவும் கிட்டியது. காலனிகளைப் பாதுகாக்கப் பிரிட்டன் புரிந்த போரின் காரணமாக ஏற்பட்ட கடன் பொறுப்பில் ஒரு பகுதியைக் காலனிகளே ஏற்க வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. இந்நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளுமாறு வர்த்தகக் கட்டுப்பாடுகளைக் கண்டிப்பாக அமுல் நடத்துவதென்றும், வரி விதிப்பின் மூலம் காலனிகளிலிருந்து வருவாய் பெறுவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. பிரிட்டிஷ் பார்லிமெண்டு காலனிகளின்பேரில் இரு முக்கியமான வருவாய்த் தீர்வைகளை 1764-ஆம் ஆண்டு சர்க்கரைச் சட்ட மூலமாகவும், 1765-ஆம் ஆண்டு முத்திரைச் சட்ட மூலமாகவும் *(The Sugar Act of 1764, and Stamp Act of 1765)* விதித்தது. அடுத்தபடியாக, அவுரி, காப்பி தேயிலை, திராட்சை ரசம், பட்டு, காலிகோ—இவை யாவற்றின் பேரிலும் புதிய தீர்வைகள் விதிக்கப்பட்டன. லைசென்சுகள், ஒப்பந்தங்கள், பத்திரங்கள், உயில்கள், செய்தித் தாள்கள், சிறு புத்தகங்கள், பஞ்சாங்கங்கள் யாவற்றிலும் அரசாங்க முத்திரைகள் ஒட்டப்பட வேண்டுமென்றும் விதிக்கப்பட்டது. இப்புதிய வரிகளும் தீர்வைகளும் காலனி மக்களை ஆத்திரமூட்டின. கடுஞ் சீற்றங் கொண்ட காலனி மக்கள் பிரிட்டிஷ் சரக்குக்களை வாங்காது

*(Boycott)* வெறுத்து ஒதுக்கினர். இவ்விளைவைக் கண்டு பிரிட்டிஷ் சர்க்கார் முத்திரைச் சட்டத்தை *(Stamp Act)* ரத்து செய்யவும், சர்க்கரைச் சட்டத்தைத் *(Sugar Act)* திருத்தம் செய்யவும் வேண்டியதாயிற்று. இருப்பினும், தன்னுடைய மேலாதிக்கத்தை உறுதிப்படுத்திக் கொள்ளும் வகையில் பிரிட்டிஷ் அரசாங்கம் காலனிகளைப் பற்றிய சகல துறைகளிலும் சட்டமியற்றுதற்கு பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்குச் சட்டபூர்வமான உரிமை உண்டென்று கூறும் ஒரு பிரகடனச் சட்டத்தை *(Declaratory Act)* இயற்றியது.

முத்திரைச் சட்டம் ரத்தானது பற்றிக் காலனிகள் மிக்க கொண்டாட்டம் அடைந்தன. காலனி ஆர்ப்பாட்டக்காரர்களும் தங்கள் கொள்கைகளில் வெற்றி கண்டு மேலும் ஆதரவும் ஐக்கியமும் பெற்றனர். இத்துடன் விட்டிருந்தால் ஒரு வேளை காலனி மக்களின் போராட்டம் மங்கி மறைந்திருக்கும். ஆனால் துர்ப்பாக்கிய வசமாகத் தாய்நாட்டின் புதிய தவறுகள் மேலும் எதிர்ப்பை வரவழைப்பதாயின. 1765-இல் கொண்டு வரப்பட்ட குவார்ட்டரிங் சட்டமானது *(Quartering Act)* காலனிகளில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த ஆங்கிலப் படை வீரர்களுக்குத் தங்குமிடம், விளக்கு வசதி, அடுப்புக்கு எரி பொருள் வசதி யாவற்றையும் சம்பந்தப்பட்ட காலனி மக்களே அளிக்க வேண்டுமெனக் கோரியது. மேலும், 1767-ஆம் ஆண்டு டவுன் செண்டு சட்டங்கள் காலனிகளுக்குள் வரும் பெயிண்டு *(Paint)*, காகிதம், கண்ணாடி, மணிகள், தேயிலை இவற்றின்பேரில் புதிய வரிகளைச் சுமத்தின. இவ்வரிகளின் வீதம் குறைவாயிருந்ததாயினும் இதனல் வாழ்க்கைச் செலவு அதிகரித்தது. ஆகவே காலனி மக்கள் இவற்றைவெறுத்தனர். குவார்ட்டரிங் சட்டத்திற்கு இணங்கத் தவறியமைக்காக நியூ யார்க் நகர அசெம்பிளி *(New York Assembly)* ஒரு பிரத்தியேகச் சட்டத்தால் விலக்கம் *(Suspension)* செய்யப்பட்டது. இவை யாவற்ருலும் அதிருப்தி கொண்ட காலனி மக்கள் ஆர்ப்பாட்டத்தில் இறங்கினர். காலனி மக்களைத் திருப்திப்படுத்த அரசாங்கம் எடுத்துக்கொண்ட ஒவ்வொரு செயலும் மேலும் ஆர்ப்பாட்டத்தை வளர்த்ததேயன்றி நிலைமை சரிப்படவில்லை. இறுதியாக, வெளிப்படையான போராட்டமே விளைந்தது. டவுன்செண்டு சட்டங்கள் தேயிலை

யைத் தவிர மற்றச் சரக்குக்களின்மேல் ரத்து செய்யப்பட்டன. தேயிலை வரிகூட பிரிட்டிஷ் பார்லிமெண்டின் அதிகாரத்திற்கோர் அறிகுறியாகவே நீடிக்கப்பட்டதேயன்றி, வருவாய் வரியாக வசூலிக்கப்படவில்லை. இங்கிலையிலும்கூடச் சமரசத்துக்கு வழி யில்லாமலில்லை. ஆனால், காலனி ஆர்ப்பாட்டக்காரர்களின் புரட்சி வெறியும், இங்கிலாந்தின் ஏகாதிபத்தியப் பித்தர்களின் மதி யீனமும்தான் சமரசமேற்படுவதைத் தடுத்துவிட்டன. இவ்வாறு அமெரிக்கப் புரட்சிக்கு முக்கிய காரணம் பிரிட்டிஷ் ஆட்சி பீடத் தில் அமர்ந்திருந்த மெர்க்கன்டிலிசக் கொள்கையேயாகும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. இக்கொள்கையின் அடிப் படைக் கோட்பாடு உண்மையில் தவறானதாகும். மேலும், நடை முறையில் இக்கொள்கை மிக்க கேடு விளைவிக்கக் கூடியதாயு மிருந்தது. காலத்திற்கு ஒவ்வாத இக்கொள்கையைத் தகர்ப் பதற்கு முதல் அடி கொடுத்தது அமெரிக்கக் காலனிகளேயாம்.

## மற்றக் காரணங்கள்

மேற்கூறியவை தவிர, வேறு சில காரணங்களும் காலனி மக்களின் அதிருப்தியையும் கொந்தளிப்பையும் மேலும் வளர்த் தன என்று கூறவேண்டும். அவற்றுள் காலனி மக்களின் மேற்குப்புற முன்னேற்றத்திற்கு (*Westward Expansion*) எதிராகக் கொணரப்பட்ட 1763-ஆம் ஆண்டு அரச ஆணையும், பிரெஞ்சுப் போர்களினால் காலனிகளில் ஏற்பட்ட தொழில் மந்த மும் குறிப்பிடத்தக்கவையாகும். அத்துடன் அமெரிக்கப் பொருளாதார வாழ்க்கையின் அமைப்பு முழுதுமே அப்போது தொடர்ந்து மாறிக்கொண்டேயிருந்தது. காலனிகளின் எல்லைகள் தொடர்ந்து விரிவடைந்துகொண்டிருந்தன ; சமூக வாழ்க்கை யிலோ மாற்றம் நிகழ்ந்துகொண்டேயிருந்தது. பொருளாதார வளர்ச்சியும் மேலும் மேலும் தூண்டுதல் பெற்றுக்கொண்டே யிருந்தது. இச் சூழ்நிலைகள் புதுப் புது பிரச்சினைகளைத் தோற்றுவித்துக் கொண்டிருந்தன. இவை யாவும் காலனி மக்களின் மனத்தில் ஒரு விடுதலை வேட்கையை வளர்த்து விட்டன. தாய்நாட்டின் தளைகளை அறுத்தெறிவதற்கான புரட்சி மக்களின் உள்ளங்களில் உருவாகிவிட்டது. இவ் வுள்ளப் போக்கிற்கும் புரட்சிக்கும் உள்ள தொடர்பை பியர்டு என்பாரின்

கூற்று பின்வருமாறு தெளிவுபடுத்துகிறது: 'ஒரு நூற்றுண்டுக்கு மேலாகப் பரவிக் கிடக்கின்ற ஆங்கிலச் சட்டங்களையும், காலனி மாகாணச் சட்டங்களையும், இராசதானிக்கும் மாகாணத்துக்கும் (*Metropolis and Province*) இடையே இடைவிடாது நிகழ்ந்த மோதுகைகளைக் கூறும் சுவடிகளையும் பரிசீலித்தால், அமெரிக்கப் புரட்சி ஒரு பிடிவாத மன்னனுலும், அவன் அடி பணிந்து செயலாற்றும் அமைச்சர்களாலும் விளைந்ததொரு பூசல் என்னும் கருத்து கேலிக் கூற்றென்பது விளங்கும். மூன்ரும் ஜார்ஜ் மன்னன் பதவி யேற்பதற்கு வெகு காலம் முன்னரே, கிரென்வில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக நாட்டின் நிர்வாகத்தைச் செலுத்த ஆரம்பித்ததற்கு வெகு முன்பே ஆயிரக்கணக்கான அமெரிக்கர்கள் பிரிட்டிஷ் பொருளாதார ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராட்டம் நிகழ்த்தியிருந்தனர். பதினெட்டாம் நூற்றுண்டின் இடையிலேயே வருங்கால ஞானமுடையோரான பிராங்கிளின் போன்றவர்கள் இப்போராட்டத்தின் பொருளைப் புரிந்தவராயினர். பல்லாண்டுகளுக்குப் பின்னர், ஜான் ஆதம்ஸ் கூறியவாறு, போர் தொடங்குவதற்கு முன்பே புரட்சி நிகழ்ந்துவிட்டது. அது 'மக்களின் உள்ளத்திலும், எண்ணத்திலும் நிகழ்ந்தது.'[1]

## புரட்சியின் விளைவுகளும், முக்கியத்துவமும்

இங்கிலாந்திலிருந்து பிரிந்துபோவதை அமெரிக்கக் காலனி மக்கள் அனைவருமே விரும்பினர் என்று கருதலாகாது. அம்மக்களில் சுமார் மூன்றிலொரு பங்கினர் ஆங்கிலத் தொடர்பை அறுத்துக்கொள்ள விரும்பவில்லை என்பது ஜான் ஆதம்ஸ் என்பவரின் கருத்து. ஆரம்பக் குடியேற்றக் காலத்திலிருந்து நாள் ஆக ஆகத் தாய்நாட்டின் பேரில் காலனி மக்களுக்கிருந்த பற்று குறைந்துகொண்டே வந்தது என்பது உண்மையாயினும், காலனி மக்களில் பலர் ஆங்கில அரசின்பால் விசுவாசம் கொண்டிருந்தனர் என்பதை மறுக்க முடியாது. குறிப்பாக, ஆங்கில கவர்னர்களின் நண்பர்களும், கள்ள வணிகத்திலீடுபடாத நியூ இங்கிலாந்து வணிகர்களும், தென் பிரதேசத் தோட்ட வேளாண்மைச் செல்வந்தர்களும், இங்கிலாந்தின் கிறித்துவ சமய அமைப்போடு தொடர்புடைய மத குருக்களும், உத்தியோகங்களில் உயர்

1. Beards: Rise of American Civilization, p. 20

வடைந்தோரும் இங்கிலாந்திலிருந்து விலகிக்கொள்வதற்கு மன மில்லாதிருந்தனர் என்று கூறவேண்டும். மேலும், காலனி மக்களில் பல பகுதியினர் பழைமை விரும்பிகளாகவும் (*Conservative*), புரட்சிகரமான மாறுதல்களை எதிர்ப்பவராயு மிருந்தனர். மிக்க பண்பாடும், செல்வமும், செல்வாக்கும் படைத்த பகுதியினரும் இங்கிலாந்தை எதிர்த்துக் கலகம் செய்வதை வெறுத்தனர். ஆகவே, புரட்சியின் பலமெல்லாம் நடுத்தர மக்களிடமிருந்தும் ஏழை வகுப்பினரிடமிருந்துமே — அதாவது சாதாரண மக்களிடமிருந்தே—வந்தது. உயர்தர வகுப்பினர் (*aristocracy*) இதற்கு ஆதரவு தரவில்லை என்பது தெளிவு. உண்மையை ஆராய்ந்தால் அமெரிக்கப் புரட்சியானது ஒன்றுக்கொன்று போட்டியிடும் சமூக அமைப்புக்களிடையே நிகழ்ந்ததொரு போராட்டமே என்பது புலனாகும். 'காலனிகளின் எல்லைப்புற மக்களும், வேளாண்மைச் சமூகத்தினருமாகச் சேர்ந்து, பிடி யிழந்துவரும் நிலமான்ய முறையையும் (*Waning feudalism*), புதிதாக எழுந்ததொரு முதலாளித்துவத்தையும் (*Rising capitalism*) எதிர்த்து விடுத்த அறைகூவல்'[1] ஆகும் இப்புரட்சி என்று குறிப்பிடப்படுவது நோக்குதற்குரியது. மேலும், அமெரிக்க அரசியலமைப்பே (*American Constitution*) இவ்வுண்மைக்குச் சான்றாகும். 18-ஆம் நூற்றாண்டில் ஆங்கில நடுத்தர வகுப்பினர் கொண்டிருந்த ஒரு பொருளாதார இலட்சி யத்தைத்தான் இவ்வரசியலமைப்பு தன் அடிப்படையாக ஏற்றுக் கொண்டிருந்தது என்பது பின்வருவனவற்றால் விளங்கும்: அவ் வரசியலமைப்பு தொடக்கத்திலேயே ஆங்கில ஏதேச்சாதிகார (*British autocracy*) முறைகளைக் கண்டிக்கிறது ; அதே சமயத் தில் மனிதனின் இயற்கை உரிமைகளெனப்படும் உரிமைகளை— வாழும் உரிமை, சுதந்திர உரிமை, தன் மகிழ்வைத் தேடும் உரிமை (*Life, Liberty, and pursuit of happiness*); ஆன்ம சுதந்திரம், எழுத்துச் சுதந்திரம், வழிபாட்டுச் சுதந்திரம் (*Freedom of spirit, press, and of worship*); ஆளப்படுவோரின் சம்மதமின்றி வரி விதிக்கப்படாமை (*no taxation without the consent of the governed*), சான்றோர் குழு கொண்ட விசாரணை முறை (*Trial by Jury*) முதலியனவற்றை வலியுறுத்துகிறது. இவ்வாறு கருத்தளவில் ஒரு மகத்தான மக்களாட்சி முறை நிறுவப்பட்ட

1. Faulkner : American Economic History, p. 128

தாயினும், உண்மையில் நிலக்கிழார்களுக்கும், செல்வந்தர்களுக்குமே ஓட்டுரிமையும், பதவி உரிமையும் நடைமுறையில் அளிக்கப்பட்டிருந்தன. ஆகவே அதை ஒரு செல்வந்தர் வகுப்பாட்சி (*aristocracy of wealth*) என்றே கூறுதல் பொருந்தும். இருப்பினும், புரட்சியால் நேர்ந்த அரச விசுவாசிகளின் வெளியேற்றம் (*loyalist exodus*) ஜெபர்சன் போன்ற எல்லைப்புறப் புரட்சிவாதிகளின் கைகளைப் பலப்படுத்தியது. அத்துடன் அடிமை - எதிர்ப்பு இயக்கமும்கூடத் துரிதமாய் வளர்ந்தது. பல இராச்சியங்கள் அடிமைகளின் விடுதலையை நாளடைவில் நிறைவேற்றத் தக்க ஏற்பாடுகளைச் செய்து முடித்தன. அத்துடன் காலனிகளில் நிறுவப்பட்டிருந்த கிறித்துவ மத நிறுவனங்களும் புரட்சியினால் நிலையிழந்து போயின. இவை யாவற்றின் விளைவாகவும் தனி மனித சுயேச்சையையும், போட்டிச் சுதந்திரத்தையும் அடிப்படையாகக் கொண்டதொரு மதச் சார்பற்ற நவீன சமுதாயம் அங்கே தோன்றியது. இவ்வாறு அமெரிக்காவின் வளர்ச்சி நடைமுறையில் படிப்படியாகவே நிகழ்ந்ததாயினும், அவ் வியக்கத்தின் உட்கருத்துக்கள் யாவும் புரட்சிகரமானவையாகவே யிருந்து வந்திருக்கின்றன என்பது உணர்தற்பாலது. காலனி ஆதிக்கத்திலிருந்து புதிதாக விடுதலை பெற்ற அமெரிக்கர்கள் அத்துடன் நில்லாது மென்மேலும் விரிவானதொரு அரசியல், சமூக, பொருளாதார ஜனநாயகத்தைத் தேடி நாட்டினுள்ளும் வெளியிலும் பழைய நிலையை வீழ்த்துதற்கு விழைந்தனர்.[1]

அமெரிக்க விடுதலைப் போர் (1776 – 1783) அமெரிக்க ஐக்கிய நாடுகளைத் தோற்றுவித்தது. எனினும் அப்போர் அமெரிக்கப் பொருளாதார வாழ்க்கையை முழுதும் சீர்குலைத்தது. காலனிகள் ஒன்றுக்கொன்றிடை நிகழ்ந்து வந்த வர்த்தகமும், வெளிநாடுகளுடன் நடந்து வந்த வாணிகமும் இதனால் மிகவும் பாதிக்கப்பட்டதுடன், மக்களின் சங்கடங்களும் அதிகரித்தன. தாள் பணம் மிகையாக அச்சடிக்கப் பட்டதாலும், இராச்சியங்களுக்கிடையே போட்டி மிகுந்ததாலும் நிலை குலைக்கும் பண வீக்கமும், விலையேற்றமும் விளைந்தன. எடுத்துக் காட்டாக 1781-இல் நிலவிய விலைகளைக் கூறலாம். அவ்

1. Chester Bowles : New Dimensions of peace, p. 225

வாண்டில் ஒரு சோடி பாதரட்சைகளின் (*a pair of shoes*) விலை 100 டாலர்களாயும், ஒரு பவுண்டு தேயிலை விலை 90 டாலர் களாயும் இருந்தன. மேலும், நாட்டின் செலாவணியில் மக்கள் நம்பிக்கை இழந்துவிட்டிருந்தாராகையால் ஒரு நிலை தடுமாற்ற மும் ஏற்பட்டது. இருப்பினும், காலனிகளின் பொருளாதாரம் பெரும்பாலும் தன்னிறைவு பெற்றதொரு பண்டமாற்றுப் பொருளாதாரமா யிருந்தமையால் மிக்க குழப்பமோ, தாறு மாறுகளோ ஏற்பட்டுவிடவில்லை. ஆனால், புரட்சிக்குப் பின்னர் நிறுவப்பட்ட புதிய அரசாங்கம் தன்னுடன் நட்புறவான நாடுகளாகிய பிரான்சு, ஹாலந்து, ஸ்பெயின் முதலிய பிற நாடுகளிடமிருந்து பெருந் தொகைகளைக் கடனாகப் பெற்றுக் கொள்ள வேண்டியதேற்பட்டது. மற்றொன்றும் இங்குக் கூற வேண்டும். விடுதலைப் போரில் காலனிகள் வெற்றி கொண்ட தற்கு வேளாண்மைக் குடிகளும், கை வினைஞர்களும், எல்லை வாசிகளும் (*farmers, artisans, and frontiermen*) காட்டிய பெரு முயற்சியே முக்கிய காரணமாயிருந்தது. இருந்தும், பின்னர் வரையப்பட்ட அரசியலமைப்பிலோ சாதாரண மனிதன் எவ்வித உரிமையையும் பெற்றுனில்லை. ஆனால், நிலப் பிரபுக்கள், வணிகர்கள், தொழில் முதலாளிகள் முதலியவர்களின் உரிமைகளும் தனிச் சலுகைகளும் புதிய அமைப்பில் நன்கு பாதுகாக்கப்பட்டிருந்தன. முடிவாகக் கூறுவோமாயின் விவசாயம், வணிகம். இவற்றிலீடுபட்டதொரு சமுதாயத்திற் கென்றே பிரதானமாக உருவாக்கப்பட்டதுதான் அமெரிக்க அரசியலமைப்பு. இப்பொருளாதார வகுப்பினர்களின் உரிமை களையும் சலுகைகளையும் பாதுகாப்பதற்கென்று அவற்றின் தலைவர்களால் எழுப்பப்பட்டதே அது என்பதிலும் ஐயமின்று.

# 3. விடுதலைக்குப்பின் பொருளாதார வளர்ச்சி

## (1783–1860)

### சூழ்நிலை

1783-ஆம் ஆண்டுக்குப் பின்னர் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்குக் கிடைத்த வாய்ப்பு இதற்கு முன்பு எப்போதுமே கிட்டியதில்லை என்று சொல்ல வேண்டும். தாய்நாட்டின் பொருளாதாரத் தலையீடுகள் இப்போது இல்லை. முன்பு இருந்த தடங்கல்கள் நீங்கவே, நாட்டின் புதிய அரசியல் சுயேச்சையும், புரட்சி அரசாங்கத்தின் அளவிலா ஆர்வமும் அதன் பொருளாதார வளர்ச்சியைத் துரிதப்படுத்தின. மேலும், புரட்சிக்குப் பின்னர் பிற நாடுகளுடன் அமெரிக்கா கொண்ட நட்புறவால் வர்த்தகமும் வாணிகமும் வளர்ந்தன. அத்துடன் பண்டங்களுக்கிருந்த தேவை அதிகரிக்கவே, அதன் காரணமாக விலைகளும் இலாபங்களும் உயர்ந்திருந்தன. இதனால் விவசாயம், தொழில், வாணிகம் யாவும் தூண்டுதல் பெற்றன. இத்தகைய பொருளாதாரப் பெருக்கத்திற்குக் காரணங்கள் பற்பல. வளம் நிறைந்த நிலப்பரப்பு அந் நாட்டில் ஏராளமாயிருந்தது. அத்துடன் அமெரிக்க மக்களும் கடின உழைப்பை ஏற்க முன் வந்தனர். விடுதலை பெறுதற்கு இரத்தமும், வியர்வையும், கண்ணீரும் சிந்திய மக்கள் பின்னர் நாட்டை மேம்படுத்தவும் கடினமாக உழைக்கச் சித்தமாயிருந்தனர் என்பதில் ஆச்சரியமில்லை. விடுதலைக்குப் பின்னும் தொடர்ந்து அமெரிக்காவில் குடியிறக்கம் நிகழ்ந்துகொண் டிருந்தமையால், தொழிலாளர்

களின் தொகை அங்குப் பெருகியதுடன் திறனுடை தொழிலாளர் (*Skilled Labour*) எண்ணிக்கையும் வெகுவாக அதிகரித்தது. மேலும், கூலிகளும் குறைந்திருந்தமையால் தொழில் வளர்ச்சிக்குத் தக்க சூழ்நிலை ஏற்பட்டது. அரசாங்கம் மக்களாட்சி முறையில் நிறுவப்பெற்று அரசியலில் சுதந்திரமும் பெற்றிருந்தமையால், பொருளாதார வளர்ச்சிக்கு இதனுல் மிக்க ஆதரவு கிட்டியது. இச் சூழ்நிலையில் தனி மனித சுயேச்சையும், தொழில் துணிவுச் சுதந்திரமும் அமெரிக்க மக்கள் யாவருக்கும் கிடைக்கப் பெற்றது. இக் காரணங்களின் சேர்க்கையாலேயே விடுதலைக்குப் பின் அமெரிக்காவில் பெரியதொரு பொருளாதார மேம்பாடும், வளர்ச்சியும் சாத்தியமாயின. இத்தகைய மேம் பாட்டிற்கு உறுதியானதோர் அடித்தளமிட்டவர்கள் அந் நாட்டின் சாதாரண மக்களே என்றும் இங்கு வலியுறுத்த வேண்டும்.

## பெரும் பொருளாதார வளர்ச்சிக் காலம்

அமெரிக்க விடுதலைப் போருக்கும் உள்நாட்டுப் போருக்கும் இடையில் உள்ள காலத்தில்தான் அந்நாட்டில் குறிப்பிடத்தக்க பொருளாதார வளர்ச்சிகள் நிகழ்ந்தன. அமெரிக்காவில் நிகழ்ந்த தொழிற் புரட்சியின் (*Industrial revolution*) ஆரம்பத்தைக் குறிப்பவை நெப்போலியனின் 1808-ஆம் ஆண்டு ஐரோப்பிய மறியலும் (*Continental Blockade*), பின்னர் 1812-ஆம் ஆண்டில் நடைபெற்ற பிரிட்டிஷ் போருமே யாகும். ஆனல், அந்நாட்டின் விவசாயப் புரட்சியும், சமூகப் புரட்சியும் இதற்கு வெகு முன்பே, அதாவது அமெரிக்கா விடுதலை அடைந்த அவ்வாண்டிலேயே ஆரம்பமாகி விட்டன. இவ் விவசாய, சமூகப் புரட்சிகள்தாம் ஐக்கிய நாடுகள் பின்னர் விவசாயத் திலும், தொழிலிலும் தன்னிறைவு பெறவும், பொருளாதார வலிமை பெறவும் வழிகோலின என்ருல் மிகையாகாது. மேற் கூறிய காலந் தொடங்கி, ஐக்கிய நாடுகளின் மக்கட் தொகை தொடர்ந்து அதிகரித்துக் கொண்டே சென்றதாலும், நாட்டுப் புறங்களெல்லாம் நகரங்களாகிக் கொண்டிருந்தமையாலும், அந் நாட்டின் விவசாயம், தொழில், போக்குவரத்து, வர்த்தகம் ஆகிய பல துறைகளும் துரிதமாகப் பெருக்கமும் வளர்ச்சியும் பெறுவது சாத்தியமாயிற்று. அமெரிக்க வரலாற்றின் முதல்

எழுபது ஆண்டுகளில் அங்கு விளைந்த மக்கட் தொகைப் பெருக்கத்தின் புள்ளி விவரங்களை நோக்கின் பின்வரும் உண்மைகள் வெளிப்படும்: அதுபோது ஒவ்வொரு இருபது ஆண்டுகளிலும் மக்கட் தொகை இரட்டித்துக்கொண்டே சென்றது. இத்துரிதப் பெருக்கத்திற்கு இயற்கையான வளர்ச்சியேயன்றி மற்றொரு முக்கிய காரணமும் உண்டு. அக் காலத்தில் தொடர்ந்து குடியிறக்கம் நிகழ்ந்துகொண்டேயிருந்தமையால் மக்கட் தொகை இதனாலும் விரைவில் பெருகியது. 1783-இல் தொடங்கிய முதல் தலைமுறைக் காலத்தில் மக்கட் தொகையில் ஏற்பட்ட அதிகரிப்பு முழுதுமே இயற்கை வளர்ச்சியைச் சார்ந்ததாகும் என்று தெரிகிறது. ஆனால், 1820-க்குப் பின்னர் நேர்ந்த அதிகரிப்பு, அடுத்தடுத்து நிகழ்ந்த குடியிறக்கங்களாலேயே பெரும்பாலும் விளைந்தது என்றும் விளங்குகிறது. இவ்வகையில் 1860 வரை ஆண்டுதோறும் 2 இலட்சம் பேர் குடியிறக்கம் நிகழ்ந்துகொண்டேயிருந்தது என்பதற்கும் சான்றுகள் உள.

**அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மக்கட் தொகை — 1860 வரை**

| ஆண்டு | வெள்ளையர் | வெள்ளையரல்லாதவர் | மொத்தம் |
|---|---|---|---|
| | (இலட்சத்தில்) | | |
| 1790 | 3.1 | 0.7 | 3.9 |
| 1800 | 4.3 | 1.0 | 5.8 |
| 1810 | 5.8 | 1.3 | 7.3 |
| 1820 | 7.8 | 1.7 | 9.2 |
| 1830 | 10.5 | 2.3 | 12.6 |
| 1840 | 14.1 | 2.8 | 17.0 |
| 1850 | 19.5 | 3.6 | 23.1 |
| 1860 | 26.9 | 4.4 | 31.4 |

அமெரிக்க வரலாற்றின் மிக முக்கியமானதோர் அம்சமாவது கிழக்குக்கரைப் பிரதேசங்களிலிருந்து குடியேற்ற மக்கள் மெள்ள மெள்ள மேற்குப் புறமாகப் பெயர்ந்து சென்றமைதான்.[1]

1. மேற்குப்புறப் பெயர்ச்சியைப் பற்றிய அத்தியாயத்தில் இதன் விவரங்களைக் காணவும்.

இதன் காரணமாகவே அமெரிக்க நாட்டின் மொத்த மக்கட் தொகை அதிகரித்த அதே விகிதத்தில் பழைய இராச்சியங்களின் (*old states*) மக்கட் தொகை அதிகரிக்கவில்லை. மேற்கு நோக்கிய புறப்பாடும் (*exodus*) தொடர்ந்து நிகழ்ந்தமையால்தான் பழைய இராச்சியங்களில் மக்கட் தொகையின் அதிகரிப்பு குறைவாயிருந்ததுடன் புதிய இராச்சியங்களின் மக்கட் தொகையும் வரவரக் குறைந்து செல்வதாயிருந்தது. இதற்குச் சான்றாக ஒரு சில புள்ளி விவரங்களைப் பரிசீலிக்கலாம். 1790-ஆம் ஆண்டில் அல்லிகெனிஸ் மலைத்தொடருக்கு (*Alleghenies*) அப்பால் வாழ்ந்த மக்களின் எண்ணிக்கை, மொத்தத்தில் 6 சதவீதம்தான். ஆனால், 1850-இல் அம் மலைகளுக்கப்பால் அமெரிக்கர்களில் 45 சதவீதம் மக்கள் வாழ்ந்து வந்தனர். மேற்கு நோக்கிப் பெயர்ந்த இம் மக்களில் மிகப் பெரும் பகுதியினர் தென்புற இராச்சியங்களிலிருந்து சென்றவர்களே என்பதும் தெளிவாகிறது. தென் கரோலினா இராச்சியத்திலிருந்த மக்களில் $\frac{2}{5}$ பகுதியினரும், வர்ஜீனியா, வடக்குக் கரோலினா இராச்சியங்களிலிருந்தவர்களில் $\frac{1}{3}$ பகுதியினரும், ஜார்ஜியாவில் வாழ்ந்தவர்களில் $\frac{1}{4}$ பகுதியினரும் இவ்வாறு மேற்கே சென்றனர் என்பதும் தெரிகிறது.

அமெரிக்காவின் மக்கட் தொகை வளர்ச்சியில் காணும் மற்றொரு முக்கிய பண்பு கிராமப்புறங்களிலிருந்து மக்கள் வெளியேறி நகரங்களுக்குச் சென்று குடியேறியமையாகும். அத்துடன், ஐரோப்பிய மக்களின் குடியிறக்கம் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டே இருந்ததென்பதும், இவர்களில் பெரும்பாலோர் நகரங்களையே நாடினரென்பதும் நோக்குதற்குரியது. இக் காரணங்களின் விளைவாகவே 1790-இல் 3.3 சதவீதமாக இருந்த நகர்ப்புற மக்கட் தொகை 1820-இல் 16.1 சதவீதமாக அதிகரித்துவிட்டது. பின்னர், 1860 வரைக்கும் இதே நிலை நீடித்தது. குறிப்பாக 1790-இல் 8000-க்கு மேற்பட்ட மக்களைக் கொண்ட நகரங்கள் 6 தான் இருந்தன. ஆனால். 1860-இல் அந் நகரங்களின் எண்ணிக்கை 141 ஆக உயர்ந்துவிட்டது. இவ்வாறு விவசாயத்தை விட்டு நகர்ப்புறம் நோக்கி நிகழ்ந்த பயணத்திற்குக் காரணங்கள் பலவாகும். அவைகளுள் தொழிற்சாலை முறையின் வளர்ச்சியும், உள்நாட்டுப் போக்குவரத்து

அபிவிருத்தியும், தொழிலுற்பத்தி, வாணிகம், வர்த்தகம், நிதி வசதி முதலியவற்றின் துரிதமான பெருக்கமும் முக்கியமானவை யாகும். ஆனால், அட்லாண்டிக் கரையோரமாயுள்ள நகரங்களில் ஏற்பட்ட மக்கட் தொகை அதிகரிப்பெல்லாம் அமெரிக்க ஐக்கிய நாடுகள் பெற்றிருந்த வசதிகளால் கவரப்பட்டு வெளிநாடுகளி லிருந்து வந்திறங்கிய மக்களாலேயே பெரும்பாலும் உண்டாயது. இம் மக்கள் எங்கும் காணுப் பல வாய்ப்புக்களை அமெரிக்காவில் கண்டனர். கீழ் வகுப்பினர் மேல் வகுப்புக்கு உயரவும், திருப்தி கரமான வாழ்க்கை வசதியை யாவரும் அடையவும், மதம், அரசியல் போன்ற துறைகளில் சுயேச்சையை அனுபவிக்கவும் மற்றெல்லா ஐரோப்பிய நாடுகளைக் காட்டிலும் அமெரிக்காவே அதிக வாய்ப்புக்களை அளித்தது என்பதைக் கண்ட மக்கள் அந் நாட்டிற்கு வந்திறங்கியது இயற்கையே. இப் புதிய மக்கட் திரளின் வருகையால் பல புதிய சமூக, பொருளாதாரப் பிரச் சினைகள் தோன்றின என்பதும் உண்மையே. இவ்வருகையின் காரணமாகப் பழைய நகரங்களில் ஒரே தலைமுறையில் மக்கட் தொகை இரட்டித்தது. அத்துடன் பல புதிய நகரங்களும் முளைத்தன. மேலும், சேரிகளும், சேரி வாழ்வும் நகரங்களில் முதன்முறையாகத் தோன்றின. ஏழ்மை வளர்ந்து பெருகியது. கூலிகள் குறைந்தன. பாட்டாளி மக்களின் வாழ்க்கைத் தரம் தொடர்ந்து சரிந்தது.[1]

மற்றும், அமெரிக்காவில் வெள்ளையரின் தொகை அதிகரித்த வீதத்திலேயே நீக்ரோவரின் தொகையும் அதிகரித்து வந்தது என்பதும் குறிப்பிடத் தக்கது. நீக்ரோ அடிமைகள் தென் இராச்சியங்களில்தான் திரளாயிருந்தனர். ஆயினும், அமெரிக்கப் புரட்சிக்குப் பின் வடக்கு, தெற்கு இராச்சியங்கள் இரண்டிலுமே அடிமைகளின் தொகை குறைந்தே காணப்பட்டது. அடிமை நீக்கத்திற்கென 1804-இல் எல்லா இராச்சியங்களிலும் சட்டம் கொணரப்பட்டது. தன் விருப்பமாகவே இறுதியில் அடிமை முறையை ஒழிப்பதற்கு இச்சட்டமே வழி செய்தது. ஆயினும், பின்னர் தென் இராச்சியங்களில் பருத்திச் சாகுபடி பெருக்கமும், பருத்தியைக் கொட்டை நீக்கும் எந்திரத்தின் (Cotton gin) புதிய கண்டுபிடிப்பும் நீக்ரோ அடிமைகளின் விடுதலைக்குத் தடையாய்

1. N. J. Ware: Industrial Worker, P. 27

நின்றன. பருத்திச் சாகுபடியில் கிடைத்த மிக்கக் கவர்ச்சிகரமான இலாபத்தைப் பெறுதற்கு அடிமை உழைப்பாளிகள் அவசியமாயினர். இதை உணர்ந்த தென் இராச்சியத் தோட்ட முதலாளிகள் அரசாங்கம் விதித்திருந்த தடையையும் கட்டுப்பாடுகளையும் மீறியும்கூட ஆப்பிரிக்காவிலிருந்து அடிமைகளை மேலும் மேலும் இறக்குமதி செய்தனர். இங்கிலையில் அடிமைகளுக்கிருந்த கிராக்கியும் விலை மதிப்பும் வெகுவாக உயர்ந்தன. எடுத்துக்காட்டாக, 1815-இல் தலைக்கு 250 டாலர்களாக இருந்த அடிமை ஆளின் விலை 1840-இல் 500 டாலர்களாக அதிகரித்துவிட்டது. நிலத்தின் மதிப்பு அப்போது குறைந்திருந்தது. பருத்தியின் விலையும் தாழ்ந்திருந்தது. எனினும், பரந்த விவசாயத்தைக் கடைப்பிடித்து அடிமை உழைப்பைக் கொண்டு இலாபத்தைப் பெருக்குவது சாத்தியமாயிற்று. இச்சூழ்நிலையில் தென் இராச்சியத்தினர் தங்கள் பொருளாதார வாழ்வும் சுபிட்சமும் அடிமை நீடிப்பிலேயே இருக்கிறது என்று நம்பியதில் வியப்பில்லை.[1]

## விவசாய வளர்ச்சி

அமெரிக்கப் பொருளாதார வளர்ச்சியில் 1783—1860 காலத்தை விவசாய வளர்ச்சிக் காலமெனக் குறிப்பிடுதல் பொருந்தும். அக்காலத்தில்தான் அமெரிக்க விவசாயம் பெரிதும் விரிவடைந்து, அமெரிக்கா உலகத்திலேயே மிகப் பெரிய விவசாய நாடாக ஆகியது. விவசாயத்தின் பல துறைகளும் விருத்தி செய்யப்பட்டுத் தேர்ச்சியுடன் நடத்தப்பட்டதுடன், சுய தேவைக்கு உற்பத்தி செய்தது போய் வெளி உலகச் சந்தைக்கென்று உற்பத்தி செய்யும் வியாபார வேளாண்மை தோன்றலாயிற்று. அமெரிக்காவில் விஞ்ஞான முறை நவீன விவசாயம் தோன்றியதும், எந்திர வேளாண்மையும் பெருமுதல் வேளாண்மையும் (*Mechanised capitalist farming*) கைக்கொள்ளப்பட்டதும் இக்காலத்தில்தான். சுருங்கக் கூறின், குடியேற்ற வேளாண்மைச் சமூகமாயிருந்த பழைய அமெரிக்க சமூகம் இக்காலத்திலேதான் ஒரு செழுமையான விவசாய சமூகமாக மாற்றமடைந்தது. பல வகைகளிலும் இக்காலம்தான் அமெரிக்க விவசாய வரலாற்றிலேயே மிக உன்னதமான காலமாகும்.

1. Faulkner: American Economic History, p. 316

அமெரிக்க விவசாயத்தின் பெருக்கத்திற்கு ஏற்றாற்போலவே அச் சமயம் ஐரோப்பாவின் சந்தைகளும் விரிவடைந்தன. உள்நாட்டுப் பிறநாட்டுத் தொழிற்சாலைகள் அப்போது அமெரிக்காவில் உற்பத்தியான பருத்தி யாவற்றையும் வாங்கிக் கொண்டன. அமெரிக்க உணவுப் பொருள் உற்பத்தி முழுதுமே புதிதாக வளர்ந்து வந்த தொழில் தலங்களுக்குத் தேவைப்பட்டன. இவ்வாறு உற்பத்திக்கேற்றாற்போல் தேவையும் அதிகரித்தமையால் அமெரிக்க விவசாய வளர்ச்சிக்குத் தக்கதொரு வாய்ப்பு கிடைத்தது என்பது சொல்லாமலே விளங்கும். விவசாயமே அமெரிக்காவின் பிரதான தொழிலாயிற்று. பின்னர் அமெரிக்காவில் ஏற்பட்ட போக்குவரத்து வசதிகளும், தொழில் வளர்ச்சியும் இவ் விவசாய வளர்ச்சியின் சேய்கள்தாம் என்றால் மிகையாகாது.

மேற்கூறிய அமெரிக்க விவசாய முன்னேற்றத்திற்குத் துணை புரிந்த பல காரணங்களுக்குள் அமெரிக்க அரசாங்கத்தின் நில விற்பனைக்கொள்கை (*Land policy*) மிக முக்கியமானதாகும். 1783 முதல் 1820 வரை பொது நிலங்களின் விற்பனையில் அமெரிக்க அரசாங்கத்தின் நோக்கமெல்லாம் வருவாய் திரட்டுவதும், அரசாங்கத்தின் கடனை அடைப்பதுமேயாம். ஆனால், 1820-க்குப் பின் இக் கொள்கை மாறியது. அதற்குப் பின் நில விற்பனையெல்லாம் நாட்டின் பொருளாதார நலனை மட்டும் கருதியே நிகழ்ந்தது. அவ்வாண்டிலிருந்து நிலம் வேளாண்மைக்கும் குடியேற்றத்துக்குமெனவே (*Settlement and farming*) பெரும்பாலும் விற்பனை செய்யப்பட்டது. இதற்குச் சான்றாக 1785 முதல் இயற்றப்பட்ட பல்வேறு சட்டங்களையும் சுட்டலாம். 1785-ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி குறைந்தது 640 ஏக்கரா பரப்புள்ள கண்டங்களாகவே நிலம் விற்பனை செய்யப்பட வேண்டுமென்று கட்டுப்பாடு விதிக்கப்பட்டது. மேலும், நிலத்தின் விலையும் ஏக்கராவுக்கு 2 டாலர்களென்று உயர்வாகவே நிர்ணயிக்கப்பட்டிருந்தது. இவற்றிலிருந்து அரசாங்கத்தின் அப்போதைய நோக்கம் வருவாய் திரட்டும் ஒன்றாகத்தான் இருந்தது என்பது விளங்கும். இந்த ஏற்பாடு செல்வம் படைத்தவர்கள் நிலத்தைக் குறைந்த விலைக்கு வாங்கவும், பின்னர் விலை ஏறிய பின் இலாபகரமாக விற்றுக் கொள்ளவும், அதாவது நிலத்தில் ஊக வணிகம் (*Speculation*) புரிந்து இலாபம் சம்

பாதித்துக்கொள்ளத் தூண்டுதலளித்ததேயன்றி உண்மையில் நிலத்தில் குடியேறி வேளாண்மை புரிய விரும்பிய குடியானவர்களுக்கு இது துணை புரியவில்லை. இக்குறையைப் போக்கும் நோக்குடன் 1800-இல் சம்பந்தப்பட்ட விதிகளில் சில மாறுதல்கள் செய்யப்பட்டன. விற்பனை செய்யும் நிலத்துண்டின் அளவு 160 ஏக்கராக்களாகக் குறைக்கப்பட்டது. மேலும், கடனுக்கு விற்கும் முறையும் புதிதாகத் தொடங்கப்பட்டது. இப் புதிய ஏற்பாடுகள்கூட சுயநலக்கார வணிகர்களால் (Speculators) சொந்த இலாபத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளப்பட்டதாயினும், அநேக குடியானவர்கள் கடனுக்கு நிலம் பெற்று நன்மையடைந்தனர். ஆயினும், இக்குடியானவர்களில் பலர் கடன் பாக்கியைக் கட்டமுடியாமலிருந்தனர். ஆதலால், 1820-ஆம் ஆண்டில் கொண்டு வரப்பட்ட சட்டம் இக்குடியானவர்கள் பணம் செலுத்திய அளவுக்கு மட்டும் நிலத்தை வைத்துக் கொள்ளவும், மீதி நிலத்தை அரசாங்கத்திடம் ஒப்படைத்து விடவும் அனுமதியளித்தது. மேலும், இப்புதிய சட்டம் பல வழிகளில் குடியானவர்களுக்கு நன்மை அளிக்க முன் வந்தது. நிலத்தின் விலை ஏக்கராவுக்கு 2 டாலர்களாயிருந்ததை இச்சட்டம் 1.25 டாலர்களாகக் குறைத்தது. விற்கும் நிலத் துண்டின் அளவும் 80 ஏக்கராக்களாக மேலும் குறைக்கப்பட்டது. இம் மாற்றங்கள் முன்னைவிட அதிகமான பேர்களைப் புது நிலங்களில் குடியேறத் தூண்டின. 1820-லிருந்து 10 ஆண்டுகள் வரை ஆண்டுதோறும் ஒரு மில்லியன் ஏக்கராக்கள் விற்கப்பட்டன என்பது இவ்வுண்மையை விளக்கும்.

1830-ஆம் ஆண்டுக்குப் பின்னர் அமெரிக்காவில் மக்கள் குடியிறக்கம் பெருவாரியாக நிகழ்ந்தது. இதற்குக் காரணங்கள் போக்குவரத்து அபிவிருத்தியும், மற்றும் அமெரிக்க உற்பத்திகளான பருத்தி, தானிய மாவு இவற்றின் விலையேற்றமுமேயாம். இதற்கேற்ப நில விற்பனையும் ஏராளமாயிற்று. 1833-ஆம் ஆண்டில் 3·8 மில்லியன் ஏக்கராக்களே விற்கப்பட்டன. ஆனால், 1836-இல் 20 மில்லியன் ஏக்கராக்களுக்குமேல் விற்பனையாகியது. இப் பெருவாரியான நில விற்பனை மறுபடியும் ஊக வணிகர்கள் நடவடிக்கையை அதிகரித்தது. நிலத்தின் உடைமை பற்றிய பிரச்சினை தலை தூக்கியது. இப் பிரச்சினைக்குத் தீர்வு

காண வேண்டியது மிகவும் முக்கியமாயிற்று. இறுதியாக 1840-ஆம் ஆண்டுச் சட்டம் குடியேற்றக்காரர்களுக்கே நிலத்தில் முதலுரிமை அளித்தது. நிலம் வாங்கிக்கொள்ளும் முதல் உரிமை நிலத்தில் குடியேறி அதில் வேளாண்மை புரிவோருக்கே என இச் சட்டம் தீர்வு செய்தது மிகவும் முக்கியமானதொரு முடிவாகும். மேலும், 1841-ஆம் ஆண்டில் குடியேற்றக்காரர்களுக்கே (Settlers) நிரந்தரமான நில உரிமையும் கொடுக்கப்பட்டது. இவ்வாண்டுக்குப் பின்னர் நில விற்பனைகள் பெரும்பாலும் குடியேற்றத்திற்காக மட்டுமே செய்யப்பட்டன. இவ்வாறு அமெரிக்க அரசாங்கத்தின் நிலக்கொள்கையானது அந்நாட்டின் விவசாய வளர்ச்சிக்கு மிகவும் துணை புரிந்தது என்று கூற வேண்டும். மற்றும் விவசாயப் பொருட்களுக்கு அப்போது கிடைத்து வந்த உயர்ந்த விலையும், ஐரோப்பாவிலிருந்து தொடர்ந்து நிகழ்ந்த மக்கள் குடியேற்றமும் அமெரிக்க விவசாயப் பெருக்கத்திற்கு மேலும் உதவின என்றும் கூற வேண்டும். அமெரிக்க விவசாயத்தில் வட இராச்சியங்களுக்கும் தென் இராச்சியங்களுக்குமிடையே பெருத்த வேறுபாடு காணப்பட்டது குறிப்பிடத்தக்கது. வடக்கே கல்வியறிவு பரவியிருந்தமையால் சிறந்த விஞ்ஞான முறைகளும், நுண்ணிய விவசாய முன்னேற்றங்களும் கைக்கொள்ளப்பட்டன. அங்கே பல்வகை வேளாண்மை நிகழ்ந்ததுடன், குடியானவர்கள் யாவரும் நேரில் தாங்களோ அல்லது கூலியாட்களைக் கொண்டோ தங்கள் நிலங்களைச் சாகுபடி செய்தனர். தென் இராச்சியங்களில் நிலைமை முற்றிலும் வேறுபாடாயிருந்தது. பெரும் தோட்ட விவசாயமே அங்கு பெரும்பாலும் காணப்பட்டது. இவற்றின் உடைமையாளர்களோ தலத்தில்லாதவர்களா யிருந்தனர். இத்தோட்டங்களின் வேளாண்மை அடிமைகள் உழைப்பின் அடிப்படையிலே நடைபெற்றது. வட இராச்சியங்களில் கோதுமையும் சோள வகைகளுமே உற்பத்தி செய்யப்பட்டன. ஆனால், தெற்கிலோ பருத்தி, புகையிலை, கரும்பு, நெல் முதலிய பயிர்கள் வியாபாரத்திற்கெனவே பெருவாரியாக விளைவிக்கப்பட்டன.

### பருத்திச் சாகுபடி

19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் அமெரிக்க விவசாயத்தில் நிகழ்ந்த முக்கியமானதொரு மாற்றம் அந் நாட்டு விவசாயத்

தின் பிரதான விளைபொருளாகப் பருத்திப் பயிர் ஆகியதே ஆகும். விடுதலைக்குப் பின் பருத்திச் சாகுபடியில் ஒரு புரட்சியே ஏற்பட்டுவிட்டது எனலாம். 1830-க்குள்ளேயே பருத்தியானது தெற்கு இராச்சியங்களின் விளைபயிர்களில் பிரதானமான தாகவும், அமெரிக்க நாட்டின் ஏற்றுமதிகளிலேயே மிகவும் முக்கியமானதாகவும் ஆகிவிட்டது. இச் சமயத்தில் இங்கிலாந்தில் நிகழ்ந்துவந்த தொழிற் புரட்சியினால் பெருவாரி பண்ட உற்பத்திக் கான பல புதிய எந்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்டமையால், அமெரிக்கப் பருத்திக்கு இங்கிலாந்திலிருந்த தேவை தொடர்ந்து பெருகிக்கொண்டே சென்றது. பருத்திப் பஞ்சு தயாரிப்பதில் இருந்த சங்கடங்கள் யாவும் 'விட்னே' என்பவர் கண்டுபிடித்த பஞ்சு பிரிக்கும் எந்திரத்தால் (*Whitney's cotton gin*) தீர்ந்தன. ஆகவே, பருத்திப் பஞ்சுத் தயாரிப்பு இனி விரைவிலும் பெருவாரி யாகவும் நடைபெற முடிந்தது. இதன் விளைவாக 1860-இல் மட்டும் அமெரிக்கா சுமார் 333·5 மில்லியன் டாலர்கள் மதிப் புள்ள 3·8 மில்லியன் பேல்கள் பருத்தியை ஏற்றுமதி செய்தது. இப் பருத்தி ஏற்றுமதியே 'தெற்கு இராச்சிய விவசாயிகளுக்குப் பெருஞ் செல்வத்தை அளித்தது. பின்னர், உள் நாட்டுப் போர் நடப்பதற்கும் இதுவே காரணமாய் அமைந்தது என்றும் ஈண்டு குறிப்பிடலாம்.

## புகையிலை விளைச்சல்

விடுதலைக்கு முந்திய காலத்தில் தென் இராச்சியங்களின் பயிர்களில் புகையிலையே மிக முக்கிய இடம் வகித்தது. புரட் சியைத் தொடர்ந்த பத்தாண்டுகள் புகையிலை உற்பத்திக்காரர் களுக்குப் பொற்காலமாயிருந்தது. 1791-இல் புகையிலைதான் அந்நாட்டு ஏற்றுமதிகளின் தலையாய சரக்காயிருந்தது. அவ் வாண்டில் ஏற்றுமதியான புகையிலையின் மதிப்பு சுமார் $4\frac{1}{2}$ மில்லியன் டாலர்கள் பெறுமானமுள்ளது என்று அறியப் படுகிறது. ஆனால், 19-ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்து நிலைமை மாறியது. பருத்திப் பயிர் சாகுபடி வளர்ச்சியால் புகையிலைச் சாகுபடி முக்கியத்துவம் இழந்து குறைந்தது. ஆயினும், 1840-க்குப் பின் புகையிலைச் சாகுபடி மறுபடியும் ஓங்கிற்று. அந் நாட்டின் உள் நாட்டுப் போர் ஆரம்பித்தபோது

அமெரிக்காதான் உலகத்திலேயே மிகப் பெரிய புகையிலை உற்பத்தி நாடாக விளங்கியது.

மேற்கூறிய பிரதான விளைபொருட்களைத் தவிர்த்து வேறு பல பயிர்களையும் தென் இராச்சியங்கள் உற்பத்தி செய்தன என்பதைக் கவனிக்க வேண்டும். இவற்றுள் கரும்பு, நெல், ஹெம்ப் சணற் பயிர் (*Hemp*) முதலியவை முக்கிய வியாபாரப் பயிர்களாகும். மற்றும், சுய தேவைக்கென கோதுமை, பார்லி, சோளம், ரை முதலியனவும் விளைவிக்கப்பட்டன. தவிர, தெற்குப் பிரதேசம் கால்நடை வளர்ப்பு வேளாண்மையிலும் முக்கியத்துவம் பெற்றிருந்தது. முக்கியமாக, கென்டக்கி இராச்சியம் விரைவுக் குதிரை வகைகளையும் (*Speed horses*), கட்டைக்கொம்பு வகை எருதுகளையும், ஹாம்ப்ஷைர் வகைப் பன்றிகளையும் (*Hampshire hogs*) உற்பத்தி செய்து வந்தது. வர்ஜீனியா ஆட்டுப் பண்ணையில் பேர் பெற்றிருந்தது. தென் இராச்சியங்களின் பொருளாதாரத்தில் மிருக வேளாண்மையின் முக்கியத்துவத்தை 1860-ஆம் ஆண்டு கணக்கெடுப்பில் வெளியான புள்ளி விவரங்கள் காட்டுகின்றன. அவ்வாண்டில் தென் இராச்சியங்களின் கால்நடைச் சொத்தின் மதிப்பு 381·7 மில்லியன் டாலர்களென்று கணக்கிடப்பட்டிருந்தது குறிப்பிடத் தக்கதாகும்.

அமெரிக்க விவசாயம் விரைவில் முன்னேறியதற்கு உதவிய காரணங்கள் பல. முன்னேற்ற வேளாண்மை முறைகளையும், அவற்றின் நலன்களையும் விவசாயிகளுக்குக் கண் கூடாகக் காட்டும் காட்சிப் பண்ணைகள் (*Demonstration farms*) பலவிடங்களிலும் நிறுவப்பட்டிருந்தன. விவசாய முன்னேற்றத்திற்குத் துணை செய்யும் விவசாயச் சங்கங்களும் (*Agricultural societies*), விவசாயச் சந்தைகளும் (*Agricultural fairs*) பற்பல விடங்களிலும் காணப்பட்டன. மேலும், வேளாண்மையின் முன்னேற்றத்திற்கான நுண்முறைகளும், எந்திரங்களும் கண்டு பிடிக்கப்பட்டு விவசாயிகளிடையே பரப்பப்பட்டிருந்தன. தவிர விவசாயத் துறைச் செய்தி இதழ்களும், சஞ்சிகைகளும், வெளியீடுகளும் 19-ஆம் நூற்றூண்டின் ஆரம்பத்திலிருந்தே வெளிவரத் தொடங்கின. இவற்றுள் 'அமெரிக்க

விவசாயி' (*The American Farmer*), 'சாகுபடிக்காரன்' (*The Cultivator*) என்ற இரு வெளியீடுகளும் குறிப்பிடத்தக்கவை யாகும். கல்வித் துறையிலும் விவசாயக் கலை, வேளாண்மை, விஞ்ஞானம் இவற்றிற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருந்தது. விவசாயக் கல்வி கற்பிப்பதற்கெனவே சில பல்கலைக் கழகங்களிலும், கல்வி நிலையங்களிலும் தனிப் பயிற்சிகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. முதலில் இக் கல்வி அப்போதிருந்த சாதாரண பள்ளிகளிலேயே தனிப்படப் போதிக்கப்பட்டது. 1792-இல் கொலம்பியா பல்கலைக் கழகம் இயற்கை வரலாறு (*Natural history*), இரசாயனம் (*Chemistry*), விவசாயம் (*Agriculture*) மூன்றுக்கும் முதன்முறையாக ஒரு பேராசிரியரை நியமித்தது. ஆயினும், விவசாயக் கல்விக்கெனவே முதன்மை யாக ஆரம்பிக்கப்பட்ட முதல் நிறுவனம் 1822-இல் கார்டினரி மெயின் (*Cardinery maine*) என்னுமிடத்தில் நிறுவப்பட்ட கல்வி நிலையமே யாகும். இதைத் தொடர்ந்து மேலும் ஒருசில பள்ளிகள் இம் மாதிரி ஆரம்பிக்கப்பட்டன. 1850-இல் மிச்சிகன் இராச்சியத்தில்தான் முதன்முதலாக அரசாங்க உதவி பெற்ற விவசாயக் கல்லூரி ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. இக் கல்லூரிக்கு அரசாங்கம் 40,000 டாலர்களைக் கொடுத்து உதவியது. பின்னர் இவ்வுதாரணத்தை மேரிலாந்தும், பென்சில் வேனியாவும் பின்பற்றின. இருப்பினும், 1862-இல் வந்த 'மாரில் சட்டம்' தான் (*Morril act*) விவசாயக் கல்வியின் பெரு வளர்ச்சிக்கு வழி செய்தது. 1839-இல்தான் விவசாயத்திற்குத் தேசிய சர்க்காரின் உதவி ஆரம்பமாகியது. அவ்வாண்டிலே தான் விவசாயத் துறைக்குக் கூட்டாட்சி சர்க்கார் நிதிகளி லிருந்து முதன்முதல் உதவி அளிக்கப்பட்டது. இவ்வாறு நிகழ்ந்த மாபெரும் அமெரிக்க விவசாய வளர்ச்சியே பின்னர் ஐரோப்பா அமெரிக்காவை நாடுதற்குக் காரணமாகியது. ஐரோப்பாவில் தொழிற்சாலைகள் நிறைந்திருந்தன. ஆனால் அவைகளுக்குத் தேவைப்படும் மூலப் பொருட்கள் அமெரிக்காவி லேயே உற்பத்தியாயின. மேலும், பெருகிக்கொண்டே சென்ற ஐரோப்பிய மக்கட் கூட்டத்துக்கு அவசியமாகிய உணவுப் பொருட்களையும் அமெரிக்காவே உற்பத்தி செய்து அளித்தது. ஐரோப்பிய நாடுகளில் தொழிலில் மிஞ்சிய செல்வத்தை இலாப

கரமாக முதலீடு செய்துகொள்வதற்கும் அமெரிக்காவே அளவிலா வாய்ப்பளித்தது.

## தொழில் வளர்ச்சி

விடுதலைக்குப் பின்னரே அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தொழிற் புரட்சி ஆரம்பமாகியது. குறிப்பாக 1808-லிருந்தே இப் புரட்சி ஆரம்பமாகியது. இவ்வாண்டுக்கு முந்திய காலத்தில் அமெரிக்கா தொழில் துறையில் ஐரோப்பாவையே நாடியிருக்க வேண்டியதாயிற்று. இவ்வாண்டுக்குப் பின்புதான் அமெரிக்கா தொழில் துறையிலும் தன்னிறைவு பெறத் தொடங்கியது; அதன் பொருளாதார வளர்ச்சியும் பலதிறப்பட்டதாயிற்று.[1] இத்தகைய வளர்ச்சியைச் சாத்தியமாக்கிய காரணங்கள் பின்வருமாறு: அமெரிக்காவில் முன்பு நாம் குறிப்பிட்டவாறு இயற்கை வளம் ஏராளமாயிருந்ததுடன் தொழிலுக்கான மூலப் பொருட்களும் (*Raw materials*), கனிச் செல்வங்களும் நிறைந்திருந்தன. அத்துடன் மக்களிடம் துணிவு முயற்சியும் (*Enterprising spirit*). புதிய பொறிகளைக் கண்டுபிடிக்கும் புத்தாக்கத் திறனும் (*Inventive genius*) நிரம்ப இருந்தது. மேலும், முன்பு சங்கடப் படுத்திய வரி விதிப்புக்களும், பிற நாட்டுத் தலையீடுகளும் இப்போது ஒழிந்திருந்தன. அடிமைகள் தவிர மற்றெல்லாத் தொழிலாளிகளுக்கும் சுதந்திரமிருந்தது. சுயேச்சையைக் கட்டுப் படுத்தும் பழைய சமூகத் தடைகளும், விலக்குக்களும் இப்போதில்லாமையால், எவரும் எவ்வகைத் தொழிலையும் தொடங்க முடிந்தது. தேவையான மட்டும் நிதி வசதி அளிக்க பாங்குகளும் நிதி நிலையங்களுமிருந்தன. உள் நாட்டுச் சந்தைகளில் வெளி நாட்டாரின் போட்டியில்லாமையால் இச் சந்தைகள் பெருகி, தொழில் வளர்ச்சிக்கு ஊக்கமளித்தன. மேலும், அமெரிக்கா ஏற்படுத்தியிருந்த உயர்ந்த இறக்குமதி வரிகளால் அமெரிக்கத் தொழில்களுக்குக் கிடைத்த பாதுகாப்பும் மேற்கூறிய தொழில் பெருக்கத்திற்கு உதவியாயமைந்தது. இவ்வகையில் ஆரம்பத்தில் வளர்ந்த தொழில்கள் கனிப்பொருள் தொழில்களாகிய இரும்பு, செம்பு, நிலக்கரி, ஈயம், தங்கம் இவை பற்றிய தொழில்களும்,

1. Bogart: Economic History of the United States

மற்றும் நெசவுத் தொழில், உணவுப் பொருள் தயாரிப்புத் தொழில், மரம் அறுத்தல் முதலியவை ஆகும்.

அமெரிக்கத் தொழிற்புரட்சியின் முதற்படி 1790-க்கும் 1860-க்கும் இடையேயுள்ள காலத்திலேயே நிகழ்ந்தது. தொழிற்சாலை முறையும், பெருவாரி வாணிக முறையும், நிதி நிலையங்களும் இக்காலத்திலேயே நிறுவப்பட்டன. மேலும், செயற்கைச் சக்தியைப் பயன்படுத்த ஏற்பாடு செய்யப்பட்டது. இவைகளின் விளைவாகப் பொருளாதார அமைப்பிலும், சமூக அமைப்பிலும் அடிப்படையான மாறுதல்கள் ஏற்பட்டன. 1790 முதல் 1815 வரை 25 ஆண்டுக் காலம் அமெரிக்கா பல தொழில் தயாரிப்புக்களுக்கு ஐரோப்பாவையே எதிர்பார்க்க வேண்டியிருந்தது. ஆனால், அடுத்த 25 ஆண்டுகளுக்குள் அமெரிக்காவில் சிறு தொழிற்சாலை உற்பத்தி முறை ஆரம்பித்துவிட்டது. 1840-க்கும் 1860-க்கும் இடையேயுள்ள காலத்திலேதான் இரும்பை உருக்கவும், நீராவி சக்தி தயாரிக்கவும் நிலக்கரி உபயோகிக்கப்பட்டு விரைவான தொழில் முன்னேற்றம் விளைந்தது. இக்காலத்திலேயே இருப்புப் பாதைகளும், போக்குவரத்து வசதிப் பெருக்கமும் ஏற்பட்டன. இதனாலேயே நவீன தொழில்களும் தொழில் நகரங்களும் தோன்றுவது சாத்தியமாயிற்று. தொழிலுற்பத்தியில் கிடைத்த இலாபங்கள் உயர்வாயிருந்தமையால், தொழில் விரிவடைதற்குத் தேவையான புதிய மூலதனத்தை இவ்விலாபங்களிலிருந்தே பெற்றுக்கொள்ள முடிந்தது. மேலும், இவ்வுயர் இலாபம் வெளிநாட்டவரை அமெரிக்கத் தொழிலில் முதலீடு செய்யவும் தூண்டிற்று.[1] இருப்பினும் தொழில் வளர்ச்சிக்கு ஆரம்பத்தில் இடையூறுகள் இல்லாமலில்லை. பாங்கு வசதிகள் குறைவாயிருந்ததுடன், செலாவணி முறையும் ஆரம்பத்தில் விபரீத நிலையில் இருந்தது. மேலும் அப்போது அமெரிக்கக் கூட்டாட்சி அரசாங்கம் தென் இராச்சியத் தோட்ட முதலாளிகளின் கையிலேயே இருந்தமையால் அவர்களுக்கு விருப்பமில்லாத ஏற்பாடுகள் எவையும் நிறைவேற்றுவதற்கில்லாமலிருந்தது. இவ்வகையில் தொழில் பாதுகாப்புக்கான சுங்க வரிகளையும், மையப் பாங்கு ஏற்பாட்டையும் (*Central banking*), அமெரிக்கக் கண்டத்தை இணைக்கும் இருப்புப்பாதைத் திட்டத்தையும்

1. Faulkner: American Economic History, P. 243

தென் இராச்சியத்தினர் எதிர்க்கவே இவைகள் நிறைவேருது போய், தொழில் வளர்ச்சியும் தடைப்பட்டது என்று அறிய வேண்டும். இருப்பினும், தொழில் வளர்ச்சிக்குச் சாதகமான மற்றச் சூழ்நிலைகள் யாவும் அமெரிக்காவில் அச்சமயம் இருந்தன என்றே கூற வேண்டும். அமெரிக்கச் சுதந்திரப் பிரகடன ஆண்டிலேதான் இங்கிலாந்தில் ஜேம்ஸ்வாட் என்பவர் நீராவி எஞ்சினைக் (Steam engine) கண்டுபிடித்திருந்தார். இக் கண்டு பிடிப்பு முதலில் இங்கிலாந்திலும் பின்னர் அமெரிக்காவிலும் பொருளாதார வளர்ச்சியில் ஒரு புரட்சிகரமான முன்னேற்றத் தைத் தோற்றுவித்தது. இதுவன்றி மற்றும் பல காரணங்கள் நேரடியாகவும், மறைமுகமாகவும் அமெரிக்கப் பொருளாதாரத் தின் விரைவான வளர்ச்சிக்குத் துணை புரிந்தன. அவற்றுள் பின்வருவன குறிப்பிடத்தக்கவையாகும்: (1) புரட்சிக் காலத்தின் போது ஐரோப்பாவிலிருந்து வரும் இறக்குமதிகள் நிறுத்தமும், வெளிநாட்டு வாணிகத்தின்மீது சட்டமூலமாய் விதிக்கப்பட் டிருந்த தடை விதிப்பும், 1812 - 14-இல் நிகழ்ந்த போரும்; (2) அமெரிக்காவில் பருத்தி, இரும்பு, எரிபொருள் (Fuel), நீர்விசை (Water power) போன்ற மூலப் பொருட்களின் அபரிமிதம்; (3) மேலும் மேலும் ஐரோப்பாவிலிருந்து உயர்திறத் தொழி லாளர்களும் சாதாரணத் தொழிலாளர்களும் அமெரிக்காவில் வந்திறங்கியதும், அவர்களில் பெரும்பாலோர் தொழில்துறையில் ஈடுபடத் தயாராயிருந்ததும்; (4) தொழில் பாதுகாப்பிற்கான சுங்க வரிகளை விதித்து அரசாங்கம் துணை புரிய முன்வந்ததும்; (5) எதையும் சமாளிக்கக் கூடும் அமெரிக்க மக்களின் பல் வகைத் திறன்களும், வல்லமையும்; (6) சேமித்து வைக்கப் பட்டிருந்த சிறு மூலதனங்கள் தொழில்களுக்குக் கிடைக்கப்பெற் றதும் தொழில் கார்ப்பரேசன்கள் நிறுவப்பட்டதும் ஆகும். மற் றும் தொழிலுற்பத்தியின் வளர்ச்சிக்குச் சாதகமாயிருந்த சில சூழ் நிலைகளையும் இங்குக் குறிப்பிடுதல் வேண்டும். தொழிலாளர் கூலிகள் அக்காலத்தில் உயர்ந்திருந்த போதிலும் போக்குவரத் துக் கட்டணங்கள் குறைந்திருந்தமையால் நிலைமை திருப்திகரமா யிருந்தது. தவிரவும், கலிபோர்னியாவில் தங்கச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டமையால் வெளிநாடுகளுடன் பாதகமான வாணிபக் கொடுப்பல் நிலை (Unfavourable balance of trade) ஏற்படினும் கேடில்லை என்ற நிலை ஏற்பட்டது. இதனல் அயல்

நாடுகளிலிருந்து இரும்பு, எந்திரங்கள், மற்றும் அமெரிக்கத் தொழிலபிவிருத்திக்குத் தேவையான பண்டங்களை யெல்லாம் தயக்கமின்றி வாங்கிக் கொள்ளவும் முடிந்தது. இவற்றிற்கெல்லாம் அடிப்படையாக அமெரிக்க உள்நாட்டுச் சந்தையும் விரிவடைந்துகொண்டே சென்றதை இங்குக் குறிக்க வேண்டும். போக்குவரத்து அபிவிருத்திகள்தாம் இச்சந்தை விரிந்து செல்வதைச் சாத்தியமாக்கின என்றால்,மிகையாகாது. அமெரிக்கக் குடிமகனின் பண்புகளும் இப்பொருளாதார வளர்ச்சிக்குகந்தவையாயிருந்தன என்றால் பொருந்தும். அவனுடைய மூதாதையரின் தூய்மைக் குண மரபு அவனுக்களித்திருந்த சிக்கனப் பண்பும், கடினமாக உழைக்கும் இயல்பும் அமெரிக்கப் பொருளாதார முன்னேற்றத்திற்கு ஆதரவாயிருந்தன. மேலும் அமெரிக்கக் கண்டத்தின் மேற்கெல்லைப் பிரதேசத்தில் கடினமானதொரு பொருளாதார சூழ்நிலையில் வாழ வேண்டியிருந்த அவன் தனக்கு வேண்டிய உலோக சாமான்களைத் தானே தயாரித்துக் கொள்ளவும், அவற்றைப் பழுது பார்த்துக் கொள்ளவும் பழகிக் கொள்ள நேர்ந்தது. இம்மாதிரியாக வளர்ந்த புத்தாக்கச் சாமர்த்தியம் எந்திரங்களை எல்லா விடங்களிலும் பயன்படுத்தித் தொழில் புரியத் தூண்டுதலளித்தமையால், தொழில் வளர்ச்சி துரிதமாகியது. இவ் வளர்ச்சி குறித்து அளிக்கப்பட்டுள்ள ஒரு விளக்கம் வருமாறு : அமெரிக்கப் புதுக் கண்டம் வளம் நிரம்பியிருந்தது ; மக்களோ கடின உழைப்பைச் சிந்தும் சித்தமுடைய முன்முயற்சியாளர்களாயிருந்தனர் ; தொடர்ந்து குடியிறக்க மூலம் வந்து குவிந்த மக்கள் கூட்டத்தால் கூலிகள் குறைந்திருந்ததுடன், புதுத் திறம் பெற்றிருந்த தொழிலாளர் எண்ணிக்கையும் பெருகி வந்தது ; கூட்டாட்சி அரசியல் ஐக்கியமும், நாடு முழுதுக்கும் பொதுவான வர்த்தகச் சுயேச்சையும் அங்கு நிலவியிருந்தன ; அமெரிக்க சமூகம் ஜனநாயக அரசியல் சமூகமாயிருந்தமையால், மக்கள் விருப்பம்போல் கூடிச் செயலாற்றுதற்கும் (*Free association*), விரும்பிய தொழிலைத் துணிவதற்கும் (*Free enterprise*), தொழில் கார்ப்பரேசன்களை நிறுவிக் கொள்வதற்கும் (*Formation of corporations*) அங்கு உரிமைகளிருந்தன. இவ்வாறு அமெரிக்க ஐக்கிய நாட்டிலிருந்ததைப்போல் தொழில் வளர்ச்சிக்கு அத்தகைய நல்ல வாய்ப்பு எங்குமே இருந்ததில்லை.

இவற்றின் காரணமாகவே அமெரிக்கா தொழில் வளர்ச்சித் துறையில் உச்ச நிலையை அடைந்தது.[1]

அமெரிக்கத் தொழில் புரட்சி இங்கிலாந்தின் தொழில் புரட்சியைப் போலவே இல்லத் தொழில் முறை, கைத்தொழில் முறை, தொழிற்சாலை முறை (*Domestic stage, handicraft stage, and factory stage*) ஆகிய படிகள் மூலம் பரிணமித்தது. ஆயினும், அமெரிக்காவில் இப்புரட்சியின் வேகம் துரிதமாயிருந்தது. ஆனால் ஒன்று; இங்குத் தொழில் வளர்ச்சி எவ்வித ஒருங்கான மையத் திட்டமும் (*Centralised planning*), இணைப்புப்பாடும் (*Co-ordination*) இன்றி மனம் போனபடி நிகழ்ந்தது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் தொழிலை அமைத்தனர். ஆகவே, பல்வேறு வகையான தொழிற்சாலைகள் நாடு முழுதும் தோன்றலாயின. சிலர் பழைமையாயிருந்த சிறு ஆலைகளை விரிவாக்கினர். நுட்பத்தொழில் வல்லார்களால் அல்லது முதலும், புத்தாக்கத் திறனுமுடையோர்களால் புதிதாக நிறுவப்பட்டவை சில; மற்றுஞ் சிலவோ நுட்பத் தொழில் திறமறியாத வணிகர்களால் ஏற்படுத்தப்பட்டன. மேலும், இத்தொழில்களை நிர்வகிப்பதிலும் கூட வேற்றுமைகள் காணப்பட்டன. சில தொழிற்சாலைகள் சொந்தக்காரர்களாலேயே நிர்வகிக்கப்பட்டன. சிலவற்றின் சொந்தக்காரர்கள் தலத்திலில்லாதவர்களாகையால், அவைகள் அத் தலத்தில் தங்கும் நிர்வாகிகளாலேயே நடத்தப்பட்டு வந்தன. ஆகவே, இத் தொழில் வகைகள் ஒவ்வொன்றும் தனக்கேற்றதொரு தொழில் நுட்பத்தையும், தொழில் முறையையும் வளர்த்துக்கொள்ள வேண்டியதாயிற்று. தொழில் வளர்ச்சியைத் தொடங்கி வைக்கும் வகையில் அமெரிக்காவில் ஆரம்பத்திலேயே தோன்றிய தொழில்கள் துணி உற்பத்தித் தொழிலும், இரும்புத் தொழிலுமேயாகும்.

அமெரிக்காவில் தொழில் நிறுவனத் தலங்கள் ஒருசில தற்செயலாகவே தேர்ந்தெடுக்கப்பட்டவையாயினும், பெரும்பாலும் இவை பொருளாதாரக் காரணங்களுக்காகவே தேர்ந்தெடுக்கப்பட்டவையாகும் எனக்கூறலாம். குடியேற்ற ஆதிக்க ஆட்சிக்காலத்திலேயே வடகிழக்குப் பிரதேசம்தான் (*North east*) தயாரிப்புத்

1. Chester Bowles: New Dimensions of Peace, p. 280

தொழில்களில் (*Manufacturing*) முதன்மை வகித்தது. இம் முதன்மையை அது பின்னரும் இழந்து விடவில்லை என்று கூற வேண்டும். உதாரணமாக, அங்குள்ள நியூ இங்கிலாந்து பிரதேசத்தில் விவசாயத்திற்கான நல்ல நிலம் அனேகமாக இல்லை எனலாம். மேலும், தொழிலுக்கு வேண்டிய சில முக்கிய மூலப் பொருட்களும் அங்கு உற்பத்தியில்லை. இருப்பினும், அது தொழிலுக்கேற்ற மற்ற வளங்களைப் பெற்றிருந்தது. நீர் விசை (*Water power*) அங்கு ஏராளமாகக் கிடைத்தது; விறு விறுப்பான வாணிகமும் அங்கு ஓங்கியிருந்தது; மேலும், அங்கு மக்கள் நெருக்கமாகக் குடியேறியிருந்ததுடன், செட்டாகவும், ஊக்கத்துடனும் வாழ்பவர்களாயிருந்தனர். இவை யாவும் அப் பிரதேசத்தைத் தொழில் தயாரிப்புக்கு மிகவும் ஏற்றதாக்கின. அதேபோல மத்திய அட்லாண்டிக் பிரதேச இராச்சியங்களும், விவசாயத் தொழில் போட்டி, மக்களின் மேற்குப்புறப் பெயர்ச்சி போன்ற இடையூறுகளின் விளைவாகத் தொழில் வளர்ச்சியில் ஈடுபட்டன. இதற்கு அங்குக் கிடைத்த மூலதன வசதியும், தொழிலாளர் வசதியும், போக்குவரத்து வசதியும், முக்கியமாக நீர்விசை வசதியுமே காரணமாகும். இவற்றால் துணி நெசவுத் தொழிலும், வேறு சில தயாரிப்புத் தொழில்களும் இங்கு ஆரம்பிக்கப் பட்டன.

தொழிலாளரின் நிலைமை இன்று அமெரிக்காவில் மிகவும் உயர்ந்திருக்கிறது. ஆனால், ஆரம்ப காலத்தில் அங்கு நிறுவப் பட்டிருந்த தொழிற்சாலைகளில் தொழிலாளரின் நிலை மிகவும் மோசமானதாயிருந்தது என்பதை அறிய வேண்டும். வாழ்க்கை மிகவும் கொடூரமானதாகவும் சகிக்க முடியாததுமாயிருந்தது. ஐரோப்பாவில் அச்சமயம் தொழிலாளர்களுக்குக் கிடைத்ததைவிட அதிக கூலியும், அதிக வாய்ப்புக்களும் ஆரம்ப காலத்திலிருந்தே அமெரிக்கத் தொழிலாளர்களுக்குக் கிடைத்தனவாயினும், 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அத் தொழிலாளரின் வாழ்க்கை மிகவும் கடினமானதா யிருந்ததென்றே சொல்ல வேண்டும். அதுபோது தொழிற்சாலைகளில் நாளொன்றுக்கு 12 முதல் 15 மணி நேரம் வரை உழைக்க வேண்டியிருந்தது. அமெரிக்கத் தொழிலாளியின் அப்போதைய ஏழ்மை நிலை பின் வருமாறு சித்தரிக்கப்பட்டுள்ளது: 'உலோகத்தாலான சூட் டடுப்பு என்றால் (*Stove*) அவனுக்குத் தெரியாது; நிலக்கரியை

அவன் பார்த்ததேயில்லை ; தீக்குச்சிகளைப் பற்றிக் கேட்டதில்லை ; வாரத்திற்கு ஒருமுறைகூட இறைச்சியை ருசி பார்த்ததில்லை. அவனுடைய உணவு மட்டமானதாயிருந்ததென்றால் ஆடையோ அருவருப்பானதாயிருந்தது.'[1] வாழ்க்கை ஏழ்மையாயினும், அமெரிக்கத் தொழிலாளர்கள் விடுதலைப் போர்க் காலத்திலேயே தங்கள் பாதுகாப்பைக் கருதி ஐக்கியத்தை வளர்த்துக் கொண்டனர். 1786-இலேயே பிலடெல்பியாவைச் சேர்ந்த அச்சுத் தொழிலாளிகள் வேலை நிறுத்த ஆயுதத்தைக் கையாண்டனர் என்பது இதற்கு அத்தாட்சியாகும். அவ்விடத்தைச் சேர்ந்த பாதரட்சை உற்பத்தித் தொழிலாளர்கள் 1799-இல் தங்கள் முதலாளிகளுடன் கூட்டுப் பேர முறையில் (*Collective bargaining*) வாதாடினார்கள் என்பதும் அறியப்படுகிறது. மற்றத் துறைகளில் தங்கள் வாழ்க்கையை உயர்த்திக் கொள்வதில் இத் தொழிலாளர்கள் வெற்றி பெறவில்லையாயினும், உள் நாட்டுப் போர் ஆரம்ப காலத்திலேயே வேலை நேரத்தை 10 மணிகளாகக் குறைக்கச் செய்துவிட்டனர் என்பது குறிக்கத் தக்கது.

## போக்குவரத்து முன்னேற்றம்

விடுதலைக்குப் பின்னர் நாட்டின் அரசியல், பொருளாதார, சமூக மேம்பாடுகளுக்கெல்லாம் போக்குவரத்து வசதிகளின் முன்னேற்றம் மிகமிக அவசியமாகியது. குறிப்பாக, திறமான நிர்வாகத்திற்கும், தொழில் பெருக்கத்திற்கும், மேற்குப் புறப் பெயர்ச்சிக்கும் (*Westward movement*) சிறந்த உள்நாட்டுப் போக்குவரத்து வசதிகள் தேவைப்பட்டன. உள்நாட்டுப் போருக்கு முன் நிகழ்ந்த முன்னேற்றங்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவையாவன : (1) சுங்க வசூல் சாலைகளின் தோற்றமும் (*Turnpikes*), பின்னர் அபிவிருத்தியடைந்த சாலைகளின் அமைப்பும் ; (2) கால்வாய்களின் அமைப்பும், நதிகளின் அபிவிருத்தியும் ; (3) இருப்புப் பாதைகளின் அமைப்பு. மேற் கூறிய போக்குவரத்து அபிவிருத்திகள் நிகழ்வதற்கு அதுபோது தக்க தூண்டுதல்களும் இருந்தன. விவசாயிகள் தங்கள் உற்பத்தியைச் சந்தைகளுக்கு எடுத்துச் செல்லவும், மக்கள் தங்கள் உணவுப் பொருட்களைக் குறைவான விலைக்குப் பெற்றுக்

1. Mc. Master: History of the people of the United States, p. 76

கொள்ளவும், தொழில் உற்பத்தியாளர்கள் தங்கள் பண்டங்களை ஏற்றுமதி செய்துகொள்ளவும் மலிவான போக்குவரத்து வசதிகள் இவர்கள் யாவருக்கும் தேவைப்பட்டன. இதனால் போக்குவரத்து வசதிகளின் சீரமைப்பு தொடர்ந்து தூண்டப் பெற்றது.

அடுத்து, இப் போக்குவரத்து வசதிகள் அபிவிருத்தி செய்யப்பட்ட விதத்தைக் குறித்தும் ஓரிரண்டு உண்மைகளைக் கவனிக்க வேண்டும். இவ் வசதிகளைத் தனியார்கள் (*Private effort*) அமைத்தபோது அதில் கிடைக்கக்கூடிய உயர் இலாபங்கள் ஊக வணிகரின் நடவடிக்கைகளைத் (*Speculatiom*) தூண்டி விடுதல் எதிர்பார்க்கக் கூடியதேயாம். 1792 முதல் 1807 வரை சுங்கச் சாலைகள் யாவும் அரசாங்கக் கொடை உதவி யுடன் தனியார்களாலேயே அமைக்கப்பட்டன. பின்னர், கூட்டாட்சி அரசாங்கத்தினர் இத் துறையில் தலையிட ஆரம்பித் தனராயினும் அமெரிக்க நீதி மன்றத்தின் முடிவு ஒன்று இப் போக்கை மாற்றிக்கொள்ளச் செய்தது. கால்வாய் அமைப்பில் நியூயார்க்தான் முன்னோடியாய்த் திகழ்ந்தது. 1823-இல் அந்த இராச்சியம் ஈரி கால்வாயைக் (*Eerie canal*) கட்டி முடித்தது. அடுத்து ஒகியோ இராச்சியம் (*Ohio*) 1832-இல் ஒகியோ கால் வாயை அமைத்தது. இதன்பின் பல கால்வாய்கள் வெவ்வே றிடங்களில் அமைக்கப்பட்டு, அமெரிக்க ஐக்கிய நாடு முழுவதிலும் உள் நாட்டு நீர்ப் போக்குவரத்துப் பாதைகள் சிறந்த வகையில் ஏற்படுத்தப்பட்டு விட்டன.

மேலும், அரசாங்கம் 1830-க்கும் 1860-க்கு மிடையில் ஆறுகள் போக்குவரத்து அபிவிருத்திக்கும், துறைமுகங்களின் அபிவிருத்திக்குமாகச் சுமார் 124 மில்லியன் டாலர்களைச் செலவிட்டது. இத்துடன் புதிய கப்பல்களும் மேலும் மேலும் கட்டப்பட்டு, அவற்றின் எண்ணிக்கையும் அதிகரித்தது. 1800-ஆம் ஆண்டுக்கு முன்னர் கப்பல்களின் எடை மொத்தம் 7 லட்சம் டன்களுக்கும் குறைவாகவே இருந்தது. அது இப்போது $2\frac{1}{2}$ மில்லியன் டன்களாகப் பெருகிவிட்டது. ஐக்கிய நாடுகளில் இருப்புப் பாதை முதன் முதலில் 1826-இல்தான் அமைக்கப்பட்டது. ஆயினும், அதன் வளர்ச்சி மிகவும் துரித .

மாய் நிகழ்ந்தது. உள் நாட்டுப் போரின் ஆரம்ப காலத்திலேயே (1860) உலகத்தின் இருப்புப் பாதைகளின் மொத்த நீளத்தில் பாதிக்கு மேல் அமெரிக்காவில் அமைக்கப்பட்டிருந்தது என்பது மிகு வியப்பிற்குரியதாகும். அமெரிக்க இருப்புப் பாதைகளின் நீளம் அப்போது 30,626 மைல்கள் என்று கணக்கிடப்பட்டிருந்தது. இரயில் பாதைகளின் வளர்ச்சியோடு கூடவே தந்தி, மற்றும் அஞ்சல் தொடர்பு வசதிகள் யாவும் அதிகரித்தன. இத்தகைய வசதிகளைப் பெற்றிருந்த அமெரிக்கா பெரியதோர் பொருளாதார வளர்ச்சிக்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்த தருவாயில்தான், துர்ப்பாக்கிய வசமாய் அந் நாட்டில் உள் நாட்டுப் போர் தொடங்கிப் பெருங்கேடு விளைவித்தது.

# 4. மேற்குப்புற ஓட்டம்

## பொது முக்கியத்துவம்

அமெரிக்காவின் சமூக, பொருளாதார வரலாறு முழுதுமே அந்நாட்டின் குடியேற்ற எல்லை விரிவின் அடிப்படையில் விவரிக்கப் படக்கூடும். ஆயினும், 1783-க்கும் 1860-க்கு மிடையே உள்ள காலத்தில்தான் இம் மேற்கு எல்லை நகர்ச்சிக்கு ஒரு தனி முக்கியத்துவம் ஏற்பட்டது. 1783-க்கு முன்பு, அதாவது அமெரிக்கக் காலனிகள் பதின்மூன்றின் சுதந்திரப்பிரகடனத்திற்கு முன்பு வரை, ஒரு சில குடியேற்ற மக்களே மேற்குப் பக்க எல்லைகளைக் கடந்து அப்பால் சென்றிருந்தனர். அதுபோது ஃபர் தோல் (*Fur*) வியாபாரியையும், வேட்டையாடுவோனையும், சமயத் தூதர்களையும் தவிர வேறு யாரும் மேற்கெல்லைக்கப்பால் கிடந்த பரந்த வெற்றுப் பிரதேசங்களைப்பற்றி ஒன்றுமறியாதிருந்தனர். இதனால்தான் 1803-இல் ஜெபர்சன், இப் பிரதேசங்களில் மக்கள் குடியேறி அவற்றை வசப்படுத்திக் கொள்ளக் குறைந்தது ஆயிரம் ஆண்டுகளாவது பிடிக்கும் என்றே நம்பினர். ஆயினும், ஆச்சரியப்படத்தக்க வகையில் ஒரு நூற்றாண்டுக்குள்ளேயே இந் நிலப் பரப்புக்கள் யாவும் குடியேற்ற மக்களால் வசப்படுத்தப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வகையில் நிலம் நாடிக் குடி புகுந்தோரும், நிலத்தில் ஊக வணிகம் புரிந்தோரும், குதிரை ஏறித் திரிந்த மாடு மேய்ப்பாளரும், கால் நடைப்பண்ணையாளரும், முதலாளித்துவ விவசாயிகளும்போன்ற பல நோக்கங்களுடையவர்களும் அலை அலையாக மேற்கு நோக்கிச் சென்றதாலேயே இவ் வெற்றுப் பிரதேசங்கள் யாவும் விரைவில்

குடியேற்றத் திட்டுக்களாக மாறின. இது உலகச் சரித்திரத்தின் மிகப் பெரிய நாடு பெயர்ச்சிகளில் ஒன்ருகக் கருதப்படல் வேண்டும். இந்தக் குடிப் பெயர்ச்சிக்கு ஏற்ருற்போலவே அமெரிக்கப் பொருளாதார வாழ்வும், முன்னேற்றமும் வளர்ச்சி அடைந்துகொண்டு வந்தன எனலாம். இவ் வளர்ச்சிக்குத் துணை புரிந்தவை அமெரிக்காவின் அளவற்ற இயற்கை வளங்களும், விரிந்துகொண்டே யிருந்த குடியேற்ற எல்லைகளும், பெருகிக்கொண்டே சென்ற மக்கட் தொகையும் ஆகும். இம் மேற்குப்புறப் பெயர்ச்சிக்குத் தடைகளில்லாமலில்லை. அவற்றுள் குறிப்பிடத் தக்கவையாவன : (1) இந்தியர்கள், பிரெஞ்சுக்-காரர்கள், ஸ்பானியர்கள், பிரிட்டிஷார் முதலியோரின் எதிர்ப்பு, (2) மலைகள், காடுகள், ஆறுகள், ஏரிகள் போன்ற இயற்கைத் தடைகள், (3) அப்போதிருந்த போக்குவரத்து வசதிகளின் அருமை. மேலும், காலனி ஆதிக்கக் காலத்தின்போதே சிலர் மேற்குப்புறம் பெயர்ந்ததைக் கண்ட பிரிட்டிஷ் சர்க்கார் அதைத் தடுக்க முயற்சி செய்தது. அல்லிகனி மலைத் தொடருக்கு அப்பால் ஆங்கிலக் குடியேற்றத்தினர் செல்லுவதைத் தடுக்க அப்போதே அரசக் கட்டளையொன்று (*Royal proclamation*) 1763-லேயே பிறப்பிக்கப்பட்டிருந்தது.

மேற்கூறிய தடைகளையும் பொருட்படுத்தாது குடியேற்ற மக்கள் மேற்கு நோக்கிச் சென்றனரென்ருல் அதற்கு அங்கிருந்த வாய்ப்புக்களின் கவர்ச்சிதான் காரணமாகும். சுலபமாகப் பெறக்கூடியதான வாழ்க்கை வசதியும், ஏராளமான நிலங்களும் மக்களை அங்கு ஈர்த்ததுடன், காலனி முன்னேடி வீரர்களின் சுய ஆர்வமும் அவர்களை மேற்கு நோக்கிப் பாயத் தூண்டியது. இவ்வாறு சுதந்திரப் போருக்கு முன்னரே மேற்கு நோக்கி நகரத்தொடங்கிவிட்ட மக்களைப் போக்குவரத்துத் தடங்கல்களோ, பிணிகளோ மற்றும் எவ்வித அபாயங்களோ அச்சுறுத்தி நிறுத்திவிட இயலவில்லை. மேலும், பிரெஞ்சுப் போர், இந்தியப் போர் முதலான தொல்லைகள் முடிந்திருந்தமை மக்களின் மேற்கு நோக்கிய பெயர்ச்சிக்குத் தூண்டுதலாக அமைந்தது. இவ் வகையிலேற்பட்ட ஆதிக் குடியேற்றங்கள் பல 'கென்டக்கி' பிரதேசத்திலும் (*Kentucky*) 'டென்னிசி' பிரதேசத்திலும் (*Tennessee*) இருந்தன. அப்பலேச்சியன் மலைத் தொடருக்கு

மேற்கேயிருந்த மக்களின் எண்ணிக்கை 1790-இல், 200,000 ஆகத்தான் இருந்தது. ஆனால் 1800-இல் இவ் வெண்ணிக்கை 387,000 ஆகவும், 1810-இல் இது ஒரு மில்லியனுக்கு மிகை யாகவும் அதிகரித்துவிட்டது. நெப்போலியனிடமிருந்து லூயிசியானா (*Louisiana*) பிரதேசம் வாங்கப்பட்ட பின்பும், 1812-14 போர் முடிந்த பின்பும், குறிப்பாக வாட்டர்லூ போரில் பிரான்சு இறுதியாக முறியடிக்கப்பட்ட பின்னர்த்தான் மிசிசிபி நதி தீரப் பிரதேசங்களில் (*Mississipi valley*) குடியேற்றம் மிக விரைவாக நிகழ்ந்தது என்று கூறவேண்டும்.

## மேற்குப்புறக் குடியேற்ற இயக்கத்தின் வளர்ச்சி

கிழக்குப் பிரதேசங்களி லிருந்துவந்த மக்களின் அடுத் தடுத்த அலைத் தொடர்களாலேயே மேற்குப்புறக் குடிப்பெயர்ச்சி யாவும் நிகழ்ந்து வந்தது. இப் பெயர்ச்சி அலைகள் அமெரிக்கக் கிழக்குப்புற இராச்சியங்களின் பொருளாதார நிலைமைகளுக்கும் ஐரோப்பாவின் பொருளாதார நிலைமைகளுக்கும் ஏற்ப அவ் வப்போது மாறுபட்டன என்று குறிப்பிட வேண்டும். இவ்வாறு அட்லாண்டிக் கடலுக்கும் பசிபிக் கடலுக்குமிடையே யுள்ள அமெரிக்க நிலப்பரப்புக்கள் ஒவ்வொன்றிலும் நிகழ்ந்த குடியேற்றம் மூன்று படிகளில் நடைபெற்றது என்பது கவனிக்கத் தக்கது. முதல் அலையில் மேற்கே புறப்பட்டவர்கள் நடந்து, அல்லது குதிரைமீது, அல்லது வண்டிகளில் சென்று, செவ்விந்தியர் விட்டுச் சென்ற பாட்டையைக் கண்டு சிரமத்துடன் முன்னேறிச் செல்லவேண்டியிருந்தது. மேற்கே சென்ற இம் முன்னணிக் குடியேற்றத்தினர் தங்கள் பழைய குடியிருப்புக்களுடன் முற்றிலும் தொடர்பிழந்துவிட வேண்டியதாயிற்று. மேலும் இவர்கள் புதிய இடத்தில் காடுகளை அழித்தும், சதுப்பு நிலங்களில் நீரை வடித்தும் தங்கள் புதுக் குடியிருப்புக்களை ஏற்படுத்திக் கொள்வதில் சொல்லொணுத் துன்பங்களை அனுபவிக்க நேர்ந்தது. ஆனால், இரண்டாவது அணியில் சென்றவர்களுக்கோ இச் சங்கடங்களில்லை. இவர்கள் சென்ற சமயம் சுங்கச் சாலைகளும் கால்வாய்களும், இருப்புப் பாதைகளும் தோன்றிவிட்டன வாதலால் இவர்கள் தங்களுக்கு முன் சென்ற முதல் அலையினரால் சீர்திருத்தப்பட்ட நிலங்களை உடனடியாக விலைக்கு வாங்கிக்

கொண்டு, தங்களுக்கு வேண்டிய வீடுகளைக் கட்டிக்கொள்ளவும், குடியேற்றங்களைச் செம்மை செய்துகொள்ளவும் முடிந்தது. மூன்றாவதான இறுதி அணியில் சென்றோர்க்கோ மிகவும் சுலபமான வாய்ப்புக்கள் இருந்தன. அவர்கள் நிறைய முதலுடனும் வேறு பல சாதனங்களுடனும் வந்தமையால், தங்களுக்கு வேண்டிய நிரந்தரமான இல்லங்களையும், நவீனத் தொடர்பு வசதிகளையும் உடனடியாக ஏற்படுத்திக்கொள்ள முடிந்தது. இவர்களே மேற்குப்புறப் பிரதேசங்களில் நகர்களையும், மாநகர்களையும் தோற்றுவித்து, அவற்றைச் செழுமை நிறைந்த பிரதேசங்களாக விரைவில் மாற்றிவிட்டனர் எனல் வேண்டும்.

மேற்குப்புறப் பாய்ச்சலுக்கு மிகவும் ஆதரவாயிருந்தவை இரண்டு புதிய முன்னேற்றங்கள் ஆகும். அவையாவன: (1) புதிதாக அமைக்கப்பட்ட நீராவிக் கப்பல், (2) பருத்திச் சாகுபடிப் பெருக்கம். 1807-இல் பூல்டன் என்பார் அமைத்த 'கிளர்மாண்ட்' என்ற 160 டன் நீராவிப் படகை முதன்முதல் 32 மணிகளில் 150 மைல்கள் செலுத்தி, வெற்றி காணப்பட்டது. பின்னர், 1811-இல் ஓகியோ நதியிலும், 1816-இல் மிசிசிப்பி நதியிலும், அதன் உபநதிகளிலும் நீராவிப்படகுகள் விடப்பட்டன. 1824-இல்தான் அமெரிக்க சுப்ரீம் நீதிமன்றம் (*Supreme court*) அமெரிக்க ஐக்கிய நாடுகளிலுள்ள ஆறுகள் யாவும் அந் நாட்டு மக்களின் பொதுப் பேறுகள் (*Heritage*) எனவும், ஆகவே எந்த ஓர் இராச்சியமோ அல்லது தனி நபரோ அவற்றைச் சர்வாதீனப் படுத்திக்கொள்ள வியலாது எனவும் தீர்ப்புக் கூறியது. இம் முடிவு, நீராவிப் படகு மூலமான வணிகத்தின் வளர்ச்சிக்குப் பெரும் தூண்டுதலளித்தது. ஆகவே, மேற்குப் பிரதேசங்களின் துரிதமான பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் துணை புரிந்த தொரு போக்குவரத்து சாதனம்—துரிதமானதும் அதே சமயம் மிகவும் ஏற்றதுமான ஒரு சாதனம்—நீராவிப் படகுதான் எனலாம்.

பருத்திச் சாகுபடி தென்மேற்குப் புறத்தில் விரிவடையவே மக்கள் அங்கும் குடியேற்றம் புரியத் தலைப்பட்டனர். இப் பிரதேசம்தான் பின்னர் வடக்குப் பிரதேசத்தின் மிகை உற்பத்தி களுக்கு ஒரு சந்தையாக உதவியது. 1821-இல் எடுக்கப்பட்ட

புள்ளிகளின்படி 'டென்னிசி', 'லூயிசியானு', 'அலபாமா', 'மிசிசிப்பி' முதலிய இராச்சியங்கள் மட்டும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பருத்தி மொத்த உற்பத்தியில் மூன்றிலொரு பங்கை உற்பத்தி செய்தன என்று தெரிகிறது. ஆனுல், 1836-இல் அவற்றின் பங்கு மூன்றில் இரண்டாக உயர்ந்துவிட்டது. இத்தகைய பருத்திச் சாகுபடியின் விரிவும், சர்க்கரைக்கான தோட்டச் சாகுபடியின் வளர்ச்சியும்தான் அடிமைத் தொழிலாளி முறையை மிகவும் அவசியமாக்கின என்ருல் மிகையாகாது. அப் பொருளாதாரமே உண்மையில் அடிமை முறையைத்தான் அடிப்படையாகக் கொண்டிருந்தது.

### பொது நிலங்களின் விற்பனை

மக்களின் மேற்குப்புறமான பெயர்ச்சியும், நடுமேற்குப் பிரதேசத்தின் (*Middle west*) குடியேற்றமும் நிகழ்வதற்குப் பொது நிலங்களின் விற்பனை மிகவும் முக்கியமாயிருந்தது என்று கூறவேண்டும். சுதந்திரப் போருக்குப் பின் அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஏராளமான பொது நிலங்களை வாரிசாகப் பெற்றது. மேலும், ஆக்கிரமிப்பின் மூலமும், விலை கொடுத்து வாங்கிக் கொண்டதன் மூலமும் பல புதிய நிலப்பரப்புக்கள் ஐக்கிய நாடுகளுடன் சேர்த்துக்கொள்ளப்பட்டிருந்தன. இந்நிலங்களை எல்லாம் அரசாங்கம் விற்க முற்படுகையில் ஊக வணிகர்களும், பண முதலாளிகளும் (*Speculators and Financiers*) முதலில் இந் நிலங்களைத் தாங்கள் வாங்கிக்கொண்டு பின்னர் உயர்ந்த விலைகளுக்கு அவற்றைப் பிறருக்கு விற்று இலாபம் சம்பாதிக்க முயன்றனர். இருப்பினும், அரசாங்க நிலங்கள் யாவருக்கும் விற்பனைக்குக் கிடைத்தது என்பது உண்மையில் நிலத்தில் குடியேற விரும்பியோருக்கெல்லாம் ஒரு பெரிய ஊக்கமளித்தது. இந்நிலையில்மேற்கூறியஊகவணிகர்களின் சூது நடவடிக்கையைத் தடுக்கவும், உண்மையான குடியேற்றக்காரர்கள் யாவருக்கும் புதிய பிரதேசங்களில் நிரந்தரமாகக் குடியேறுவதற்குச் சலுகை யளிக்கவும் அமெரிக்க நாட்டு அரசாங்கம் 'வாங்குகை முதலுரிமைச் சட்டங்கள்' (*Pre-Emption acts*) என்ற புதிய பல சட்டங்களைக் கொண்டு வந்தது பாராட்டத் தக்கது ஆகும். 1862-இல் கொண்டு வரப்பட்ட 'குடும்பப் புலன் சட்டம்'தான்

(*Homestead act*) ஏழ்மையான குடியேற்றக்காரர்கள் யாவரும் புதிய பிரதேசங்களில் குடியேறிக்கொள்ள உண்மையில் துணை புரிந்தது. இப் புதிய சட்டத்தின் விளைவாகவே பழைய எல்லைகள் அடியோடு மறைந்து அவற்றிற்கப்பாலிருந்த பிரதேசங்கள் யாவும் குடியேறப்பட்டன.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மேற்குப் புறக் குடியேற்றம் சமாதான ஊடுருவல், ஆதிபத்திய ஆக்கிரமிப்பு—இவை இரண்டின் வழியாகவும் நிகழ்ந்ததாகும். ஒப்பிட்டுச் சொல்வதானால் எந்தப் பொருளாதார நோக்கம், சமய ஆர்வம், நாட்டுப் பற்று ஆகியவை ஆங்கிலேயர்களை இந்தியாவை ஆக்கிரமித்துக் கொள்ள, ஆஸ்திரேலியாவில் குடியேற்றங்களை நிறுவிக்கொள்ளச் செய்தனவோ; எவை பிரெஞ்சுக்காரர்கள் அல்ஜியர்ஸ் நாட்டைப் பிடித்துக்கொள்ளவும், ஸ்பானியர்கள் கியூபாவிலும், பிலிப்பைன்சிலும் தங்கள் கொடியை நாட்டிக்கொள்ளவும் தூண்டினவோ, அதே நோக்கங்கள்தாம் 19-ஆம் நூற்றுண்டில் அமெரிக்கர்கள் முதலில் அப்பிலேச்சியன் பிரதேசத்திற்கு அப்பால் செல்லவும், பின்னர் மிசிசிப்பி நதியைத் தாண்டியுள்ள பிரதேசத்திற்குள் புகவும் தூண்டின என்று கூறலாம். இம் மேற்குப் பெயர்ச்சியில் முன்னோடிகளாய்ச் சென்றவர்கள் சமயத் தூதுவர்களும், 'பர்' உரோம வியாபாரிகளுமே யாவர். இவர்களைத் தொடர்ந்தே நில வேட்கை கொண்டவர்களும், பொன்னை நாடிப் புறப்பட்டவர்களும், ஊக வணிகத்தில் மோகங் கொண்டவர்களும், தொழில் செய்யும் துணிவுடையோரும் பின் சென்றனர் எனலாம். இப் புதிய குடியேற்றக்காரர்களின் படையெடுப்புக்கெதிரே செவ்விந்தியரின் பிற்போக்கான சமூகம் தன் நிலை இழந்து, சிறிது சிறிதாக மறைந்தொழிந்ததில் வியப்பில்லை.[1]

## கடைசி எல்லைப் பிரதேசம்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மேற்கெல்லையானது மறைந்தொழிந்து போய், வெற்றுகக் கிடந்த மேற்குப் பிரதேசங்கள் யாவுமே குடியேறப்பட்டுவிட்டதைப் பற்றிச் சிறிது கூறுவோம். 1860-ஆம் ஆண்டிலேயே மிசிசிப்பி நதியின் மேற்குக்

1. Carman: Economic and Social History of the United States, Vol. II, P. 238

கரையிலுள்ள பல பிரதேசங்கள் தனி இராச்சியங்களாகி அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இணைத்துக் கொள்ளப்பட்டன ; இவ் வகையில் 'மின்னிசோட்டா' (*Minnesota*) 1858-இலும், 'அயோவா' (*Iowa*) 1846-இலும், 'மிசோரி' (*Missouri*) 1821-இலும், 'அர்கான்சாஸ்' (*Arkansas*) 1836-இலும், 'லூயிசியானு' (*Louisiana*) 1812-இலும் தனி இராச்சியங்களாகின. மேற்கிலிருந்த மீதிப் பிரதேசங்கள் யாவும் 1860-1890-க் கிடையிலுள்ள முப்பதாண்டுகளில் குடியேறப்பட்டுவிட்டன. இப்பிரதேசங்களில் குடியேறிய மக்கள் பெரும்பாலும் சுரங்கத் தொழிலாளர்களாகவும், கால் நடை வளர்ப்புக்காரர்களாகவும், பயிர்வேளாண்மைக்காரர்களாகவுமே இருந்தனர். கலிபோர்னியா-வில் கண்டுபிடிக்கப்பட்ட பொன் சுரங்கமும், டெக்சாஸ் பிரதேசத்தில் நிறையக் கிடந்த மேய்ச்சல் புல் வெளிகளும், செழுமையான விவசாயப் புலன்களை ஏற்படுத்திக்கொள்ள இப் பிரதேசத்திலிருந்த மிகை வாய்ப்பும் குடியேற்றக்காரர்களை மிகவும் கவர்ந்து அவர்களை அங்கு ஈர்த்தது எனலாம். இம் மேற்குப்புறப் பெயர்ச்சி விரைவில் நிகழ்தற்குத் துணை புரிந்த காரணங்கள் பல. அவற்றுள் குடியேற்றக்காரர்களுக்குச் சாதகமான நிலச் சட்டங்களும், மக்கள் குடியிறக்கத்தின் துரித அதிகரிப்பும், அமெரிக்கக் கண்டம் முழுவதையும் இணைப்பதான இருப்புப் பாதைகளின் அமைப்பும், வேலி போடுதற்கு உகந்த முள் கம்பியின் தயாரிப்பும், காற்ருடி மில்களின் (*Wind mills*) தோற்றமுமே முக்கிய காரணங்களாகும்.

1860-ஆம் ஆண்டிலேயே அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மேற்கெல்லை என்ற வரம்பு மறைந்தொழிந்தது. இவ்வாறு கடைசிச் சமவெளி எல்லையைத் தாண்டிக் குடியேற்ற மக்கள் மேற்குக் கோடி வரை ஆக்கிரமித்துச் சென்றபோது செவ் விந்தியர்களிடம் போராட வேண்டியதேற்பட்டது. தங்கள் பொருளாதாரத்தின் ஆணிவேராயிருந்த சுமார் 15 மில்லியன் எருமைகளும் அமெரிக்கக் குடியேற்ற மக்களால் அழிக்கப்பட்ட பின், செவ்விந்தியர் சமூகம் ஆங்காங்குப் புகலிடங்களைத் தேடி ஒதுங்கி வாழவேண்டியதாயிற்று. பயிர் வேளாண்மைக்குகந்த செழிப்பானநிலங்கள்யாவும் 1890-க்குள்ஆக்கிரமித்துக்கொள்ளப் பட்டுவிட்டன என்று சொல்லலாம். இவ் வகையில் புதிதாகக்

குடியேறப்பட்ட பிரதேசங்களாவன: கோதுமை விளைச்சல் பிரதேசங்களான 'மோன்டனு' (*Montana*), 'டக்கோட்டாக்கள்' (*Dakotas*); சோளப்பயிர் பிரதேசங்களாகிய 'கான்சாஸ்' (*Kansas*), 'அயோவா' (*Iowa*), 'நெப்ராஸ்கா' (*Nebraska*) முதலியன; பருத்திச் சாகுபடிக்கும் ஆடுமாடு மேய்ச்சலுக்கும் ஏற்றதான நிலங்களைக் கொண்ட 'அர்கான்சாஸ்' (*Arkansas*), 'டெக்சாஸ்' (*Texas*) முதலியவை. இப்பிரதேசங்கள் யாவும் குடியேறப்பட்டுப் பொருளாதார வளர்ச்சி பெற்றவுடனேயே அவை தனி இராச்சியங்களாகவும், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் புதிய உறுப்பினர்களாகவும் ஏற்றுக் கொள்ளப் பட்டன. இவ்வாறு தோன்றிய புதிய இராச்சியங்களில் வட டக்கோட்டா, தென் டக்கோட்டா, மோன்டனு, வாஷிங்டன் முதலியவை 1889-இலும், ஐடேகோ (*Idaho*), வியோமிங் (*Wyoming*) 1890-இலும், யுதா (*Utah*) 1896-இலும், ஒக்லஹோமா (*Oklahoma*) 1907-இலும், புதிய மெக்சிகோ, அரிசோனு (*Arizona*) முதலியவை 1912-இலும் ஏற்பட்டவையாகும்.

### மேற்குப்புறப் பெயர்ச்சியின் விளைவுகளும் முக்கியத்துவமும்

மேற்குப்புறக் குடியேற்ற எல்லையின் மறைவு அமெரிக்கச் சரித்திரத்தில் ஓர் ஊழியை (*Era*) முடித்து வைத்த நிகழ்ச்சியாகும். இக்குடியேற்ற ஊழிக்காலத்தில், ஆக்கிரமிக்கப்படாதிருந்த பரந்த நிலப்பரப்பும், தொடர்ந்து நகர்ந்துகொண்டிருந்த மேற்கெல்லையும்தான் அமெரிக்கப் பொருளாதார வளர்ச்சியை நிர்ணயிக்கும் முக்கிய காரணங்களா யிருந்தன. இம் மேற்கெல்லையே கிழக்கிலிருந்து அதிருப்தியால் வெளியேறிய மக்களுக்கொரு புகலிடமாகவும், ஐரோப்பாவிலிருந்து வந்து குவிந்த பல மில்லியன் மக்களுக்கு ஒரு புதிய இல்லமாகவும் திகழ்ந்தது எனலாம். இம்மேற்கெல்லை தோற்றுவித்த விளைவுகளை நாட்டின் பணமுறையின்பாலும், இருப்புப் பாதை வளர்ச்சியின்பாலும் தெளிவாகக் காணலாம். நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தை மட்டுமன்றி அதன் சமூக, அரசியல்வளர்ச்சிகளையும், அமெரிக்கர்களின் மனப்போக்கையும்,

வாழ்க்கைத் தத்துவத்தையும்கூட இது பெருமளவில் நிர்ணயிப்பதாயிருந்தது.[1] இவ்வாறு அமெரிக்க மக்களில் பேராசையும், துணிவும், துடிப்பும் கொண்ட இளம் ஆடவரும் பெண்டிரும் மேற்குப்புறத்திற்கு வெளியேறியமை அமெரிக்கப் பொருளாதார, அரசியல், சமூகத் துறைகள் யாவற்றிலும் ஆழ்ந்த விளைவுகளை ஏற்படுத்தியது என்பதை மறக்கலாகாது.

மேற்கூறிய மேற்குப்புறப் பெயர்ச்சியின் முக்கியப் பொருளாதார விளைவுகளை ஆராய்வோம்: (1) முதலாவது, கிழக்கிலிருந்து மக்கள் மேற்கே செல்லச் செல்லக் கிழக்குப் பிரதேசங்களில் தொழிலாளர் எண்ணிக்கை குறையவே இனி ஆட்களைப் பெறுதற்கு உயர்க் கூலிகள் கொடுக்க வேண்டியதேற்பட்டது. (2) இரண்டாவதாகப் பல்வேறு பிரதேசங்களுக்கிடையே யிருந்த போக்குவரத்து வசதிகளை மேலும் மேலும் அதிகரிக்க வேண்டிய நிர்ப்பந்தமேற்பட்டமையால் இருப்புப் பாதைகள் துரிதமாகப் பெருகின. (3) மேலும், வெவ்வேறு பிரதேசங்களுக்கிடையே தொழில் பிரிவினை ஏற்பட்டு, காலம் செல்லச் செல்லக் கிழக்கு, சிறப்பாக ஆலைத் தயாரிப்புத் தொழிலிலும், மேற்கு, சிறப்பாக உணவுப் பொருள் விளைவிலும் ஈடுபடத் தொடங்கின. ஒருவேளை இப் பிரிவு மனப்பான்மையே பின்னர் உள்நாட்டுப் போரையும் தூண்டியது எனவும் கூற இடமுண்டு. இவ்வாறான பிரதேசத் தொழில் பிரிவினையின் காரணமாக அமெரிக்காவில் முத்திசை வணிகமொன்றும் (*Triangular trade*) வளர்ந்தது. கிழக்குப் பிரதேசத்திற்கும் மேற்குப் பிரதேசத்திற்குமிடையே ஒரு திசையிலும், மேற்கிற்கும் தெற்கிற்கும் இடையே இரண்டாம் திசையாகவும், தெற்கிலிருந்து ஐரோப்பாவிற்கு மூன்றாம் திசையாகவும் புதியதொரு வணிகம் வளர்ந்தது. இதனால் பெரியதொரு பொருளாதார வளர்ச்சி விளைந்தது என்றால் மிகையாகாது.

இவையன்றிச் சில உடனடியான பெரும் அரசியல் விளைவுகளும் இதனால் ஏற்பட்டன என்று கூறவேண்டும். தீவிரப் போக்கும் கொந்தளிப்பும் நிறைந்த புதிய மேற்குப் பிரதேசம், அமெரிக்கக் கட்சி அரசியலில் இதுவரை காணாத பல புதிய

1. Faulkner: American Economic History. P. 361

நோக்கங்களையும், புதிய முறைகளையும் புகுத்த ஆரம்பித்தது. ஜனாதிபதி ஜெபர்சனின் முன்னைய ஏட்டு ஜனநாயகம் இப்போது விரைவில் நடைமுறை உண்மையாக மாறி, மக்களின் ஏற்றத் தாழ்வுகள் ஒழிய ஆரம்பித்தன. தேர்தல் வாக்குரிமைக்கும், பதவி ஏற்புக்கும், முன்னர் இன்றியமையாது வேண்டப் பெற்ற சொத்துத் தகுதிகள் எல்லாம் இப்போது ஒழிக்கப்பட்டுவிட்டன. இவ்வாறெல்லாம் மேற்கெல்லைதான் அமெரிக்காவின் புதிய ஜனநாயகத்தைப் பெரிதும் உருவாக்கியது. மேற்குத் திசைக் குடியேற்றம்தான் அமெரிக்க மக்களின் பண்பையும், அவாக்களையும் பெருமளவு நிர்ணயித்தது என்றால் தவறாகாது. மேற்குப் புறக் குடியேற்றச் செயலின் பிரம்மாண்டமும், சங்கடங்களும், ஆபத்துக்களும்தாம் இயற்கையிலேயே திடகாத்திரமானவர்களாகிய அமெரிக்க மக்களைக் கிளர்ச்சியுறச் செய்து, தீரச் செயல்களைத் துணிந்து மேற்கொள்ள அவர்களைத் தூண்டியது என்று உட்ரோ வில்சன் (*Woodrow Wilson*) என்ற பின்னாள் அமெரிக்க ஜனாதிபதி குறிப்பிட்டார். குடியேற்றத்தின் விரிவே நாட்டின் விரிவாகி, பின்னர் நாட்டின் பலத்தையும் அது ஓங்கச் செய்தது. மேற்குப்புறக் குடியேற்றக்காரர்களின் உணர்ச்சிகளும், நோக்கங்களும் பின்வருமாறு அமெரிக்க நாட்டின் பண்பையே உருவாக்கின என்றால் உண்மைக்குப் புறம்பாகாது. அம் மக்களின் தனி மனித சுயேச்சை, விடுதலைத் தாகம், சமத்துவ அவா, செயல் முனைப்பு, நடைமுறை ஞானம், ஜனநாயகம் முதலிய யாவுமே பின்னர் அமெரிக்கச் சமூகத்தின் பண்புகளாகத் திகழ ஆரம்பித்தன. மேலும், மேற்குப் பிரதேசமே கிழக்குப்புற மக்களுக்கு ஒரு புகலிடமாகவும் விளங்கியது என வேண்டும். சமூக நிலைமைகளின் கொடூரம், முதலாளிகளின் கொடுமை, மக்களின் சுயேச்சையைக் குலைக்கும் அரசியல் கட்டுப்பாடுகள் முதலிய பல்வேறு சங்கடங்களிலிருந்தும் தப்பிச்செல்ல விழையும் மக்கள் யாவருக்குமே மேற்குப் பிரதேசம்தான் சொர்க்கமாய்த் திகழ்ந்தது என்றால் மிகையாகாது.

# 5. பிளவு மனப்பான்மையும் உள்நாட்டுப் போரும்

## இரண்டு வேறுபட்ட உலகங்கள்

அமெரிக்க ஐக்கிய நாடு 19-ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் விரைவான வளர்ச்சியுற்றது. இதன் விளைவாக இரண்டு வேறுபட்ட உலகங்கள் அக் கண்டத்தில் தோன்றின எனலாம். அமெரிக்க ஐக்கியக் கூட்டாட்சிக்குள்ளேயே பல்வகையாலும் மாறுபட்டதான இரண்டு பகுதிகள் உருவெடுத்தன. இவ்விரு பகுதிகளிடையேயும் எல்லா அம்சங்களிலும் பேதங்கள் காணப்பட்டன என்றுல் பொய்யாகாது. வாழ்க்கை நெறியிலும், பொருளாதார அரசியல் பிரச்சினைகளிலும் இவ்விரண்டு பகுதிகளும் மாறுபட்ட அபிப்பிராயங்களைக் கொண்டவையாயிருந்தன. இவை ஒன்றுக்கொன்று எதிர்த்திசையில் சென்றனவேயன்றி இவை தங்களுக்குள் இணங்கிப் போகும் தன்மையே இல்லாதிருந்தது. இவற்றில் ஒன்று விவசாய அமெரிக்காவாகும்; மற்றென்று தொழில் அமெரிக்காவாகும் (*Agricultural America and Industrial America*). விவசாய அமெரிக்கா பழைமையானது; ஆதியில் தோன்றியது; இருநூற்றுண்டு அநுபவம் பெற்றது. இது பரவலாக அமைந்திருந்ததுடன் ஜனநாயக உணர்வும், தனி மனித சுயேச்சையில் விருப்பமும் மிக்கதாயிருந்தது. மேலும், இது தொழில் அமெரிக்காவின் நேர்மையிலும் நோக்கங்களிலும் சந்தேகம் கொண்டிருந்தது என்றும் குறிப்பிடுதல் வேண்டும். தொழில் அமெரிக்காவோ அப்போது 60 ஆண்டு அநுபவமேயுடையது. புதுமைகளைக் கண்டு

பிடிப்பதிலும், தொழிலில் சோதனைகள் நடத்துவதிலும் அப்போதுதான் அது ஈடுபட ஆரம்பித்திருந்தது. இப் புதிய அமெரிக்காவான தொழில் அமெரிக்காவில் மக்கள் செறிந்து வாழ்ந்தனர்; அதன் நகரங்களில் மக்கள் குவிந்து இருந்து தொழில் நடத்தினர். முதலாளித்துவ முறையும், நிலப்பிரபுத்துவப் போக்கும், முன்னேற்ற ஆசையும் இவ்வுலகின் அம்சங்களா யிருந்தன. முன்பு கூறிய விவசாய உலகம் இச்சமயம் தேய்த் திசையை அநுபவித்துக் கொண்டிருந்தது; பிந்தியதோ வளர்த் திசையில் வாழ்ந்துகொண்டிருந்தது. இவ்விரு முரண்பாடான உலகங்களிடையே மோதல் நிகழ்வது எதிர்பார்க்கக் கூடியதே. இவற்றுள் ஒன்று மற்றொன்றின்மேல் ஆதிக்கம் பெற்றுவிட முயற்சித்தது. இம் முடிவை நிர்ணயிக்கப் பிறந்ததே அமெரிக்க உள்நாட்டுப் போர் என்றால் மிகையாகாது.[1]

மேற்கூறிய இரு உலகங்களையும் வடக்கு எனவும், தெற்கு எனவும் கூறுவது பொருந்தும். தென் இராச்சியங்களைக் கொண்டதான தெற்கு 1860-ஆம் ஆண்டிலேயே அமெரிக்க ஐக்கிய நாட்டின் மக்கட் தொகையில் மூன்றிலொரு பங்கைக் கொண்டிருந்தது. இம் மக்கள் பெரும்பாலும் விவசாயத்தை நாடியே வாழ்ந்தவர்கள். உலகத்தின் பருத்தி உற்பத்தியில் மூன்றிலொரு பங்கையும், அமெரிக்க நாட்டின் சோளப் பயிரில் (Corn) பாதியையும், கோதுமை உற்பத்தியில் மூன்றிலொரு பங்கையும், கால் நடை, வேளாண்மை மிருகங்களில் மூன்றி லொரு பங்கையும் தெற்கே விளைவித்தது. தெற்கே விவசாயிகளில் பலர் சிறு புலன் வேளாண்மைக்காரர்களாயினும், பெருந்தோட்ட விவசாயப் பிரபுக்களே அங்கு ஆதிக்கம் கொண்டிருந்தனர். முன்னர்க் கூறியபடி, தெற்கின் பொருளாதாரம் அடிமை உழைப்பில் நிறுவப்பட்ட தோட்ட விவசாயப் பொருளாதாரமே என்பதை இங்கு நினைவுபடுத்திக் கொள்ளலாம். தெற்கே நிலத்திற்குப் பஞ்சமில்லாமலிருந்தது. ஆகவே பரந்த விவசாய முறை ஆங்குக் கையாளப்பட்டது. இங்கு விளைவிக்கப்பட்ட பயிர்களில் பருத்தியே மிகப் பெரும் பங்கு வகித்தது. 'பருத்திதான் மன்னன்' என்று கூறுமளவிற்கு அதன் முக்கியத்துவம் உயர்ந்திருந்தது. தெற்கு தனக்குத்

1. V. L. Parrington: Main Currents in American Thought, Vol. III-p. 27

தேவையான அளவு உணவுப் பயிர்களை விளைவிக்கவில்லை யாதலால் அதற்கு வடக்கையே நாடவேண்டியிருந்தது. ஐரோப்பாவிற்கு அமெரிக்கா அனுப்பிய ஏற்றுமதிகளில் முக்கால் பங்கைத் தெற்கே விளைவித்தது. அதில் 60 சதவீதம் பருத்தியே என்பது கவனிக்கத்தக்கது. ஆனால், விளைவித்த பயிரை விற்பனை செய்யுங்கால் வடக்கின் உதவியையே தெற்கு நாடவேண்டியிருந்தது மிகவும் சங்கடம் விளைவித்தது. தெற்கின் பருத்தி விவசாயிகள் தங்கள் சாகுபடிக்கு வேண்டிய முதலை வடக்கத்தியத் தரகு வியாபாரிகளிடமிருந்தும், பாங்குகளிடமிருந்துமே பெற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. இப்படி வாங்கிய முன்பணத்திற்கு மிகவும் உயர் வட்டிகளைச் செலுத்த வேண்டியிருந்ததுடன், தனக்குக் கடன் கொடுத்த வடக்கத்திய வியாபாரிகளுக்கு ஒப்பந்தப்படிப் பருத்திப் பேல்களை (*Bales*) அளிக்க வேண்டிய நிர்ப்பந்தமும் தெற்கிற்கு ஏற்பட்டது. இது இவ்வாறிருக்க, பிரிட்டனிடமிருந்து சரக்குக்களைத் தெற்குப் பிரதேசம் வரவழைக்கும்போதும் அது இன்னல்களுக்குள்ளாக வேண்டியிருந்தது. இச் சரக்குக்களின்பேரில் கூட்டாட்சி சர்க்கார் விதித்திருந்த இறக்குமதிச் சுங்க வரிகள் (*Tariffs*) தெற்கிலுள்ள மக்களையே பாதித்தது. மேலும், வடக்கு உற்பத்தி செய்தனுப்பிய ஆலைப் பண்டங்களைத் தெற்கிலுள்ளோர் குறைந்த விலைகளுக்குப் பெற்றுக் கொள்ளவும் முடியவில்லை. இப் பண்டங்கள் வடக்கத்தியத் தரகு வியாபாரிகளின் மூலமும், இடைவணிகர் பலர் வழியாகவுமே தெற்கிற்கு அளிக்கப்பட்டதாகையால் தெற்கின் எளிய விவசாயிகள் பெரிதும் சுரண்டப்பட்டனர் என்றால் பொருந்தும். இச் சங்கடங்களையெல்லாம் எண்ணித் தெற்கிலேயே தொழிற்சாலைகளையும் ஆரம்பிக்கப் பல முயற்சிகள் செய்யப்பட்டனவாயினும் உயர்திறத் தொழிலாளரும், நீராவிச் சக்தி உற்பத்தி வசதியும் போதிய அளவில் தெற்கில் கிடைக்காமையால் வெற்றி பெறமுடியாமல் போயிற்று.

வடக்கின் பொருளாதாரமோ பலதிறப்பட்டதாயிருந்தது. அங்கு முக்கியமாக உணவுப் பொருள் விளைவிப்பதற்காகவே விவசாயம் நடத்தப்பட்டது. விவசாயிகள் தங்கள் குடும்பப் புலன்களைச் (*Homesteads*) சாகுபடி செய்தே தங்கள் உணவுத்

தேவையைத் திருப்திப்படுத்திக் கொண்டனர். தெற்குக்கு மாருக, வடக்கில் மக்கள் யாவரும் நகரங்களிலும் கிராமங்களிலும் குவிந்து வாழ்ந்தனர். கப்பல் கட்டும் தொழிலும், இதர பல தொழிற்சாலை உற்பத்திகளும் வடக்கே வளர்ச்சி பெற்றிருந்தன. இச்சமயம் தொழில் துறையில் ஒரு புரட்சி தொடங்கிவிட்டது எனலாம். இல்லத் தொழில் முறை மறைந்து, தொழிற்சாலை முறை தோன்றிவிட்டது. இதன் விளைவாக மாவு ஆலைகளும், துணி நெசவு ஆலைகளும், இரும்பு எஃகுத் தொழிற்சாலைகளும் புதிதாக முளைத்துவிட்டன. வடக்கின் இந்த ஆலை உற்பத்திகளை விற்பதற்குத் தெற்குதான் சந்தையை அளித்துத் தூண்டுதலளித்தது. இந்நிலையில் வடக்கு,தெற்கு இவ்விரு பிரதேசங்களின் பொருளாதாரமும் ஒன்றை ஒன்று நாடியே இருந்தது என்பது தெளிவு. இதை உணர்ந்தே அலெக்சாந்தர் ஹாமில்டன் 1791-இல், வடக்கிற்கும் தெற்கிற்கும் இடையே எவ்வித மோதலுக்கும் அல்லது சச்சரவுக்கும் காரணமில்லை என்று எண்ணினர். ஆனல், 1831-இல் நிலைமை மாறிவிட்டது. அலெக்சிஸ் டி பிரிக்குவில் என்பார் அவ் வாண்டில்தான் தெற்கின் அதிருப்தியைத் திண்ணமாகக் கண்டார். பொருளாதாரச் செழுமையிலும், அரசியல் அதிகாரத்திலும் வடக்கு, தெற்கை விஞ்சியிருந்ததானது தெற்கிற்குப் பெரும் மனக்கசப்பை உண்டாக்கியிருந்தது. ஆகவே, இவ்விரு பிரதேசங்களுக்குமிடையே கடூரமானதொரு போராட்டம் நிகழ்வது உறுதியென அவர் உரைத்தார். உண்மையில் அமெரிக்க உள் நாட்டுப் போருக்குப் பல காரணங்கள் — அரசியல், பொருளாதாரம், ஒழுக்க வேறுபாடு, பிரிவு மனப்பான்மை ஆகிய காரணங்கள் — இருந்தன எனினும், மிகவும் முக்கியமான காரணமாவது, மாறுபட்ட இரு பொருளாதாரச் சமூகங்களுக்கிடையே இயற்கையில் தோன்றும் சச்சரவே ஆகும். அத்துடன் இப் பிரதேசங்களின் சமூக, கலாசாரப் பண்பு வேறுபாடுகளும் சேர்ந்தே உள்நாட்டுப் போரை விளைவித்தன என்ருல் முற்றிலும் பொருந்தும்.

இன்னும் ஆழ்ந்து பரிசீலித்தால், தெற்கு பெரும்பாலும் விவசாயச் சமூகமாயிருந்தபோது வடக்கு மட்டும் தொழில் துறையில் மேலும் மேலும் வளர்ச்சி அடைந்துகொண்டிருந்ததுதான் இவ்விரு பிரதேசங்களுக்கிடையே தோன்றிய போராட்டத்தின்

அடிப்படை என்பது விளங்கும். அதாவது அடிமை உழைப்பின் அடிப்படையில் அமைந்திருந்த (தெற்கின்) தோட்ட விவசாயப் பொருளாதாரத்திற்கும், புதிதாக (வடக்கில்) வளர்ச்சி பெற்று வந்த தொழில் முதலாளித்துவத்திற்கும் ஏற்பட்ட ஒரு மோதுகைதான் அது என்றே கூறலாம். இவ்வகையில் ஆரம்பத்திலேயே தீவிரமான வேறுபாடுகளை இவ்விரு பிரதேசங்களுக்குமிடையே எழுப்பிவிட்ட முக்கியமான பொருளாதாரப் பிரச்சினைகளை மூன்று பிரிவுகளாக வகைப் படுத்திக் கூறலாம். அவைகளாவன: (1) சுங்கவரிக் கொள்கை (*Tariff policy*), (2) பாங்கு, நிதித்துறைக் கொள்கைகள் (*Banking and Finance*), (3) நிலப் பகிர்ந்தளிப்புக் கொள்கை (*Land distribution*). ஆனால் பிற்காலத்தில் இவ்வெல்லாப் பிரச்சினைகளையும் மறையச் செய்துவிடுமளவிற்கு அடிமைகளின் விடுதலை ஒன்றே மாபெரும் பிரச்சினையாகிவிட்டது. காரணம் அடிமை முறை அமெரிக்காவில் ஒரு வெறும் சமூகப் பிரச்சினை அல்லது நீதிப் பிரச்சினையாக மட்டும் இருக்கவில்லை, அது ஓர் அடிப்படைப் பொருளாதார அமைப்பாகவே கருதப்பட்டது.

சுங்க வரி மூலம் தொழில்களுக்குப் பாதுகாப்பளிக்கும் கொள்கையைத் தெற்கு எதிர்த்தது. ஏனெனில், இந் நடவடிக்கையால் வடக்கே தொழில்கள் நலமடைந்தனவே தவிர, தெற்கில் மக்களுக்கு இதனால் எவ்வித நன்மையுமில்லாமலிருந்தது. மாறாக, தெற்கிலுள்ளவர்கள் பயன்படுத்தும் பண்டங்களின் விலைகளை இது உயர்த்தி, அம்மக்களுக்குப் பாதகம் விளைவிப்பதாயிருந்தது. தெற்கு வாசிகள் யாவரும் நிலத்திலும், அடிமைகளிலும் தங்கள் மூலதனத்தைப் போட்டிருந்தமையால் தொழில் ஈடுபாட்டில் அவர்களுக்கு நம்பிக்கையில்லாமலிருந்தது. ஆனால், வடக்கிலோ மக்கள் தாங்கள் தொழில் வளர்ச்சியின் மூலமே பொருளாதாரச் செழுமையைப் பெற முடியும் என்ற நம்பிக்கையுடையவராயிருந்தனர். மேலும் தெற்கின் பருத்தி உற்பத்தியாளர்கள், இச் சுங்க வரியின் காரணமாகவே பிரிட்டன் தங்களிடமிருந்து பருத்தியை வாங்காமல் வேறிடங்களிலிருந்து அதைப் பெற்றுவருகிறது என்றும் நம்பினர். தவிரவும் வடக்கின் நன்மைக்கான மராமத்துப் பணிகளை மேற்கொள்வதற்குத் தேவையான அதிகப்படியான வருவாயைப் பெறுவதற்காகத்தான்

இச் சுங்க வரிகள் விதிக்கப்பட்டிருக்கின்றன என்ற ஐயமும் தெற்கு மக்களிடையே பரந்து நிலவியது. இவ்வாறெல்லாம் தெற்கின் அதிருப்தி வளர்வதாயிற்று.

அடுத்து, பாங்குத் துறையிலும் ஒரு முக்கிய பிரச்சினை எழுந்தது. தெற்கு மக்கள் 'மலிவுப் பணக் கொள்கை'யை விரும்பினர். காரணம் இது விவசாயப் பண்டங்களின் விலைகளை உயரச் செய்து தெற்கின் விவசாயிகளுக்கு ஒரு நன்மையளிப்பதாயிருக்கும். ஆனால் இக் கொள்கை நிறைவேறுவதற்கு இராச்சியப் பாங்குகள் அவற்றின் விருப்பம்போல் செலாவணி அளவைப் பெருக்க அவைகளுக்குச் சுயேச்சை கொடுக்க வேண்டியதிருக்கும். ஆனால் வடக்கு மக்கள் ஆதரித்த கூட்டாட்சி ரிசர்வ் பாங்குத் திட்டத்திலோ (Federal Reserve Bank) நாட்டின் பாங்குத் துறையும், நிதித் துறையும் ஒரு மைய நிறுவனக் கட்டுப்பாட்டுக்குள் அடங்கியதாயிருக்கும். இந்நிலையில், இராச்சியப் பாங்குகளின்மேல் அதிகாரமுடையதொரு தேசிய மையப் பாங்கு முறையையே வடக்கு ஆதரிப்பதாயிருந்தது. இவ்வாறு இத்துறையிலும் வடக்கிற்கும் தெற்கிற்கும் சச்சரவுக்கிடமேற்பட்டது.

சர்க்காரின் நிலக் கொள்கைத் துறையிலும்கூட வடக்குக்கும் தெற்குக்குமிடையே வேற்றுமை வளர்ந்தது. மேற்கு எல்லை நிலங்களைத் தாராளமாக அரசாங்கம் புதிய குடியேற்றக் காரர்களுக்கு அளிக்க முன்வந்தமை தெற்குப்புற மக்களிடையே கலக்கத்தை உண்டாக்கியது. ஏனெனில், இப் புதிய நிலங்களை விரும்பி, தெற்கின் தோட்டத் தொழிலாளிகள் பலர் மேற்கே கிளம்ப ஆரம்பித்தனர். இதனால் தன் பொருளாதாரம் சீர்குலைக்கப்படுமோ என்ற அச்சம் தெற்கில் தோன்றியது. மேலும், தெற்கு, வடக்கு இரண்டுக்கும் பொதுவாக ஏற்படுத்தப் படும் எந்த ஒரு அமைப்பிலும் தெற்கின் அரசியல் பலம் குன்றக் கூடும் என்ற ஓர் அச்சமும் தெற்கிலிருந்தது. ஆகவேதான் அரசாங்கத்தின் நிலக் கொள்கையில் தெற்கு ஒரு மாற்றத்தைக் கோரியது என்பதை ஈண்டு உணர வேண்டும்.

மேற்கூறிய கருத்துக்கள் தெற்கில் பொதுவாக நிலவி வந்தனவென்றாலும், சுங்க வரிப் பிரச்சினையிலோ அல்லது

பாங்குத்துறை, நிலக்கொள்கை சம்பந்தமான பிரச்சினைகளிலோ தெற்கு இராச்சியங்கள் யாவுமே ஒன்றுபட்ட கருத்துடையனவாக இருக்கவில்லை என்றே கூற வேண்டும். ஆனால், அடிமைகளின் விடுதலை பற்றிய பிரச்சினை கிளம்பியவுடன் தெற்கு இராச்சியங்கள் யாவும் ஐக்கியப்பட்டு ஒருமுகமாக அடிமைகளின் விடுதலையை எதிர்த்தன. அடிமைகளின் விடுதலையால் எல்லாத் துறைகளிலும் சுயேச்சைப் போட்டி அதிகரித்துவிடுமென்ற ஓர் எண்ணத்தால் தெற்கில் வாழ்ந்த வெள்ளையரில் எளியவர்கள் கூட அவ்வியக்கத்தை எதிர்க்கத் தலைப்பட்டனர். சிலர் உண்மையிலேயே வெள்ளை இனத்தவர் உயர்ந்தவராவர் என்ற நம்பிக்கை உடையவராயிருந்தனர். தெற்கிலும்கூட அடிமை முறையை எதிர்த்தவர் சிலர் இருந்தனர் என்று கூறவேண்டும்; ஆயினும், அங்குப் பெரும்பான்மையானவர்கள் அடிமை முறையை ஆதரிப்பவர்களாகவே யிருந்தனர் என்பதுதான் உண்மை. இவர்கள் பொருளாதாரக் காரணங்களையும், மத நூல்களின் ஆதாரத்தையும் சுட்டிக் காட்டித் தங்கள் கட்சியை வாதாடினர். விவிலிய நூலிலேயே அடிமை முறைக்கு ஆதாரமுள்ளது என்றும் சிலர் சுட்ட முன்வந்தது அடிமை முறையில் அவர்களுக்கிருந்த நேர்மையான நம்பிக்கையைக் காட்டியது என்பதில் ஐயமில்லை. இஃதிவ்வாறிருக்க, வடக்கு இராச்சியங்கள் அடிமை முறையை ஒழிக்க முற்பட்டதன் நோக்கத்தையும் தெரிந்து கொள்ள வேண்டும். அற உணர்வின் ஆர்வத்தாலோ அல்லது சமூகச் சீர்திருத்த அவாவினாலோதான் வடக்கு மக்கள் அடிமை முறையை ஒழிக்க விரும்பினர் என்று கூறுவதைவிட, அடிமை ஒழிப்பினால் தங்களுக்கு விளையக்கூடிய பொருளாதார நன்மைகளைக் கருதியே அவர்கள் அப்படிச் செய்தனர் என்று கூறுவது உண்மையாகும்.

அமெரிக்கப் புரட்சிக்குப் பின் அடிமை முறை தானாகவே குறைய ஆரம்பித்துவிட்டது எனலாம். தெற்கிலும்கூட இப்போக்கு காணப்பட்டது. இது குறித்து 1794-இல் டென்சே - காக்சே என்பவர் 'பிரிட்டனிலிருந்து பிரிந்துபோன அமெரிக்க இராச்சியங்கள் (ஜார்ஜியா தவிர) யாவும் அடிமை வியாபாரத்தை அகற்றிவிட்டன; சில இராச்சியங்களில் நீக்ரோ அடிமை முறை ஒழிக்கப்பட்டுவிட்டது; மற்ற

இராச்சியங்களிலும் இம் முறையை நிச்சயமாக, ஆனால் படிப்படியாக ஒழித்துவிடுதற்கான தீவிர நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுவிட்டன. அடிமைகளின் இறக்குமதி நிறுத்தப்பட்டு விட்டது; இனி அதை மறுபடியும் ஆரம்பிக்கவே முடியாது. ஏனெனில், இனி அவ்வாறான இறக்குமதி ஆப்பிரிக்காவின் அமைதியைக் குலைப்பதுடன் அமெரிக்க ஐக்கிய நாட்டின் அமைதிக்கும்கூட ஆபத்தாக முடியக்கூடும்' என்று குறிப்பிட்டுள்ளது கவனிக்கத் தக்கது. இக் கூற்று அப்போது இருந்த நிலைமையை நன்கு விளக்குவதாகும். இது இப்படியிருக்க 1793-இல் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட பருத்தியைக் கொட்டை பிரிக்கும் பொறியும் (Cotton gin) விபரீதமாக அடிமை ஒழிப்புக்கு எதிராக அமைந்தது. அதுவே பின் அடிமை விடுதலைத் திட்டத்திற்கும் முற்றுப்புள்ளி இட்டது எனலாம். 1819-இல் அமெரிக்க ஐக்கிய நாட்டில் 22 இராச்சியங்களே இருந்தன. இவற்றுள் 11 இராச்சியங்கள் அடிமை முறையற்றவை; மீதி 11 இராச்சியங்களும் அடிமை உழைப்புடையவையாய் இருந்தன. அக்காலத்தில் இராச்சியங்களுக்குள்ளே ஒரு முக்கிய போராட்டம் நிகழ்ந்தது. புதிதாகக் குடியேறப்பட்ட நிலங்களும், மிசௌரி, லூயிசியானா, மிசிசிபி பிரதேசங்களும் அடிமை முறையற்ற சுயேச்சை இராச்சியங்களாக இருக்க வேண்டுமா, அல்லது அடிமை முறையைப் பின்பற்றும் இராச்சியங்களாக இருக்க வேண்டுமா என்பதே அப்போது நடந்த விவாதம். இப் பிரச்சினைக்குத் தீர்வு காணும் வகையில் 1820-இல் மிசௌரி சமரசம் (Missouri compromise) என்ற ஓர் ஒப்பந்தம் ஏற்பாடாகியது. இச் சமரச ஒப்பந்தமே பின்னர் அவ்வப்போது மாறுதல் செய்யப்பட்டு, அமுலில் இருந்து வந்தது. ஆனால், 1857-இல் சுப்ரீம் நீதிமன்றம் 'டிரெட்ஸ்காட்' விசாரணையின் விளைவாக (Dredscott case) அடிமை முறையின் நீடிப்புப் பற்றி ஒரு புதிய தீர்ப்பு அளித்தது. இதன்படி அமெரிக்க நாட்டில் எங்கிலும் அடிமை முறையைத் தடை செய்ய அமெரிக்கக் காங்கிரஸ் சபைக்கு அதிகாரமில்லை என்று அந் நீதிமன்றம் முடிவு கூறியது. இதற்கும் மேலாக, அடிமை உடைமையாளன் (Slave owner) அடிமைகளை வைத்துக் கொள்ளுவதற்கு அவன் உரிமையைப் பயன்படுத்திக் கொள்வதில் காங்கிரஸ் சபை அவனுக்கு வேண்டிய பாதுகாப்பை அளிக்கவும் கடமைப்

பட்டுள்ளது என்றும் கூறப்பட்டது. இந்நிலையில் 1860-இல் எடுக்கப்பட்ட குடிக் கணக்கின்படித் தெற்கு இராச்சியங்களில் வெள்ளையர் தொகை 8 மில்லியன்களாகவும், அடிமை மக்களின் தொகை 4 மில்லியன்களாகவும் இருந்தன. இவ்வடிமை மக்களில் முக்கால் பங்கு விவசாயத்தில், அதிலும் சிறப்பாகப் பருத்திச் சாகுபடியில் ஈடுபட்டிருந்தனர். இவ்வடிமைகளில் அறிவுடையவரும், வெள்ளையரின் இரத்தக் கலப்பு பெற்றிருந்தவரும் வீட்டுப் பணியாளர்களாக அமர்த்தப் பட்டிருந்தனர். இவ் வடிமைகளுக்கு அப்போதிருந்த கிராக்கியின் காரணமாக அவர்களின் விலையும் அப்போது உயர்ந்திருந்தது. மேலும், தெற்கே தோட்டச் சாகுபடி வேலைக்காக மட்டுமன்றி, தேவையுள்ள ஏனைய இராச்சியங்களுக்கு ஏற்றுமதி செய்து இலாபம் பெறுவதற்காகவும் அங்கு அடிமைகள் பராமரிக்கப் பட்டனர் என்று கூற வேண்டும்.

அப்போது அவ்வடிமைகளின் பொருளாதார நிலையை நோக்கின் இன்று விவசாயப் பண்ணைகளில் காணப்படும் வேளாண்மை மிருகங்களின் நிலையைவிட அது உயர்வாக இருக்கவில்லை என்றே கூறவேண்டும். வடக்கில் வாழ்ந்த எளிய தொழிலாளிகளின் நிலைக்கும் அடிமைகளின் நிலைக்கும் இடையில் வேறுபாடு அதிகமில்லை என்றே கூறவேண்டும். நீக்ரோ அடிமைகளுக்கு எழுதவும் படிக்கவும் கற்றுக் கொடுப்பின், அது அவர்களின் அதிருப்தி உணர்வை அதிகரித்துவிடுமென்ற எண்ணத்தால் ஐந்து இராச்சியங்களில் அவர்களுக்கு சமய போதனையைத் தவிர வேறொன்றும் கற்பிக்கப்படக் கூடா தென்ற ஒரு தடை விதிக்கப்பட்டிருந்தது. ஆயினும், இவ் வடிமைகளிடையே நேர்மை, அறம் முதலிய நல்லுணர்வுகளை ஏற்படுத்துவதும் மிகவும் கடினமாகவே இருந்தது. காரணம் இவ்வடிமைகளின் உடல் உழைப்பு யாவும் பிறருடைய உடைமைகளாக விருந்தனவேயன்றி அவர்களுக்கு ஏதும் சொந்தமில்லாமலே யிருந்தது. சில தோட்டங்களில் அடிமைகள் மிகவும் கொடுமையாகவே நடத்தப்பட்டார்கள் என்பதும் உண்மை. இருப்பினும், பலவிடங்களில் அவர்கள் நல்ல விதமாகவே நடத்தப்பட்டு வந்தனர் என்பதையும் மறுக்க வியலாது. பல துறைகளிலும் வடக்கிற்கும் தெற்கிற்கும்

மனக் கசப்பு ஏற்பட்டு அது உச்ச நிலையில் இருந்த சமயத்தில்தான் ஆபிரகாம் லிங்கனின் சீரிய தலைமையில் குடியரசுக் கட்சி (*Republican Party*) தேர்தலில் வெற்றி பெற்றது. அமெரிக்கக் குடியரசின் புதிய அதிபராக லிங்கன் பதவியேற்றபோது அடிமை முறையை அமெரிக்காவிலிருந்து ஒழித்துக் கட்டுவதென உறுதி பூண்டார். இச் சூழ்நிலையில் வடக்கு இராச்சியங்கள் தங்கள்பேரில் ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்துவிடலாமென்று எண்ணிய தென் இராச்சியங்கள் யாவும் அமெரிக்க ஐக்கியத்திலிருந்து (*American Union*) விலக முடிவு செய்தன. 1861-இல் தென் கரோலினுவின் தலைமையில் ஏழு தென் இராச்சியங்கள் ஐக்கியத்திலிருந்து வெளியேறின. ஆனால், அவ்வாறு தெற்கு இராச்சியங்கள் ஐக்கியத்திலிருந்து விலகுவதற்கு அவைகளுக்கு உரிமை இல்லை என்று வட இராச்சியங்கள் லிங்கனின் தலைமையில் பிரகடனம் செய்தன. இதனாலேயே அமெரிக்க உள்நாட்டுப் போர் மூண்டது. இப் போர் அமெரிக்காவின் வளர்ச்சிக்கு ஒரு பெரிய தடையாய் அமைந்தது என்பதில் ஐயமின்று. அமெரிக்காவின் தொழில் துறை, நிதித் துறை, வாணிகத் துறை யாவற்றையும் இது மிகவும் பாதித்து, அவற்றின் வளர்ச்சியில் பல ஆழ்ந்த விளைவுகளையும் ஏற்படுத்தியது என்று திண்ணமாகக் கூறலாம். உள்நாட்டுப் போரினால் அடிமைகளை உடைமையாக்கும் முறை ஒழிந்ததுடன் தொழிலாளர் இயக்கமொன்றும் விரைவில் வளர்ந்தது. அமெரிக்கப் பொருளாதாரத்தின் வடக்கு தெற்குப் பிரிவினைக்கு இப்போர் ஒரு முடிவு கண்டதுடன் அமெரிக்காவின் சமூக, அரசியல் போக்குக்களிலும் ஒரு திருப்பத்தை உண்டாக்கியது என்று கூறுதல் பொருந்தும்.

வடக்கு, தெற்கு இவ்விரு பிரதேசங்களின் வளங்களை ஒப்பிட்டுப் பார்ப்பின், எந்த ஒரு நீடித்த போரிலும் தெற்கு முறியடிக்கப்பட்டுவிடும் என்பது நன்கு விளங்கும். அமெரிக்க ஐக்கியத்திலிருந்து வெளியேறிய 11 இராச்சியங்களின் மொத்த மக்கட் தொகை (4 மில்லியன் அடிமைகளையும் சேர்த்து) 9 மில்லியன்களே; ஆனால் வடக்கின் மக்கட் தொகையோ 22 மில்லியன்களா யிருந்தது. மேலும், வெளிநாடுகளிலிருந்து வந்த சுயேச்சைத் தொழிலாளர்கள் வடக்கின் எண்ணிக்கையை

அதிகப்படுத்தி வந்தனர். தெற்கின் மொத்த செல்வத்தின் அளவு, அதன் அடிமைகளின் விலை மதிப்பாகிய 2 மில்லியன் டாலர்களையும் சேர்த்தாலும்கூட, அமெரிக்க ஐக்கிய நாட்டின் மொத்த செல்வத்தில் மூன்றில் ஒரு பங்கிற்கு மேலில்லை. அத்துடன் அமெரிக்க நாட்டின் ஆண்டு வருமானத்தில் (*Annual National Income*) கால் பங்குதான் தெற்கிலுல் உற்பத்தியாகியது. மேலும், தொழில்களும் தொழிற்சாலைகளும் தெற்கில் காணப்படவில்லை. ஆனால், வடக்கோ நாட்டின் மொத்த தயாரிப்புத் தொழில்களில் (*Manufacturing*) 90 சதவீதத்தைக் கொண்டிருந்தது. அத்துடன் வாணிகக் கப்பல்களும், கப்பற்படையும் வடக்கின் கையிலேயே இருந்தன. தெற்கைவிட வடக்குதான் அதிகமான உணவுப் பொருட்களை விளைவித்தது ; பொருளாதாரச் செழுமையிலும் வடக்கு தெற்கை விஞ்சியது. ஆகவே, தெற்கு இறுதியில் பஞ்ச நிலையால் வாட்டப் பெற்று வடக்கினல் முறியடிக்கப்பட்டதில் ஆச்சரியமில்லை. லிங்கனின் உணர்ச்சி மிகுந்த தலைமையின்கீழ் தெற்கின் பேத நிலை ஒழிக்கப்பட்டு, அமெரிக்க ஐக்கிய நாடு ஐக்கியமும், முன்னேற்றமும், நம்பிக்கையும் நிறைந்ததொரு நாடாக உருவாக்கப்பட்டுவிட்டது மிகவும் பாராட்டற்குரியதாகும். அடிமைத்தனத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டிருந்ததொரு விவசாய சமூகமாகிய தெற்கின் கையில் இதுவரை இருந்து வந்த அமெரிக்கக் கூட்டாட்சி அரசாங்கம் இனி வடக்கிலுள்ள தொழில் துறைச் செல்வந்தர்களின் கைக்கு மாறியது குறிப்பிடத்தக்கதாகும்.[1]

## உள்நாட்டுப் போரின் விளைவுகள்

தெற்கு இராச்சியங்களின் தோல்வியினல் சமூகத் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் பல முக்கிய விளைவுகள் ஏற்பட்டன. தனி மனித சுயேச்சை உணர்வும், நம்பிக்கை மனப்பான்மையும் நிரம்பியதொரு மத்திய வகுப்பினர்

1. Faulkner: American Economic History, P. 345

அமெரிக்க சமூகத்தில் புதிதாகத் தோன்றினர். மேலும், இப் போரினுல் போட்டி முதலாளித்துவம் (Competitive capitalism) தழைத்தோங்கும் ஒரு பொற்காலமும் அமெரிக்காவில் ஆரம்பமாகியது.

தெற்கின் பொருளாதாரத்தில் புதிய மாறுதல்களும் விளைந்தன. அடிமைகள் விடுதலை அளிக்கப்பட்டுவிட்டனர். பெரிய தோட்டங்கள் துண்டிக்கப்பட்டதுடன், போதிய தொழிலாளர்கள் இப்போது கிடைக்காமையால் அவை யாவும் சிறு பண்ணைகளாக நிறுவப்பட்டன. தொழிலாளர் பற்ருக்குறையை ஈடு செய்வதற்காகப் புதிய எந்திரங்கள் அமைக்கப்பட்டதுடன், உழைப்புக் குறைப்புப் பொறிகளும் புதிதாக ஆக்கப்பட்டன. பருத்திப் பயிரோடுகூட உணவுப் பொருள் உற்பத்தியும்கூடத் தெற்கில் இப்போது ஆரம்பிக்கப்பட்டது. ஆயினும், ஐரோப்பாவில் அச் சமயம் பரவிக்கொண்டிருந்த தொழிற் புரட்சியின் காரணமாக அங்குள்ள துணி நெசவு ஆலைகளுக்கு மிகவும் அதிகமான பருத்தி தேவைப்படவே, இங்கும் பருத்திச் சாகுபடி அதற்கேற்ப விரைவில் விரிவாக்கப்படவேண்டிய தாயிற்று. அதோடுகூட, உள்நாட்டுப் போர்க் காலத்தில் தங்களுக்கு வேண்டிய ஆலை உற்பத்திப் பண்டங்களைத் தெற்கு முன்போல வடக்கிலிருந்து வாங்கிக்கொள்ளவில்லை யாதலால் பல சிறிய தொழில்கள் புதிதாகத் தெற்கில் நிறுவப்பட்டிருந்தன. தன் சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ள ஏற்படுத்தப் பட்டிருந்த இச் சிறு தொழில்கள் பின்னர் தெற்கு தொழில் மயமாவதற்கும் ஒரு தூண்டுதலாயிருந்தன என்று கூறலாம்.

இஃது இவ்வாறிருக்க, வடக்கிலும் உள்நாட்டுப் போரால் சில நல்விளைவுகள் ஏற்பட்டிருந்தன என்றே கூறவேண்டும். வெளி நாடுகளில் அடிக்கடி ஏற்பட்ட விளைவுக் குறைவும், உள்நாட்டில் உணவுப் பொருட்களுக்கேற்பட்ட தேவை அதிகரிப்பும், விரைவாக வளர்ந்துகொண்டிருந்த தொழில்களின் அதிகரித்த மூலப்பொருள் தேவையும் வடக்கின் விவசாயத்துக்கு மிக்க ஊக்கமளித்தன. மேலும், அரசாங்கத்தின் நிலக் கொள்கையும் விவசாயத்தின் விரிவு, தொழிலின் வளர்ச்சி

இரண்டுக்குமே தூண்டுதலளிக்கும் வகையில் அமைந்திருந்தது என்றும் குறிப்பிட வேண்டும். போர்க் கால உற்பத்தித் தொழில்கள் அரசாங்க ஆதரவால் விரைவில் பெருகியதுடன், மற்றைய தொழில்களும் செழித்தோங்குதற்கு அப்போதிருந்த இறக்குமதிச் சுங்க வரிகளும், உயர்ந்திருந்த விலைகளும் மிகவும் துணை புரிந்தன. இவ்வாறு விளைந்த உயர் விலைகளும் மிகை இலாபங்களும்தாம் விவசாயம், தயாரிப்புத் தொழில்கள் இவ்விரண்டின் முன்னேற்றத்திற்கும் மிக்க ஆதரவாயிருந்தன.

உள்நாட்டுப் போர் மேற்கூறிய விளைவுகளை ஏற்படுத்தியதோடு நின்றுவிடவில்லை. நாட்டின் சுங்க வரிக் கொள்கை, இறக்குமதித் தடைக் கொள்கை (*Tariff and Protection*) இவ்விரண்டு நீண்ட காலப் பிரச்சினைகளுக்குமே இப்போர் ஒரு தீர்வு கண்டது. இப்போருக்குப் பின்தான் அமெரிக்க ஐக்கிய நாடு ஒரு பூரண இறக்குமதித் தடை நாடாக (*A full-fledged protectionist country*) ஆகிவிட்டது. இறக்குமதி வரி வீதங்கள் இதன் பின்னர் மேலும் மேலும் உயர்ந்துகொண்டே சென்றன. இவ்வுயர் சுங்கங்களின் பாதுகாப்பிலேயே அமெரிக்கா தொழில் வளர்ச்சியில் பிரம்மாண்டமானதொரு முன்னேற்றத்தை அடைந்தது. பெருந் தொழில்களும் கார்ப்பரேசன்களும் இக்காலத்திலேயே பிறந்தன. மக்களின் பொருளாதார சமூக வாழ்க்கையிலும் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்பட்டன.

உள்நாட்டுப் போர்தான் அமெரிக்கப் போக்குவரத்து வசதிகளின் பற்றாக்குறை நிலையையும் வெளிப்படுத்தியது. இப் போருக்குப் பின்னரே கூட்டாட்சி அரசாங்கம் (*Federal Govt.*) தாராளமாக நிலங் கொடுத்தும், தலையிடாக் கொள்கையைக் கடைப்பிடித்தும், சில ஆண்டுகளுக்கு இருப்புப் பாதை அமைப்புக்கு ஊக்கமும் ஆதரவுமளித்தது. இச் சூழ் நிலையில் இரயில்வேக்கள், ஊக வணிகர்கள் ஏமாற்றுக்காரர்கள் முதலியோரின் முக்கிய செயல் அரங்காகத் திகழ நேர்ந்தது என்பதில் வியப்பேதுமில்லை. இவ்வாறு இரயில்வேக்களின் துரிதமான வளர்ச்சியையொட்டிப் பரந்த அளவில் நிதி

விரயங்களும், அளவுக்கு மீறிய நிதி அழிவும், மிதமிஞ்சிய ஊக வணிக நடவடிக்கைகளும், பரந்ததொரு கிலியும் விளைந்தன என்பது உண்மையாயினும், இவ்வளர்ச்சிதான் அமெரிக்காவின் பிற்காலப் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடி கோலியது என்பதை யாரும் மறுக்கவியலாது.

நாட்டின் தொழிலாளர் இயக்கத்திற்கும் உள்நாட்டுப் போர் ஊக்கமளித்தது என்பது குறிப்பிடத்தக்கது. போரினல் தொழிலாளர்கள் மிகவும் பாதிக்கப்பட்டனராயினும் போரின் விளைவுகளான பற்ருக்குறை, பணப் பெருக்கம் போன்றவை தொழிலாளரின் கூலிகளை உயர்த்தி, தொழில்துறை சூழ்நிலையில் அபிவிருத்தி ஏற்படுவதற்கும் ஓரளவு காரணமாயிருந்தன. ஆயினும், நாட்டின் பொருளாதார வாழ்வை ஆட்கொண்டிருந்த பெருந் தொழில் நிலையங்கள், பிரம்மாண்டமான கார்ப்பரேசன்கள் இவைகளின் தயவில்தான் தொழிலாளர் முன்னேற்றம் அமெரிக்காவில் ஏற்பட முடிந்தது.

மேற்கூறியவற்றைக் காட்டிலும் மிக்க சங்கடத்தைத் தோற்றுவித்ததான ஒரு விளைவு, செலாவணி நிதி சம்பந்தமான குழப்பமாகும். போரினல் விளைந்த இக் கோளாறு வடக்கு, தெற்கு இரண்டு பிரதேசங்களிலுமே காணப்பட்டது. இவ்விரு பிரதேசங்களுமே நாணயப் பெருக்கம், செலாவணிப் பெருக்கம் இவ்விரண்டையும் போரின்போது கையாண்டமையால் இக்கட்டான நிலை ஒன்று ஏற்பட்டது. தென் இராச்சியங்கள் சிலவற்றுள் நகரங்களும், இரயில் பாதைக் கம்பெனிகளும்கூடத் தங்கள் சொந்தச் செலாவணியை வெளியிட்டன என்பது குறிப்பிடத் தக்கது. இந் நிலையில் மக்கள் செலாவணியில் நம்பிக்கை இழந்தனர் என்பதில் ஆச்சரியமில்லை. ஆகவே, பண்டமாற்று முறைக்கு மக்கள் திரும்பவேண்டியதாயிற்று. வடக்கிலும் இந் நிலையே ஏற்பட்டது. அமெரிக்கக் கூட்டாட்சி சர்க்கார் வடக்கு இராச்சியங்களில வெளியிட்டிருந்த 'கிரீன்பாக்ஸ்' (*Greenbacks*) என்ற புதிய தாள் செலாவணியால் கூலி வேலைக்காரர்களும், சம்பளம் வாங்கும் நடுத்தர வகுப்பினரும், மற்றுமுள்ள மாரு வருமானக்காரர்களும்

(*fixed income earners*) மிகவும் பாதிக்கப்பட்டனர். போர் முடிந்த பின்னர் பணக் குறைப்பு நடவடிக்கை மேற்கொள்ளப் படுமோவெனும் பயம் நிலவியது. கிட்டத்தட்ட ஒரு தலைமுறைக் காலம் கழியும் வரை 'கிரீன்பேக்ஸ்' செலாவணியே நாட்டின் முக்கிய அரசியல் பிரச்சினையாகவிருந்தது. 1863-இல் வந்த பாங்குத் தொழில் சட்டம்தான் (*Banking Act of 1863*) இராச்சிய பாங்குகளின்மேல் ஒரு கட்டுப்பாட்டை விதித்து, அவற்றின் நடவடிக்கைகளைக் கண்டிக்க வழி செய்தது. இதன்படி எந்தெந்தப் பாங்குகள் தங்கள் தாள் பண வெளியீட்டையும், கடன் அளிப்புக் கொள்கையையும் குறிப்பிட்ட சட்டதிட்டங்களுக் கிணங்க நடத்திவரச் சம்மதிக்கின்றனவோ, அவற்றிற்கு மட்டுமே கூட்டாட்சி சர்க்காரின் சாசனம் வழங்கப்படுமென்றிருந்தது. இதன் பின்னரும் அமெரிக்கப் பாங்குத் தொழிலில் குறைபாடுகள் இருந்ததாயினும், அமெரிக்காவின் நவீன நிதி முறை, பாங்கு முறை இவற்றின் அடிப்படை அமைப்பு அப்போதே நிர்மாணிக்கப்பட்டுவிட்டது என்று கூறலாம்.

அமெரிக்காவின் அடிமை மக்களான நீக்ரோவரின் நிலை உள்நாட்டுப் போரினால் எவ்வாறு பாதிக்கப்பட்டது என்று ஆராயின், ஆச்சரியம் விளையும். அடிமைகளின் விடுதலைக்-காகவே உள்நாட்டுப் போர் ஏற்பட்டது. 1865-இல் அமெரிக்க அரசியலமைப்பில் ஏற்படுத்தப்பட்ட பதின்மூன்றாவது திருத்தம் அமெரிக்க ஐக்கிய நாட்டில் அடிமைகள் யாவரையும் விடுவித்தது என்பதும் உண்மையே. ஆனால், அவ்வடிமை மக்களின் பொருளாதார நிலைமை போருக்குப் பின்தான் மிகவும் மோசமடைந்தது என்பது வியப்பை யுண்டாக்கும். சமூக வாழ்விலும், அடிமைகளின் விடுதலை வீரரான ஆபிரகாம் லிங்கனின் சம்மதம் பெற்றதாய ஒதுக்கல் கொள்கையின் (*Policy of Segregation*) காரணமாக நீக்ரோக்கள் பல முக்கிய பதவிகளை வகிப்பதி லிருந்து தடுக்கப்பட்டனர். ஆகவே, அமெரிக்க உள்நாட்டுப் போராட்டமும் அதனால் விளைந்த இரத்தக் களரியும் அடிமை மக்களின் விடுதலைக்கொரு முதற்படியாக மட்டுமே கருதப்பட வேண்டும். இம் மக்கள் தங்கள் அடிப்படை மனித உரிமைகளுக்காக இன்றும் போராட வேண்டியிருக்கிறது

என்பது வருந்தத்தக்கதோர் உண்மையாகும். உள்நாட்டுப் போருக்குப் பின் நூருண்டுகள் கழிந்த இன்றும்கூட அமெரிக்க இராச்சியங்கள் நடத்திவரும் பொதுப் பள்ளிகளில் நீக்ரோ மாணவர்கள் அனுமதிக்கப்படுவதற்குப் போராட்டம் நிகழ்த்த வேண்டியுள்ளது.

அமெரிக்கப் பொருளாதார வரலாற்றில் உள்நாட்டுப் போர் ஒரு முக்கியத் திருப்பத்தைக் குறிக்கிறது. இப்போர்தான் தெற்கில் நீக்ரோ அடிமை முறையை ஒழித்தது; வடக்கின் தொழிற் புரட்சியையும் விரைவு படுத்தியது. எல்லைப் பிரதேசத்தில் வாழ்க்கை வாய்ப்பு, நாட்டின் பொதுக் கல்வி வசதி இவற்றின் வாயிலாகவெல்லாம் சுதந்திரம், சமத்துவம் போன்ற இலட்சியங்களை எங்கும் உள்நாட்டுப் போரே பரவச் செய்தது என்றும் கூறலாம். இப் போரின் சிறப்பியல்பு குறித்து உட்ரோவில்சன் (*Woodrowwilson*) என்பார் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்: 'வடக்கைப் பற்றிய மட்டும் அப் போர் ஊக்கமும் ஆற்றலும் ஒருங்கு சேர்ந்ததோர் அபூர்வக் காட்சியாகும்; நாட்டின் பலம், ஒருமைப்பாடு இவ்விரண்டின் உன்னதமான வெளித் தோற்றமாயிருந்தது அது; மேலும், அப்பெரும் ஜனநாயக அரசியல் சமுதாயத்தின் விரைந்தெழும் வீரியத்திற்கு அப் போர் ஒரு சீரிய எடுத்துக்காட்டாயிருந்தது. தெற்கில் அப் பெரும் போராட்டம் ஊக்கம், விசுவாசம் இவ்விரண்டின் துணை கொண்டு இறுதிவரை நடத்தப்பட்டதே யன்றி வேறில்லை. உண்மையில் தெற்கின் பொருள் வசதிகள் யாவும் அப் போரின்போது தொடர்ந்து குறைந்து வந்ததுடன் வெற்றியில் நம்பிக்கையும் தேய்ந்துகொண்டுதான் வந்தது. தன் முழு வன்மையையும் வெளிப்படுத்தித் தன் சக்திகளை யெல்லாம் திரட்டிப் போராடி, தெற்கு தன் பலத்தையும் செல்வத்தையும் இழந்துவிட்டது. இருப்பினும், சுமார் மூன்று ஆண்டுகள் வரை வடக்கை எதிர்த்து அதற்குச் சரிசமமாகவே போராடும் அளவுக்குத் தெற்கு தன் ஆற்றலைக் குவித்து ஈடுபடுத்தியது என்பது ஆச்சரியப்படத் தக்கதாகும். இவ்வளவும் காலத்திற்கொவ்வாத ஓர் அரசாங்கக் கொள்கை யையும், பழைமையானதொரு பொருளாதாரத்தையும், அடைய

முடியாததோர் இலட்சியத்தையும் நிலைநிறுத்துவதற்காகவே செய்யப்பட்டதாகும்.'[1] லிப்பின்காட் (*Lippincott*) என்பவரோ இப் போர் குறித்து வேறுவிதமான ஒரு கருத்தைத் தெரிவித்துள்ளார். அதாவது, 'உள்நாட்டுப் போர் அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றில் ஒரு திருப்பத்தைக் குறிக்கவில்லை; இப் போர் வருதற்கு வெகு முன்னரே பொருளாதார சமூகத் துறைகளில் நவீனமானதோர் அமைப்புக்கு அந் நாட்டில் அடிநிலை இடப்பட்டுவிட்டது........இப்போர் செய்தது எல்லாம் அமெரிக்க ஐக்கிய நாட்டின் சமூக, பொருளாதார அமைப்பில் ஒரு சில புதிய அம்சங்களைப் புகுத்தியதுதான்.'

1. Woodrowwilson : Division and Reunion, p. 239

# 6. விவசாயப் புரட்சி *(1860-1914)*

அமெரிக்கப் பொருளாதாரப் புரட்சி அந் நாட்டின் உள்நாட்டுப் போரைத் தொடர்ந்து நிகழ்ந்ததாகும். இப் பொருளாதாரப் புரட்சியே அமெரிக்காவின் நவீன வளர்ச்சியின் தொடக்கமுமாகும். உள்நாட்டுப் போருக்குப் பின் அந்நாட்டில் உருவாகிய சூழ்நிலைகள் அமெரிக்க விவசாயத்தின் துரிதமான வளர்ச்சிக்குத் தக்க வாய்ப்புக்களை ஏற்படுத்தின. முதலாவதாக, இக் காலத்தின்போதே அமெரிக்க மக்கட் தொகை வெகுவாக வளர்ந்தது. உள்நாட்டுப் போர்க் காலத்தில் அமெரிக்காவின் மக்கட் தொகை 31 மில்லியன்களே. ஆனால், இத் தொகை தொடர்ந்து வளர்ந்து 19-ஆம் நூற்றுண்டின் இறுதியில் 100 மில்லியன்களாகப் பெருகிவிட்டது. அடுத்தபடியாகக் கூறப்பட வேண்டியது அமெரிக்காவிற்கு வந்திறங்கிய குடியேற்றத் தினரின் எண்ணிக்கைப் பெருக்கமாகும். இம் மக்களின் தொகையும் வரவர அதிகரித்துக்கொண்டே சென்றது. உதாரணமாக, உள்நாட்டுப் போரை அடுத்ததான ஐம்பது ஆண்டுகளில் 36 மில்லியன் மக்கள் புதிதாக அமெரிக்கா வந்திறங்கினர். 1882-க்குப் பின்னர்த்தான் குடியிறக்கத்தின் பேரில் தடைகள் விதிக்கப்பட்டன. அதிலும், ஆசிய நாட்டு மக்களின் குடியிறக்கம்தான் இவ்வகையில் அதிகமாகத் தடைக்குள்ளாகியது. இருபதாம் நூற்றுண்டில் இத் தடைகள் மிகவும் கடூரமாக்கப்பட்டதுடன், தலை வரியும், அளவீடு முறையும் (*Quota system*) புகுத்தப்பட்டன. அத்துடன் விரிவடைந்து சென்றுகொண்டிருந்த எல்லைப் பிரதேசங்களும்,

துரிதமாகப் பெருகிச் சென்ற நாட்டின் பொருளாதாரமும் விவசாய வளர்ச்சிக்குப் பெரிதும் துணை புரிந்தன.

## எந்திர முறை விவசாயமும் விஞ்ஞான முறைச் சாகுபடியும்

முன்பு கூறியவாறு உள்நாட்டுப் போரை அடுத்ததான காலம்தான் அமெரிக்க விவசாயப் புரட்சிக் காலம் என்று கூற வேண்டும். இக்காலத்தில்தான் அந்நாட்டு விவசாயம் எந்திர மயமாகியதுடன், விஞ்ஞான முறையான சாகுபடியும் கைக் கொள்ளப்பட்டது. அமெரிக்காவில் கூட்டாட்சி அரசாங்கமும், இராச்சிய அரசாங்கங்களும் விவசாய முன்னேற்றத்தில் ஆர்வமும் அக்கரையும் காட்டி விவசாயக் கல்வியை வெகுவாகப் பரப்பியதும் இக்காலத்திலேதான். மேற்குக் கடற்கரைப் பிரதேசம் வரை விவசாயம் விரிவாக்கப்பட்டு, பயன்படக்கூடிய நிலங்கள் யாவுமே இக் காலத்தில் சாகுபடிக்குக் கொண்டு வரப் பட்டன. முதலாவது உலகப் போரின் ஆரம்பக் காலத்தில் அமெரிக்காவில் விவசாயத்தை நம்பி வாழ்ந்த கிராமங்களிலும் பண்ணைகளிலும் 50 மில்லியன் மக்களுக்கு மேல் குடியேற்றப் பட்டிருந்தனர். மேலும், 500 மில்லியன் ஏக்கராக்கள் பரப்புள்ள புதிய நிலம் இக்காலத்தில் சாகுபடிக்குக் கொண்டு வரப்பட்டது. இப் பரப்பு மேற்கு ஐரோப்பாவின் அளவிற்குச் சமமான தென்று எண்ணும்போது ஆச்சரியம் விளையும். மேற்கூறிய இவ்விவசாய வளர்ச்சியே பல மில்லியன் மக்களுக்குப் புதிய இருப்பிடங்களைக் கொடுத்து, இரயில்வேக்களுக்குச் சுமைப் போக்குவரத்தை அளித்து, அமெரிக்கா, ஐரோப்பாக் கண்டங்களில் பெருகி வந்த தொழில் சமூகங்களுக்கு உணவையும் அளித்தது எனலாம். இக் காலத்தில் நாட்டின் விவசாய உடைமை பெறுமானமும் பத்து மடங்குக்கு மேல் அதிகரித்திருந்தது. கப்பல் போக்குவரத்துச் சாதனம் அதிகரித்த பின்னர், விவசாயப் பொருள் ஏற்றுமதிகளும் வெகுவாக உயர்ந்தன. இவ்வேற்றுமதிகளின் மதிப்பு 836 மில்லியன் டாலர்கள் வரை எட்டியது. மேலும், சாகுபடி நிலத்தின் பரப்பும் விரைவில் பெருகியதுடன் விவசாயத்தில்

ஈடுபட்டிருந்த மக்களின் எண்ணிக்கையும் $12\frac{1}{2}$ மில்லியன்களாக அதிகரித்தது. அத்துடன் தேர்ந்த சாகுபடியும் (*Specialised farming*), வியாபாரத்திற்கென்றே விவசாயமும் (*Commercial agriculture*), எந்திர மயமான வேளாண்மையும் (*Mechanised farming*) அமெரிக்க விவசாயத்தின் முக்கிய அம்சங்களாகி விட்டன. நீர்ப் பாசனமும், நில மீட்சி நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டதன் விளைவாகப் பல மில்லியன் ஏக்கராக்களில் பயிர் விளைச்சல் மிகுதியாக்கப்பட்டது. 1870-ஆம் ஆண்டில் 20 ஆயிரம் ஏக்கராக்களே பாசன வசதி பெற்றிருந்தன. ஆனால், முதலாவது உலகப் போரின் ஆரம்பக் காலத்தில் 20 மில்லியன் ஏக்கராக்கள் நீர்ப் பாசனம் பெற்றிருந்ததுடன், அந் நிலங்களின் விவசாயப் பொருள் உற்பத்தி மதிப்பும் 70 மில்லியன் டாலர்களாக உயர்ந்திருந்தது. பரந்த முறையில் வடிகால் திட்டமொன்று அமைக்கப்பட்டு, நில மீட்சியும் விரிவாக்கப்பட்டு, சுமார் 53 மில்லியன் ஏக்கராக்கள் புதிதாக உழவுக்குக் கொண்டுவரப்பட்டன.

அமெரிக்க ஐக்கிய நாட்டில் உள்நாட்டுப் போருக்கு முன்பே வியாபாரத்திற்கென்ற வேளாண்மை தொடங்கிவிட்டது. ஆயினும், இரயில்வேக்களின் துரிதமான பெருக்கமே இவ் வியாபார வேளாண்மையை விரிவாக்கியது. இத் துறையில் புதியதோர் அம்சமும் காணப்பட்டது. வேளாண்மை சில பிரதேசங்களில் தொழில் நிறுவன அமைப்பின் சாயலில் வளர ஆரம்பித்தது. கார்ப்பரேசன்களின் முறையைப் பின்பற்றிக் (*Corporation lines*) கூட்டுப் பங்குக் கம்பெனிகளைப்போலப் (*Joint Stock Companies*) பங்கு வெளியீட்டின் மூலமாக விவசாயத்திற்கு மூலதனம் திரட்டப்பட்டது. இவ் வேளாண்மை நிறுவனங்களின் கீழ்ச் சாகுபடிக்காரர்கள் எல்லாம் கூலி யாட்களாகத் (*Daily labourers*) தொழில் புரிந்தனர். இவர்களின் வேலையைச் சரிபார்ப்பதற்கெனப் பல மேற்பார்வை யாளர்கள் (*Supervisors*) நியமிக்கப்பட்டிருந்தனர். இம் முறையை அரசாங்கம் விரும்பவில்லையாதலால் இதைக் கட்டுப் படுத்த அது சட்டம் கொணர்ந்தது. இதன் பயனாக இப்

புதுமுறை வேளாண்மை அமெரிக்க விவசாயத்திலிருந்து ஒழிக்கப்பட்டது.

### பருத்திச் சாகுபடி

மேற்கூறப்பட்ட வியாபார வேளாண்மைப் போக்கின் காரணமாகப் பருத்திச் சாகுபடி பிரம்மாண்டமாக விரிவாக்கப் பட்டதுடன் பழைய உணவுப் பயிரான சோளம் கைவிடப்பட்டு, கோதுமைச் சாகுபடி, புதிதாகக் கைக்கொள்ளப்பட்டது. கலிபோர்னியா, பிளாரிடா பிரதேசங்களில் பழச் சாகுபடி முக்கியத்துவம் பெற்றது. அத்துடன் அங்குக் காளைகள், ஆடுகள், பன்றிகள் முதலிய கால்நடை உற்பத்தியும் ஆரம்பித்து வளர்ச்சி பெற்றது. நியூ இங்கிலாந்தும் நடுமேற்குப் பிரதேசமும் ஒரு கலப்புச் சாகுபடி முறையை விருத்தி செய்துகொண்டு உள்ளூர்ச் சந்தைகளின் தேவையைத் திருப்திப்படுத்துவதில் ஈடுபட்டன. தெற்குப் பிரதேசங்கள்தாம் கோதுமை, பருத்தி இவற்றின் சாகுபடியில் தனிக் கவனத்துடன் ஈடுபட்டன. அதிலும் தென்மேற்குப் பகுதியே பருத்தி, கால்நடை இவற்றின் உற்பத்தியில் தனிக் கவனம் செலுத்தியது. வடமேற்கோ பழத் தோட்டங்களின் சாகுபடியில் அக்கறை காட்டியது. மேற் கூறியவாறு அமெரிக்காவில் வியாபார வேளாண்மை வளர வளர, அமெரிக்கக் கோதுமையும், பால் பண்ணைப் பொருட் களும், இங்கிலாந்தின் சந்தைகளையும் ஐரோப்பியச் சந்தை களையும் வெள்ளம்போல் நிரப்பின. இதனால் பிரிட்டனில் தொழில் மந்தமொன்று ஏற்பட்டு உள்நாட்டுத் தொழிலுக்கு மிக்க சங்கடம் விளைந்தது. அமெரிக்கப் பண்டங்களின் படை யெடுப்பிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்குப் பிரான்சு சுங்கவரிச் சுவர் ஒன்றை (*Tariff wall*) எழுப்பிக் கொள்ள வேண்டியதாயிருந்தது.

### தொழில் நுண்ணியலும், விஞ்ஞானமும்

விவசாயத் தொழில் நுண்ணியலில் (*Agricultural technology*) அமெரிக்க ஐக்கிய நாடு 19-ஆம் நூற்றாண்டின்

இடைப்பகுதியிலேயே முன்னணிக்கு வந்துவிட்டது எனலாம். அங்குப் பண்ணைகளின் பெரும் பரப்பும், தொழிலாளர் பற்றுக் குறையும், எந்திரங்களின் அமைப்பையும் (*Mechanical invention*) பயன்பாட்டையும் இன்றியமையாதனவாக்கின. முதன்முதலாக விவசாயத்தில் பொது உபயோகத்திற்கு வந்த எந்திர சாதனங்கள் அறுவடை எந்திரமும் (*Reaper*), இருப்புக் கலப்பையும் (*Steel plough*) ஆகும். ஆரம்பத்தில் மனித உழைப்பிற்குப் பதிலாக மிருகத்தின் உழைப்பு, குறிப்பாகக் குதிரையின் உழைப்பு பயன்படுத்தப்பட்டது. பின்னர் இதற்குப் பதில் முதலில் நீராவியும், அடுத்து மின்சக்தியும் (*Electricity*), கனிச எண்ணெயும் (*Mineral oil*) உபயோகப் படுத்தப்பட்டன. 1880-ஆம் ஆண்டிற்குள் விவசாயத்தில் பெருத்த மாறுதலேற்பட்டுவிட்டது. மொத்தக் கோதுமை விளைவில் 80 சத வீதம் எந்திரங்களைக் கொண்டே அறுவடை செய்யப்பட்டது. மேலும், பல்வேறு வேளாண்மை நடவடிக்கைகளிலும் எந்திரங்கள் விரிவாக உபயோகப்படுத்தப் பட்டன. இவ்வாறான முதலாளித்துவ முறைச் சாகுபடியினால் (*Capitalist farming*) நிலமற்ற விவசாயத் தொழிலாளிகள் வகுப்பொன்றும் புதிதாகத் தோன்றியது. இவ் வகுப்பினருக்கு விவசாயத்தில் ஏற்பட்ட புரட்சி முறைகள் பிடிக்கவில்லையாயினும் விவசாயப் புரட்சியினால் பல நன்மைகள் விளைந்தன என்பதை மறுப்பதற்கியலாது. இந் நல்விளைவுகளில் முக்கிமானவற்றைப் பின் வருமாறு கூறலாம்: (1) விவசாயப் புரட்சியினால் விவசாயத் துறையில் தொழிலாளருக்கான தேவை குறையவே, ஏனைய தொழில்களுக்கு அதிகமான தொழிலாளர்கள் கிடைக்க முடிந்தது; (2) எந்திர சாதனங்களைப் பயன்படுத்தியமையால் விவசாய உற்பத்தி மிகையாக அதிகரித்தது; (3) சாகுபடித் தொழிலின் சங்கடமான வேலைகளை (*Drudgery*) எந்திர சாதனங்கள் நீக்கிவிட்டன; (4) முன்பு மிருகங்களுக்குத் தீவனப் பயிர்கள் (*Fodder crops*) விளைவித்த நிலங்கள் யாவும் இப்போது மற்றப் பயிர்களை விளைவிக்கப் பயன்படுத்தப்படலாயிற்று; (5) இறுதியாக, விவசாயிகளின் வருமானமும் வெகுவாக அதிகரித்தது. இருப்பினும், இவ் விவசாயப் புரட்சியால் தீமைகள் விளையாமலில்லை. முன்கூறியபடி நிலமற்றதொரு

தொழிலாளி வகுப்பைத் தோற்றுவித்ததுடன், விவசாயத்தில் மிகை உற்பத்தியை உண்டாக்கி, விவசாயப் பண்டங்களின் விலைகளையும் தாழ்த்தியது.

விஞ்ஞானத்தை விவசாயத்தில் பிரயோகித்து அமெரிக்கா பெரும் பயன் அடைந்தது. கலப்பினப் பயிர்களும் (*Hybrids*) புதுவகை விதைகளும், நவீனப் பயிர் வகைகளும் விருத்தி செய்யப் பட்டன. கோதுமைப் பயிரில் கலப்பினங்களை விருத்தி செய்து பயிர் செய்ததால் மட்டுமே அப் பயிரின் விளைச்சல் சுமார் 750 மில்லியன் புஷல்கள் (*Bushels*) அதிகரித்தது என்பது குறிப்பிடத் தக்கது. மண் காப்பு ஏற்பாடுகளையும் (*Soil conservation*), நில மீட்சி நடவடிக்கைகளையும், நீர்ப்பாசன வசதிகளையும் மேற்கொண்டதன் பயனாக விவசாயம் பெருவாரியாக விரிவடைந்தது. அத்துடன் மிருக வேளாண்மையிலும் (*Animal husbandry*), காளைகள் வளர்ப்பிலும் (*Cattle breeding*) பெரும் முன்னேற்றம் காணப்பட்டது. உயர்வான மிருக சிகிச்சை முறைகள், விஞ்ஞான முறைத் தீவனங்கள் (*Scientific feeding*), தேர்ந்தெடுக்கப்பட்ட இனவிருத்தி (*Selective breeding*), செயற்கை முறைக் கருத்தரிப்பு (*Artificial insemination*), கால்நடை நோய் ஒழிக்கும் முன்னேற்ற வழிகள்—இவை யாவும் சேர்ந்து விவசாயத் துறையினரின் வருமானத்தை வெகுவாக உயர்த்தின.

அபரிமிதமான நிலங்களும், இராச்சிய, கூட்டாட்சி அரசாங்கங்களின் உதவியும் விவசாய முன்னேற்றத்துக்குப் பெருந்துணையாயின. மேலும், அரசாங்கம் கொண்டுவந்த குடும்பப் பண்ணைச் சட்டங்கள் (*Homestead Acts*) விவசாயத்தின் விரிவாக்கத்துக்குப் பேருதவியாயிருந்தன. இச் சட்டங்கள் அரசாங்கத்திற்கு நன்மை அளித்தனவாயினும், நாட்டின் சமூக நலத்திற்கும் விவசாய முன்னேற்றத்திற்கும்கூட அவை வழி செய்தன என்பதைக் குறிப்பிட வேண்டும். இச் சட்டங்களின் பயனாக இராச்சியங்கள் முழுதும் புதிய குடியிருப்புக்கள் நிரம்பின. மேலும், இச் சட்டங்கள் உண்மையில் குடியேறி உழவு புரிவோனுக்கு மட்டுமே நில உடைமை உரிமையை (*Ownership of the soil*) அளித்தமையால் சமூகக் கொந்தளிப்புக்களும்,

உள்நாட்டுப் பூசல்களும் வெகுவாகக் குறைந்தன என்று கூறவேண்டும்.

### விவசாயக் கல்வி

அமெரிக்கக் கூட்டாட்சி சர்க்காரும் இராச்சிய அரசாங்கங்களும் விவசாயக் கல்விக்குப் பேராதரவு அளித்தன. உள்நாட்டுப் போருக்கு முன்பும் ஓரளவு விவசாயக் கல்வி இருந்தது. ஆயினும், திட்டமிட்டுப் பெருமளவில் விவசாயக் கல்வியை வளர்க்கச் செய்யப்பட்ட முதன் முயற்சி 1862-ஆம் ஆண்டில் கொணரப்பட்ட தேசிய விவசாயக் கல்லூரிச் சட்டமேயாகும். இச் சட்டத்தின்படி ஒவ்வோர் இராச்சியமும் நாட்டின் பொது நிலங்களிலிருந்து 30,000 ஏக்கராக்களை இனமாகப் பெற்றுக்கொள்வதென்றும், அந்நிலங்களை விற்றுப் பெறக்கூடிய தொகையை நிதியாக வைத்துக்கொண்டு ஒவ்வோர் இராச்சியமும் ஒரு விவசாயக் கல்லூரியையாவது ஆரம்பிக்க வேண்டும் என்றும் விதிக்கப்பட்டது. இந் நிலக்கொடையை ஏற்றுக்கொண்ட ஐந்து ஆண்டுகளுக்குள் விவசாயக் கல்லூரி துவக்கப்பட்டுவிட வேண்டும் என்றும் அச் சட்டம் விதித்தது. கல்லூரி நடத்துதற்கான இடத்தைப் பெறும் செலவையும், கல்லூரியின் நிர்வாகச் செலவையும் இராச்சியங்களே ஏற்கவேண்டு மென்றும் கூறப்பட்டது. இவ்வேற்பாட்டின் விளைவாக 1914-ஆம் ஆண்டிற்குள்ளேயே 69 கல்லூரிகள் அமெரிக்க ஐக்கிய நாட்டில் தோன்றிவிட்டன. இது போலவே 'ஸ்மித் லீவர் விஸ்தரிப்புச் சட்டம்' (*Smith Lever Extension Act*), 'ஸ்மித் ஹியூக்ஸ் சட்டம்' (*Smith Huges Act*) என்ற இரு சட்டங்களின் கீழும் இராச்சிய சர்க்கார்கள் விவசாயப் பள்ளிகளை நிறுவிக்கொள்வதற்கெனக் கொடைகள் வழங்கப் பட்டன. முதலாவது உலகப் போரின் இறுதியில் இவ்விவசாயக் கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் 200,000 மாணவர்கள் பயின்று வந்தனர் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

இராச்சியங்கள் விவசாயப் பரிசோதனை நிலையங்களையும் (*Agricultural experimental stations*) நடத்தி வந்தன. 1887-இலேயே இந் நிலையங்களின் எண்ணிக்கை 20 ஆக

இருந்தது. இதைக் கண்ட கூட்டாட்சி அரசாங்கம் இந் நிலையங்களைப் பெருக்குவதற்கு உதவியளிக்கத் தீர்மானித்தது. இதற்கென 'ஹாட்ச் சட்டம்' (*Hatch Act*) என்ற ஒரு சட்டம் கொண்டுவரப்பட்டது.* 1914-இல் இந் நிலையங்களின் எண்ணிக்கை 60 ஆக அதிகரித்துவிட்டது. இவை விவசாய ஆராய்ச்சி நடத்தியதுடன், விவசாய அபிவிருத்தி விஸ்தரிப்புப் பணியையும் (*Agricultural extension service*) மேற்கொண்டன. இவற்றுள் பெரும்பாலான நிலையங்கள், விவசாயக் கல்லூரிகள் அல்லது விவசாயப் பள்ளிகளோடு இணைக்கப்பட்டிருந்தன. இவ்வாறான விவசாய ஆராய்ச்சியும், கல்வியும்தான் பின்னர் அமெரிக்க விவசாயிகள் தங்கள் வேளாண்மையில் நவீன விஞ்ஞான முறைகளைப் புகுத்தி நலம் பெற உதவிற்று என்றால் மிகையாகாது. இதன் பயனாக விவசாய உற்பத்தி அதிகரித்ததோடு, விவசாயிகளின் வருமானமும் உயர்ந்தது. மேலும், உலகச் சந்தைகளில் அமெரிக்க விவசாயிகளுடைய போட்டித் திறனும் இதனால் அதிகரித்தது என வேண்டும். இதுவன்றி, அரசாங்கம் பல்வேறு தனிக் குழுக்களை நியமித்து விவசாயத் துறையின் பல்வேறு பிரச்சினைகளையும் ஆராயவும் வழி செய்தது. இவ் வகையில் ஏற்பட்டவையான பயிர்த் தொழில் பணிமனை (*Bureau of Plant industry*), காட்டுத்துறை பணிமனை, தட்பவெப்ப நிலை ஆராய்வுப் பணிமனை, பயிர்ப் பூச்சித்துறைப் பணிமனை, மிருக வளர்ப்புத்துறைப் பணிமனை, விவசாய மண் வள இரசாயனப் பணிமனை போன்ற பல தனிப்பட்ட நிலையங்களும் நிறுவப்பட்டதனால் விவசாயம் பல வழிகளிலும் வளர்ச்சி பெறுதற்கு உதவியாயிருந்தது.

### விவசாயப் பண்டங்களின் விலைகள்

அமெரிக்க விவசாயத்திற்கு அப்போதிருந்த முக்கிய பிரச்சினையாவது விவசாயப் பண்டங்களின் விலைகளை ஒருநிலைப் படுத்தி வைத்திருத்தலாகும். உள்நாட்டுப் போருக்குப் பின் இவ் விவசாயப் பொருட்களின் விலைகள் விரைவில் வீழ்ந்தன. ஆனால், விவசாயிகள் வாங்கவேண்டியிருந்த மற்றப் பொருட்களின் விலைகளோ மெதுவாகத்தான் இறங்கின. 1873-இல் நிலவிய சூழ்நிலை அமெரிக்காவில் ஒரு விவசாயத் தொழில்

மந்தத்தை ஏற்படுத்தியது. இதற்குக் காரணங்களாயிருந்தவை ஐரோப்பாவில் ஏற்பட்டதான நிதி நெருக்கடியும் (*Financial crisis*), ஐரோப்பியச் சந்தைகளில் ருஷியக் கோதுமையின் வன்மையான போட்டியும், அமெரிக்காவில் ஏற்பட்டிருந்த கடன் செலாவணிப் பெருக்கமும், அந்நாட்டில் பரந்த அளவில் நிகழ்ந்திருந்த மிகை விவசாய உற்பத்தியுமாகும். இம் மந்தத்தால் விவசாய விலைகள் வீழ்ந்துபட்டமையால் விவசாயிகளின் கடன் பளு மிகவும் அதிகரித்துத் தோன்றியது. கடன் கொடுத்த முதலாளிகளின் செல்வாக்கே அரசாங்கத்தில் நிறைந்திருந்தமையால், கடன் பட்ட விவசாயிகளுக்குச் சாதகமான நடவடிக்கைகள் எதுவும் தோன்றுவதற்கு முடியவில்லை. விவசாயிகளுக்குக் கடன் வசதிகள் பற்றுக்குறையாயிருந்ததுடன், லேவாதேவிக்காரர்களும், கடன் வழங்கும் கம்பெனிகளும் இக் கதியற்ற விவசாயிகளைச் சுரண்டத் தலைப்பட்டனர். இச் சங்கடங்கள் போதாதுபோன்று அமெரிக்கச் சுங்க வரிகளும், இரயில்வேக்களின் பேதங் காட்டும் சுமப்புக் கட்டண வீதங்களும் (*Discriminating railway freights*) மேலும் விவசாயத்தைப் பாதித்தன. இக் காரணங்களின் விளைவாக விவசாயிகளிடையே மிக்க அதிருப்தி ஏற்பட்டதுடன், விவசாயிகள் போராட்டமும் விளைந்தது. இதனாலேயே அமெரிக்காவில் 'கிரேஞ்சர் இயக்க'மும் (*Granger movement*), இரயில்வே சர்வாதீனங்களுக்கு ஓர் எதிர்ப்பும் தோன்றின. கூட்டுறவு முறையில் விவசாயத் தொழிலை நடத்த ஓர் ஆரம்பமும் ஆயிற்று. பலவகைப் போராட்டங்களுக்குள்ளாகிய இவ் விவசாயிகள் தங்களுக்கென 'விவசாயிகள் அணி' (*Farmers' alliance*) ஒன்றையும், 'கிரீன்பேக் கழகங்கள்' (*Greenback clubs*) என்ற அமைப்புக்களையும் ஏற்படுத்திக் கொண்டனர்.

### நிதி நிலைமை

மேற்கூறிய நிலைமை மாறியவுடன் விவசாயப் பொருட்களின் விலைகள் மறுபடியும் உயர்ந்தன. விவசாயத்தின் செழுமையும் மீண்டது. அத்துடன் விவசாயத்துறைப் போராட்டங்களும் சிறிது சிறிதாக அடங்கின. 1916-ஆம் ஆண்டுச் சட்டமொன்று முன்னைவிடச் சிறந்த கடன் வசதிகளை

விவசாயிகளுக்கு அளிக்க முன்வந்தது. சாதாரண வணிக பாங்குகள் விவசாயத்துறைக்குக் கடன் கொடுக்க இயலாத நிலையில் விவசாயிகள் கடும் வட்டிகள் கொடுத்தே வெளியில் பணம் கடனாகப் பெற்றுவந்தனர். இச் சங்கடத்தைத் தவிர்க்க 1916-இல் கொண்டு வரப்பட்ட கூட்டாட்சி சர்க்காரின் விவசாயக் கடன் பாங்கு முறை மிகவும் நன்மை செய்தது. இவ்வாறு விவசாயிகளுக்குத் தேவையான மட்டும் கடன் வழங்குதற்காகப் பல விவசாயக் கடன் பாங்குகளும், விவசாயக் கடன் சங்கங்களும் (*Federal Farm Loan Banks and Farm Loan Associations*) அமெரிக்கக் கூட்டாட்சி சர்க்காரால் நிறுவப்பட்டன. நாடு முழுவதையும் 12 மண்டலங்களாகப் பிரித்து இவ் விவசாயக் கடன் பாங்கு முறையை அமுல் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது. இதற்குத் தேவையான நிதிகள் நிலங்களின் ஈட்டின்பேரில் வெளியிடப்பட்ட கடன் பத்திரங்களை விற்பதன் மூலமாகத் திரட்டப்பட்டன. கடன்கள் விவசாயிகளுக்குப் பல காரியங்களுக்கு வழங்கப்பட்டன. நிலம் வாங்குவதற்கும், தளவாடக் கருவிகள், உர வகைகள், விவசாயப் பண்ணைக் கட்டிடங்கள், கால்நடை முதலியன வாங்குவதற்கும், முன் கடன்களைத் தீர்த்துக் கொள்ளுதற்கும் இவ் விவசாயப் பாங்குகளால் கடன்கள் வழங்கப்பட்டன. இக் கடன்களைத் திருப்பிக் கொடுப்பதில் விவசாயிகளுக்கு உதவியாக எளிதான தவணைமுறை ஏற்படுத்தப் பட்டது. போதுமான நீண்ட காலத்தில் எளிதாகக் கடன்களைத் தீர்க்க இவ்வாறு ஒரு வழி செய்யப்பட்டது. இவ் விவசாயக் கடன் பாங்குகள் ஏற்பட்ட பத்தாண்டுகளுக்குள்ளாகவே $1\frac{1}{2}$ பில்லியன் டாலர்கள் வரை (ரூபாய் 750 கோடிகள்) கடன் வழங்கப்பட் டிருந்தது என்றால், இந் நடவடிக்கையின் அவசியமும், பயனும் நன்கு விளங்கும்.

நடுத்தரக் காலக் கடன் வசதியை, அதாவது 6 மாதங்கள் முதல் 36 மாதங்கள் வரை நீடிக்கக்கூடிய கடன்களை அளிப்பதற் கெனக் கொண்டு வரப்பட்ட 'லென்ரூட் திட்ட மசோதா' (*Lenroot-Bill*) 1923-இல் சட்டமாகியது. 'விவசாயக் கடன்கள் சட்டம்' என்ற இச் சட்டத்தின்கீழ் 12 நடுத்தரக் காலக் கடன் பாங்குகள் நிறுவப்பட்டன. இப் பாங்குகள் தனிப்பட்ட விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கவில்லை. கூட்டுறவு விற்பனைச்

சங்கங்கள் (*Marketing Societies*), கூட்டுறவுக் கடனளிப்புச் சங்கங்கள் அல்லது கூட்டுறவுப் பாங்குகள்தாம் (*Co-operative Credit Societies or Banks*) மேற்கூறப்பட்ட நடுத்தரக் காலக் கடன் பாங்குகளிடமிருந்துகடன்களைப் பெறக்கூடுமென்றிருந்தது. நாட்டின் நாணயக் கட்டுப்பாடு நெறியாளரின் (*Controller of Currency*) மேற்பார்வையில் நாடு முழுதும் தேசிய விவசாயக் கடன் கழகங்கள் அமைக்கப்படவும் இச் சட்டம் அனுமதியளித்தது. இதுவன்றி விவசாயப் பொருட்களின் ஏற்றுமதிக்கு நிதி உதவி அளிப்பதற்கும் போர்க்கால நிதி வசதி கார்ப்பரேசன் முன்வந்தது.

இஃதிவ்வாறிருக்க, அமெரிக்க நாட்டுச் செல்வ உற்பத்தியிலும், தொழில் புரியும் மக்களின் எண்ணிக்கையிலும் விவசாயத்தின் சதவீதப் பங்கானது வரவரக் குறைந்தே வந்தது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். மேலும், அமெரிக்காவில் விவசாயத்தில் ஈடுபட்ட மக்கட்தொகையின் வீதாசாரம் மற்ற பல நாடுகளிலுள்ளதைக் காட்டிலும் மிகவும் குறைந்ததாகவே காணப்பட்டது. ஆயினும், விவசாய உற்பத்தியின் அளவு மட்டும் தொடர்ந்து உயர்ந்து சென்றது; நிலத்தின் மதிப்பும் அதேபோல் தொடர்ந்து அதிகரித்தது. இச் சமயம் மேற்கு ஐரோப்பாவில் மக்கட்தொகை வளர்ந்துகொண்டே சென்றமையால் அங்கு விவசாயப் பண்டங்களுக்குச் சந்தையும் பெருகிக் கொண்டே சென்றது. இவ் விரிவடைந்த சந்தை வாய்ப்புத்தான் மேலும் மேலும் தன் உற்பத்தியைப் பெருக்க அமெரிக்க விவசாயிக்கு மிகப் பெரியதோர் ஊக்கத்தை அளித்தது என வேண்டும். 19-ஆம் நூற்றூண்டின் இறுதியில் சோள தானியம், கோதுமை, இறைச்சி, இறைச்சிப் பண்டங்கள் இவை யாவற்றின் ஏற்றுமதியும் மிகப் பெரியதோர் உச்சத்தை அடைந்தது என்று குறிப்பிடவும் வேண்டும்.

### அமெரிக்க விவசாயப் புரட்சியின் விளைவுகள்

அமெரிக்க விவசாயப் புரட்சியின் விளைவுகள் ஐரோப்பாவிற்கு மிகவும் பாதகமானவையாக இருந்தன. இதனால் ஐரோப்பிய விவசாயம் பெருமளவு நிலை குலைந்தது. ஆனால்,

ஐரோப்பியத் தொழிற் புரட்சி துரிதமாக்கப்பட்டது. ஆஸ்திரேலியப் பொருளாதார நிபுணர் ஒருவர் குறிப்பிட்டவாறு, அமெரிக்கா கண்டு பிடிக்கப்பட்ட பின், அங்கிருந்து பிற நாடுகளில் வந்திறங்கிய பொன், வெள்ளிக் குவியல்களினுல் என்ன விளைவுகள் ஏற்பட்டனவோ அதே போன்ற விளைவுகள்தாம் இப்போதும் அமெரிக்க விவசாயத்தின் மிகை ஏற்றுமதியால் பழைய உலகம் முழுதும் ஏற்பட்டன என்று கூறுதல் வேண்டும். பெருகிக்கொண்டே சென்ற ஐரோப்பாவின் சந்தை அமெரிக்க மேற்கெல்லையின் விரிவைத் துரிதப்படுத்தியது. புதிய நிலங்களின் குடியேற்றத்தையும், நாட்டிற்குள் குடியிறக்கத்தின் வேகத்தையும்கூட இது துரிதமாக்கியது. அமெரிக்காவில் போக்குவரத்து வசதிகள், விற்பனை வசதிகள், முதலிய யாவற்றின் முன்னேற்றத்தையும், பெருக்கத்தையும் வேகப்படுத்தியதும் ஐரோப்பியச் சந்தையின் விரிவேயாகும். அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்கும் இடையே வாணிபக் கொடுப்பல் நிலையில் ஏற்பட்டிருந்த ஏற்றத்தாழ்வைச் (*Balance of Trade*) சரிக்கட்டுவதற்கும் அமெரிக்க விவசாயத்தின் உற்பத்தி உபரியே (*Agricultural surplus*) உதவியது. மேலும், அமெரிக்கா ஐரோப்பாவிடமிருந்து பெருமளவில் கடன்களைப் பெறுதற்கும் இந்த விவசாய மிகை உற்பத்தியே துணை செய்தது. இதுவே அமெரிக்கத் தொழில் வளர்ச்சிக்கும் ஆக்கம் அளித்தது. இத்தொழில் வளர்ச்சியைத் தூண்டுதற்காகவே அமெரிக்காவில் பாதுகாப்புச் சுங்க வரிகளும் ஏற்படுத்தப்பட்டன என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

மேற்கூறிய மாபெரும் விவசாய வளர்ச்சி நன்மையையே அளித்தது என்று கூறுவதற்கில்லை. அதனுல் தீமைகளும் விளையக்கூடும் என்பது வியப்பளிக்கக்கூடியதே. இவ்விவசாய வளர்ச்சியின் வேகம் மிகவும் துரிதமாக இருந்தமையால் உணவுப் பொருட்களின் விலைகள் மிகவும் குறைந்து, சில சமயங்களில் இவ்விலைகள் உற்பத்திச் செலவிற்குக்கூடக் கட்டாத நிலை ஏற்பட்டது. உண்மையில் இவ் வளர்ச்சி விவசாயிகளுக்குச் செழுமையைவிடச் சங்கடங்களையே அதிகமாக விளைவித்தது என்று கூற இடமுண்டு. இம் மக்களுக்கு விளைந்த சங்கடங்களும் துன்பங்களும் அமெரிக்காவின் அரசியல்

போக்கிலும், சமூகத்தின் அதிர்ச்சியிலும், பொருளாதார நிலையின்மையிலும் பிரதிபலிக்கப்பட்டன. மேற்குப்புறப் பெயர்ச்சியின் இறுதியடைவு, பின்னர் மக்களின் கவனத்தைச் சிறந்த உழவு முறைகளிலும் ஆழ்ந்த விவசாய முறை வளர்ச்சியிலும் திருப்பியது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில்தான் அமெரிக்காவில் விவசாயப் பண்டங்களின் விலைகள் தொடர்ந்து உயர்ந்திருந்தன. அத்துடன் நிலத்தின் விலையும் உயர்ந்திருந்தது. நல்ல சாலைகள், மோட்டார் கார்கள், உழவு எந்திரங்கள், மின்சக்தி இவை யாவும் அதுபோது அமெரிக்காவில் போதிய மட்டும் இருந்தமையால், விவசாயியின் பொருளாதார நிலை மேம்பட்டது; நாட்டுப்புறத்தின் செழுமையும் உயர்ந்தது.

# 7. தொழிற் புரட்சி

### பொது அம்சங்கள்

உள்நாட்டுப் போருக்கு மிக முன்னரே தொழில் துறையில் துரிதமான மாறுதல் காணப்பட்டது. ஜேம்ஸ்வாட்டின் நீராவி எஞ்சினும், விட்னேயின் பருத்தி எந்திரமும் *(Whitney's Ginning machine)* தொழில் உற்பத்தியில் ஏற்கெனவேயே ஈடுபடுத்தப்பட்டிருந்தன. நெப்போலியன் தோற்றுவித்திருந்த ஐரோப்பியக் கட்டுப்பாட்டு முறையும் *(Continental system)*, அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்குமிடையே 1812-இல் மூண்ட போரும்தான் அமெரிக்கத் தொழில் முன்னேற்றத்திற்கும், தொழிற்சாலை முறை வளர்ச்சிக்கும் தூண்டுதலாக அமைந்தன என்று கூறவேண்டும். குறிப்பாகச் சொல்லுவதானல், 1812-ஆம் ஆண்டுப் போரே தொழிற்சாலை முறை அமெரிக்காவில் நிறுவப்படுதற்குக் காரணமாயிருந்தது. அதேபோல, பின்பு அமெரிக்காவில் தொழிற் புரட்சி தோன்றுவதற்கும் உள்நாட்டுப் போர்தான் காரணமாக அமைந்தது. உள்நாட்டுப் போரை அடுத்த அரை நூற்றுண்டில் அமெரிக்கப் பொருளாதார வாழ்வின் மிக முக்கியமான அம்சமாகத் தோன்றுவது அந் நாட்டின் தொழிலிலும், பண்ட உற்பத்தியிலும் நிகழ்ந்த பெரும் புரட்சியேயாகும். 1880-ஆம் ஆண்டு வரைக்கும்கூட விவசாயம்தான் அமெரிக்காவின் செல்வ உற்பத்தியில் முதலிடம் வகித்து வந்தது. ஆனல், 1890-ஆம் ஆண்டின் உற்பத்திப் புள்ளிகளை நோக்கின் பண்டத் தயாரிப்புத் தொழில்கள் *(Manufacturing industries)* முதலிடத்திற்கு

முன்னேறி விட்டமை புலப்படும். இதற்கடுத்த 10 ஆண்டுகளுக்குள்ளாகவே, அதாவது 1900-க்குள் தொழிலுற்பத்திப் பண்டங்களின் மதிப்பு விவசாய உற்பத்தியின் மதிப்பைப்போல் இருமடங்காகிவிட்டது.[1] இன்றைய நிலையோ பெருவியப்பிற் குரியதாகும். உலகத்தின் மொத்த நிலப்பரப்பிலும், மக்கட் தொகையிலும் 7 சதவீதமே கொண்டதான அமெரிக்க ஐக்கிய நாடு இன்று அகில உலகத்தின் தயாரிப்புப் பண்ட உற்பத்தியில் (*World's manufactured goods*) 50 சதவீதத்தை உற்பத்தி செய்கிறது. உலகத்தின் எல்லாப் பண்டங்கள், சேவைகள் ஆகியவற்றின் மொத்தத்தில் 35 சதவீதத்திற்குமேல் அமெரிக்காவிலேதான் உற்பத்தியாகிறது.[2] அமெரிக்காவின் தொழில் உற்பத்தி வேகம் இவ்வாறு அதிகரித்தமைக்கு அங்கு உள்நாட்டுப் போர் ஏற்படுத்திய சூழ்நிலைகளே காரணம் என்பது ஆராயின் விளங்கும். உள்நாட்டுப் போரினல் விளைந்த தொழிலாளர் பற்ருக்குறையைச் சமாளிப்பதற்கு உழைப்பைக் குறைக்கக்கூடிய எந்திரங்களை அமைப்பது அவசியமாயிற்று. இவ்வகையில் தோற்றுவிக்கப்பட்ட எந்திரங்களின் புத்தமைப்பே முடிவில் அமெரிக்காவைத் தொழில் துறையில் இணையற்றதொரு நிலைக்கும் கொண்டு சென்றது. உள்நாட்டுப் போரை அடுத்த அரை நூற்றுண்டில் நிகழ்ந்த தொழில் நுட்ப வளர்ச்சிகள் மிகவும் பிரமிக்கத்தக்கவை. பழைய மரபுகள், தடை போடும் சமூகச் சம்பிரதாயங்கள் இவற்றுல் கட்டுப்படுத்தப்படாத அமெரிக்கப் பொருளாதாரவாழ்வில் ஒரு புதிய இயக்க சக்தியும், முன்னேற்றப் போக்கும் விரைவில் நிறைந்ததில் வியப்பேதுமில்லை. முதலில் ஆள் குறைவைச் சமாளித்துக்கொள்ளுவதற்காகவே துணைக் கருவிகளிலும், எந்திரங்களிலும் கவனம் செலுத்தப்பட்டது. ஆனல், இப் புத்தமைப்புக்கள் அத்துடன் நின்றுவிடவில்லை. துரிதமாக வளர்ந்துவந்த மக்கட் தொகையின் தேவைகள் மென்மேலும் பெருகவே, எந்திரங்களின் புத்தமைப்புக்கு மேலும் மேலும் தூண்டுதல் கிடைத்தது. இச் சூழ்நிலையில்தான் மிக விரைவானதொரு தொழில் நுண்ணியல் வளர்ச்சி விளைந்தது. இவ் வளர்ச்சிக்கு ஊக்கம் அளிக்கும் வகையில் பெரிய தொழில் நுட்பக் கல்விக்கூடங்கள் பல ஆங்காங்கே நிறுவப்பட்டன. இவ்

1. Faulkner: American Economic History, P. 391
2. Kohsonlas: Key to Economic Progress, p. 15

வகையில் *1864*-இல் ஆரம்பிக்கப்பட்டதான மசாசுசெட்ஸ் தொழில் நுண்ணியல் கழகம் (*Massachusetts Institute of Technology*) பின்னர் உலகப் பிரசித்தி பெற்றது.

### இயற்கை வளங்கள்

அமெரிக்காவின் தொழில் வளர்ச்சி அதை ஆரம்பித்து வைத்தவர்களின் கனவுகளையும் விஞ்சியது. பிரிட்டனைப்போல் அமெரிக்காவுக்குக் காலனிகள் இருக்கவில்லை. ஏகாதிபத்திய உடைமைகளின் மூலம் அபரிமிதமான மூலதனம் கிடைக்கவில்லை. ஆனால், ஒரு புதிய கண்டத்தின் நலங்கள் யாவும் அமெரிக்காவிற்குக் கிட்டின. இயற்கை வளங்களுடன் தொழிலுக்கு வேண்டிய கச்சாப் பொருட்களும் அங்கு ஏராளமாகக் கிடைத்தன. மேலும், அமெரிக்கத் தென் பிரதேசம் முழுமையிலும் காலனி அடிமை மக்களின் உழைப்பு முதலாளித்துவ முறையில் பயன் படுத்தப்பட்டு மிக்க இலாபம் விளைவித்தது. அத்துடன் பிரிட்டிஷ் முதலாளிகள் அமெரிக்காவிற்கு அவசியம் தேவையாயிருந்த மூலதனத்தை அளித்திருந்ததும் பேருதவியாய் அமைந்தது. குறிப்பாக, அமெரிக்காவில் இரயில்வேக்கள் அமைக்கப்படுதற்குப் பிரிட்டிஷ் மூலதனமே மிகவும் உதவியது. இவ்வாறு அமைக்கப்பட்ட இரயில்வேக்களே பின்னர் அமெரிக்காவின் துரிதமான தொழில் வளர்ச்சிக்கு அடிகோலின எனலாம். நிற்க, அமெரிக்காவில் வந்திறங்கிய ஐரோப்பியத் தொழிலாளிகள் அங்கு மலிவான உழைப்பு மிகுதியாகக் கிடைக்கக் காரணமாயினர். வளருகின்ற அமெரிக்கத் தொழில்களுக்குத் தேவையான சந்தையையும் ஐரோப்பாவே அளித்தது எனக் கூறவேண்டும். இத்தகையதோர் அரிய வாய்ப்பு எந்த நாட்டின் தொழில் வளர்ச்சிக்கும் எப்போதுமே இருந்ததில்லை எனலாம். ஏனெனில், அமெரிக்காவில்தான் பல்வகையிலும் சாதகமானதொரு சூழ்நிலை தொழில் வளர்ச்சிக்கு ஏற்பட்டது. இதுவரை உபயோகப்படுத்தப்படாத நிறை வளங்கள் கொண்டதொரு கண்டம், கடின உழைப்பைச் சிந்தும் துணிவுடைய மக்கட்சமூகம், முன்னேற்றத்திற்கு உறுதுணையான குடிபிறக்கத்தினர் கூட்டம், நாடு முழுவதற்கும் பொதுவான ஒரு நாணய முறை, வர்த்தகச் சுதந்திரத்தை உறுதிப்படுத்திய

கூட்டாட்சி ஐக்கிய அரசியல், கூடிச் செயல் புரியும் சுதந்திரம் (*Free Association*), தொழில் துணிவுச் சுதந்திரம் (*Free Enterprise*), சட்ட பூர்வமான உரிமைகள் கொண்டு தனி மனிதர்களைப்போல் இயங்கும் தொழில் கார்ப்பரேசன்களை அமைத்துக்கொள்ளும் சுதந்திரம்—இத்தனையையும் ஈன்றதான ஒரு ஜனநாயக அரசியல் — இவைகளே அமெரிக்கத் தொழில் வளர்ச்சியை உருவாக்கிய உன்னத சாதனங்களாகும். தொழில் வளர்ச்சியை அடைதற்கு மற்ற நாடுகள் அனுபவித்த சங்கடங்கள், துன்பங்களில் ஒரு சிறிதே அனுபவித்து, அமெரிக்கா உலகின் முதன்மையான தொழில் நாடாக ஆகிவிட்டது என்பது பெருவியப்பிற்குரியது ஆகும்.[1]

## உள்நாட்டுப் போரும் பண வீக்கமும்

அமெரிக்க உள்நாட்டுப் போரும், அது தொட்டு ஆரம்பித்த விலை ஏற்றப் போக்கும் அந்நாட்டின் தொழிற் புரட்சிக்குப் பெரும் தூண்டுதல் அளித்தன எனலாம். ஆயினும், அமெரிக்காவின் தொழில் முன்னேற்றத்திற்கு அடிப்படையாயிருந்த காரணம் அந்நாட்டின் இணையற்ற இயற்கை வளங்களேயாம் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். கால்நடை வளம், பருத்திப் பயிர் வளம் முதலிய விவசாய வளங்கள்தாம் அமெரிக்காவின் மிக முக்கியமான தயாரிப்புத் தொழில்களுக்கெல்லாம் அடிப்படையாயிருந்தன. அத்துடன் கனிப் பொருட்களாகிய இரும்பு, நிலக்கரி, எண்ணெய், செம்பு போன்ற பலவும் பெரும் அளவில் அமெரிக்காவில் கிடைத்தன. வெகு விரைவாய் அதிகரித்த மக்கட் தொகையும், தொடர்ந்து விரிந்து கொண்டிருந்த உள்நாட்டுச் சந்தையும் தொழில் வளர்ச்சிக்குத் தக்க ஆதரவாக அமைந்தன. இதனால் தக்க அளவில் தொழிலாளிகள் கிடைத்ததுடன், தயாரித்த பண்டங்களுக்கும் நிச்சயமான சந்தை கிட்டியது.

## சுங்கவரிக் கொள்கை

அமெரிக்காவின் தொழிற் புரட்சியை விளைவித்ததில் அந்நாட்டின் சுங்கவரிக் கொள்கையும் (*Tariff Policy*), தொழில்

1. Chester Bowles : New Dimensions of Peace, p. 229-230

காப்புக் கொள்கையும் (*Protection*) பெரும் பங்கு வகித்தன. நாட்டின் இரு முக்கிய அரசியல் கட்சிகளாகிய ஜனநாயகக் கட்சி, குடியரசுக் கட்சி இரண்டுமே சுங்கவரி விதிப்புக்களை ஆதரித்தன. இதன் பயனாக உள்நாட்டுப் போருக்குப் பின் இவ் வரி விதிப்புக்கள் நன்கு முறைப்படுத்தப்பட்டுவிட்டன. இவ் வரி முறைகளினால் நாட்டின் பழந் தொழில்கள் பல பாதுகாப்பைப் பெற்றதுடன் புதிய தொழில்களும் ஆக்கம் பெற்றன. உள்நாட்டுப் போருக்குப் பின், இவ் வரி முறையில் பல மாற்றங்கள் செய்யப்பட்டன. இதன் விளைவாகத் தொழில் துறையினருக்கு உறுதியானதோர் உள்நாட்டுச் சந்தை கிடைத்தது. உயர் சுங்கச் சுவர் ஒன்று எழுப்பப்பட்டதன் காரணமாக உள்நாட்டுச் சந்தை வெளிப்போட்டியினின்று நன்கு பாதுகாக்கப்பட்டிருந்தது. 1882-இல் சுங்கவரிக் குழு ஒன்று (*Tariff Commission*) நியமிக்கப்பட்டதிலிருந்து இச்சுங்கச்சுவரின் நிர்மாணம் வரித்துறை வல்லுநர்கள், விஞ்ஞானிகளின் கைகளுக்கு மாறியது எனலாம். இவ் வரி முறையின் விளைவாக அமெரிக்கத் தொழிலாளர்களுக்கெல்லாம் பெருவாரி வேலைவாய்ப்பு ஏற்பட்டதுடன், அமெரிக்க நாட்டின் வளங்களும் பூரண அளவில் பயன்படுத்தப்படலாயின.

ஆனால் இதே வரிச் சுவரின் பாதுகாப்பில்தான் பிரம்மாண்டமான தொழிற்சர்வாதீனங்களும் (*Giant monopolies*) வல்லமை மிக்க டிரஸ்டுகளும் (*Powerful Trusts*), மற்றும் தொழிற் தொகுப்புக்களும் (*Combinations*) வளர்ந்து அதனால் நாணயமற்ற தொழில் முறைகளும், வாங்கும் மக்களுக்குப் பாதகமான கூட்டு நடவடிக்கைகளும் வெகுவாகப் பரவலாயின. இவ்வாறு தீவிரமான பொருளாதார நாட்டுணர்ச்சிக்கும் (*Intense economic nationalism*), பொருளாதார ஆதிபத்தியத்திற்கும் (*Economic Imperialism*) அமெரிக்க ஐக்கிய நாடுதான் உலகத்தின் வழி காட்டியாயிற்று எனவேண்டும். மற்றப் பேரரசுகள் யாவும் அமெரிக்காவைப் பார்த்துத்தான் இவைகளைக் கற்றுக்கொள்ள ஆரம்பித்தன. அமெரிக்காவில் இக்காலத்தில் ஏற்பட்ட தொழில் ஏற்ற இறக்கங்களுக்கும்கூட (*Business fluctuations*) இவ்வுயர் சுங்கவரிக் கொள்கையின் அடிப்படையில் செயற்கையில் நிறுவப்பட்டதான மாறா விலைத் திட்டமே (*Rigid*

*price structure)* ஓரளவு காரணமாகுமென்று பல பொருளாதார வல்லுநர்கள் கருதுவாராயினர். ஆகவே, இயற்கையான விலைக் கருவியின் நடப்புக்கு இன்றியமையாதனவாகிய இணக்கப் பண்பையும், நெகிழ்ச்சித் தன்மையையும் இவ்வுயர் சுங்கவரிக் கொள்கைதான் அழித்துவிட்டது என்று கூறுதல் பொருந்தும்.

## போக்குவரத்தும் தொடர்பு வசதிகளும்

அமெரிக்கத் தொழிற் புரட்சிக்குத் துணை புரிந்தவைகளுள் போக்குவரத்து வசதிகளின் வளர்ச்சி—அதாவது சாலைகள், கால்வாய்கள், இரயில்வேக்கள் முதலியவற்றின் வளர்ச்சி—மிக முக்கியமானதாகும். உள்நாட்டுப் போருக்கு முன்னர் நீர்ப் போக்குவரத்துக்கேற்ற பல ஆறுகளும், ஏரிகளும் இருந்தன. மேலும், பற்பல சிறு சாலைகளும்கூட இருந்தன. ஆயினும், அப் போருக்குப் பின்னரே அங்கு இரயில்வேக்கள் தோன்றின. போரின்போது ஏற்பட்ட அனுபவத்தின் காரணமாக, அதன் பின்னர் இரயில்வேக்களின் அமைப்பு மிகவும் விரைவில் நிகழ்ந்தது எனலாம். இதனால் உலகத்திலேயே மிகவும் பரந்ததானதோர் இரயில்வே அமைப்பு அமெரிக்காவில் தோன்றலாயிற்று. பழைய கால்வாய்கள் சிலவற்றின் விஸ்தரிப்பினாலும், மோட்டார் வண்டிகளின் தோற்றத்தால் நேர்ந்த புதிய சாலை அமைப்பு இயக்கத்தினாலும், போக்குவரத்து வசதிகள் மேலும் பெருகின. தொழிற் புரட்சியின் போக்கில் அமெரிக்க மக்களின் வாங்கும் சக்தி அதிகரித்தமையால் பல்வேறு தயாரிப்புத் தொழில்களும் ஊக்கம் பெற்றன. ஆகவே, இத்தொழில்களிலெல்லாம் மேலும் மேலும் பல நவீனங்கள் ஏற்பட்டவண்ணமிருந்தன. இவ்வகையில் தூண்டுதல் அடைந்த தொழில்கள் பல. போக்குவரத்து சாதனங்கள், தொலைபேசி, தந்தி, ரேடியோக் கருவிகள், ஒளிக் கருவிகள், குடும்ப சாதனங்கள், சைகிள்கள், மோட்டார் வண்டிகள், வான ஊர்திகள் போன்றவைகளின் உற்பத்தி இவற்றுள் முக்கியமானவையாகும்.

## விஞ்ஞானமும் நுண்ணியலும்

தொழில் துறையில் விஞ்ஞானம், நுண்ணியல் முதலியவற்றின் பிரயோகங்களும், தொழிலாளர் திறங்கள்

பற்றிய ஆராய்ச்சிகளும், உற்பத்திச் செலவுக் கணக்கீடு ஆராய்ச்சிகளும் (*Researches in Labour efficiency and Cost Accounting*), விஞ்ஞான முறையிலான தொழில் ஆட்சியும், தொழில் நிர்வாகமும் இன்னோரன்ன புதுமைகள் அமெரிக்கத் தொழில் புரட்சிக்குப் பெரும் உதவி புரிந்தன என்று கூறுதல் வேண்டும். ஆயினும், அமெரிக்க ஐக்கிய நாட்டின் பிரம்மாண்ட தொழில் சாம்ராஜ்யத்தை நிறுவுவதில் அந்த நாட்டின் தொழில் துணிவோர்கள் வகித்த பங்கைக் கூறுது விடின் குறையாகும். இவ்வகையில் மிகவும் குறிப்பிடவேண்டியவர்கள் எஃகு உற்பத்தித்துறையில் கார்னேஜியும் (*Carnegie*), இறைச்சித் தயாரிப்புத் துறையில் ஆர்மர் என்பாரும் (*Armour*), எண்ணெய் சுத்திகரிப்புத் துறையில் ராக்பெல்லரும், நிதித்துறையில் மார்கன் என்பாரும் (*Morgan*) ஆவர். இவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தொழில் தொகுப்புத் திறன் கொண்டோ நிதி ஆட்சித் திறன் கொண்டோ அல்லது விற்பனைத் திறன் மூலமாகவோ பெருந் தொழில்களை ஏற்படுத்தியவராவர். இத்தகைய பெருந் தொழில்கள் தோன்றியமையால்தாம் உற்பத்திச் செலவு வெகுவாகக் குறைக்கப்படமுடிந்ததுடன், புதிய சந்தைகளை வளர்த்துக்கொள்ளவும் முடிந்தது. மேலும், இவற்ருல் தொழில் வளர்ச்சிக்கும் பெரும் ஊக்கம் கிடைத்தது. ஆயினும், பெருவாரியினரான சிறு தயாரிப்புக்காரர்களே ஆதியில் தொழில் துணிவைக் காட்டியவரும், தொழிலை வளர்த்தவருமாவர். இவர்கள் யாவரும் தொழில் ஆட்சித் திறனேடுகூடப் பொறியியல் துறையிலோ, புத்தமைப்புத் துறையிலோ அல்லது விஞ்ஞானத் துறையிலோ திறனுடையவராகவும் இருந்தார்கள் ஆதலால் அமெரிக்கத் தொழில் வளர்ச்சிக்கு இவர்களே வித்திட்டவராவர்.

### முக்கியத் தொழில்கள்

19-ஆம் நூற்ருண்டின் இறுதியிலேயே அமெரிக்க ஐக்கிய நாடு தொழிலிலும், பண்டத் தயாரிப்பிலும் இணையற்றதொரு நிலையை அடைந்துவிட்டது. அது முதற்கொண்டு அமெரிக்கா தன்னிகரற்றதொரு தொழில்வள நாடாகத் திகழ்ந்து வந்திருக்கிறது. 1900-ஆம் ஆண்டு வரை அமெரிக்கத்

தொழிலுற்பத்தியில் முக்கிய தயாரிப்புக்கள் பருத்தி, பட்டு, சுட்ட நிலக்கரி (Coke), எஃகு, காகிதம், இரயில்வே தளவாடங்கள், வெடி மருந்துகள் முதலியனவாக இருந்தன. ஆனால், அதற்குப் பின்னர் மோட்டார் வண்டிகள் உற்பத்தி, பெட்ரோல் எண்ணெய் சுத்திகரிப்பு, இரசாயனப் பொருட்கள், ரேடியோ, டெலிவிசன், மின்சாரம், அச்சடித்தல், அணுசக்தி முதலிய துறைகளில் மிகப் பெரிய முன்னேற்றம் நிகழ்ந்துள்ளது என்று கூறவேண்டும். இங்கிலாந்துடன் ஒப்பிட்டுக் கூறும்போது 19-ஆம் நூற்றூண்டின் இறுதியிலேயே தொழில் முன்னேற்றத்தில் அமெரிக்கா இங்கிலாந்தை விஞ்சிவிட்டது என்று சொல்லலாம். முதலாவது உலகப்போரின் ஆரம்பத்திலிருந்து அமெரிக்காவின் இம் முன்னேற்றம் மேலும் துரிதமாகியது.

## பருத்தி, ஆட்டு உரோமத் துணித் தொழில்கள்

அமெரிக்காவில் ஆரம்பத்திலேயே நிறுவப்பட்ட தொழில்கள் பருத்தித் துணி, ஆட்டு உரோமத் துணி சம்பந்தமானவையே யாகும். உள்நாட்டுப் போர்க்காலத்தில் இப் பருத்தித் தொழில் மிகவும் பாதிக்கப்பட்டது. ஆயினும், 1880-க்குள்ளாகவே இத் தொழில் மீண்டும் நன்னிலை எய்திவிட்டது. அதுபோது உலகத்தின் மொத்தப் பருத்தித் துணித் தயாரிப்பில் 25 சதவீதத்தை அமெரிக்காவே உற்பத்தி செய்தது என்பது குறிப்பிடத் தக்கது. ஆனால், பின்னர் இந் நிலைமை மாறிவிட்டது. முதலில் இந்தியாவிலும், பின்னர் ஜப்பானிலும் வளர்ந்தெழுந்த பருத்தித் தயாரிப்புத் தொழில், அமெரிக்கப் பருத்தித் தொழிலை மிகவும் பாதித்தது. இதன் விளைவாகவே, பருத்தித் தொழில் இன்னும் அமெரிக்காவின் முதன்மையான தொழிலாயிருந்த தாயினும், அத்தொழிலின் மொத்த உற்பத்தியில் 5 சதவீதமே இனி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகியது. உரோமத் துணித் தொழிலிலும் மாபெரும் முன்னேற்றம் ஏற்பட்டது என்று கூறவேண்டும். 19-ஆம் நூற்றூண்டின் இறுதி இருபது ஆண்டுக் காலத்தில் இத்தொழிலின் உற்பத்தி இருமடங்காகியது என்பதிலிருந்து இதன் வளர்ச்சி நன்கு புலப்படும்.

## இரும்பு, எஃகுத் தொழில்

19-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் இரும்பு, எஃகுத் தொழிலில் நேர்ந்த வளர்ச்சி வியக்கத்தக்கதாகும். 1865-க்குப் பின் அமெரிக்காவில் வில்லியம் கெல்லி என்ற இரும்புத் துறை நிபுணர் இங்கிலாந்தில் கடைப்பிடிக்கப்பட்டு வந்த பெசிமர் எஃகுத் தயாரிப்பு முறையுடன், அமெரிக்க உள்நாட்டு முறை ஒன்றையும் இணைத்துப் புதியதொரு முறையைப் புகுத்திப் பெரு முன்னேற்றம் விளைவித்தார். மேலும், பேரெஃகு மன்னனுகிய ஆன்ரூ கார்னேஜி என்பவரின் தலைமையில் எஃகுத் தொழில் புரட்சிகரமானதொரு மாற்றத்தை அடைந்தது.

1873-இல் கார்னேஜியும் அவருடைய தொழில் கூட்டாளி-களும் பிட்ஸ்பர்க் என்னுமிடத்தில் எஃகுத் தொழிற்சாலைகளை அமைத்தனர். சூபிரியர் ஏரிப் பிரதேசத்திலுள்ள இரும்புத் தாதுக்கள் இவ்வாறு பயன்படுத்தப்படலாயின. இவ்வகையில் பிட்ஸ்பர்க், டெட்ராயிட், கேரி (*Gary*), ஈரி (*Erie*), சிகாகோ, கிளீவ்லாந்து முதலியவை விரைவில் பிரபலமடைந்ததுடன், அங்கே தொழிலும் வாழ்க்கையும் பெருகின. 1892-இல் 'கார்னேஜி எஃகுக் கம்பெனி' நிறுவப்பட்டது. இக் கம்பெனி சிறந்த பொறிகளையும், தளவாடங்களையும் பயன்படுத்தியதுடன் திறந்த அடுப்பு முறை (*Open hearth process*) கொண்டு எஃகு தயார் செய்தது. 1900-இல் அமெரிக்க ஐக்கிய நாட்டில் மொத்தம் உற்பத்தியாகிய 10 மில்லியன் டன் எஃகில் கார்னேஜி கம்பெனி மட்டுமே 4 மில்லியன் டன்களை உற்பத்தி செய்தது என்றால், இதிலிருந்து அக் கம்பெனியின் முக்கியத்துவம் நன்கு விளங்கும். இங்கிலாந்தின் அப்போதைய எஃகு உற்பத்தி மொத்தத்திற்குச் சமமானதொரு அளவை, அதாவது 4 மில்லியன் டன்களை, அமெரிக்காவின் கார்னேஜி கம்பெனி ஒன்றே உற்பத்தி செய்தது என்றால், அக் கம்பெனியின் சிறப்பு சொல்லாமலே விளங்கும். மெசபிரேஞ்ச் பிரதேசத்தின் இரும்புக் கனிகளை வெட்டி எடுக்க ஆரம்பித்ததன்பின் ஒகியோ, இல்லினய், இந்தியானு, மிசிகன் முதலியவிடங்களில் இரும்பு, எஃகு உற்பத்தி பிரம்மாண்டமான அளவுக்கு வளர்ச்சி யடைந்துவிட்டது. 1890-க்குள் அமெரிக்க ஐக்கிய நாடு இரும்பு, எஃகு உற்பத்தியில்

உலகத்திலேயே முதன்மையான நாடாகிவிட்டது. கார்னேஜியின் நிறுவனத்தைப் பின்னர் வாங்கிக்கொண்ட பி. மார்கன் என்னும் தொழிலதிபர், மற்றும் ஒன்பது பெரிய கார்ப்பரேசன்களையும் வாங்கிக்கொண்டு, 1901-இல் பிரம்மாண்டமானதோர் ஐக்கிய நாட்டு எ∴கு கார்ப்பரேசன் நிறுவனத்தைத் தோற்றுவித்தார்.

20-ஆம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் தோன்றிய மோட்டார் வண்டிகளின் உற்பத்தித்தொழிலும், வானளாவிய கட்டடங்களின் அமைப்பும் இரும்பு, எ∴குத் தொழிலுக்குப் பெரியதோர் ஊக்கமளித்தது. அத்துடன் பல புதுமையான முறைகளும் இரும்பு, எ∴கு உற்பத்தியில் கையாளப்பட்டு முன்னேற்றம் காணப்பட்டது. அவற்றுள் மின்சார அடுப்பும், தொடர்ந்து இரும்புத் துண்டுகளைத் தயாரிக்கக்கூடிய பொறி அமைப்பும் முக்கியமானவையாகும். இவற்றின் பயனுக 1946-இல் அமெரிக்க ஐக்கிய நாடு உலகத்தின் இரும்பு, எ∴கு உற்பத்தியில் அரைப் பங்கையும், பிரிட்டனின் உற்பத்தியைப்போல் இரு மடங்கையும் உற்பத்தி செய்து, இத் துறையில் உலகம் வியக்கும் ஓர் உச்சநிலையை அடைந்தது.

**உணவுப் பண்டத் தொழில்கள்**

அமெரிக்க ஐக்கிய நாட்டில் வளர்ந்து வந்த அடிப்படைத் தொழில்களில் உணவுப் பண்டத் தயாரிப்பும் ஒன்றுகும். இறைச்சி தயாரிப்புத் தொழில், ரொட்டி தயாரிப்புத் தொழில் இவ்விரண்டும் அமெரிக்காவின் எட்டு முதன்மையான தொழில்களுக்குள் இடம்பெறுமளவிற்கு வளர்ந்திருந்தன. உள்நாட்டுப் போருக்கு முன்பெல்லாம் இறைச்சி தயாரிப்பு, உணவைப் பக்குவம் செய்தல், தானியமரைத்தல் இவைகள் வீட்டிலேயே நடக்கும் இல்லத் தொழில்களாகவே இருந்தன. ஆனல், பிற்காலத்தில் வீட்டுப் பணியாட்கள் அரிதாகிவிட்டமையாலும், வாழ்க்கை வரவர நகரப் பாங்கில் சென்றமையாலும், பெண்கள் தொழிலையும் உத்தியோகங்களையும் நாடி வெளியில் புறப்பட்டமையாலும் உணவுப் பண்டங்களின் தயாரிப்பும் பக்குவமும் பெரிய தொழிற்சாலைத் தயாரிப்புக்களாக மாறின. இன்று அமெரிக்காவின் ஆண்டு வருமானத்தில் ஏறத்தாழ

10 மில்லியன் டாலர்கள் (ரூ. 4·760 கோடிகள்) அந்நாட்டின் உணவுத் தயாரிப்புத் தொழில்களிலிருந்தே பெறப்படுகிறது என்றால் இத்தொழிலின் விரிவு நன்கு விளங்கும். உற்பத்தியின் பெறுமானத்தைப் பொறுத்தவரை, இறைச்சிப் பொட்டலம் பண்ணும் தொழில்தான் கடந்த 50 ஆண்டுகளாக உணவுத் தொழில்களிலேயே முதன்மையான தொழிலாக இருந்து வந்திருக்கிறது. மிருகங்களிலிருந்து இறைச்சி தயாரிப்பதோடு கூடப் பக்க தயாரிப்புக்கள் பலவும் இலாபகரமான வகையில் விருத்தி செய்யப்பட்டிருக்கின்றன. மிருகத்திலிருந்து கிடைக்கக் கூடிய விளைவு எதுவும் வீணாக்கப்படுவதில்லை. இறைச்சியே யன்றி நிலத்திற்கான உர வகைகளும், தோல் வகைகளும், பசை வகைகளும் (*Glue*), உரோமமும் மற்றும் பலவும் மிருகங்களி லிருந்து தயாரிக்கப்படுகின்றன. பானங்கள் தயாரிப்பு, ரொட்டி தயாரிப்பு, இறைச்சிப் பண்டங்கள் தயாரிப்பு, டப்பிகளில் உணவுப் பண்டங்களை அடைத்தல், உணவுப் பண்டங்களை ஊறுகாய் இடல், அவற்றைக் குளிரவைத்துப் பக்குவப்படுத்தல், மிட்டாய் வகைகள் தயாரித்தல், பனிப்பாலாடை தயாரித்தல் (*Ice cream*), பால்பண்டங்கள் உற்பத்தி செய்தல் முதலியவைகள் அமெரிக்காவின் மிக முக்கிய உணவுத்துறைத் தொழில்களாகும்.

### எரிபொருள் உற்பத்தி

தொழில் வளர்ச்சித் துறையில் நேர்ந்த மற்றொரு முக்கிய அபிவிருத்தியாவது தொழிலுக்கு வேண்டிய சக்தி, எரிபொருள் (*Power and industrial fuel*) ஆகியவற்றில் ஏற்பட்ட முன்னேற்ற மாகும். இந்த நூற்றாண்டின் தொடக்கம்வரை அமெரிக்காவின் தொழிலுக்கான சக்தி யாவும் பிரதானமாக நிலக்கரியிலிருந்தே பெறப்பட்டது. நாட்டின் சக்தி உற்பத்தி மொத்தத்தில் கிட்டத்தட்ட 91·5 சதவீதம்வரை நிலக்கரியிலிருந்தே பெறப்பட்டது. ஆனால், இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப முதலே எண்ணெய், மின்சக்தி இவ்விரண்டின் முக்கியத்துவமும் அதிகரித்தது. பெட்ரோல் எண்ணெய்த் தொழில் 1865-இலேயே ஆரம்பிக்கப்பட்டிருந்தது. அவ்வாண்டில்தான் ஜே. டி. ராக்பெல்லர் என்பார் கிளீவ்லாந்து என்னுமிடத்தில் தம் முதல் பெட்ரோல் கம்பெனியை நிறுவினர். ஆனால், 1910-க்குப்

பின்னரே இத் தொழிலில் விரைவான முன்னேற்றம் நிகழ்ந்தது. இதற்குக் காரணம் புதிதாக எழுந்த மோட்டார் வண்டித் தொழிலேயாகும். இன்று உலகத்தில் உற்பத்தியாகும் கச்சாப் பெட்ரோலியத்தில் 50 சதவீதத்துக்குமேல் அமெரிக்க ஐக்கிய நாட்டிலேயே உற்பத்தியாகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

## நீர் மின்சக்தி உற்பத்தித் தொழில்

டைனமோவை எடிசன் பயன்படுத்தியதுதான் நீர் மின்சக்தி உற்பத்திக்கு ஆரம்பமாகும். 1815-இல் அமெரிக்காவின் நயகரா நீர்வீழ்ச்சிகளில் பெருவாரி அளவில் நீர் மின்சக்தி உற்பத்தி துவங்கியது. பின்னர், டென்னசி நதி தீர அணைத் திட்டம், கொலம்பியாவின் கிர்ராண்டு கௌலி திட்டம், மற்றும் பூர்விஸ் அணைகள், அரிசோனுவின் ரூஸ்வெல்ட் அணை, கூலிட்ஜ் அணை, நெப்ராஸ்காவின் கிங்ஸ்லே அணை, வியோமிங் பிரதேச சோஷோன் அணை முதலிய பிரம்மாண்டமான நதி தீரத் திட்டங்களின் அமைப்பால் மின்சக்தி உற்பத்தி பேரளவுக்கு அதிகரித்தது. இதன் பயனுக உலகத்தின் மின்சக்தி உற்பத்தியில் கால் பகுதிக்குமேல் ஐக்கிய நாட்டிலேயே கிடைக்கின்ற நிலை ஏற்பட்டது.

மேற்கூறிய மின்சக்தித் துறைக்கு அவசியமான மின்சாரத் தளவாடங்களையெல்லாம் தயாரிக்கத் தேவைப்படும் செம்பு, ஈயம், அலுமினியம், துத்தநாகம், தகரம் முதலியவற்றின் உற்பத்தியும் இதனுல் பேரளவு முன்னேறியது. தந்தியும், தொலைபேசியும் 19-ஆம் நூற்றுண்டிலேயே விருத்தி செய்யப் பட்டுவிட்டனவாயினும், இந்த நூற்றுண்டில்தான் அத்துறையில் மிகவும் துரிதமான முன்னேற்றங்கள் நிகழ்ந்தன. மின்சார இரயில்வேக்களும், ரேடியோ, மற்றும் வீட்டுக்கான மின்சாரக் கருவிகள் உற்பத்தியும் மின்சாரத்துறைத் தொழில்களுக் கெல்லாம் மேலும் ஊக்கமளித்தன.

## மோட்டார் வண்டி உற்பத்தித் தொழில்

இந்த நூற்றுண்டின் மிகவும் வியக்கத்தக்க அபிவிருத்தி மோட்டார் வண்டி உற்பத்தித் தொழிலின் முன்னேற்றமேயாகும்.

1903-ஆம் ஆண்டுவரை இத் தொழிலின் நிலைமை ஐயப்பாடான தொன்ருகவே இருந்தது. ஆனல், 1913-இல் ஹென்றிபோர்டு என்பார் முதன் முதலாகத் தோற்றுவித்த மோட்டார் வண்டிகளின் அமைப்புக் கோட்டம் (*Assembly line*) இத் தொழிலில் ஒரு மாபெரும் புரட்சியை உண்டு பண்ணிற்று. பின்னர், ஹென்றிபோர்டின் தொழிற்சாலையில் இதே போன்ற பற்பல அமைப்புக் கோட்டங்கள் எழுப்பப்பட்டுவிட்டன. இக்கோட்டங்கள் யாவும் பிரம்மாண்டமான நகருகின்றதொரு சுமைதாங்கிப்பட்டை (*Mass conveyor platform*) அருகில் இருக்கும் வகையில் அமைக்கப்பட்டிருந்தன. இது ஒரு நவீன உற்பத்தி முறையாகும். மோட்டார் வண்டியின் மூலக்கூட்டை (*Chassis*) சுமந்து வரும் இச்சுழல்பட்டை (*Belt*) நிமிடத்திற்கு ஒன்று வீதம் அவற்றைக் கொண்டுவரக் கூடியதாகும். இப்படி வரும் கார்க்கூடு குறிப்பிட்ட கட்டத்தை அடையும் சரியான நேரத்திற்கு, மேலிருந்து கொக்கிகள் மூலம் காரின் முன்புறம் அமையவேண்டிய சட்டங்களும், காரின் சக்கரங்களும், மற்றப் பல பாகங்களும் குறித்தபடி சரியாக வந்திறங்குகின்றன. அடுத்த படியில் ஆலை மேல்தளத்திலுள்ள துவாரம் ஒன்றின் வழியாகக் காருக்கு வேண்டிய குறிப்பிட்ட நிறங்கொண்ட மேற்கூரை (*Hood*) குறிப்பிட்ட நேரத்தில் இறங்குகிறது. இது முடிந்த உடனேயே காரைப் பரீட்சைத் திடலுக்கு ஓட்டிச் செல்வதற்கு ஆட்கள் வரிசை ஒன்று தயாராக இருக்கிறது. இவ்வாறு இம் மோட்டார் வண்டித் தொழிற்சாலையில் சக்திப் பயனும், சிக்கனமும், ஒழுங்கும், வரிசைப்பாடும், தொடர்புப் பாடும், துரிதமும், மீட்டுச் செயலும் மிகத் திறமையான முறையில் கையாளப்படுவது குறிப்பிடத்தக்கது. இதனல், காரின் உற்பத்திச் செலவை வெகுவாகக் குறைக்க முடிந்தது. கார் ஒன்றுக்கு 950 டாலர்களாக இருந்த இவ்வுற்பத்திச் செலவு பின்னர் 290 டாலர்களாகக் குறைந்தது மிகவும் குறிப்பிடத் தக்கது. அத்துடன் கார்களின் உற்பத்தி எண்ணிக்கையும் ஆண்டு ஒன்றுக்கு 6 மில்லியன்களாக உயர்ந்தது வியக்கத்தக்கது. இன்று உலகத்தில் உற்பத்தியாகும் மோட்டார் வண்டிகளில் 70 சதவீதம் அமெரிக்க ஐக்கிய நாட்டிலேயே தயாராகிறது. மேற்கூறப்பட்ட தொழில்களைத் தவிர இராசயனத் தொழிலும்,

சிமென்ட் தொழிலுங்கூட மிகவும் குறிப்பிடத்தக்க அளவுக்கு வளர்ந்துள்ளன. அண்மைக் காலத்தில் அணுசக்தித் தொழில் பெரு முக்கியத்துவம் அடைந்து வருகிறது.

### அமெரிக்கத் தொழில்களின் சிறப்பு அம்சங்கள்

அமெரிக்கப் பண்டத் தயாரிப்பு முறையில் சில தனி அம்சங்களைக் காணலாம். அங்குத் தொழிலாளர் பற்றுக்குறையின் காரணமாகத் தயாரிப்புத் தொழில்களில் எல்லாம் உழைப்பைக் குறைக்கும் பல்வேறு எந்திரங்களும், கருவிகளும் பயன்படுத்தப்படுவதாயின. மேலும், பெருவாரி உற்பத்தி முறைகளையே கடைப்பிடித்தமையால், தயாரிக்கப்படும் பண்டங்களில் சிங்காரமும், மென்மையும், அழகும் இல்லாமற் போயின. அமெரிக்க நுகர்ச்சிப் பண்டங்கள் அழகிலும் கலைப் பாங்கிலும் குறைந்தே காணப்பட்டன. எனினும், இதன் பயனாக அமெரிக்க முதற்கருவிப் பொருள்களும், எந்திரத் தளவாடங்களும் வெகுவாக விருத்தியடைந்தன என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். ஆள் பற்றுக்குறையின் காரணமாக, எந்திரங்களும் அவற்றின் பாகங்களும் ஒருதரப்படுத்தப்பட்டு உற்பத்தி செய்யப்படுவது இன்றியமையாததாயிற்று. இவ்வாறு உழைப்பைக் குறைக்கும் எந்திரங்களைப் புகுத்த உற்பத்தியாளர்கள் விரும்பியதாலேயே பலவகையான சக்திகளையும் — நீர், நீராவி, மின்சாரம், அணுசக்தி — பயன்படுத்த வேண்டியதாயிற்று.

தொழிற்றுறை முன்னேற்றத்திற்குத் தடையாக அமெரிக்காவில் சம்பிரதாயப் பழக்க வழக்கங்கள் எவையும் இருக்கவில்லை. குறிப்பாக இடைக்காலத்தில் மற்ற நாடுகளில் நிலவிய தொழிற்கட்டுக் குழுக்களும், கூட்டவைகளும் (*Guilds or corporations*) அமெரிக்காவில் இருக்கவில்லையாதலால், அவற்றால் ஏற்படக்கூடிய தடங்கல்கள் எவையும் இங்கு இல்லாதிருந்தன. ஆகவே, தொழில்களின் வளர்ச்சிக்கு அமெரிக்காவில் பெருஞ் சுயேச்சை இருந்தது என்பதை அறியவேண்டும். இதனால் மக்களின் புத்தாக்கங்களுக்கும், அவர்கள் கண்டுபிடிக்கும் புதுமைகளுக்கும் உரிமைக் காப்புக்கள் (*Patents*) அமெரிக்காவில்

தாராளமாக வழங்கப்பட்டுவந்தன. இச்சலுகைகளின் கவர்ச்சி புதிய முறைகளைக் கண்டுபிடிக்கவும், புதுமைகளை ஏற்படுத்தவும் மக்களைத் தூண்டிற்று. இவற்றின் விளைவாக ஏற்பட்ட பெருவாரி உற்பத்தியும், வாங்கும் சக்தி உயர்வும், உற்பத்திச் செலவுக் குறைப்பும், மித இலாபங்களும், போட்டித் திறன் உயர்வும், ஏற்றமான கூலிகளும், குறைவான வேலை நேரங்களும், மேலும் இவற்றால் சாத்தியமாகியதோர் உயர்வான வாழ்க்கைத் தரமும் அமெரிக்கப் பொருளாதார வாழ்க்கையின் அதி முக்கிய அம்சங்களாகிவிட்டன.

அமெரிக்காவின் இத்தொழில் முன்னேற்றங் குறித்து மோர்ரெந்தர் என்பார் வெளியிட்டுள்ள கருத்து எண்ணி மகிழ்தற்குரியது: 'விஞ்ஞானமும் நுண்ணியலும் பொருளாதாரப் பெருக்கத்தை நாம் சுலபமாக அடைதற்கான கருவிகளை இறுதியாக நமக்கு அளித்துள்ளன. நாம் இனிப் பற்றாக்குறையைப் பகிர்ந்துகொள்வதற்கான போராட்டத்தில் ஈடுபடவேண்டிய அவசியமில்லை. அத்துடன் புதிய பொறிகளையும், புத்தாக்கங்களையும் எதிர்த்து நாம் இனிப் போராட வேண்டியிருக்காது என்றும் நம்பிக்கை பெற்றுள்ளோம். மாறாக, எங்கும் மனித குலத்திற்கு ஆரோக்கிய வாழ்வையும், மகிழ்வையும், பாதுகாப்பையும், ஓய்வையும், அமைதியையும், சுயேச்சையையும் அளிப்பதற்கு இனி இக் கருவிகளையும் பொறிகளையும் நாம் பயன்படுத்துவோம்' என்பது அன்னாரின் கூற்று.[1] உள்நாட்டுப் போருக்குப் பின்னர் இத்தகைய தொழில் முதன்மையை அமெரிக்கா அடைதற்கு உதவியாயிருந்த சூழ்நிலைகளை இனி நோக்குவோம். அமெரிக்கத் தொழில் வளர்ச்சிக்குச் சாதகமாக எல்லா வகையான மூலப் பொருட்களும், கனிவளங்களும் அங்கு ஏராளமாகக் கிடைத்தன. இயற்கை வசதிகள் கணக்கற்றவையாயிருந்ததுடன் எந்திரங்களின் புத்தமைப்பும், தொழில் நுண்ணியல் புரட்சிகளும், விஞ்ஞானத் துறை முன்னேற்றமும் பொருளாதாரப் பெருக்கத்திற்கு மிகவும் தூண்டுதலளித்தன. தொடர்ந்து வளர்ந்து கொண்டிருந்த மக்கள் தொகையும், உயர்ந்துகொண்டிருந்த வாழ்க்கைத் தரமும் நாட்டின் தொழில்களுக்கும், பண்டத் தயாரிப்புகளுக்கும் ஒரு

1. Konsonlas: Key to Economic Progress, p. 20

வளர் சந்தையை அளித்தன. மேலும் மேலும் விரிவடைந்து வந்த போக்குவரத்து வசதிகளும்—சாலைகள், கால்வாய்கள், இரயில்வேக்கள், கப்பல்கள் முதலியவற்றின் வளர்ச்சி, தொடர்பு வசதிகளாகிய தபால், தந்தி, தொலைபேசி முதலியவற்றின் முன்னேற்றமும் அமெரிக்கத் தொழிற்புரட்சிக்குப் பேரளவு ஊக்கமளித்தன. இன்னும், நாட்டின் புறத்தே எழுப்பப்பட்டிருந்த பாதுகாப்புச் சுங்கவரிச் சுவரும், உள்நாட்டு இராச்சியங்களுக்கிடையேயிருந்த வர்த்தகச் சுயேச்சையும், நாட்டின் நாணய முறை, செலாவணி முறை, பாங்கு முறை முதலியவற்றின் ஒருமைப்பாடும் வளர்ச்சியும், அமெரிக்கத் தொழில் வளர்ச்சிக்குப் பெருந் துணையாயிருந்தன. எல்லாவற்றிற்கும் மேலாக, மக்களாட்சி அடிப்படையில் அமைந்த அந் நாட்டின் சுயேச்சையான அரசியல் முறையானது, முனைப்பும் துணிவும் மிகுந்த அமெரிக்க மக்களை ஒரு வலிமையுள்ள தொழில் சமூகமாக்கியதில் வியப்பேதுமில்லை எனலாம்.

# 8. தொழில் இணைப்புக்களும் சர்வாதீனங்களும்

அமெரிக்கத் தொழில் வளர்ச்சியின் ஒரு முக்கிய அம்சமாகக் குறிப்பிடப்பட வேண்டியது அங்கு 'பெருந் தொழில்கள்' விரைவில் வளர்ந்ததும், பூல்கள் (*Pools*), டிரஸ்டுகள் (*Trusts*), ஹோல்டிங் கம்பெனிகள் (*Holding Companies*), தொழில் ஐக்கியங்கள் (*Mergers*) எனப்பட்ட பல்வகையான பிரம்மாண்ட தொழில் இணைப்பு-அமைப்புக்கள் தோன்றியதுமாகும். இவ் வகையான தொழில் இணைப்பு-அமைப்புக்கள் ஏற்படுவதற்கு அமெரிக்க மக்களின் மதியூகமும், ஆற்றலும் காரணமாயிருந்ததோடு, அந்நாட்டு அரசாங்கத்தின் தலையிடாக் கொள்கையும் (*Laissez-faire policy*) இதற்குத் துணை செய்தது. உலகச் சரித்திரத்தின் இடைக்காலத்தில் ஆதிக்கம் செலுத்திவந்த படைமானிய மன்னர்களுக்கும், எதேச்சாதிகார பிரபுக்களுக்கும் ஈடாக அமெரிக்காவில் தொழிலதிபர்களின் ஆதிக்கம் ஒன்று புதிதாக இன்று வளர்ந்துள்ளது. 'எண்ணெய்த்துறை அரசர்களும் (*Oil Kings*)' இரும்புத்துறை மன்னர்களும் (*Iron Kings*) அமெரிக்காவில் புதிதாகத் தோன்றினர். தங்கள் தொழிலுற்பத்திக்கு ஏற்ற வசதிகளையும் மூலப் பொருட்களையும் பெற்றுக்கொள்வதிலும், தங்கள் பண்டங்களை விற்பதற்கும் புதிய சந்தைகளைத் தேடிக்கொள்வதிலும் முனைந்த இத் தொழிலதிபர்கள் தங்கள் போராட்டத்தில் சகல முறைகளையும் பயன்படுத்தினர். 'சட்டமியற்றும் மன்றங்களின் உறுப்பினர் களுக்கு லஞ்சமளிப்பது முதல் மக்களை ஏமாற்றுவது வரை

பல்வேறு சட்ட விரோதமான வழிகளையும் கைக்கொண்டதுடன், சில சமயங்களில் ஆயுதப் படைகளையும் பயன்படுத்தி, இவர்கள் தங்கள் காரியங்களைச் சாதித்தனர்.' அமெரிக்காவைப்பற்றிப் பிரபல பிரிட்டிஷ் பத்திரிகையாளர் ஒருவர் குறிப்பிட்டுள்ளது இங்கு நோக்கத்தக்கது: 'அமெரிக்கா என்பது பிரம்மாண்டமான செல்வத்தைப் பெற்றுள்ள ஒரு நாடு; அது கள்ள அதிபர் கூட்டமொன்று (*Robber barons*) ஆதிக்கம் செலுத்தும் நாடாகும்; மத்திய அரசாங்கம் மற்றும் பல பிராந்தியக் காப்புக் கழகங்களால் (*Vigilance societies*) அரைகுறையாகக் காவல் செய்யப்படும் ஒரு நாடே அது' என்பது அவர் கருத்து.[1] உள்நாட்டுப் போரைத் தொடர்ந்த அரை நூற்றாண்டுக் காலத்தில் 'தலையிடாக் கொள்கை'யின் உச்சத்தை அமெரிக்கா கண்டது. அதனால் விளைந்த நாசகாரப் போட்டியையும், நாட்டு வளங்களின் விரயத்தையும் இக்காலமே பார்த்தது. அதே சமயத்தில் மக்களிடையே இக் கொள்கைக்கெதிரான உணர்ச்சி எழுந்ததும்; அதனால் அரசாங்கத் தலையீடும் புதுச் சட்டங்களும் விளைந்ததும் இக்காலத்திலேயேயாகும்.

## பெருந்தொழில்கள் வளர்ச்சிக்குக் காரணங்கள்

அமெரிக்காவில் உள்நாட்டுப் போருக்குப் பின்னர் பற்பல காரணங்களால் தொழில் சர்வாதீனங்களும் (*Monopolies*), கூட்டு முறை தொழில் நடவடிக்கைகளும் (*Corporate business activity*) வெகுவாக வளர்ச்சி அடைந்தன. அப் போருக்கு முன்பெல்லாம் பண்டத் தயாரிப்புத் தொழில்கள் ஒவ்வொன்றும் ஒரு தனிப்பட்ட தொழில் துணிவோனுக்கோ, ஒரு குடும்பத்துக்கோ, ஒரு சில பங்குதாரர்களுக்கோ தான் சொந்தமாயிருந்தது. ஆனால், 1865-க்குப் பின், குறிப்பாகத் தொழிற் புரட்சியின் விளைவாக, கார்ப்பரேசன்களெனப்படும் கூட்டுமுறை நிறுவனங்களின் வளர்ச்சி இன்றியமையாததாகிவிட்டது எனலாம். பெருவாரி உற்பத்தியின் சிக்கன நலன்களும், திரளான உற்பத்தியினால் விளையும் செலவுக் குறைவும், இலாப உயர்வும் தொழில்களின் இணைப்பிற்கும், தொகுப்பிற்கும் (*Integration and consolidation*) தூண்டுதலளித்தன. இதனால் பெருந் தொழில்கள் வளரலாயின.

1. William Archer: Fortnightly Review No. 930.

மேலும், தொழில் நுண்ணியல் விளைவித்த புத்தாக்கங்கள் பலவும் (*Technological inventions*) பெருவாரி உற்பத்தியை இலாபகரமாக்கின. இத்தொழில்களுக்கு விலைமிக்க எந்திரங்களும், முதற் கருவிகளும் வேண்டியிருந்தமையால் போட்டிகள் ஏற்படுவதற்கில்லாமல் போயிற்று. நாட்டின் பரப்பும், மக்கள் தொகையும் அதிகரிக்க அதிகரிக்க, தொழில் நிறுவனங்களின் அளவும் வளர்ச்சியடையலாயிற்று: இதற்கு இரயில்வே கார்ப்பரேசனை ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம். தட்டெழுத்துப் பொறி (*Typewriter*), கூட்டல் கணக்குப் பொறி (*Adding machine*) இவ்வாறான கருவிகளின் ஆக்கம் பெருந்தொழில்களின் வளர்ச்சிக்கும், கார்ப்பரேசன்களின் தோற்றத்துக்கும் பேருதவி புரிந்தது.

உள்நாட்டுப் போருக்கு முன்னர், இத்தகைய கார்ப்பரேசன் தொழில் அமைப்பு சிறப்பாகப் பாங்குத் துறையிலும், சுங்கச் சாவடிச் சாலைகளின் அமைப்பிலும், இரயில்வே அமைப்பிலும் அல்லது எந்த ஒரு பெருந் தொழிலை அமைப்பதிலுமே பயன்படுத்தப்பட்டது. ஆயினும், இத்தகைய அமைப்புக்களை ஜனநாயகத்துக்கு விரோதமானவை அல்லது ஆபத்தானவையென்றே மக்கள் கருதலாயினர். ஆகவேதான் நியூயார்க் இராச்சியத்தில் 1846 வரை இம்மாதிரி இராச்சியக் கார்ப்பரேசன்கள் ஆரம்பிக்க அனுமதி தரப்படவில்லை. இருப்பினும், உள்நாட்டுப் போருக்குப் பின்னர் அமெரிக்காவில் நிலவிய அரசியல் நிலைமையும், பொருளாதாரத் தத்துவமும் இவ்வகைக் கார்ப்பரேசன்களின் வளர்ச்சிக்கு ஆதரவளித்தன என்றே கூறவேண்டும். 'தலையிடாக் கொள்கை'யும், சுங்கவரிக் கொள்கையும் பெருந் தொழில்களுக்குத் துணைபுரிந்தன என்றால் மிகையாகாது. சுங்கவரிகளே டிரஸ்டுகளுக்கு அன்னையாயின என்றால் பொருந்தும். மேலும் அமெரிக்க நாட்டின் பெரும் பரப்பும், பாதுகாப்புப் பெற்றிருந்த உள்நாட்டுச் சந்தையும் பிறநாட்டுப் போட்டியின் வன்மையைக் குறைத்தன. இக் கூட்டுமுறைத் தொழிலின் நன்மைகளைப்பற்றிய நிபுணர்களின் கருத்து என்னவென்பதை அமெரிக்காவின் பன்னிரண்டாம் குடிக்கணக்கு அறிக்கையிலிருந்து நாம் அறியக்கூடும். 'நம் தயாரிப்புத் தொழில்களின் விரைவான வளர்ச்சிக்கு

பெரும்பாலும் காரணமாவது தொழில் கார்ப்பரேசன்கள் நிறுவப்படுதற்குப் பல்வேறு இராச்சியச் சட்டங்கள் அளித்த வசதிகளும், இத்தகைய தொழில் அமைப்பின் பெரு நலன்களுமேயாகும். இம்மாதிரிக் கூட்டுமுறைத் தொழில் அமைப்பானது (*Corporate form of organisation*) தனி ஒருவனின் சக்திக்கு மேற்பட்டதான பெரு முதலைத் திரட்டிக் கொள்ளவும், தொழிலின் மூலதனத்தை விருப்பப்படி பலருக்குப் பொதுவாக்கிக் கொள்ளவும், ஒவ்வொரு பங்குதாரரின் பொறுப்பையும் கம்பெனியில் அவர் போட்டுள்ள மூலதனத்திற்கு உட்பட்டதாகச் செய்துகொள்ளவும் வசதியளிக்கிறது' என்று குறிப்பிடப் பட்டுள்ளது.[1]

### கார்ப்பரேசன்கள்

கார்ப்பரேசன் என்றால் என்ன என்பதற்கு ஹானே என்னும் ஆசிரியர் கொடுத்த விளக்கம் பின்வருமாறு: 'உறுப்பினர்களின் சொந்த நலத்திற்கெனத் தன் விருப்பால் அமைக்கப்பட்ட சுயேச்சையானதொரு சங்கமே கார்ப்பரேசன் ஆகும். இது கட்டாயமான ஒருமைப்பாட்டு அடிப்படையில் அலுவல் புரிகிறது. மேலும், ஏதாவதொரு பொது நலனை அடையும் பொருட்டு அரசாங்கத்தின் அனுமதியைப் பெற்று இயங்குவதாகும் இது'.[2] இதைவிடப் பிரசித்தி பெற்றதொரு விளக்கம் பிரதம நீதிபதி மார்சல் என்பவருடையதாகும். அவர் கூறுவதாவது: 'கார்ப்பரேசன் என்பது ஒரு செயற்கை சிருட்டியாகும்; அது சட்டத்தில்தான் உருவம் கொண்டதேயன்றி யாவருக்கும் புலனாகக் கூடியதல்ல. அது ஒரு சட்ட சிருட்டி தானாகையால், அதைத் தோற்றுவித்த சாசனம் அதற்கு வெளிப்படையாகவோ, உள்ளடக்கமாகவோ அளித்துள்ள அம்சங்களைப் பெற்றே அது இயங்குகிறது. இவைகளுள் மிக முக்கியமானவை அதன் தொடர்ந்த ஆயுளும் (*immortality*), தனி நபர் தன்மையும் (*individuality*) ஆகும். இந்த இரு அம்சங்களே அடுத்தடுத்த வாரிசுகளான பங்குதாரர்கள் தொடர்ந்து ஒரே நபரைப்போல இருந்துவரவும்

1. Jennings: History of Economic Progress in the U. S, A.
2. Haney L. H: Business Organisation, p. 82.

அவ்வாறே செயலாற்றவும் துணைபுரிகின்றன'. மற்றொரு எழுத்தாளர் கார்ப்பரேசனை வருணித்துள்ளதும் இங்கு நோக்கத்தக்கது : 'செல்வத்தாலானதொரு முட்களில்லா ரோஜா மலரையொத்ததாகும் அது ; இயற்கையில் தோன்றும் பூத நபர்களுக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்கள் எவையுமில்லாத செயற்கைப் பணப் பூதங்களே கார்ப்பரேசன்கள்'.[1]

கார்ப்பரேசன் அமைப்பைத் தொழில் ஆரம்பிப்போர் கைக்கொள்ளுவதற்குக் காரணம் அதனால் விளையும் பற்பல நலன்களேயாகும். நவீனகால பெருந்தொழில்களுக்கு வேண்டிய பெரு முதலைச் சுலபமாகத் திரட்டுவதற்கு இந்த அமைப்பு உதவுகிறது. பெருவாரியான மக்களிடமிருந்து சிறு தொகைகளைப்பெற்றுக் கார்ப்பரேசன்கள் ஆரம்பிக்கப்படுவதால் இவை அமெரிக்க முதலாளித்துவத்தை 'மக்களின் முதலாளித்துவம்' (*People's capitalism*) ஆக்குகின்றன எனலாம். இதற்கு எடுத்துக்காட்டாகப் பின் வருவனவற்றைக் குறிப்பிடலாம் : அமெரிக்க டெலிபோன் அண்டு டெலிகிராப் கம்பெனியில் 1,220,000 பங்குதாரர்கள் உண்டு. ஜெனரல் மோட்டார் கம்பெனியிலோ 488,800 பங்குதாரர்கள் இருக்கின்றனர். 'ஸ்டாண்டர்டு ஆயில் கம்பெனி ஆப் நியூ ஜெர்சே' என்ற நிறுவனத்தில் பங்குதாரர்களின் எண்ணிக்கை 269,000 ஆகும். அடுத்து இக்கார்ப்பரேசன்களின் உரிமைகளை நோக்குவோம். அவை கடன்களைப் பெறலாம் ; பத்திரங்களை விற்று முதல் பெற்றுக்கொள்ளலாம். இக்கார்ப்பரேசன்களில் பற்பலர் பங்குதாரர்களாவதனால் இவர்கள் யாவருமே நாட்டின் வளர்ச்சியில் பங்கெடுத்துக் கொள்வது சாத்தியமாகிறது. மேலும், ஆற்றலும் திறனும் வாய்ந்த நிர்வாகிகளால் நடத்தப்படும் இத்தொழில் நிறுவனங்களுடைய இலாபத்தில் சாதாரண மக்களும் பங்கு கொள்வது சாத்தியமாகிறது. இக் கார்ப்பரேசன்களின் உறுப்பினர்கள் ஏற்கவேண்டிய பொறுப்புக்கள் யாவும் சட்டத்தால் வரையறுக்கப்பட்டவை யாகும். இக்கார்ப்பரேசன்களின் பங்குகளை யாரும் தடையின்றி வாங்கவும் விற்கவும் கூடும். எவரும் அவற்றில் உறுப்பினர் களாகச் சேரவும் அல்லது விலகவும் உரிமை உண்டு.

1. Hallayya : Text book of Economic History, p. 618

உறுப்பினர்கள் இறந்து விடுவதனலோ விலகிக் கொள்வதனலோ கார்ப்பரேசன் முறிந்து விடுவதில்லே. இவ்வாறு இக்கார்ப்பரேசன் நிலேயானதொரு சட்ட சிருட்டி யாவதோடு தொழில் நிர்வாகத்தில் உறுதியும், திறமையும் வளர்தற்கு இது துணைபுரிகிறது.

இருப்பினும், இவற்ருல் தீமைகளும் விளேயக்கூடும் என்பதை அறியவேண்டும். பங்குதாரர்கள் பெருவாரி எண்ணிக்கையினராகவும், தொலேவான இடங்களில் சிதறியும் இருப்பார்களாகையால், கார்ப்பரேசனே நிர்வகிக்கத் தேர்ந் தெடுக்கப்பட்ட டைரக்டர்களின் பேரில் பங்குதாரர்கள் சரிவரக் கண்காணிப்பு செய்வதியலாது. டைரக்டர்கள் ஆண்டுக்கு ஒரு முறையே தேர்ந்தெடுக்கப்படுவதாலும், இத்தேர்தல்களுக்கு நேரில் வராதவர்களின் வாக்குரிமைகளும் பதிவு செய்யப்படலா மாதலாலும் சூழ்ச்சிக்கும், எதேச்சாதிகாரத்துக்கும் இம் முறையில் இடமிருக்கிறது. மேலும், சட்டப்படி கார்ப் பரேசனுக்கு மட்டுமே டைரக்டர்கள் பொறுப்பாளிகளேயன்றி, தனிப்பட்ட முறையில் பங்குதாரர்களுக்கு அவர்கள் பொறுப்புடையவர்கள் அன்று என்ற காரணத்தால் டைரக்டர்கள் பொறுப்பற்ற முறையில் நடப்பதற்கும் ஏதுவாகிறது. இதன் விளேவாகப் பல டைரக்டர்கள் தங்கள் பதவியைத் தம் சொந்த நலன்களுக்குப் பயன்படுத்திக்கொள்வதுடன், ஊகவாணிக முறையிலே கார்ப்பரேசன் நிர்வாகத்தை நடத்தவும் தலேப்படலாம். மேலும், சூழ்ச்சியாகப் புதுக்கார்ப்பரேசன்களேத் தோற்றுவிப்பது, மிகையான முதல் ஈடு ஒதுக்கல் போன்ற நடவடிக்கைகளால் பங்குதாரர்களின் நலன்கள் மிகவும் பாதிக்கப் படுகின்றன. அத்துடன் தங்களுக்கு இலாப ஈவு நிச்சயமாகக் கிடைக்கும் வரை பங்குதாரர்களும் கார்ப்பரேசனின் நடைமுறையைப் பற்றிய விவரங்களே அறிந்து கொள்ளப் பெரும்பாலும் அக்கறை காட்டுவதில்லே. மேலும், சாதாரண முதலீட்டுக்காரர்கள் பத்திர சந்தையில் நடக்கும் பேரங்களின் சிக்கல்களேப் புரிந்துகொள்ளவும் இயலாது. எல்லாவற்றிற்கும் மேலாகக் கார்ப்பரேசன்கள் சர்வாதீனங்களே வளர்ப்பதுடன், பிணேவு டைரக்டர் முறையையும், உடைமை முறையையும் (*Interlocking directorship and ownership*) தோற்றுவிக்க

உதவுகின்றன. இம்மாதிரியான பற்பல குறைபாடுகள் இருந்தும், கார்ப்பரேசன் முறையே அமெரிக்கத் தொழில் அமைப்பு முறைகளுள் பிரதான முறையாயிற்று என்று குறிப்பிடவேண்டும். இக்கார்ப்பரேசனின் செல்வாக்கைக் கட்டுப்படுத்தவும் குறைக்கவும் பலர் விரும்புவராயினும், இதன் செல்வாக்கு மேலும்மேலும் அதிகரித்துக்கொண்டே வருகிறது என்பது வியத்தற்குரியதாகும்.

## தொழில் இணைப்புக்கள்

அமெரிக்காவில் தொழில் இணைப்பு இயக்கம், 1830-இல் உப்புத் தயாரிப்பாளர்கள் தங்கள் உற்பத்தியைக் கட்டுப்படுத்திக்கொள்ளுவதற்கு ஓர் இணைப்பு ஏற்படுத்திக் கொண்டதிலிருந்து ஆரம்பம் ஆகியது. ஆயினும், இவ்வியக்கம் உள்நாட்டுப் போருக்குப் பின்னரே முக்கியத்துவம் பெறலாயிற்று. இங்குப் பொதுவாகக் காணப்பட்ட தொழில் இணைப்பு முறைகளில் முக்கியமானவை நான்கு ஆகும். அவையாவன :

1. பூல்கள் (*Pools*)
2. டிரஸ்டுகள் (*Trusts*)
3. ஹோல்டிங் கம்பெனிகள் (*Holding Companies*).
4. தொழிற்சேர்ப்புக்களும், ஐக்கியங்களும் (*Amalgamations and Mergers*)

1873 முதல் 1887 வரையுள்ள ஆரம்பக் காலத்தில் பூல்கள் மிகவும் செல்வாக்கு பெற்றிருந்தன. போட்டியிடக்கூடும் தொழில் நிறுவனங்களுக்கிடையே விலையைப்பற்றியோ, உற்பத்தியைப்பற்றியோ இப்பூல்களில் ஒப்பந்தங்கள் காணப்பட்டன. இம்முறை இரயில்வேக்களிலும், நிலக்கரிச் சுரங்கங்களிலும் பரந்து காணப்பட்டது. மற்றொரு வகையான பூல்களும் பின்னர் அமெரிக்காவில் தோன்றின. அவைகளில் மார்க்கெட்டுகளை அல்லது இலாபங்களைப் பங்கிட்டுக் கொள்ளும் ஒப்பந்தம் காணப்பட்டது. உப்பு உற்பத்தித் துறையிலேதான் இம்முறை அதிகமாகக் காணப்பட்டது. சில காலத்திற்கு

இப்பூல்கள் வெற்றிகரமாக இயங்கின என்றாலும் சிறிது சிறிதாக இவைகளுள் பல குறைபாடுகள் தோன்றலாயின. இப்பூல்களில் ஒப்பந்தத்தை மீறிய நிறுவனங்களைத் தண்டிப்பதற்கோ, கட்டுப்படுத்துவதற்கோ எந்த வித ஏற்பாடும் இல்லை. ஆகவேதான் சிற்சில நிறுவனங்கள் பூல்களின் ஒப்பந்தங்களைப் பொருட்படுத்தாது தங்களுக்கு அதிக இலாபங்களைப் பெற்றுக் கொள்ளும் வழிகளையே கடைப்பிடிக்க முற்பட்டன. ஆனால், காலம் செல்லச் செல்ல இப்பூல்கள் மறைந்து, இவற்றைவிட உறுதியானதோர் இணைப்பாகிய டிரஸ்டு என்னும் முறை மேலோங்க ஆரம்பித்தது.

அமெரிக்காவில் 1887-க்கும் 1897-க்கும் இடையே டிரஸ்டுகள் மிகவும் செல்வாக்கு பெற்றதொரு இணைப்பு முறையாக விளங்கின. இம்முறையில், டிரஸ்டில் சேர்ந்துள்ள நிறுவனங்களின் பங்குதாரர்கள் யாவரும் தங்களுடைய பங்கு உரிமைகளைப் புதிய டிரஸ்டின் ஆட்சிக்குழுவிடம் ஒப்படைத்து விட்டு, அதற்குப் பதிலாக, டிரஸ்டின் உரிமைப் பத்திரங்களைப் பெற்றுக் கொண்டனர். இந்த டிரஸ்டுக் குழு தன்னிடம் இவ்வாறு ஒப்படைக்கப்பட்டுள்ள நிறுவனங்களின் பங்குகள் யாவற்றையும் வைத்துக்கொண்டு, டிரஸ்டின் நடவடிக்கைகளைத் தன் விருப்பம் போல் நடத்திக்கொள்ள முடிந்தது. முன்பு கூறிய பூல்களைப் போல் அல்லாது, டிரஸ்டுகள் தங்கள் பங்குதாரர்களின் உரிமைகள் யாவற்றையும் ஒன்று சேர்த்து சர்வாதீனங்களை ஏற்படுத்திக்கொள்ள முடிந்தது. இதிலிருந்து டிரஸ்டுகள் வெறும் கூட்டுமுறை நிறுவனங்கள் ,அல்ல என்பது விளங்கும். இவ்வகையான டிரஸ்டு இணைப்பு முறை முதன் முதலில் ஸ்டாண்டர்டு ஆயில் கம்பெனியில் தோன்றியது.

மேற்கூறிய ஸ்டாண்டர்டு ஆயில் கம்பெனியின் டிரஸ்டை ஆராய்ந்தால் பொதுவாக டிரஸ்டு தோன்றும் முறையை நன்கு அறிந்து கொள்ளலாம். 1865-இல் ஆண்ட்ரூயீட், ராக்பெல்லர் என்பவர்களால் கிளீவ்லாந்து என்னுமிடத்தில் ஓர் எண்ணெய் சுத்திகரிக்கும் கம்பெனி நிறுவப்பட்டது. அதுபோது இரயில்வே சுமைக்கட்டணத்தில் ஏற்பட்டிருந்த வீழ்ச்சியும், மற்றைய சாதகமான காரணங்களும் இக்கம்பெனி மிக விரைவில்

முன்னேற உதவின. இந்நிலையில் கிளீவ்லாந்தின் மற்றைய சுத்திகரிப்பு நிறுவனங்கள் யாவும் இக்கம்பெனியுடன் சேர்ந்து கொள்ளவோ, தங்கள் நிறுவனங்களை அதனிடம் விற்று விடவோ நேரிட்டது. இதனால் எண்ணெய் விளையும் பிரதேசங்களில் இக்கம்பெனிக்கெதிராக ஒரு கூக்குரல் எழுப்பப்பட்டது. மேலும், இந்த ராக்பெல்லர் கம்பெனிக்குக் கட்டணச் சலுகை காட்டிய இரயில்வேக்கள் யாவும் அவைகளை ரத்துசெய்யவும் பலவந்தப்படுத்தப்பட்டன. ஆயினும், இந்நிலை சிறிது காலத்திற்குள் மறுபடியும் மாற்றமடைந்தது. எப்படியெனில் ராக்பெல்லர் கம்பெனி மற்ற எண்ணெய்க் கேந்திரங்களில் உள்ள வலுவுடைய உற்பத்தியாளர்களுக்கெல்லாம் தன்னுடைய பங்குகளைக் கொடுத்து அவர்களையும் தன்னுடன் சேர்த்துக்கொண்டுவிட்டது. இருப்பினும் சிற்சில போட்டிக் கம்பெனிகள் எண்ணெயை வேறிடங்களுக்கு எடுத்துச் செல்லக் கூடிய குழாய்முறை கண்டுபிடிப்பின் காரணமாக ராக்பெல்லர் கம்பெனியை எதிர்த்து நிற்க முடிந்தது. ஆயினும், இறுதியாக ராக்பெல்லர் பல்வேறு முறைகளையும் கையாண்டு போட்டிக் கம்பெனிகளை எல்லாம் தம்மிடம் சரண் அடையச் செய்தார். மேலும், போட்டிக்கம்பெனிகளில் மிகவும் வலுவுடையதாயிருந்த 'டைடுவாட்டர் குழாய் எண்ணெய்க் கம்பெனி'யையும் ராக்பெல்லர் கைப்பற்றிக் கொண்டார். இவ்வகையாக ஸ்டாண்டர்டு ஆயில் கம்பெனி ஈடு இணையற்றதாகிவிட்ட பின்னர், பழைய ஆட்சேபகரமான முறைகளை மீண்டும் கடைபிடித்துத் தன்னுடைய பலத்தை உறுதிப்படுத்திக்கொள்ள முயன்றது. அது கையாண்ட முறைகளுள், போட்டிக் கம்பெனிகள் எண்ணெய்க் குழாய் அமைப்பதைத் தடுக்க இரயில்வேக்களைத் தூண்டிவிடுதல், விலையை வெட்டிப் போட்டியை முறியடித்தல், புதிய சுயேச்சைக் கம்பெனிகளைப் பொய்யாகத் தோற்றுவித்து ஏமாற்றுதல், போட்டிக் கம்பெனிகள் புதிதாக எழுவது குறித்து முன் தகவல் அறிந்து தெரிவிக்கக்கூடிய வேவுகாரக் குழுவை ஏற்படுத்துதல் போன்றவை குறிப்பிடத்தக்கவை. இந்த டிரஸ்டு முறை சிறிது காலத்திற்குள் மற்றைய உற்பத்தித் துறைகளிலும் புகுந்துவிட்டது. அவைகளுள் விஸ்கி டிரஸ்டு, சர்க்கரை டிரஸ்டு, ஈய

உற்பத்தி டிரஸ்டு, பருத்தி விதை எண்ணெய் டிரஸ்டு ஆகியவை மிகவும் முக்கியமானவை யாகும்.

டிரஸ்டு முறையால் உற்பத்தியாளர்கள் பல்வேறு நன்மைகளைப் பெற்றுக்கொள்ள முடிந்தது என்று கூறவேண்டும். பெரு நிறுவனம், பெருவாரி உற்பத்தி ஆகியவற்றின் சிக்கன நலன்களும் நிறுவனத்தின் சிறந்த நிர்வாகமும், பண்டங்களை வாங்குதல் விற்றல், போக்குவரத்து ஆகியவற்றில் சிக்கனமும் டிரஸ்டுமுறையில் கிடைக்கப்பெற்றன. ஆகவே, டிரஸ்டுகள் தங்கள் பண்டங்களின் விலைகளைக் குறைக்கவும் முடிந்தது. ஆயினும், இந்த டிரஸ்டுகள் யாவும் சர்வாதீனங்களாயிருந்தமை யால் சர்வாதீனத்தின் சகல தீமைகளும் இவற்றில் காணப்பட்டன. விலைகளை உயர்த்துதல், நுகர்வோரையும், தொழிலாளரையும் சுரண்டல், உற்பத்தியை வேண்டுமென்று மட்டுப்படுத்துதல், மிகை இலாபங்களைக் குவித்தல், பரந்த அளவில் லஞ்ச முறையைக் கையாளுதல், அரசாங்க நிர்வாகத்தின் பேரில் தகாத செல்வாக்கைச் செலுத்துதல் முதலியவை டிரஸ்டு முறையின் பெருங் கேடுகளாகும். இவற்றால் மக்கள் டிரஸ்டுகளினால் ஏற்படக் கூடிய அபாயங்களை உணரலாயினர். ஆகவே, மிக விரைவில் அமெரிக்கக் காங்கிரசு சபை டிரஸ்டுகளைக் கட்டுப்படுத்தும் நோக்குடன் சட்டமியற்றத் தலைப்பட்டது. இச்சட்டங்களில் மிகவும் பிரபலமானதான 'ஷெர்மேன் டிரஸ்டு' ஒழிப்புச் சட்டம் 1890-ஆம் ஆண்டில் இயற்றப்பட்டது.

## டிரஸ்டு ஒழிப்புச் சட்டம் (*Anti Trust Legislation*)

1890-க்கு பின் அமெரிக்காவில் ஏற்பட்ட பொருளாதார மந்தமும், காங்கிரசின் டிரஸ்டு ஒழிப்புச் சட்டமும் டிரஸ்டு இயக்கத்தின் வளர்ச்சியைச் சில ஆண்டுகளுக்கு நிறுத்தி வைத்தன. ஆயினும், 1897-இல் செழுமை நிலை மீண்டவுடன், புது வகையான தொழில் இணைப்பு ஒன்று தோன்றலா யிற்று. ஹோல்டிங் கம்பெனி முறை (*Holding Company*) என்ற இப்புதிய முறையும் சர்வாதீனங்களைத் தோற்றுவிக்கக் கூடியதாயிருந்தது. 1895 முதல் 1904 வரை உள்ள காலத்தை

ஹோல்டிங் கம்பெனிக் காலம் என்று கூறுதல் பொருந்தும். பல கார்ப்பரேசன்களின் பெரும்பான்மைப் பங்குகளைக் கைப்பற்றுவதன் மூலமாகவோ, நிர்வகிப்பதன் (*Controlling*) மூலமாகவோ அக்கார்ப்பரேசன்களின் பேரில் ஆட்சி செலுத்தும் ஒரு நிறுவனமே ஹோல்டிங் கம்பெனி எனப்படும். ஆரம்பத்தில் ஒரு கட்ட (*single stage*) ஹோல்டிங் கம்பெனிகளே தோன்றின. ஆனால், பின்னர்ப் பல கட்டங்களிலும் (*multi-stage*) பிடியுடைய ஹோல்டிங் கம்பெனிகள் வளரலாயின. அமெரிக்க ஐக்கிய நாட்டின் எ.:குக் கார்ப்பரேசன் ஒரு பலகட்ட ஹோல்டிங் கம்பெனியாகத் திகழ்ந்தது. அக்கம்பெனி 170 தனிப்பட்ட கம்பெனிகளின் பேரில் பிடியுடையதாயிருந்தது. அதன் மூலதனம் 100 மில்லியன் டாலர் மதிப்புடையதாகும். ஆயினும், 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஹோல்டிங் கம்பெனி என்ற இப்புது முறை இணைப்பின் எதிர்காலம் நிச்சயமற்றதாகவே இருந்தது. ஏனெனில், டிரஸ்டு ஒழிப்புச் சட்டங்கள் இம்மாதிரி நிறுவனங்களுக்கெதிராகவும் பிரயோகிக்கப்படலாயின. குறிப்பாக. ரூஸ்வெல்டு ஆட்சிக் காலத்தில், 'வட பிரதேசப் பத்திரங்கள் கம்பெனி' என்ற ஹோல்டிங் கம்பெனி கலைக்கப்பட்டவுடன் ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. பின்னர், 'ஸ்டாண்டர்டு ஆயில் ஹோல்டிங் கம்பெனி', 'அமெரிக்கப் புகையிலை ஹோல்டிங் கம்பெனி' போன்ற பெரு நிறுவனங்கள் சிலவும் அமெரிக்க நீதி மன்றத்தின் ஆணையின் பேரில் கலைக்கப்பட்டன. இருப்பினும், அமெரிக்காவின் தொழில் இணைப்பு முறைகளிலே மிகவும் பரந்ததொன்றாக இன்னும் ஹோல்டிங் கம்பெனி முறை நிலைபெற்றிருக்கின்றது என்பதை அறியவேண்டும்.

1904-க்குப் பின்னர், அமெரிக்கத் தொழில் அதிபர்கள் சில புதிய சர்வாதீன முறைகளையும், புதிய இணைப்பு முறைகளையும் ஏற்படுத்திக் கொண்டுள்ளனர். அதாவது, ஒரு தொழில் நிறுவனம் மற்றொரு தொழில் நிறுவனத்தை வாங்கி விடுவதன் மூலம் தொழிற் சேர்க்கையை ஏற்படுத்திக் கொள்வது சாதாரணமாகிவிட்டது. முதலில் ஒரேதன்மையான நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ள நிறுவனங்களுக்குள்ளே மட்டும் இம்மாதிரி தொழில் இணைப்புக்கள் ஏற்பட்டன. ஆனால், பின்னர்

வேறுபட்ட நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ள நிறுவனங்களும்கூட இவ்வகை இணைப்புக்களை ஏற்படுத்திக் கொள்ளலாயின.

மேற்கூறப்பட்ட தொழில் இணைப்புக்களும், தொழில் சர்வாதீனங்களும் அமெரிக்கத் தொழிற்புரட்சியினாலும் பெருவாரி உற்பத்தி முறையாலும் விளைந்த இயற்கையான வளர்ச்சியேயாகும். இப்போக்கு வருங்காலத்திலும் பெருவாரியான தொழிற்றுறைகளில் தொடர்ந்து நிகழ்வதாயிருக்கும் என்று கூறுதல் பொருந்தும். எப்படியும், தொழில் சர்வாதீனங்கள் நாட்டின் பொருளாதாரத்திற்கும் சமூகத்திற்கும் தீங்கு விளைவிக்கக்கூடியன என்ற காரணத்தால், அவைகள் பொதுவாக எப்பொழுதுமே வெறுக்கப்பட்டு வந்துள்ளன. மேலும், சட்டபூர்வமான நடவடிக்கைகளின் மூலமாகவே இச்சர்வாதீனங்களைக் கட்டுப்படுத்தவும், சுயேச்சைப் போட்டி முறையை நிலைநிறுத்தவும் தொடர்ந்து முயற்சிகள் எடுக்கப்பட்டு வந்துள்ளன. டிரஸ்டு ஒழிப்புச் சட்டங்களில் முதலாவதான 'ஷெர்மேன் சட்டம்' (*Sherman Act*) வர்த்தகத்தைக் கட்டுப்படுத்தக் கூடிய எந்தத் தொழில் ஒப்பந்தத்தையும், இணைப்பையும் அல்லது சூழ்ச்சியையும் சட்ட விரோதமானதெனக் கூறியது. இதன்படி வர்த்தகத்தில் சர்வாதீனத்தை ஏற்படுத்தும் ஒரு தொழில் இணைப்பானது இராச்சியங்களுக்கிடையே நடக்கக்கூடிய வாணிகத்தைப் பாதிக்குமேயானால் அது ஷெர்மேன் சட்டப்படி கலைக்கப்பட வேண்டியதாகும். ஆயினும், அமெரிக்க உயர் நீதிமன்றம் இச்சட்டத்தின் ஷரத்துகளுக்கு அளித்த விளக்கம் மிகவும் குறுகியதாயிருந்தமையால் டிரஸ்டு முறை இயக்கத்தை இச்சட்டம் கொண்டு தகர்க்க முடியாமல் போயிற்று. 1894-இல் வில்சன் சுங்கவரிச் சட்டமானது (*Wilson Tariff Act*) தொழில் இணைப்புக்களைக் கட்டுப்படுத்துதற்கெனத் திருத்தம் செய்யப்பட்டது. 1914-இல் அமெரிக்கக் காங்கிரஸ் சபையானது வர்த்தகக் கமிசன் சட்டமொன்றை இயற்றியது. இச்சட்டத்தின்கீழ் நியாயமற்ற தொழில் முறைகளைத் தடுக்க, கூட்டரசு வர்த்தகக் கமிசன் ஒன்று நிறுவப்பட்டது. மேலும், தொழிற்றுறையில் விசாரணை நடத்தவும், அவசியமான நடவடிக்கைகளைச் செயற்படுத்தவும் விரிவான அதிகாரங்கள் இக்கமிசனுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. அதே ஆண்டில்

இயற்றப்பட்டதான கிளேட்டன் சட்டமானது (*Clayton Act*) அதன் ஷரத்துக்களை மீறும் குற்றங்களுக்குத் தண்டனைகளையும் ஏற்படுத்தியது. கிளேட்டன் சட்டத்தின் முக்கிய ஷரத்துக்கள் பின்வருமாறு:

1. சுயேச்சைப் போட்டியைக் குறைக்கக் கூடியதான அல்லது சர்வாதீனத்தை ஏற்படுத்தக் கூடியதான எந்த ஒரு விலைப் பேதமும் (*Price discrimination*) சட்ட விரோதமாகும்.

2. போட்டியைக் குறைக்கக் கூடியதும், வாணிகத்தைக் கட்டுப்படுத்தக் கூடியதும் அல்லது சர்வாதீனத்தைத் தோற்றுவிக்கக் கூடியதுமான வகையில் ஒரு கம்பெனியோ தொழில் இணைப்போ, மற்றொரு கம்பெனியில் பங்குகளைப் பெற்றுக்கொள்வது இச்சட்டத்திற்கு விரோதமாகும்.

3. லேவாதேவி டிரஸ்டுகள் அல்லது பாங்குகளாக இருந்தால் (*Money trusts and banks*), எந்த ஒரு நபரும் ஒன்றுக்கு மேற்பட்ட நிறுவனங்களில் டைரக்டராகவோ, அதிகாரியாகவோ செயலாற்றுவது சட்டவிரோதமாக்கப்பட்டது. இந்த ஷரத்து 5 மில்லியன் டாலர்களுக்கு மேற்பட்டதான சொத்துடைய நிறுவனங்களுக்கே பிரயோகிக்கப்படும்.

4. தொழில் இணைப்புக்களுக்கு ஆதரவாகும் அல்லது சர்வாதீனங்களைத் தோற்றுவிக்கக்கூடும் பிணைப்புமுறை டைரக்டர் சபைகளை (*Interlocking directorates*) இச்சட்டம் தடுத்தது.

மேற்கூறப்பட்ட டிரஸ்டு ஒழிப்புச் சட்டங்களின் ஷரத்துக்களின்படி அமெரிக்க நீதி மன்றங்கள் பற்பல நிறுவனங்களைக் கலைக்க உத்தரவிட்டன. இச்சட்டங்களை மீறிய தனி நபர்களின் பேரிலும் சிலபோது பலத்த அபராதங்கள் விதிக்கப்பட்டன. அமெரிக்காவில் இத்தகைய தொழில் இணைப்புக்களின் வளர்ச்சியானது பல இயற்கையான பொருளாதார காரணங்களினால் விளைந்ததே என்பதை மறுக்கமுடியாது. இப் பிரம்மாண்டமான சர்வாதீனங்களின் தோற்றத்தினால் உண்மையான பல அபாயங்கள் ஏற்பட்டன என்பதையும் ஒப்புக்

கொள்ளவேண்டும். இதனாலேயே அமெரிக்கக் கூட்டாட்சி அரசாங்கமும், இராச்சிய அரசாங்கங்களும் இத்தொழில் இணைப்புக்களின் வளர்ச்சியைச் சட்ட மூலமாகத் தடுக்கும் பரிசோதனைகளை ஏறக்குறைய ஒரு கால் நூற்றாண்டுக் காலம் வரை தொடர்ந்து மேற்கொள்ள வேண்டியதாயிற்று. இருப்பினும், 1920 முதல் 1930 வரையுள்ள தொழிற் செழுமை ஆண்டுகளில் மிகவும் ஆழ்ந்ததும், விரிவானதுமாகியதொரு தொழில் உறுதிப்பாட்டுக்காலத்தை (*Consolidation era*) அமெரிக்கா கண்டது என்று கூறவேண்டும்.

ஆயினும், மேற்கூறிய கட்டுப்பாட்டுக் கொள்கையை அமெரிக்க ஏற்றுமதி வணிகத்தில் ஈடுபட்ட கார்ப்பரேசன்களைப் பொறுத்தவரையில் அமெரிக்க அரசாங்கம் கடைப்பிடிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு ஒரு சலுகையான கொள்கையை இத்துறையில் மட்டும் அரசாங்கம் கையாளக் காரணம் யாதெனில், உலகச் சந்தையில் அமெரிக்க ஏற்றுமதிகள் பிற நாட்டுப் பண்டங்களுடன் சமமாகப் போட்டியிடும் வாய்ப்பு அவற்றிற்கு அளிக்கப்படவேண்டும் என்பதேயாம். இதன் பொருட்டே 1918-இல் வெப் – போமரீன் சட்டம் (*Webb-Pomerene Act*) என்று அழைக்கப்பட்ட ஏற்றுமதி வணிகச் சட்டம் ஒன்று இயற்றப்பட்டது. இச்சட்டம் ஏற்றுமதி வணிகத் துறையில் செயற்படும் கார்ப்பரேசன்களுக்கு, தங்களுக்குள் தொழில் இணைப்பு அமைப்புக்களை ஏற்படுத்திக் கொள்ளுதற்கு அனுமதி அளித்தது. இதேபோன்று பின்னர் 1922-இல் இயற்றப்பட்ட கூட்டுறவு விற்பனைச் சட்டம் (*Co-operative Marketing Act*) கால்நடைப் பண்ணைக்காரர்களும் தங்கள் உற்பத்திகளைத் திறம்பட வினியோகம் செய்து கொள்வதற்காக தொழில் இணைப்புக்களை ஏற்படுத்திக்கொள்ள வழிசெய்தது. உலக மகா பொருளாதார மந்தத்தின்போதும் (*Great depression*) அமெரிக்கப் புது முறைத் திட்ட நடப்பின்போதும் (*New Deal Programme*) டிரஸ்டு ஒழிப்புச் சட்டங்கள் யாவும் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. சில சட்டங்கள் தளர்த்தப்பட்டிருந்தன; மற்றவை ரத்து செய்யப்பட்டன. அத்துடன் 1933-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட தேசியத் தொழில் சட்ட மூலமாக ஒரே வகையான தொழில்களில் ஈடுபட்டுள்ள கார்ப்பரேசன்கள்

யாவும் தங்களுடைய விலைகளையும், தொழிலாளர் கூலிகளையும், உற்பத்தி அளவுகளையும் பற்றி ஒழுங்கு முறை விதிகளை ஏற்படுத்திக் கொள்ளுதற்கு அமெரிக்கக் கூட்டாட்சி அரசாங்கம் உண்மையில் ஊக்கமும் அளித்தது என வேண்டும். இதன் காரணமாக, ரூஸ்வெல்ட் நிர்வாகம் பெருந்தொழில்களுக்குச் சாதகமாக இருக்கின்றது என்னுமோர் ஐயமும் நாட்டில் எழலாயிற்று. இச்சூழ்நிலையில்தான் மேற்கூறப்பட்ட சட்டம் அமெரிக்க நாட்டின் அரசியல் சட்டத்திற்கு விரோதமானதென்னும் தீர்ப்பொன்றை அமெரிக்க உயர் நீதிமன்றம் அளித்து நிலைமையைத் தெளிவுபடுத்தியது. ஆகவே, 1935-இல் டிரஸ்டு ஒழிப்புத் திட்டம் மறுபடியும் அரசாங்கத்தால் மேற்கொள்ளப் படவேண்டியதாயிற்று. இவ்வகையில் எழுந்த வீலர்-ரேபர்ன் (*Wheeler-Rayburn Act*) சட்டம் பல இராச்சியங்களிடையே பொதுவசதித் தொழிலில் (*Utility business*) ஈடுபட்டுள்ள எல்லா ஹோல்டிங் கம்பெனிகளையும் கலைக்க உத்தரவிட்டது. இச்சட்டத்தை அமுலாக்கும் பொறுப்பு, டிரஸ்டுகளின் குற்றங்களை ஆராய்வதில் மிகத் தீவிர முயற்சிகொண்ட வக்கீலான (*Prosecutor*) ட்ரூமன் ஆர்நால்டு என்பவரிடம் 1938-இல் ஒப்படைக்கப்பட்டது. ஆனால், இரண்டாவது உலகப்போரினால் ஏற்பட்ட நெருக்கடியின்போது மேற்கூறிய சட்டங்கள் அமுலாக்கப்படுதல் நிறுத்தி வைக்கப்பட வேண்டியதாயிற்று. கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டிருந்த இச் சூழ்நிலையில் சர்வாதீனங்களும், தொழில் இணைப்புக்களும் மறுபடியும் தோன்றலாயின. இத்தகைய பெருந்தொழிலின் பிடி அமெரிக்க நாட்டில் இன்னும் பேரளவுக்கு இருந்துவருகிறது என்றால் மிகையாகாது. அமெரிக்க ஐக்கிய நாட்டில் வாழும் குடும்பங்களில் 90 சதவீதத்தினர் தங்கள் பணத்தைக் கார்ப்பரேசன்களில்தான் முதலீடு செய்துள்ளனர். இக்கார்ப்பரேசன்களின் மொத்த மூலதனமோ சுமார் 335 மில்லியன் டாலர்கள் ஆகும். இதைக் குறித்து ஜான்-டி-ராக்பெல்லர் என்பார் குறிப்பிட்டது கவனிக்கத் தக்கது: 'தொழில் இணைப்புக் காலம் இன்று நிலவி வருகிறது. தனி நபர் தொழிலின் காலம் மறைந்து விட்டது; அது மறுபடியும் திரும்பி வரப் போவதில்லை'. கார்ப்பரேசன் முறையில் என்னதான் குறைகள் இருப்பினும், இக்கார்ப்பரேசன்

தொழில் முறையே அமெரிக்கத் தொழில் வளர்ச்சிக்கு மற்ற எல்லாக் காரணங்களேயும் விட மிக அதிகமான அளவுக்குத் துணை செய்திருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். அமெரிக்க ஐக்கிய நாட்டில், தொழிலில் முதலீடு செய்யும் பெரும்பான்மை மக்களாகிய நடுத்தர வகுப்பினர்களின் பல மில்லியன் டாலர் அளவு முதலீட்டுக்கு ஏற்றதொரு வாய்ப்பை இத்தகைய தொழில் கார்ப்பரேசன்கள்தாம் அளித்தன என்ருல் மிகையாகாது. இம்முதலீட்டு வாய்ப்பே இன்று அமெரிக்காவை ஒரு பொதுமக்கள்—முதலாளித்துவ நாடாக உருவாக்க உதவியிருக்கின்றது என்று கூறவேண்டும்.[1] ஆகவே-தான் இன்று அமெரிக்காவில், சுயேச்சையான தொழிற் போட்டியை அழிக்க முயலாத எந்த ஒரு கார்ப்பரேசன் அல்லது கம்பெனியின் வளர்ச்சியிலும் அமெரிக்க அரசாங்கம் குறுக்கிடு-வதில்லே.

அமெரிக்காவில் கார்ப்பரேசன்களின் வளர்ச்சி பல புதிய பிரச்சினேகளே எழுப்பியது. அவற்றுள் முக்கியமானது, கார்ப்ப-ரேசன்களில் உடைமை உரிமையும் (*Ownership*) உடைமை நிர்வாகமும் (*Control*) பிரிக்கப்படவேண்டி ஏற்பட்டதாகும். கார்ப்பரேசன்களின் உடைமையாளர்கள் அவற்றின் சாதாரண பங்குதாரர்களே (*Ordinary stock holders*) ஆவர். ஆனுல், அவற்றின் உண்மையான நிர்வாக ஆட்சியோ நிர்வாக அதிகாரிகள் என்ற ஒரு வர்க்கத்தினரின் (*Business bureau-cracy*) கையிலிருந்தது. உடைமையாளர்களுக்கும் நிர்வாகி களுக்கும் இடையே ஏற்பட்ட இத்தகைய பிரிவினே, கார்ப்பரேசன்களின் வளர்ச்சிக்கு இன்றியமையாததாயிற்று. ஆயினும், இந்நிறுவனங்களின் நிர்வாகம் உடைமையாளரின் கையிலில்லாது நிர்வாகத்தில் தேர்ந்த அதிகாரிகளின் கையிலேயே இருந்த காரணத்தால், இக்கார்ப்பரேசன்களின் நிர்வாகத்தில் பலவகையான தேக்கங்களும் (*Inertia*), துணிவின்மையும் (*Lack of initiative*) விளேந்தன என்று கூற வேண்டும். மேலும், தொழில் நிறுவனத்தின் கட்டடங்களுக்கும், எந்திரங்களுக்கும் பதிலாக, இப்போது கார்ப்பரேசனின் பங்குப் பத்திரத் தாள்களே பங்குதாரர்களின் உடைமை எனக் கருதப்பட

1. Konsolay's Key to Economic Progress, p. 75.

நேர்ந்தமையால், முதலாளித்துவ முறையின் ஊன்றுகோலாக முன்பு எண்ணப்பட்டு வந்த உடைமை உணர்வும் இதனால் மழுங்கியது. முதலாளித்துவ தொழில் முறையின் இப்புதிய சாதனைகளே, அதன் முன்னேற்றத்தை மேலும் மேலும் ஊக்குவித்தன என்பதையும் இங்கு உணர வேண்டும். ஏனெனில், முதலாளித்துவ முறைக்கே இயல்பான இவ் வெற்றிகள், பின்னர் ஒரு நிலையில் மிதமிஞ்சியவையாய் முதலாளித்துவ முறை தொழிலுக்கே அழிவையும் தேடுகின்றன. எப்படியெனில், முற்றிலும் அதிகாரவர்க்கத்தினரால் இயக்கப் படுகின்ற பிரம்மாண்டமான தொழில் கார்ப்பரேசன்கள் சிறு நிறுவனங்களையும், நடுத்தர நிறுவனங்களையும் ஒழித்து விடுகின்றன. இதனால் சிறு, நடுத்தர நிறுவனங்களின் உடைமையாளர்கள் அழிந்துபடுகின்றனர். அத்துடன் நில்லாது இக்கார்ப்பரேசன்கள் தொழில் துணிவோரை (*Entrepreneur*) ஒழித்துக்கட்டி, இறுதியில் நடுத்தர வகுப்பினரையே (*Bourgeois*) மறையவும் செய்துவிடுகின்றன. இந்நடுத்தர வகுப்பினர் தங்கள் வருமானத்தை மட்டுமல்லாது தங்கள் தொழிலையும் இழக்க நேரிடுகிறது. ஜோசப் சும்பீட்டர் என்பார் குறிப்பிட்டுள்ளவாறு 'பொது உடைமையின் (*Socialism*) உண்மையான கர்த்தாக்கள் சமதர்ம ஞானிகளோ வாதிகளோ அன்று ; கார்னேஜிகளும் ராக்பெல்லர்களும்தாம்'.[1]

1. Joseph Schumpeter : Capitalism, Socialism and Democracy p. 154

# 9 போக்குவரத்தும் தொடர்பு வசதிகளும்

நவீனப் பொருளாதார வளர்ச்சிக்கு மிக முக்கியமானதொரு காரணம், போக்குவரத்திலும் தொடர்பு வசதிகளிலும் ஏற்பட்ட புரட்சியே ஆகும். அமெரிக்க நாட்டின் பரப்பு விரிவும், அதன் மேற்குப் பிரதேசங்களின் குடியேற்றமும், அந்நாட்டு விவசாயத்திலும், தொழில் உற்பத்தியிலும் ஏற்பட்ட வளர்ச்சியும் போக்குவரத்தின் முன்னேற்றத்தையே பெரிதும் பொறுத்ததாயிருந்தன. அமெரிக்கக் கூட்டரசின் அமைப்பிற்குப்பின்னர், அதுவும் குறிப்பாக உள்நாட்டுப் போருக்குப்பின்னர் போக்குவரத்தின் வளர்ச்சி, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்கு மட்டுமல்லாது நாட்டின் நிர்வாகத்திற்கும், படைப்பாதுகாப்புக்கும் அத்தியாவசியமானதொரு வசதியாகவும் ஆகிவிட்டது. 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சாலைகள் அமைப்பதிலும், கால்வாய்கள் அமைப்பதிலும் மட்டும் முக்கிய முன்னேற்றங்கள் காணப்பட்டன. ஆனால், உள்நாட்டுப் போருக்குப்பின்னர் இரயில்வே வளர்ச்சி மிக்க முக்கியத்துவம் பெற்றது. அதேபோல் வியாபாரக் கப்பற்படை, கப்பற் போக்குவரத்து முதலியவற்றின் வளர்ச்சியும், தந்தி தொலைபேசிக் கருவிகளின் தோற்றமும் அகில உலக வாணிகத்தைப் பெருகச் செய்தன. 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மோட்டார் வண்டியும் பின்னர் ஆகாய விமானமும், வானொலியும் தோன்றி மேலும் போக்குவரத்து, தொடர்பு வசதிகளைப் பெருக்கின. அமெரிக்க சமூகம் போன்றதொரு தொழில்

சமூகத்திற்குப் போக்குவரத்து வசதியும், தொடர்பு வசதியுந் தாம் உயிர்நாடிகள் என்ருல் மிகையாகாது.

அமெரிக்கப் போக்குவரத்து வளர்ச்சியின் தொடக்க வரலாற்றை மூன்று கூறுகளாகப் பிரித்துக் கூறுதல் பொருந்தும்.

1. சுங்கச்சாலைக் காலம் (*Turnpike period*) (1783-1812)
2. கால்வாய் நதிப் போக்குவரத்துக் காலம் (1812-1850)
3. இரயில்வே வளர்ச்சிக் காலம் (1850-க்குப் பின்)

**சுங்கச்சாலைக் காலம்**

அமெரிக்கா ஒரு காலனியாய் இருந்த காலத்திலேயே சுங்கச் சாலைக் கம்பெனிகளால் அங்குச் சாலை அமைப்பு தொடங்கப் பட்டது. சாலைகளின் பல்வேறு முக்கிய கேந்திரங்களில் சுங்க வரி வசூலிப்பதற்காக எழுப்பப்பட்டிருந்த வேலிகளே 'டர்ன் பைக்குகள்' என்று அழைக்கப்பட்டன. இவ்வாறு வேலியிடப் பட்ட இடங்களிலேயே சுங்கங்கள் வசூலிக்கப்பட்டன. இச்சுங்க வரிகள் சாலைகளின் அமைப்பிற்காகவும் அவற்றை நன்னிலையில் வைத்திருப்பதற்காகவுமே வசூலிக்கப்பட்டன என்று கூறுதல் பொருந்தும். 1742-இல் தான் அமெரிக்காவில் முதல் சுங்கச் சாலை நிறுவனம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இதற்குப் பின் நியூயார்க், பென்சில்வேனியா, நியூ இங்கிலாந்து காலனிகள் முதலியன விரைவில் பல் சுங்கச்சாலைகளை ஏற்படுத்திக் கொண்டன. இச்சாலைகள் செவ்விந்தியர்கள் விட்டுச்சென்ற பாட்டைகளை விட மிகவும் முன்னேற்றமானவையாகும். இருப்பினும் நீர்ப் போக்குவரத்துடன் ஒப்பிடும்போது, இச்சாலை களை நன்னிலையில் வைத்திருப்பதற்கு அளவுக்கதிகமான செலவு பிடித்தது என்று கூறவேண்டும். இவ்வாறு சாலைகளின் ஆரம்ப வளர்ச்சி தனி நபர்கள் கையில் அல்லது தனியார் கம்பெனிகளின் கையிலேயே இருந்தது குறிப்பிடல் வேண்டும். இவர்கள் சாலைகளின்மேல் மிகையான சுங்கங்களை வசூலித்து நிறைய இலாபம் சம்பாதித்தனர் என்பதும் உண்மையே. அமெரிக்கப் புரட்சிக்குப் பின்னரே அந்நாட்டின் காங்கிரஸ் சபை, சாலை அமைப்பின் வளர்ச்சியில் மிக்க அக்கறை காட்டத் தொடங்கியது. குறிப்பாக, கல்லாதின் அறிக்கை (*Report of Gallatin*)

சமர்ப்பிக்கப்பட்ட பின்னர், அதாவது 1807-க்குப்பின் சாலை வளர்ச்சியில் காங்கிரசின் அக்கறை அதிகமாகியது. இதன் விளைவாக அமெரிக்கக் கூட்டாட்சி அரசாங்கம் தானே நேரிடையாகச் சாலையமைப்புப் பணியை மேற்கொண்டது. இவ்வகையில் அமைக்கப்பட்ட முதலாவது தேசியச்சாலை பென்சில்வேனியாவிலிருந்து வண்டாலியா என்னும் இடம் வரை சென்றது. 1838-இல் முடிக்கப்பட்ட இச்சாலை அமைப்பிற்கு 4·3 மில்லியன் டாலர்கள் செலவாகியது. இதுவே அமெரிக்காவின் கீழ்ப் பிரதேசத்திற்கும் நடு மேற்குப் பிரதேசத்திற்கும் இடையே அமைந்ததொரு பெருஞ் சாலையாக விளங்கியது. கூட்டாட்சி அரசு, அடுத்து இத்துறையில் மேலும் பங்கெடுத்துக் கொள்ளுமுன் இந்நடவடிக்கையின் சட்டபூர்வத் தன்மை குறித்து ஆட்சேபனை ஒன்று எழுப்பப்பட்டது. இதன் விளைவாக முடிவில் கூட்டாட்சி அரசாங்கத்தின் சாலை அமைப்புப்பணி கைவிடப்பட வேண்டியதாயிற்று. இருப்பினும், சிறந்த தொடர்பு வசதிகளின் அத்தியாவசியத்தை உணர்ந்த அமெரிக்க இராச்சிய அரசாங்கங்கள் இப்பணியைத் தாங்களே மேற்கொள்ளலாயின.

கால்வாய்களின் வளர்ச்சியும், இரயில்வேக்களின் வளர்ச்சியும் பின்னர் ஓங்கியிருந்த காலத்தில் சாலை அமைப்பில் ஒரு சிறிது மந்தம் ஏற்பட்டது. அதாவது, 19-ஆம் நூற்றாண்டின் முடிவு வரை சாலை அமைப்பில் ஊக்கம் குன்றி இருந்தது. ஆனால், சிகாகோ நகரத்தில் ஆரம்பிக்கப்பட்ட 'நற்சாலைகள் இயக்கத்தின்' காரணமாக 1890-க்குப்பின் சாலை அமைப்பில் ஊக்கம் மீண்டது. மேலும், மோட்டார் வண்டியின் தோற்றம் சாலை அமைப்பை மிக அத்தியாவசியமாக்கிவிட்டது. ஆகவே, கூட்டாட்சி அரசாங்கமும் இராச்சிய அரசாங்கங்களும் இத்துறையில் பெருங் கவனம் செலுத்த ஆரம்பித்தன. இச்சாலை வளர்ச்சியின் வேகத்திற்கு ஆதாரமாக, முதல் உலகப் போருக்கு முன்னர், சாலை அமைப்பிற்காக அமெரிக்காவில் செலவிடப்பட்ட தொகைகளைக் குறிப்பிடலாம். இராச்சிய அரசாங்கங்கள் மட்டுமே இவ்வகையில் 137 மில்லியன் டாலர்களைச் செலவுசெய்தன; கூட்டாட்சி அரசாங்கம் 37 மில்லியன் டாலர்களைச் செலவு செய்தது. 1916-க்கும் 1922-க்கும் இடையே 28,000 மைல்கள் நீளமுள்ள சாலைகள் அமைக்கப்பட்டுவிட்டன. கிராமப்புறத்

தபால் சாலைகளின் சட்டம் (*Rural Post Roads' Act*) என்ற 1916-ஆம் ஆண்டுச் சட்டத்தின் கீழும், அதற்குப் பின்னர் இயற்றப்பட்ட துணைச் சட்டங்களின் கீழும் கூட்டாட்சி அரசு, இராச்சிய அரசாங்கங்கள் முதற்படி சாலைகளையும், இரண்டாம் படி தொடர்புச் சாலைகளையும் அமைத்துக்கொள்வதற்கு அவைகளுக்கு மானியமளித்து வந்துள்ளது. இதன் பயனாக 1950-க்குள் 3 இலட்சம் மைல்கள் நீளமுடைய சாலைகள் சீரமைக்கப்பட்டுவிட்டன. இதற்காகக் கூட்டாட்சி அரசாங்கம் 400 மில்லியன் டாலர் தொகையை அளித்து உதவியது என்பதைக் குறிப்பிட வேண்டும். இத்துணை முன்னேற்றம் ஏற்பட்டிருந்துங்கூட அமெரிக்காவின் 3 மில்லியன் மைல்கள் நீளமுள்ள கிராமப்புறச் சாலைகளில் பாதியைக்கூடச் சீர்படுத்த இயலவில்லை என்பதை ஒப்புக்கொள்ளவேண்டும். சாலை முன்னேற்றமும், மோட்டார் வண்டியின் தோற்றமும் அமெரிக்கப் பொருளாதார சமூக வாழ்க்கையில் ஏற்படுத்திய விளைவு மிகப் பெரிதாகும். இவற்றின் பயனாகப் பல மில்லியன் மக்களுக்கு வேலை கிடைத்ததுடன் நாட்டின் வளர்ச்சியும் விரைவுபடுத்தப் பட்டது. மேலும், கிராமப்புறங்களின் தனிமையை அகற்றி வேளாண்மைச் சமூகங்களையும் நகர சமூகங்களையும் இணைத்து, அவற்றைப் பெரு நகரங்களின் வாழ்வுடன் பிணைத்து, புதியதொரு சமுதாயத்தையே இது உருவாக்கிவிட்டது என்று கூறினால் மிகையாகாது. “தற்கால வாழ்வின் பல்வேறு அம்சங்களுக்கும் புது உருவளிக்குமொரு புத்தாக்கமாகவே அது கருதப்படவேண்டும்”[1]

### நதிகள், கால்வாய்களின் வளர்ச்சி

அமெரிக்கக் குடியேற்றங்களின் ஆரம்பகால முதலே அந்நாட்டில் இயற்கையாயமைந்த நதிகளும், ஏரிகளும் வாணிகத்திற்கும், போக்குவரத்துத் தொடர்புக்கும் ஏற்ற பெரும் பாதைகளை அளித்தன. இவ்வகையில் இயற்கையிலேயே பல நதிகளையும், ஏரிகளையும் பெற்றிருந்தது அமெரிக்காவின் பெரும்பேறு ஆகும். ஆயினும், உள்நாட்டு நீர்ப்பாதைகளாய நதிகள், கால்வாய்கள் முதலியவற்றின் முறையான வளர்ச்சி

1. Willey and Rice: Communication Agencies and Social life, p. 39.

1807-இல் நீராவிப்படகு (Steamboat) அமைக்கப்பட்ட பின்னரே தொடங்கியது எனலாம். அதன் பின்னர் நீராவிப் படகுகள் விரைவில் பெருகி ஹட்சன், மிசிசிபி மற்றும் பல நதிகளிடையே போக்குவரத்துத்தொடர்பை ஏற்படுத்திவிட்டன. மேலும், இதன் விளைவாக அமெரிக்காவின் தென் பிரதேசமும் வடமேற்குப் பிரதேசமுங் கூட இணைக்கப்பட்டுவிட்டன என்று குறிப்பிடவேண்டும்.

வெர்ஜீனியா இராச்சியம் ஜேம்ஸ் நதி கம்பெனிக்கு அளித்த சாசனமே முதன் முதலில் கால்வாய் அமைப்பிற்கு வழிகோலியது. அமெரிக்காவின் முதல் கால்வாய் வெர்ஜீனியா இராச்சியமும் வடக்குக் கரோலினு இராச்சியமும் சேர்ந்து அளித்த சாசனத்தைக் கொண்டு 1794-இல் திறக்கப்பட்டது. இதைத் தொடர்ந்து பல்வேறு இராச்சியங்களிலும் பற்பல கால்வாய்கள் திட்டமிடப்பட்டனவாயினும் நீராவிப் படகுகளின் தோற்றத்திற்குப் பின்னரே, கால்வாய் அமைப்பின் பொற்காலம் தொடங்கியது எனலாம். இவ்வகையில் அமைக்கப்பட்ட முதலாவது பெருங்கால்வாய் நியூயார்க் இராச்சியத்தில்தான் மேற்கொள்ளப்பட்டது. இக்கால்வாய் ஈரி ஏரியையும் ஹட்ஸன் குடாவையும் இணைக்கக்கூடிய வகையில் அமைக்கப்பட்டது. ஆதியில் அமைக்கப்பட்ட ஈரிக்கால்வாயின் நீளம் 363 மைல்கள் ஆகும். அதற்கான செலவின் தொகை 7 மில்லியன் டாலர்கள் ஆகும். முதலில் இக்கால்வாயின் அகலம் 40 அடியாகவும், ஆழம் 4 அடியாகவும் இருந்தது. பின்னர், இதன் அகலம் 70 அடியாகவும், ஆழம் 7 அடியாகவும் ஆக்கப்பட்டது. இந்த ஈரிக் கால்வாய் அமைப்பு பெரியதொரு வெற்றியாய் அமைந்தது. இது அமைக்கப்பட்ட 9 ஆண்டுகளுக்குள்ளேயே அதிலிருந்து வசூலிக்கப்பட்ட சுங்கங்களின் மொத்தத் தொகை அதன் அமைப்புச் செலவின் மொத்தத்தை விஞ்சிவிட்டது என்பது குறிப்பிடத்தக்கது. இக்கால்வாய்கள் கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையே நெருங்கிய தொடர்புகளை ஏற்படுத்திவிட்டதுடன் அமெரிக்காவின் பெருந் தானிய உற்பத்திப் பிரதேசங்களை எல்லாம் திறந்துவிட்டன. மேலும், போக்குவரத்துக்குப் பிடிக்கும் காலத்தை இவை வெகுவாகக் குறைத்ததுடன் சுமைக்

கட்டணங்களையும் குறைத்தமையால் விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு வழி ஏற்பட்டது என்று கூறலாம்.

ஈரிக் கால்வாயின் வெற்றியைத் தொடர்ந்து அமெரிக்காவில் 'கால்வாய்ப் பித்து' (*Canal mania*) ஒன்று தாண்டவமாடியது என்று கூறவேண்டும். எங்கும் புதுப்புதுக் கால்வாய்கள் அமைக்கு முயற்சிகள் செய்யப்பட்டன. பென்சில்வேனியா இராச்சியம் பிலடெல்பியாவிலிருந்து பிட்ஸ்பர்க் வரை 10 மில்லியன் டாலர் செலவில் பல கால்வாய்களைக் கொண்டதொரு போக்குவரத்துத் திட்டத்தை நிறைவேற்றியது. இதைக் கண்ட மேற்கத்திய இராச்சியங்களும் கால்வாய் அமைப்பில் பேரார்வத்தோடு ஈடுபடலாயின. இவற்றுள் இந்த இராச்சியங்களிலுள்ள பேரேரிகளையெல்லாம் ஒகியோ, மிசிசிபி நதிகளுடன் இணைப்பதற்கு அமைக்கப்பட்ட திட்டங்களே மிக முக்கியத்துவம் பெற்றவை ஆகும். 1832-இல் ஒகியோ இராச்சியம் ஒகியோ நதியையும் ஈரி ஏரியையும் இணைக்கும் கால்வாயொன்றைப் பூர்த்தி செய்து விட்டது.

அமெரிக்காவின் பல்வேறு இராச்சியங்களுக்கிடையே ஏற்பட்ட வாணிகப் போட்டியும், கால்வாய் அமைப்பில் ஏற்பட்ட பித்தும், ஊகவாணிகமும் (*Speculation*) சேர்ந்து அமெரிக்காவில் கால்வாய்களின் அமைப்பை மித மிஞ்சியதாக்கிவிட்டன. நாட்டின் அரசியல் அமைப்புச் சட்டத்தில் கண்டுள்ள அதிகாரத் தடைகளின் காரணமாகக் கூட்டாட்சி அரசாங்கம் நாட்டின் கால்வாய் வளர்ச்சிக்கானதொரு தேசியக் கொள்கையை வகுக்க இயலவில்லை. இதன்விளைவாக ஒவ்வொரு இராச்சியமும் தன் விருப்பம்போல் கடன்களைப் பெற்றுக் கால்வாய்களை அமைக்கத் தலைப்பட்டன. தங்களின் அக்காலத்திய தேவைக்கு அதிகமாகவும், தங்கள் நிதி வசதியை மீறும் வகையிலும் பல்வேறு இராச்சியங்களும் மிதமிஞ்சிய அளவுக்குக் கால்வாய்களில் முதலீட்டைச் செய்ய ஆரம்பித்தன. ஆரம்பக் கால்வாய்களின் வெற்றியால் கவரப்பட்ட வெளிநாட்டவர்களும், குறிப்பாக ஆங்கிலேயர்கள் அமெரிக்க நாட்டுநிலை பற்றிய தங்கள் அறியாமையின் காரணமாக, தங்கள் மூலதனத்தைப் பெருவாரியாக அமெரிக்காவுக்கு அனுப்பிக் கால்வாய் அமைப்பில்

ஏராளமாக முதலீடு செய்தனர். இதனாலேயே அமெரிக்காவில் 1837-ஆம் ஆண்டில் நிதித்துறை பீதி ஒன்று (*Financial Panic*) விளைந்தது. கால்வாய் அமைப்பின் செழுமைக்கு ஏற்பட்ட இம்முறிவின் விளைவாகப் பெரும்பாலான இராச்சியங்கள் கால்வாய் அமைப்பைத் தொடர்ந்து நடத்த இயலாமற் போயிற்று. தாங்கள் கால்வாய் அமைப்பிற்கெனப் பெற்றிருந்த கடன்களுக்கும் வட்டி செலுத்த இயலாமல் தவிக்கநேரிட்டது. இந்நிலையில்தான் பெரும்பாலான இராச்சியங்கள், குறிப்பாக மிசிசிபி, லூயீசியானா, மேரிலாந்து, பென்சில்வேனியா, இந்தியானா, மிச்சிகன் போன்றவை தாங்கள் பெற்றிருந்த கடன்களை மறுதளித்தன (*Repudiated their debts*). ஒஹியோவையும் நியூயார்க்கையும் தவிர அநேகமாக மற்றெல்லா இராச்சியங்களும் தாங்கள் அமைத்த கால்வாய்களைத் தனியாரிடம் விற்று விட வேண்டியதாயிற்று. இத்துறையில் இராச்சிய அரசாங்கங்கள் அடைந்த தோல்வியின் காரணமாக இனிப் பொது நிதிகளை இத்தகைய காரியங்களுக்குப் பயன்படுத்துவது தடுக்கப்பட்டது. ஆகவே, இக்காலத்திற்குப் பின்னர், கால்வாய் அமைப்புப் பணியைத் தனி நபர்களும், கார்ப்பரேசன்களுமே மேற்கொண்டன என்று அறிய வேண்டும்.

20-ஆம் நூற்றாண்டில் மறுபடியும் உள்நாட்டு நீர்ப்போக்குவரத்துப் பாதைகளையும், கால்வாய்களையும் அமைப்பதில் ஊக்கம் மீண்டது. இதற்குக் காரணம் மற்றைய போக்குவரத்துமுறைகளைக் காட்டிலும் நீர்ப்போக்குவரத்து மிகவும், இலாபகரமானதாக இருந்ததே ஆகும். அமெரிக்காவின் ஏற்றுமதி வாணிகத்திற்கு இவ்வசதி மிகவும் தேவைப்பட்டமையாலும், விவசாய மேற்குப் பிரதேசத்தின் இக்கட்டுகளைப் போக்குதற்குக் கால்வாய்கள் பேருதவியளிக்கக்கூடியவையாயிருந்தமையாலும் மேலும் கால்வாய் அமைப்பில் ஊக்கம் அதிகரித்தது. 1914-இல் அமைத்துமுடிக்கப்பட்ட காடு (*Cod*) முனைக் கால்வாய், பஸ்ஸார்டு குடாவையும் (*Bussard's Bay*) ஹவுஸ்டன் கால்வாயையும் (*Houston canal*) இணைத்தது. 1933-இல் மிச்சிகன் ஏரி, இலினொய் நதி, மிசிசிபி நதி முதலியவற்றை இணைக்கக் கூடிய இலினொய் நீர்ப்பாதை திறக்கப்பட்டமையால் அமெரிக்காவின் பேரேரிகளுக்கும் பெருங்குடாவுக்கும்

(*The Gulf*) ஒரு நேரடி நீர் வழி ஏற்படுத்தப்பட்டு விட்டது. ஓகியோ நதிக் கால்வாய்த் திட்டமொன்று 125 மில்லியன் டாலர் செலவில் அமைக்கப்பட்டு 1929-இல் திறக்கப்பட்டது. அண்மைக் காலத்தில் அமைக்கப்பட்ட மற்றுமொரு குறிப்பிடத்தக்க உள்நாட்டு நீர்ப்போக்குவரத்துத் திட்டம் அமெரிக்க ஐக்கிய நாட்டையும் கனடாவையும் இணைக்கும் செண்ட்லாரன்ஸ் கப்பல் கால்வாய்த் திட்டம் ஆகும். இத்திட்டத்திற்கு ஒரு பில்லியன் டாலர் பிடித்தது என்பது குறிப்பிடத்தக்கது.

**இரயில்வேக்கள்**

போக்குவரத்துத் துறையில் மிகப் பிரம்மாண்டமான முன்னேற்றம் காணப்பட்ட துறை இரயில்வே அமைப்புத் துறையேயாகும். பல காலம் வரை இரயில்வேக்களின் வரலாறு நாட்டின் வரலாருகவே இருந்தது என்று கூறலாம். அமெரிக்கப் பொருளாதாரத்தின் மற்ற எந்தத் துறையையும் விட இரயில்வே துறையே அந்நாட்டின் முறைகளை மிகவும் சிறப்பாகப் பிரதிபலிப்பதாயிருந்தது. இத்துறையில்தான் போட்டியின் பெருங்கேட்டையும் ஊகவாணித்தின் பெருந்தீங்கையும் ஒருங்கே காணலாம். மேலும், மிகப் பெருஞ் சர்வாதீனங்களும், தொழில் இணைப்புக்களும் இத்துறையிலேயே தோன்றின. அமெரிக்க வாழ்வில் மிக மோசமானவையும் தகாதவையுமான தொழில் முறைகள் இரயில்வே துறையிலேதான் காணப்பட்டன. முதலும், பணமும் செலுத்தக்கூடிய ஆதிக்கத்தின் உச்சத்தையும் இத்துறையில்தான் பார்க்கலாம். இரயில்வேக்களின் வளர்ச்சிக்கு அமெரிக்காவில் பற்பல சாதகமான சூழ்நிலைகள் இருந்தன என்பதைக் குறிப்பிடவேண்டும். முதலில் நாட்டின் பரப்பு மிகப் பெரிதாயிருந்தது; அல்லிக்கனி மலைத்தொடர், ராக்கி மலைத்தொடர் தவிர, பிற இடங்களிலெல்லாம் பூமி ஒரே சமமாகவே இருந்தது இரயில்வே அமைப்புக்கு மிகவும் சாதகமாயிற்று. மேலும், நீர்ப்போக்குவரத்துப் பாதைகள் பனிக் காலத்தில் உறைந்தமையால் வேறு போக்குவரத்துச் சாதனம் தேவைப்பட்டது. அத்துடன் விவசாயத்துறையிலும், தொழில் உற்பத்தித் துறையிலும் ஏற்பட்ட பிரம்மாண்டமான

வளர்ச்சியானது இரயில்வேயின் வளர்ச்சியை அத்தியாவசியமாக்கிற்று. அமெரிக்க மக்களின் மேற்கு நோக்கிய குடியேற்ற ஓட்டமும், கலிபோர்னியா பொன் சுரங்கக் கண்டுபிடிப்பும், கொலராடோ வெள்ளிச் சுரங்கமும், தென்பிரதேசப் பருத்திப் பயிர் சாகுபடியின் பெரு வளர்ச்சியும், இரும்புத்தண்டவாளங்களின் புதிய உற்பத்தியும் இரயில்வேயின் வளர்ச்சிக்கு மென்மேலும் தூண்டுதல் அளித்தன.

அமெரிக்காவில் முதன் முதலில் பீட்டர்-கூப்பர் என்பவரால் அமைக்கப்பட்ட டாம்தம் (*'Tom Thumb'*) என்ற இரயில்வே எஞ்சின் ஒன்று பரீட்சிக்கப்பட்டது. அப்போது அதன் வேகம் மணிக்கு 13 மைல்களேயாகும். 1830-இல் தான் அமெரிக்காவின் முதல் இருப்புப்பாதை சௌத் கரோலினு என்னும் இராச்சியத்தில் சார்லஸ்டன் என்னும் இடத்தையும் ஹாம்பர்க் என்னும் இடத்தையும் இணைக்கும் வகையில் அமைக்கப்பட்டது. இரயில்வே அமைப்பிற்கு உதவியாக அமெரிக்கக் கூட்டாட்சி அரசாங்கம் இனுமாக நிலமும், தாராளமாக நிதி மானியங்களும் வழங்கியதுடன் இரயில்வே கம்பெனிகளின் கடன் பத்திரங்களுக்கு உத்தரவாதமும் அளித்தது. ஆரம்ப இரயில்வேக்கள் யாவும் நாட்டின் கால்வாய்களுக்கும் சாலைகளுக்கும் துணை வசதிகளாகவே அமைக்கப்பட்டன. ஆகவே, நாடு முழுவதுக்கும் பொதுவான ஓர் இரயில்வே அமைப்புத் திட்டமோ கொள்கையோ அதுபோது இல்லாதிருந்தது. மேலும், இவ்வாறு அமைக்கப்பட்ட இரயில்வே பாதைகளின் அகலங்கள் (*gauges*) பலவகைப்பட்டவையாக இருந்தன. இருப்பினும் 1860-க்குள் 30 ஆயிரம் மைல்கள் நீளமுள்ள இருப்புப் பாதைகள் அமைக்கப்பட்டுவிட்டன. அப்போது அமைக்கப்பட்ட இருப்புப் பாதைகள் உறுதியாகவும் திருப்திகரமாகவும் அமைக்கப்படவில்லையாதலால் பின்னர் அதிகப் பளுவுள்ள இரயில்கள் அவற்றில் ஓடியபோது அடிக்கடி விபத்துக்கள் ஏற்படலாயின.

அமெரிக்க இரயில்வேக்களின் வரலாற்றில் அந்நாட்டின் உள்நாட்டுப் போர் ஒரு முக்கிய கட்டத்தைக் குறிக்கின்றது எனலாம். நாட்டின் நிர்வாகத்திற்கும், படைகளின் போக்கு

வரத்துக்கும் போதுமான இரயில்வே போக்குவரத்து வசதிகள் நாட்டில் இல்லையென்பதை இப்போர் உணர்த்திற்று. ஆகவே, உடனடியாகக் கூட்டாட்சி அரசாங்கம் இரயில்வே அமைப்பில் முன்னைக்காட்டிலும் அதிகமான ஆர்வம் காட்டத் தொடங்கியது. அமெரிக்க நாட்டு இரயில்வேக்களின் பேரில் உள்நாட்டுப் போர் இரண்டு மாறுபட்ட விளைவுகளை ஏற்படுத்தியது என்று கூறுதல் வேண்டும். 'ஒருபுறம் அது இரயில்வேக்களுக்கு அழிவு ஏற்படுத்தியது; மற்றொருபுறம் அது அவைகளுக்குத் தூண்டுதலளித்தது.'[1] தெற்குப் பிரதேசத்தில் இரயில்வே தளவாடங்களும், எந்திரங்களும் விரைவில் தேய்ந்து போயின அல்லது அவை அழிக்கப்பட்டுவிட்டன. ஆனால் வடக்குப் பிரதேசத்திலோ இவ் உள்நாட்டுப் போர், புதிய இரயில்வே அமைப்புக்கு மிக்க ஊக்கமளித்தது. போரின் தேவையை எண்ணி, அமெரிக்கக் கண்டத்தைக் கடக்க உதவும் இருப்புப் பாதை ஒன்று அக்காலத்தில் முதன் முதலாக ஆரம்பிக்கப்பட்டது. ஆனால், போர் முடிந்த பின்னர் அமெரிக்காவின் கீழ், மேல் கடற்கரைச் சமவெளிகள் இரண்டையும் இணைக்கக்கூடிய வகையில் இரயில்வேக்கள் அமைக்கப்படலாயின. இத்திட்டமே போருக்குப்பின் இரயில்வே வளர்ச்சியின் மிக முக்கிய அம்சமாக விளங்கியது. இதற்கு உதவும் வகையில் அமெரிக்க அரசாங்கம் 55 மில்லியன் டாலர் பணத் தொகையையும், 25 மில்லியன் ஏக்கராக்கள் நிலத்தையும் இரயில்வேக்களுக்கு அளித்தது. இவற்றின் பயனாகப் போர் முடிந்தபின் 10 ஆண்டுகளுக்குள்ளேயே 30,000 மைல்கள் நீளமுள்ள இரயில்வேக்கள் புதிதாக அமைக்கப்பட்டுவிட்டன. 1873-இல் ஏற்பட்ட நிதித்துறை பீதியின் (panic) காரணமாக இரயில்வேயின் வளர்ச்சி சிறிது தடைப்பட்டதாயினும், அடுத்த 20 ஆண்டுகளுக்குள்ளேயே இன்னுமொரு 80,000 மைல்கள் நீளமுள்ள இரயில்வேக்கள் அமைத்து முடிக்கப்பட்டன. 1900-ஆம் ஆண்டிற்குள் இரயில்வேக்களின் நீளம் 198, 964 மைல்களாகிவிட்டன. 1920-இல் இவற்றின் நீளம் 263, 821 மைல்களாக அதிகரித்துவிட்டது. அப்போது ஐரோப்பாக் கண்டம் முழுவதிலும் இருந்த இருப்புப்பாதைகளின் நீளத்தை

1. Faulkner: American Economic History, p. 477

விட அதிகமான இருப்புப்பாதைகளை அமெரிக்கா பெற்றிருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் கூறப்போனால், 1914-ஆம் ஆண்டிலேயே அமெரிக்காவில் இரயில்வேயின் வளர்ச்சி முற்றுப் பெற்றது என்று கூறவேண்டும். இனி இரயில்வேயின் வளர்ச்சிக்கு அமெரிக்காவில் இடமின்று என்னும் நிலை வந்து விட்டது. இவ்வாண்டுக்குப்பின் புதிதாக அமைக்கப்பட்ட இரயில்வேக்களைவிட, ஒவ்வோர் ஆண்டும் புதிதாகக் கைவிடப்பட்ட இரயில்வேக்கள் அதிகமாயிருந்தன. இவ்வாறு கடந்த சில ஆண்டுகளில் ஆயிரம் மைல்களுக்கும் அதிகமான இரயில்வேக்களை ஒவ்வோர் ஆண்டும் அமெரிக்கா கைவிட வேண்டியிருந்திருக்கிறது என்பது மிகவும் கவனத்திற்குரியது.[1]

1860-ஆம் ஆண்டுக்குப் பின்னர் அமெரிக்க இரயில் வேக்களில் சர்வாதீனங்களும், தொழில் இணைப்புக்களும் தோன்றலாயின. அவ்வாண்டுக்குப்பின் இப்போக்கு இரயில்வே வளர்ச்சியின் ஒரு முக்கிய அம்சமாயிற்று. அப்போதிருந்த இரயில்வே கம்பெனிகளின் எண்ணிக்கை மிக அதிகமாயிருந்ததுடன், அவற்றின் அளவு மிகச் சிறிதாயிருந் தமையால் போக்குவரத்துக்குப் பற்பல சங்கடங்கள் ஏற்பட்டன. ஆகவே, போக்குவரத்து வசதிகளை அதிகரிக்கச் செய்யும் முயற்சியில் இரயில்வே கம்பெனிகளின் இணைப்பானது தவிர்க்க முடியாததாகிவிட்டது. நிர்வாகத்திலும் உற்பத்தியிலும் சிக்கனங்களை ஏற்படுத்தி வீணை போட்டியைத் தவிர்க்கும் நோக்குடன் இரயில்வேக்கள், தங்கள் இணைப்பால் சர்வா தீனங்களை ஏற்படுத்திக் கொள்வதற்கு ஆதரவு காட்டப்பட்டது. இவ்வகையில் ஏற்பட்ட முதலாவது இணைப்பு பதினேரு இரயில்வேக்களைச் சேர்த்து 1853-இல் தோற்றுவிக்கப்பட்ட நியூயார்க்-சென்டிரல் இரயில்வே நிறுவனமாகும். மறுபடியும் 1858-க்குள் இதனேடு இன்னும் ஐந்து இரயில்வேக்கள் சேர்க்கப்பட்டுவிட்டன. பின்னர் இதைப்போன்ற பல இணைப்புக்கள் தோன்றின. அவை யாவும் நீண்ட தூரத்துக்கு நேரிடையான போக்குவரத்து வசதியை அளிப்பதற்காகவே பெரும்பாலும் அமைக்கப்பட்டன. ஆகவே, மக்களிடையே இவ்

1. Faulkner: American Economic History, p. 478

விணைப்புக்கள் எவ்வகையான ஆட்சேபணையையும் எழுப்பவில்லை என்பதில் வியப்பில்லை.

ஆயினும், 1880-க்குப் பின்னர் இரயில்வே இணைப்புகளின் நோக்கங்களும் தன்மையும் முற்றிலும் மாறுபட்டுவிட்டன என்று கூறவேண்டும். பழைய பொதுநல நோக்கம் மறைந்து, இது முதல் இரயில்வே இணைப்புக்களின் முக்கிய நோக்கமெல்லாம் போட்டியை ஒழித்துச் சர்வாதீனத்தை நிலைநிறுத்தும் ஒன்றாக ஆகிவிட்டது. இவ்வாறு அமெரிக்கத் தொழிலிலும் போக்குவரத்துத் துறையிலும் பற்பல சர்வாதீனங்கள் தோன்றி நாடு முழுதும் சர்வாதீனத் தொழில் மயமாகிவிட்டது. இரயில்வே வேந்தர்களான வாண்டர்பில்ட் (*Vanderbilt*), ஹாரிமேன், கூல்டு (*Gould*), மார்கேன் முதலியவர்கள் நாட்டின் போக்குவரத்தையும் தொழிலையும் ஆட்டிப்படைத்தனர்.

அடுத்து, இச்சர்வாதீனங்கள் கடைப்பிடித்த நடைமுறைகளைப் பார்ப்போம். போட்டியாளர்களை ஒழித்துவிடுவதற்காக விலை வெட்டும் போர் நடாத்துதல், வேண்டிய நபர்களுக்கும் கார்ப்பரேசன்களுக்கும் கட்டணங்களில் சலுகை காட்டுதல், நுகர்வோரிடையே கட்டணங்களில் பேதங்காட்டுதல், பெருவாரி இலஞ்சமளித்தல், அரசியல் செல்வாக்கைத் தங்கள் தொழிலுக்குப் பயன்படுத்திக்கொள்ளல் முதலியவையே இச்சர்வாதீனங்களின் செயல் முறைகளாயின. சொந்த இலாபத்தையும் வலிமையையும் பெருக்கிக்கொள்ள முயன்ற இச்சர்வாதீனர்கள், தங்கள் போராட்டத்தில் பற்பல ஏமாற்று வித்தைகளைப் பயன்படுத்தத் தலைப்பட்டனர். இவ்வகையிலேயே ஜே கூல்டு (*Jay Gould*) போன்றவர்கள் பெருஞ்செல்வம் திரட்டிக் கொண்டனர். 1900-ஆம் ஆண்டில் பி. மார்கன் என்பார் அமெரிக்க நாட்டு இரயில்வே சாம்ராச்சியத்திற்கே இணையற்ற மன்னனாகி விட்டார் என்பது குறிப்பிடத்தக்கது. இதன் பின்னர்தான், மேற்கூறிய இரயில்வே நிர்வாக ஊழல்களையும், தகாத முறைகளையும் தடுப்பதற்காகப் பற்பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன என்பதையும் அறிய வேண்டும். இதற்கென 1887-இல் தான் கூட்டாட்சி அரசாங்கச் சட்டம் ஒன்று முதன் முதலாக நிறைவேறியது. இச்சட்டத்தின்கீழ் இராச்சியங்கள் வணிகக் கமிசன் (*Inter-State Commerce*

Commission) ஒன்று நியமிக்கப்பட்டது. தனி நபர்களுக்கிடையேயும், இடங்களையும் பண்டங்களையும் பொறுத்தும் எவ்விதச்சலுகை பேதங்கள்காட்டுவதையும் இச்சட்டம் தடுத்தது. இரயில்வேக் கம்பெனிகளுக்குள் 'பூல்' ஒப்பந்தங்கள் (Pooling Contracts) செய்து கொள்ளப்படுவதையும், முன்னெச்சரிக்கையின்றிக் கம்பெனிகள் தங்கள் கட்டணங்களை மாற்றுவதையும் இச்சட்டம் கூடாதெனக் கூறிவிட்டது. ஐந்து அங்கத்தினர்களைக் கொண்ட மேற்கூறிய இராச்சியங்கள் வணிகக் கமிசன் இச்சட்டத்தின் பல்வேறு சரத்துக்களையும் நிறைவேற்றுவதற்கென்றே ஏற்படுத்தப்பட்டது. ஆயினும், அமெரிக்காவில் நீதிமன்றங்களின் தீர்ப்புக்களும், அரசியல் அமைப்புச் சட்டத்தின் அம்சங்களும் இக்குழுவின் பணிக்கு இடைஞ்சலாயிருந்தன என்று குறிப்பிடவேண்டும். 1903-இல் கொண்டு வரப்பட்ட எல்க்கின்ஸ் சட்டம் (Elkins Act) போக்குவரத்துக் கம்பெனிகளின் சலுகை பேதங்கள் எவை என்பதற்கு விளக்கம் கொடுத்து வரையறுத்ததுடன், இரயில்வேக் கம்பெனிகளும், கப்பல் முதலாளிகளும் சட்டத்திற்குப் புறம்பான கட்டணங்களை விதிப்பதை நீதிமன்றங்களின் தண்டனைக்குள்ளாக்கியது. 1906-ஆம் ஆண்டில் கொண்டு வரப்பட்ட ஹெப்பர்ன் சட்டம் (Hepburn Act) மேற்கூறிய கமிசனுக்கு விரிவான மேற்பார்வை அதிகாரங்களை வழங்கியதுடன், போக்குவரத்துக்கான உச்ச கட்டணங்களை நிர்ணயிக்கவும் அதற்கு அதிகாரம் அளித்தது. 1910-இல் மார்ன்-எல்கின்ஸ் சட்டம் (Marn-Elkins Act) எந்த ஒரு கட்டணமாறுதலையும், அதுபற்றி நீதிமன்றங்கள் விசாரணை செய்து முடிவு கூறும்வரை, அதை நிறுத்தி வைக்கவும் அக்கமிசனுக்கு அதிகாரம் அளித்தது. இக்கமிசனின் முடிவுகளுக்கு எதிராகச் செய்யப்படக்கூடிய அப்பீல்களை விசாரிப்பதற்கென ஒரு வணிகத் துறை நீதிமன்றமும் (Commerce Court) ஏற்படுத்தப்பட்டது. 1914-இல் முதலாவது உலகப் போர் ஆரம்பித்தபோது அமெரிக்க இரயில்வேக்கள் மிகவும் நலிந்த நிலையிலிருந்தன. எந்திர தளவாடங்களும் நிதி வசதிகளும் போதுமானவையாயில்லை. சான்ருக, நிதி இக்கட்டுகளுக்குள்ளாகி, நீதிமன்றங்களின் பிரதிநிதிகள் கையில் நிர்வாகத்திற்கு விடப்பட்ட இரயில் பாதையின் நீளம் 1915-இல் 42,000 மைல்களாகும்.

அமெரிக்கா போரில் நுழைந்தவுடன் நாட்டின் எல்லா இரயில்வேக்களும் ஜனாதிபதியால் எடுத்துக்கொள்ளப்பட்டு விட்டன. அவற்றின் நிர்வாகம் ஒரு டைரக்டர் ஜெனரல் கையில் ஒப்படைக்கப்பட்டுவிட்டது. போர்க்காலத்தின்போது இவ்வாறு இரயில்வேக்கள் கூட்டாட்சி அரசாங்கத்தினால் நிர்வகிக்கப் பட்டனவென்றால், போரின் வெற்றிக்கு அந்நடவடிக்கை தேவைப்பட்டது என்பதே காரணமாகும். பல்வேறு இரயில்வேக் களிடை ஓர் இணைப்பு ஏற்படுத்தியும், அவற்றின் நிர்வாகச் செலவுகளை மட்டுப்படுத்தியும் இரயில்வேக்களின் ஆற்றலை உயர்த்துவதே அரசாங்கத்தின் நோக்கமாகும். 1920-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் இரயில்வேக்கள் மீண்டும் தனியார் கையில் விடப்பட்டன. போர் ஆண்டுகளில் இரயில்வே நிர்வாகத்தை நடத்தியமையால் தனக்குக் கிடைத்த அனுபவத்தைக் கொண்டு கூட்டாட்சி அரசாங்கம் 1920-ஆம் ஆண்டில் போக்குவரத்துச் சட்டம் ஒன்றை இயற்றியது. இச்சட்டம் பூல் இணைப்பை அனுமதித்தது. இச்சட்டத்தின்கீழ் இரயில்வேக்களின் உச்ச அளவுக் கட்டணங்களை நிர்ணயிக்க, இராச்சியங்களின் வணிகக் கமிசனுக்கு அதிகாரமும் அளிக்கப்பட்டது. மேலும், இரயில்வேக்களை மண்டல அடிப்படையில் இணைக்கவும், இரயில்வேக்களின் முதலாக்க நடவடிக்கையைக் (Capitalisation) கட்டுப்படுத்தவும் இச்சட்டம் வகை செய்தது. மேலும், இரயில்வேக்களின் நிகர வருமானம் 6 சதவீதத்திற்குக் கூடுதலாக இருப்பின், இக்கூடுதலில் பாதியை இரயில்வேக்கள் அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டுமென்றும் இருந்தது. மேலும், கூலித் தகராறுகளைத் தீர்ப்பதற்குத் தொழிலாளர் சபை (Labour Board) ஒன்றையும், கூலிச் சார்பற்ற தகராறுகளைத் தீர்த்து வைக்க இரயில்வே ஒழுங்குப்பாட்டுச் சபை (Railway Board of Adjustments) ஒன்றையும் இச்சட்டம் ஏற்படுத்தியது.

1920-ஆம் ஆண்டுச் சட்டத்திற்குப் பின்வந்த சட்டங்களிலெல்லாம் மிக முக்கியமானது, 1933-ஆம் ஆண்டுப் போக்குவரத்து அவசரச் சட்டமே (Emergency Transportation Act) ஆகும். இச்சட்டம் அமெரிக்காவின் நியூடீல் திட்டத்தின் ஓர் அம்சமேயாகும். நாட்டின் பொருளாதாரத்தில்

ஏற்பட்டிருந்த உடனடியான நெருக்கடியைச் சமாளிப்பதற்கு ஒரு தற்காலிக ஏற்பாட்டை இச்சட்டம் அளித்ததுடன், இரயில்வேக்களில் நிரந்தர முன்னேற்றங்களை ஏற்படுத்துதற்கான சட்ட மாற்றங்களைச் செய்யவும் இச்சட்டம் வாய்ப்பளித்தது. இதற்காக அரசாங்கம் கூட்டாட்சி இரயில்வே ஒருங்கமைப்பாளர் (*Federal Railway Co-ordinator*) ஒருவரையும் நியமித்தது. ஆயினும், இப்பதவி 1936-இல் ரத்து செய்யப்பட்டுவிட்டது. மற்றப் போக்குவரத்துச் சாதனங்களால் இரயில்வேக்களுக்கு ஏற்பட்டிருந்த மிகையான போட்டியிலிருந்து அவற்றைப் பாதுகாப்பதற்காகவே 1940-இல் வீலர்—லீ போக்குவரத்துச் சட்டம் (*Wheeler-Lea Transportation Act*) கொணரப்பட்டது. இரயில்வேக்கள் தங்கள் கட்டணங்களை முறைப்படுத்திக்கொள்வதிலும், தங்களுக்குள் இணைப்புக்கள் ஏற்படுத்திக்கொள்வதிலும், மற்றப் பல துறைகளிலும் அவைகளுக்கு உதவி அளிப்பதற்கென இச்சட்டத்தின்கீழ் விசாரணை ஆராய்ச்சிச் சபை (*Board of Investigation and Research*) ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இரண்டாம் உலகப்போர்க் காலத்தில் இரயில்வேக்கள் தனியார் கையிலிருந்து கொண்டே மிகச் சிறப்பாய்த் தொண்டாற்றியமையால், அரசாங்கம் இரயில்வேக்களின் பேரில் தன்பிடியை அதிகரித்துக் கொள்ளவேண்டிய அவசியமில்லாமற் போயிற்று. 1944-இல் நாட்டுப்பாதுகாப்புப் போக்குவரத்துத் துறையின் ஆணைப்படி அமெரிக்க இரயில்வேக்கள், முன்னர் அவை 1939-இல் ஏற்றிச் சென்றதைவிட இரண்டரை மடங்குக்கு மேலான சரக்குக்களையும், நாலரை மடங்குக்கு மேலான பிரயாணிகளையும் கடத்தின என்று தெரிகிறது. இரயில்வே தளவாடங்களில் அதிகரிப்பு எதுவுமின்றியே இரயில்வேக்கள் போரில் இறுதியான வெற்றிக்குப் பேருதவி புரிந்தன என்பது குறிப்பிடப்படவேண்டியதாகும்.

### இரயில்வேக்களால் ஏற்பட்ட விளைவுகளும் அவற்றின் முக்கியத்துவமும்

பெருமைப்படத்தக்கதொரு பிரம்மாண்டமான இரயில்வே போக்குவரத்து அமைப்பை அமெரிக்கா பெற்றுள்ளது.

அமெரிக்க இரயில்வேக்களில் பணிபுரியும் ஆட்களின் தொகை ஏறத்தாழ இரண்டு மில்லியன்களாகும். அதில் பெண் தொழிலாளிகளின் எண்ணிக்கை மட்டும் ஒரு இலட்சத்திற்கு மேல் ஆகும்.[1] இந்த இரயில்வேக்களின் மூலதனச் சொத்து மட்டும் $27\frac{1}{2}$ மில்லியன் டாலர்களாகும். இவை அமெரிக்க நாட்டின் பல்வேறு பாகங்களையும் ஒன்றுடன் ஒன்று இணைத்ததுடன், மக்களின் இடப் பெயர்ச்சிக்கும், பருத்திச் சாகுபடியின் வளர்ச்சிக்கும், பெரிய மாட்டுப் பண்ணைத் தொழிலுக்கும், இரும்பு எஃகுத் தொழிலின் முன்னேற்றத்துக்கும் பெருந்துணையாக இருந்தன. ஏன்! அமெரிக்காவின் பொருளாதார வளர்ச்சி முழுவதற்குமே அந்நாட்டின் இரயில்வேக்கள் பேருதவி புரிந்திருக்கின்றன எனவேண்டும். மேலும், வணிகமுறை — விவசாயத்தின் வளர்ச்சிக்கும், வெளிநாட்டு வாணிகத்தின் பெருக்கத்திற்கும், பெருவாரி உற்பத்தி—நுகர்வு முறையின் வளர்ச்சிக்கும் இரயில்வேக்கள் பேரளவு உதவிபுரிந்திருக்கின்றன. இரயில்வேக்களின் பொருளாதார முக்கியத்துவம் போக்குவரத்து வளர்ச்சியோடு மட்டும் நின்றுவிடவில்லை. அவற்றின் விளைவுகள் இன்னும் மிகப்பரந்தவையாகும் என்பதை உணரல்வேண்டும். நகரத்திற்கும் கிராமத்திற்குமிடையே ஒரு தொடர்பை ஏற்படுத்தி, அவை இரண்டின் நன்மைகளையுமே மக்கள் அனுபவிக்கும் வாய்ப்பை இரயில்வேக்கள் உண்டாக்கிவிட்டன. நாட்டுப்புறத்தின் தனிமையை அகற்றிய இந்த இரயில்வே வசதிகளின் சமூக முக்கியத்துவம் அளப்பதற்கரியது. அத்துடன் அமெரிக்க ஐக்கிய நாட்டின் முதலீட்டு நிதித்துறையில் இரயில்வேக்களின் பங்குப்பத்திரங்கள்தாம் அந்நாட்டின் முதலீட்டுச் சந்தையிலும் சரி, கடன் நிதிச் சந்தையிலும் சரி மிகவும் முக்கியமானதொரு பங்கை வகிப்பனவாகும்.[2]

## கப்பல் போக்குவரத்து

அமெரிக்க ஐக்கிய நாட்டுக் கப்பல் போக்குவரத்தின் வரலாறும், அந்நாட்டு வணிகக் கப்பல் தொகுதியின் வளர்ச்சியும்

1. Holbrook: The Story of American Railroads p. 450.
2. Faulkner: American Economic History p. 479.

பற்பல ஏற்றத்தாழ்வுகளும், மாறுதல்களும் நிறைந்தவையாகும். அமெரிக்க நாட்டுக் குடியேற்றத்தின் ஆரம்பக் காலத்தில் கப்பல்கள் பெரும்பாலும் கரையோரக் கடல் போக்குவரத்திற்கெனவே அமைக்கப்பட்டன. அதுபோது மரத்தாலான கப்பல்களே பயன்படுத்தப்பட்டன. நெப்போலியப் போர்க் காலத்தில்தான் உலக வாணிகக் கப்பல் போக்குவரத்தில் கணிசமானதொரு பங்கு அமெரிக்காவுக்கு முதன்முதலாகக் கிடைத்தது. ஆனால், அப்போரின் முடிவில் ஐரோப்பிய நாடுகள் மறுபடியும் கப்பல் தொழிலில் தீவிரமாக ஈடுபட ஆரம்பித்தமையால், அமெரிக்கக் கப்பல் தொழில் 20 ஆண்டுகளாக அனுபவித்து வந்த தன் இலாபகரமான வாணிகக் கப்பல் தொழிலை மறுபடியும் இழக்க நேரிட்டது. இதனால் அடுத்த கால் நூற்றாண்டுக் காலம் வரை அமெரிக்க கப்பல்-கட்டும் தொழில் சோர்வடைந்திருந்தது. மேலும், இது சமயம் அமெரிக்காவில் நிகழ்ந்துவந்த விரைவான பொருளாதார வளர்ச்சி, நாட்டின் மூலதனத்துக்கு மிகவும் கவர்ச்சியான பல முதலீட்டு வாய்ப்புக்களை உள்நாட்டிலேயே அளித்தது. இதனால் வெளி உலகக் கப்பல் போக்குவரத்திலுள்ள முதலீட்டு வாய்ப்புக்களைப்பற்றி அமெரிக்கா கவலை கொள்ளவில்லை. இக் காரணங்களால் அமெரிக்காவின் வெளிநாட்டு வாணிகமும் குறைவுபட்டது. மேலும், சுங்க வரிகள் உயர்த்தப்பட்டமையால் கப்பல் கட்டுவதன் செலவும் மிகையாக அதிகரித்தது. இந்நிலையில் 1830-க்குப் பின்னர் இங்கிலாந்து தன் கப்பல்கட்டும் தொழிலை விரிவடையச் செய்து கொண்டமையால், அமெரிக்கக் கப்பல் கட்டும் தொழிலுக்கு இக்காலத்தில் அதிகமாக முன்னேற வாய்ப்பும் இல்லாதிருந்தது. இருப்பினும், அதுபோது அமெரிக்கா பல ஐரோப்பிய நாடுகளுடன் செய்துகொண்ட பரஸ்பர வணிகச் சுயேச்சை உடன்பாடுகளின் பயனாக (*Reciprocal Liberty of Commerce*) அமெரிக்கக் கப்பல் தொழில் ஓரளவு புதியதொரு தூண்டுதலைப் பெற்றது எனவும் கருதலாம்.

அமெரிக்கக் கப்பல் தொழில் வரலாற்றில் 1840-க்குப் பின்னருள்ள ஆண்டுகளே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். இதுபோது பிரிட்டனுக்கும் சீனாவுக்குமிடையே ஏற்பட்ட

போரின் காரணமாகச் சீனாவின் வாணிகத்தில் ஒரு பெரும் பகுதி அமெரிக்காவுக்குக் கிடைத்தது. மேலும், 1848-இல் ஐரோப்பாவில் ஏற்பட்ட புரட்சிகள், கிருமியாப்போர், 1857-இல் நிகழ்ந்த இந்தியப் புரட்சி முதலிய நிகழ்ச்சிகள் யாவும் அமெரிக்கக் கப்பல் தொழில் வளர்ச்சிக்கு மிகவும் துணைபுரிந்தன. கலிபோர்னியாவிலும், ஆஸ்திரேலியாவிலும் பொன் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டதையொட்டியும், ஐரோப்பிய மக்களின் பெருவாரிக் குடியிறக்கத்தையொட்டியும் கப்பல் போக்குவரத்துக்கு ஏற்பட்ட பெருந்தேவையானது, அமெரிக்கக் கப்பல் போக்குவரத்துத் தொழிலுக்கும், கப்பல் கட்டும் தொழிலுக்கும் செழுமை நிலையை ஏற்படுத்தியது.

கப்பல்களை இரும்பினால் அமைக்கும் முறை வழக்கத்திற்கு வந்தவுடனே இங்கிலாந்து உடனடியாகத் தன்னுடைய கப்பல் கட்டும் தொழிலில் இப்புதிய முறையைக் கையாண்டு, கப்பல் தொழிலில் தன்னுடைய தலைமையை மீண்டும் உறுதி செய்து கொள்ள முயற்சி செய்தது. அமெரிக்காவில் கப்பல் கட்டுவோரோ, மரத்தால் கப்பல்அமைக்கும் பழைய முறையையே மேலும் தொடர்ந்து கடைப்பிடித்தனராகையால், இத்துறையில் அமெரிக்கா பின் தங்க நேரிட்டது. இதை உணர்ந்த அமெரிக்கக் காங்கிரஸ், 1845-க்கும் 1848-க்கும் இடையே அமெரிக்கக் கப்பல் கம்பெனிகளுக்கு உதவிக் கொடைகளைத் தாராளமாக வழங்கி, அவைகள் தங்கள் கப்பல் கட்டும் தொழிலைச் சீர் செய்து கொள்ள உதவி புரிந்தது. இருந்தும், 1860-க்குப் பிந்திய காலம் அமெரிக்காவில் கப்பல் தொழிலுக்கு ஒரு தாழ்வுக் காலம் என்றே கூறல்வேண்டும். அமெரிக்க உள்நாட்டுப் போரின்போது கப்பல் தொழிலுக்கு மேலும் குந்தகம் விளைந்தது. அமெரிக்கக் கப்பல்களில் மூன்றிலொரு பங்கு அப் போரின்போது பிற நாட்டவரிடம் விற்கப்பட்டுவிட்டன. மேலும், பல கப்பல்கள் அப்போரினால் அழிக்கப்பட்டன அல்லது வேறு பயன்களுக்கு மாற்றப்பட்டன. இதைக் கண்ணுற்ற அமெரிக்க அரசாங்கம் ஆவன செய்ய முற்பட்டது. கப்பல் கட்டுவதற்குப் பயன்படும் பல பொருள்களின்பேரிலும் சுங்க வரிகளைக் குறைத்து, கப்பல் தொழிலுக்கு ஊக்கம் அளிக்க அரசாங்கம் உண்மையில் முயன்றது. ஆயினும், முன்னேற்றம் எதுவும் காணப்படவில்லை.

இதற்கு மாறாக இரயில்வே துறையிலும், தயாரிப்புத் துறையிலும் அதுபோது விரைவான முன்னேற்றம் நிகழ்ந்தமையால், கப்பல் துறையின் முன்னேற்றம் மேலும் பாதிக்கப்பட்டது. இம் மந்த நிலை 19-ஆம் நூற்றாண்டின் இறுதிவரை கப்பல் தொழிலில் தொடர்ந்து இருந்துவந்தது.

ஆயினும், முதலாவது உலகப் போரின் ஆரம்பத்திற்கு முன்னமே அமெரிக்கக் கப்பல் தொழில் ஓரளவு முன்னேற்றம் பெற்றுவிட்டது. அதுபோது அமெரிக்கக் கப்பல் தொகுதியின் மொத்த எடை (*Shipping tonnage*) ஒரு மில்லியன் டன் அளவைத் தாண்டிவிட்டது. கப்பல் தொழிலுக்கு உதவிக்கொடை அளிப்பதற்காகச் சட்டம் கொண்டுவரும் விருப்பத்தையும், கப்பல் கட்டுதற்குத் தேவையான பொருள்களின்பேரில் சுங்க வரிச் சலுகைகள் அளிக்கும் கருத்தையும் அரசாங்கம் வெளியிட்டமை கப்பல் தொழிலுக்கு ஓரளவு ஊக்கமளிப்பதாயிருந்தது. மேலும், முதலாவது உலகப் போர் இத்தொழிலுக்குப் பல புதிய வாய்ப்புக்களையும் புதிய சூழ்நிலைகளையும் ஏற்படுத்தியது. கப்பல் தொழிலுக்கு அமெரிக்கா அளித்திருந்த தாராளமான சலுகைகளின் காரணமாகப் போரின்போது மொத்தம் 175 கப்பல்கள் அமெரிக்க நாட்டு நடுநிலைக் கொடியை (*Protection of the neutral flag of America*) விரும்பிப் பெற்றன. அதுவுமன்றி இப் போர்க்காலமானது ஜெர்மானிய வணிகக் கப்பல்கள் யாவும் ஆழ்கடலைத் துறந்திருந்த காலம். பிரிட்டன், பிரான்சு முதலிய நாடுகளின் கப்பல்கள் போர் நடவடிக்கையில் ஈடுபட்டிருந்தன அல்லது ஜெர்மானிய நீர் மூழ்கிகளால் மூழ்கடிக்கப்பட்டன. இதன் விளைவாக, முன்பு அமெரிக்கக் கடல் வணிகத்திற்கு வாடகைக்குக் கிடைத்துவந்த பிற நாட்டு வியாபாரக் கப்பல்களின் எண்ணிக்கையும் வெகுவாகக் குறைந்துவிட்டது. இந் நிலையைச் சமாளிக்கும் நோக்குடன் அமெரிக்க அரசாங்கம் பல முக்கியமான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியதாயிற்று.

1916-ஆம் ஆண்டுக் கப்பல் துறைச் சட்டம், கப்பல் சபை (*Shipping Board*) ஒன்றை ஏற்படுத்தியது. இச் சபைக்கு வெளிநாட்டு வாணிகத்திலும் உள்நாட்டு வர்த்தகத்திலும் ஈடுபட்டுள்ள கப்பல்களின்பேரில் மிக முக்கியமான அதிகாரங்கள்

அளிக்கப்பட்டிருந்தன. கப்பல்களைக் கட்டுவித்து அவைகளைப் பயன்படுத்தக்கூடியவையான கார்ப்பரேசன்களைத் தோற்றுவிப்பதற்கும் இச் சபைக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. மேலும், புதிதாக வணிகக் கப்பல்களைக் கட்டிக்கொள்ளவும், அவற்றை வாடகைக்குப் பெற்றுக்கொள்ளவும் அல்லது அவற்றை வாங்கிக் கொள்ளவும், அவற்றைப் பின்னர் அமெரிக்க மக்களுக்கு விற்கவும் அல்லது அவற்றைத் திட்டவழிப் பிரயாணங்களுக்கு விடவும் இச் சபைக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. பின்னர், 1917-ஆம் ஆண்டில் அவசர கால கப்பல் அணி கார்ப்பரேசன் (*Emergency Fleet Corporation*) ஒன்றும் அமைக்கப்பட்டது. இதன்பயனாக, 1920-இல் அமெரிக்காவின் வணிகக் கப்பல்களின் அணி, மொத்தம் 4889 கப்பல்களைக் கொண்டதாயிற்று. இக் கப்பல் அணியின் மொத்த எடை 14 மில்லியன் டன்களாகும். இதனால் உலகத்தின் தலையாய வணிகக் கப்பற் படை நாடாகிய பிரிட்டனுக்கு அடுத்தபடியாக அமெரிக்கா தனக்கு இடம் பெற்றது. மேற்கூறப்பட்ட கப்பற் சபையின் அதிகாரங்கள் 1920-ஆம் ஆண்டு வணிகக் கப்பற்படைச் சட்டத்தினால் (*Merchant Marine Act of 1920*) மேலும் அதிகமாக்கப்பட்டன. அமெரிக்க அரசாங்கம் உலகம் முழுவதிலும் ஆழ்கடல் கப்பல் பயண வழிகளை நிறுவிக்கொண்டது. ஆயினும், இவற்றின் விளைவு அவ்வளவு திருப்திகரமாக இருக்கவில்லை. ஆகவே, அரசாங்கம், தபால் சுமந்து செல்லும் கப்பல்களுக்கு உதவிக் கொடைகளை அளிப்பதன்மூலமும், கப்பல் கட்டும் தொழிலுக்குக் கடன்களை வழங்குவதன் வாயிலாகவும் கப்பல் தொழிலுக்கு ஆதரவு கொடுக்கும் பழைய முறையை 1925-க்குப் பின் மீண்டும் கைக்கொள்ள வேண்டியதாயிற்று. அடுத்து 1936-இல் கொண்டுவரப்பட்ட ஒரு சட்டத்தின்கீழ், கப்பல் கட்டுவதற்கென பெருந் திட்டம் ஒன்று மேற்கொள்ளப்பட்டது. அத்துடன் முன்பு தபால் கொண்டு செல்வதற்கு அளிக்கப்பட்ட மறைமுகக் கொடைக்குப் பதிலாக இப்போது நேரடிக் கொடை முறையும் மேற்கொள்ளப்பட்டது. மேலும், பழைய கப்பல் சபைக்குப் பதிலாகப் புதிதாக ஒரு கப்பல்துறைக் கமிசன் (*Maritime Commission*) நியமிக்கப்பட்டது.

இரண்டாவது உலகப்போர், கப்பல் கட்டும் தொழிலுக்கு இதுவரை கண்டிராத ஒரு பெருந் தூண்டுதலை அளித்தது எனக்

கூற வேண்டும். இதன் விளைவாகவே அமெரிக்க ஐக்கிய நாடானது கப்பல் ஆதிக்க வல்லரசுகளுக்குள் உலகத்திலேயே முதன்மையான இடத்தைப் பெற்றுவிட்டது. அதுபோது அமெரிக்கக் கப்பல்களின் எடையானது, மொத்தம் உலகத்திலிருந்த எல்லாக் கப்பல்களின் எடை மொத்தத்தில் $\frac{2}{3}$ பங்காகி விட்டது. இது போருக்கு முன் அமெரிக்காவிடமிருந்த கப்பல் எடையைப்போல் 5 மடங்காகுமென்றால் அதன் மிகு வளர்ச்சி புலப்படும். மேலும், போர்க்காலக் கப்பல்துறை நிர்வாகம் (*War Shipping Administration*) ஒன்று புதிதாக ஏற்படுத்தப்பட்டதன் விளைவாக, அமெரிக்கக் கப்பல் எடை மொத்தம் 1942-இல் 5 மில்லியன் டன்களும், 1943-இல் 9 மில்லியன் டன்களும் அதிகரித்தது. போருக்குப் பின்னர், கப்பல் துறைக் கமிசன் ஒன்று அமெரிக்காவில் கப்பல்களின் மொத்த எடையை மேலும் கூடுதலாக்கும் பணியை மேற்கொண்டது. ஆனால், 1950-இல் இக் கப்பல்துறை கமிசன் ஒழிக்கப்பட்டு, அதற்குப் பதிலாகக் கூட்டரசுக் கப்பல் சபை (*Federal Maritime Board*) ஒன்று அரசாங்க வணிக இலாகாவின்கீழ் ஏற்படுத்தப்பட்டது.

தந்தி, தொலைபேசி, தபால் முதலிய தொடர்புவசதிகளின் வளர்ச்சியானது 19-ஆம் நூற்றாண்டில் போக்குவரத்திற்கும், வணிகத்திற்கும் மிக்க துணைபுரிந்தது என்பதையும் இங்குக் குறிப்பிடவேண்டும். 20-ஆம் நூற்றாண்டில் ஆகாயப் போக்குவரத்திலும், கம்பியில்லாத்தந்தி, வானொலி, டெலிவிசன் முதலியவற்றிலும் ஏற்பட்ட பிரம்மாண்டமான முன்னேற்றம், போக்குவரத்து வசதிகளையும் தொடர்பு வசதிகளையும் புரட்சிகரமான அளவுக்கு வளரச்செய்துவிட்டது. இரயில்வேக்களும், கப்பல்களும், ஆகாய விமானங்களும் தங்கள் இயக்கத்திற்கு இந் நவீன தொடர்பு வசதிகளையே நாடியிருக்கின்றன என்றால் மிகையாகாது. அமெரிக்காவில் இன்று நாம் காணும் நவநாகரிக சமூகம் இப்புதிய போக்குவரத்து வசதிகளாலும், தொடர்பு வசதிகளாலுமே சாத்தியமாயிற்றென்றால் முற்றிலும் உண்மையாகும்.

# 10. சுங்கவரியும் வாணிகமும்

அமெரிக்க நாட்டின் வணிகக் கொள்கையானது (*Commercial policy*) இடைக் காலத்தில் மெர்க்கன்டலிசக் கருத்துக்களால் பெரிதும் நிர்ணயிக்கப்பட்டிருந்தது. அவ்வணிகக் கொள்கையில் உள்நாட்டுத் தொழில் பாதுகாப்பும், உள்நாட்டுத் தொழில் தயாரிப்புக்களுக்கு ஆதரவும், உள்நாட்டுத் தயாரிப்புக்களுடன் போட்டியிடும் வெளிநாட்டுப் பண்டங்களின் இறக்குமதித் தடையும் முக்கிய கூறுகளாகும். உள்நாட்டுத் தொழில் பாதுகாப்புக்கான சுங்க வரிகளை ஆதரிக்கும் எல்லாப் பழம் பெரும் வாதங்களும் இக் கொள்கைக்கு ஆதரவாக அமெரிக்காவில் கையாளப்பட்டன. ஆனால், இக்கொள்கையை எதிர்த்த அமெரிக்கர் யாவரும் தடையிலா வாணிகத்தின் பற்பல நன்மைகளையும் சுட்டிக்காட்டினர். ஆயினும், அமெரிக்கச் சுங்க வரிக் கொள்கையானது இத்தகைய எந்த ஒரு திட்டமான கோட்பாட்டின் அடிப்படையிலும் எழுந்ததன்று. அது. அரசியல் சூழ்நிலைகளாலும், மற்றும் வகுப்புச் சுயநலங்களாலும் (*sectional interests*) உருவான ஒரு கொள்கையேயாகும். இக் கொள்கைக்குச் சிற்சில போது விவசாயிகளுடையவும், தொழிலாளிகளுடையவும், நுகர்வோர்களுடையவும், பொதுமக்களுடையவும் ஆதரவை அரசியல் வாதிகளும் நாட்டுத் தலைவர்களும் தேடிப் பெற்றிருப்பினும், அமெரிக்கா எழுப்பிய இவ்வுயர் சுங்க வரிச் சுவரால் உண்மையில் நலம் மிக அடைந்தவர்கள் அந்நாட்டின் தொழிலுற்பத்தியாளரும், பண்டத் தயாரிப்பாளருமே என்பதை அறியவேண்டும். சுங்க வரியானது ஆரம்பத்தில் அரசாங்கத்திற்கு வருமானம் தரும்

ஒரு வரியாகவே புகுத்தப்பட்டது. ஆனால், அமெரிக்கப் புரட்சிக்குப் பின்னர் இச் சுங்க வரிகள் மேலும் மேலும் பாதுகாப்பு வரிகளாகவே மாறிவிட்டன எனவேண்டும். இச் சுங்க வரிகள் அரசியல் துறையில் அமெரிக்கக் கட்சிகளுக்கிடையே ஒரு முக்கிய பிரச்சினையாகவே விளங்கின. இதனாலேயே, இச் சுங்கவரிகள் அவ்வப்போது அதிகாரத்திலிருந்த கட்சிக்கேற்ப மாற்றமடைந்து வந்தன. ஆயினும் இச் சுங்க வரிகள் அமெரிக்க நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குப் பெருந்துணையாயிருந்தன. இவ் வரிகளின் விளைவாக அமெரிக்காவில் பல சர்வாதீனங்கள் முளைத்தன என்பதையும், உற்பத்திச் செலவு உயர்வாகியது என்பதையும், நாட்டின் பொருளாதாரம் நெகிழ்ச்சித் திறமிழந்தது என்பதையும் மறுப்பதற்கில்லை. ஆயினும், அமெரிக்காவின் தொழில் உலகத் தலைமை (*Industrial pre-eminence*) அதன் சுங்க வரி முறை என்ற அடிக்கல்லின்மேல் நிர்மாணிக்கப்பட்டதேயாகும் என்று கூறினால் மிகையாகாது. அமெரிக்காவின் முதல் ஜனதிபதி பதவி ஏற்ற இரு மாதங்களுக்குள்ளேயே அந்நாட்டின் முதலாவது சுங்க வரிச்சட்டம் நிறைவேறியது. இருப்பினும், ஆரம்பத்தில் சுங்க வரிகள் முக்கியமாக வருவாய் கருதியே விதிக்கப்பட்டன என்று கூறுதல் பொருந்தும். அவற்றால் தொழிலுக்குப் பாதுகாப்பு ஏதேனும் கிடைத்ததென்றால் அது இவ்வரிகளின் ஒரு துணைவிளைவாகவே கருதப்படல் வேண்டும். அலெக்சாந்தர் ஹாமில்டன் என்பார் அமெரிக்காவில் பண்டத் தயாரிப்பு பற்றி விடுத்த தம் அறிக்கை யொன்றில் சுங்க வரிப் பாதுகாப்புக்கு ஆதரவான வாதங்கள் பலவற்றையும் விரித்துக் கூறியிருந்தார் என்பது உண்மையே. ஆயினும் இவ்வறிக்கை அமெரிக்க அரசாங்கத்தின் சுங்கவரிச் சட்டத்தின்பேரில் எவ்வித முக்கிய திருப்பத்தையும் ஏற்படுத்திவிட்டது என்று கூற வியலாது. எடுத்துக்காட்டாக, 1792-க்கும் 1816-க்குமிடையே அமெரிக்காவில் நிறைவேற்றப்பட்ட 257 சுங்க வரிச் சட்டங்களில் ஒரு சிலவற்றைத் தவிர, மீதி யாவும் வருவாய் நோக்கத்துடனேயே நிறைவேற்றப்பட்டவையேயாகும். 1789-ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட சட்டம்தான் முதன்முதலாக அமெரிக்க இறக்குமதிகளின் பேரில் திட்டமான சுங்கவரிகளை விதித்தது.

பண்டங்களின் பெறுமான வீத வரியாகவோ (*ad valorem duties*), ஒரே குறிப்பிட்ட வீதத்திலோ (*specific duties*) இரண்டு விதங்களில் $7\frac{1}{2}$ சதவீதம் முதல் 15 சதவீதம் வரை உயரக் கூடியதான இறக்குமதிச் சுங்க வரிகளை இச் சட்டம் புகுத்தியது. அடுத்த 20 ஆண்டுகளில் அமெரிக்க நாடு அனுபவித்த அரசியல் இணைப்பும், ஐக்கியமும் அந்நாட்டில் பல புதிய தொழில்கள் நிறுவப்படுதற்குக் காரணமாயின. மேலும், ஐரோப்பாவில் அதுபோது நிகழ்ந்ததான புரட்சிப் போரும், நெப்போலியப் போரும் அமெரிக்கத் தொழில் வளர்ச்சிக்குப் பெருந் தூண்டுதலாக அமைந்தன.

அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்குமிடையே நிகழ்ந்த 1812-ம் ஆண்டுப் போரைத் தொடர்ந்து அமெரிக்காவில் தொழில் பாதுகாப்பிற்கான ஒரு பலத்த இயக்கம் தோன்றலாயிற்று.[1] அடுத்து 1815-இல் அமெரிக்காவில் பணச்சுருக்கம் ஏற்பட்டதைத் தொடர்ந்து அங்கு நிலங்களின் விலைகளும், விவசாயப் பண்டங்களின் விலைகளும் சரிந்தன. அத்துடன், போருக்குப் பின்னர் ஐரோப்பிய பண்டங்கள் அமெரிக்காவுக்குள் கொண்டு-வந்து குவிக்கப்படும் என்ற பீதியும் நாட்டில் நிலவியது. இக்காரணங்களே அமெரிக்காவை முன்னைவிடத் தீவிரமாகத் தொழில் பாதுகாப்பைக் கடைப்பிடிக்கத் தூண்டியது. பிரிட்டனுடன் நடந்த போர் அமெரிக்காவில் தேசிய உணர்ச்சி ஆர்வத்தைத் தூண்டிவிட்டிருந்தது. ஆகவே இப் போர் முடிவில் இந்நாட்டுப் பற்றின் செல்வாக்கினால், இளந்தொழில் பாதுகாப்பு வாதமும் (*Infant Industry Argument*) உள்நாட்டுத் தொழில் பாதுகாப்பு வாதமும் (*Home Market Argument*), வலுப்பெற்றன. பண்டத் தயாரிப்பாளர்களையும், வணிகத் துறையினரையும் தவிர, அரசியல் ஞானிகளும், பொருளாதார நிபுணர்களும் நாட்டுத் தொழில் பாதுகாப்பிற்கு ஆதரவளிக்கத் தொடங்கினர். ஏன்? ஜனாதிபதி மேடிசன் என்பாரே (*President Madison*) தொழில் பாதுகாப்புக் கொள்கையை ஆதரிப்பவரானார். இக் கொள்கையை நடைமுறைப்படுத்துதற்காகச் சுங்க வரி மசோதா ஒன்று தென் கரோலினாவைச் சேர்ந்த வில்லியம் லௌண்டுஸ் (*William Lowndes*) என்பவரால் கொண்டுவரப்பட்டது. இம்

1. Taussig: Tariff History of the United States Vol. I.

மசோதாவிற்கு எல்லாக் கட்சியினரின் கூட்டான ஆதரவும் கிடைத்தமையால் 1816-இல் இது சட்டமாக நிறைவேறியது. இதன்படி பருத்தி, கம்பளித் தயாரிப்புக்களின்பேரிலும், வார்ப் பிரும்பு மற்றும் பல பண்டங்களின் பேரிலும் சுங்க வரிகள் உயர்த்தப்பட்டன. இவ்வரிகள் $7\frac{1}{2}$ சதவீதம் முதல் 30 சதவீத உச்சம் வரை விதிக்கப்படுதற்கு வழி செய்யப்பட்டது. இது முதலே அமெரிக்காவின் தொழில் பாதுகாப்பு யுகம் ஒன்று ஆரம்பித்தது எனலாம். கட்சிகளிடையே இதற்குப் பின்னர் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளெல்லாம் சுங்க வரிகளின் மட்டத்தைக் குறித்து எழுந்தனவேயன்றி, சுங்க வரியின் அவசியத்தைப் பற்றியல்ல என்பது மிகவும் குறிப்பிடத்தக்கது.

## 1816—1860 காலத்திய சுங்க வரிகள்

அமெரிக்காவில் டேனியல் ரேமண்டு (*Daniel Raymond*) முதலானவர்கள் ஆதம்ஸ்மித்தின் தடையிலா வணிகக் கொள்கையை எதிர்த்து எழுதி வந்தனர். இதன் விளைவாக, 1816-ஆம் ஆண்டு முதல். பாதுகாப்புச் சுங்க வரி இயக்கமானது அமெரிக்காவில் தொடர்ந்து வளரலாயிற்று. 1818-இல் இரும்பு உற்பத்திக்கு மேலும் பாதுகாப்பு அளிக்கப்பட்டது. பருத்தி, கம்பளி ஆடைகளின் இறக்குமதியின் பேரில் முன்பே விதிக்கப்பட்டிருந்த 25 சதவீத சுங்க வரியானது 1826-ஆம் ஆண்டு வரை நீடிக்கப்பட்டது. அத்துடன் இரும்பு, ஈயம், ஆட்டுரோமம், ஹெம்ப் நார், மற்றும் துணி வகைகளின் பேரில் சுங்க வரிகளின் விதங்கள் உயர்த்தப்பட்டன. இதைக் கண்ணுற்றதும் பிரிட்டன் ஆட்டுரோம இறக்குமதியின் பேரில் தான் விதிக்கும் சுங்க வரியைக் குறைவாக்கிக்கொண்டதுடன், அமெரிக்கக் கம்பளித் துணி உற்பத்தியாளர்களைக் காட்டிலும் குறைந்த விலைக்குத் தன் கம்பளி ஆடைகளை அமெரிக்காவில் போட்டியிட்டு விற்க ஆரம்பித்தது. இதனல் அமெரிக்கக் கம்பளி ஆடைத் தயாரிப்பாளர்கள் ஆவரும் மேலும் கூடுதலான சுங்க வரிப் பாதுகாப்பைக் கோரிப் போராடினர். அதுபோது அமெரிக்காவில் அதிகாரத்துக்கு வந்திருந்த குடியரசுக் கட்சி 1828-ஆம் ஆண்டில் புதியதொரு சுங்க வரிச் சட்டத்தை நிறைவேற்றியது. இச்சட்டமே

உள்நாட்டுப் போருக்கு முந்திய காலத்தில் மிகவும் உயர்ந்த சுங்க வரிகளை விதித்ததாகும். ஆகவே, இச்சட்டம் தெற்கு இராச்சிய மக்களால் தீவிரமாக எதிர்க்கப்பட்டது. அம் மக்களின் வெறுப்பைப் பேரளவில் கிளப்பிய இச்சட்டத்தை அவர்கள் கறுப்புச் சுங்கச் சட்டம் (*Black Tariff*) அல்லது வெறுப்புச் சுங்கச் சட்டம் (*Tariff of Abomination*) என்றே அழைக்கலாயினர். ஆகவே, இச்சட்டத்தின் கடுமையை நீக்கி, மக்களை ஓரளவு திருப்திபடுத்துவதற்காக, 1833-இல் இணக்கச் சுங்கச் சட்டம் (*Compromise Tariff*) ஒன்றும் நிறைவேற்றப்பட்டது. இச்சட்டம் 1842-ஆம் ஆண்டுக்குள்ளாகச் சுங்க வரிகளையெல்லாம் சிறிதுசிறிதாக 20 சதவீத மட்டத்திற்குக் குறைத்துவிட்டது.

1833-ஆம் ஆண்டிலிருந்து அமெரிக்க உள்நாட்டுப் போர் வரை, சுங்க வரிகள் யாவும் இறங்குமுகமாகவே இருந்தன. இருப்பினும், பாதுகாப்பு வரிக் கொள்கையானது ஒருபோதும் கைவிடப்படவில்லை. 1844-இல் பதவியேற்ற ஜனநாயகக் கட்சியானது சுங்க வரிகளை மேலும் குறைக்க விரும்பியது. இதன் விளைவே 1846-ஆம் ஆண்டு வால்க்கர் சுங்க வரிச் சட்டம் (*Walker Tariff Act*) ஆகும். இதன்படி பல்வேறு சரக்குக்களின் பேரில் இருந்த வரிகள் குறைக்கப்பட்டன. மேலும், குறைந்தபட்ச வரி முறையும் (*Minimum duties*), குறித்த வீத வரி முறையும் (*Specific duties*) கைவிடப்பட்டு, அவற்றிற்குப் பதிலாக பல்வேறு சரக்குகளின் பேரிலும், பாகுபடுத்தப்பட்ட வீதங்களில் விதிக்கப்படுவதான வரிமுறை ஒன்று புகுத்தப்பட்டது. இச்சட்டத்தின் நோக்கம் சுங்க வரிகளைக்கொண்டு ஒரு வருமானம் பெற்றுக்கொள்வதேயாகும். 1848-ஆம் ஆண்டு முதல் அமெரிக்க ஐக்கிய நாட்டில் செழுமைக் காலம் ஒன்று ஆரம்பமாகியது. அதுபோது அரசாங்கத்தின் நிதிகளும் பெருகின. இதன் பயனாகச் சுங்க வரிகளை மேலும் குறைப்பதற்கு வாய்ப்பு ஒன்று ஏற்பட்டது. இதற்கென 1857-இல் நிறைவேற்றப்பட்ட சட்டம் சுங்க வரிகளை மொத்தம் 25 சதவீதம் குறைத்துவிட்டது. மேலும், நாட்டின் சுங்க வரி சராசரி 19 சதவீதமாகக் குறைந்தது. உள்நாட்டுப் போருக்கு முந்திய காலத்தில், இதுவே மிகத் தாழ்வான வரி வீதமாகும்.

1857-ஆம் ஆண்டு தொடங்கி 1861-ஆம் ஆண்டு வரை அமெரிக்க ஐக்கிய நாட்டின் வணிகக் கொள்கையானது தடையிலா வணிகக் கொள்கையைச் சார்ந்ததாகவே காணப்பட்டது.[1]

1857-ஆம் ஆண்டில் ஏற்பட்ட எதிர்பாராத நிதி நெருக்கடியின் காரணமாக, அமெரிக்காவில் இதுவரை கடைப்பிடிக்கப்பட்டுவந்த தடையிலா வணிகக் கொள்கையானது விரைவில் கைவிடப்படவேண்டியதாயிற்று. மேலும், குறைவான கூலிகளையும், தாழ்வான வாழ்க்கைத்தரத்தையும் கொண்ட அயல்நாடுகளின் போட்டியால் அமெரிக்கத் தொழிலாளரின் கூலிகளும், அமெரிக்கர்களின் வாழ்க்கைத்தரமும் பாதிக்கப் படாமல் காப்பாற்றப்படவேண்டுமென்ற காரணத்தைக் கூறி, பாதுகாப்பு வரிகளை மறுபடியும் கோரி, தொழில் துறையினர் ஆர்ப்பாட்டம் செய்ய ஆரம்பித்தனர். அமெரிக்கப் பொருளாதார வளர்ச்சியின் ஆரம்பத்தில், முதல் 70 ஆண்டுகள் வரை சுங்க வரிகள் தாம் உள்நாட்டுத் தயாரிப்பு வளர்ச்சிக்குப் பேருதவி செய்தன. ஆயினும், இச் சுங்க வரிகளே மறுபுறத்தில், அமெரிக்காவின் வடக்கிற்கும் தெற்குக்குமிடையே மனக்கசப்புக்களையும் பகைமைகளையும் வளர்த்துவிட்டு, பின்னர் அவற்றிடையே உள்நாட்டுப் போரையும் தூண்டி விட்டன எனவேண்டும். நிதி வருவாய்க் கண்கொண்டு பார்க்கும்போது, உண்மையில் சுங்க வரிகள் நாட்டிற்கு வெற்றிகரமான விளைவுகளையே அளித்திருந்தன என்று கருதுதல் வேண்டும். அமெரிக்கக் கூட்டரசு அரசாங்கமும் இச்சுங்க வரிகளிலிருந்தே தனக்குத் தேவையான நிதிகளில் ஒரு பெரும் பகுதியைப் பெற்றுக் கொண்டது. 1861-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட மாரில் சட்டமானது (*The Morrill Act*) ஒரு போர்க்கால நிதி வருவாய்த் திட்டமாக நிறைவேற்றப்படவில்லையாயினும், அதுவே உள்நாட்டுப் போர் ஆரம்பத்திற்கு வழிகோலிற்று என்று கூறுதல் வேண்டும்.[2] இச்சட்டம் சுங்கவரிகளைப் பழையபடியும் 1846-ஆம் ஆண்டு மட்டத்திற்கே உயர்த்தியது. இவ்வாறு

1. Faulkner: American Economic History p 167.
2. Taussig: Tariff History of the United States p. 160.

இச்சட்டமும், அதைத் தொடர்ந்து நேரிட்ட உள்நாட்டுப் போருமே அமெரிக்காவில் மற்றுமோர் உயர் சுங்க வரி யுகத்தை ஆரம்பித்து வைத்தன என்று கூறுதல் பொருந்தும்.

## உள்நாட்டுப் போரும் அதன் பிற்காலமும்

உள்நாட்டுப் போரின்போது சுங்க வரிகள் மேலும் மேலும் உயர்த்தப்பட்டன. இதற்குப் பல காரணங்கள் உண்டு. அமெரிக்கக் கூட்டரசின் நிதித் தேவைகளும், தொழில் அதிபர்களின் பாதுகாப்புக் கோரிக்கையும், அமெரிக்கக் காங்கிரசில் பாதுகாப்புக் கொள்கையினரின் ஆதிக்கமும்தான் வரி உயர்வுக்கு முக்கிய காரணங்களாகும். இவையே, மாரில் சட்டத்தின் வாயிலாக மீண்டும் உயர்த்தப்பட்டிருந்த சுங்க வரிகளின் வீதத்தை, அவ்வுயர்நிலையிலேயே வைத்திருக்கச் செய்தவையாகும். மேலும், சுங்க வரிச் சட்டங்களில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த புதிய சட்டம் ஒன்று 1864-ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்டது. பேராசிரியர் தாசிக் (Taussig) இப்புதிய வரியைக் குறித்து, உலகம் அதுவரைகண்டிருந்த வரிகளிலெல்லாம் இதுதான் மிக உயர்ந்ததாகும் என்றே வருணித்தார். சுங்க வரிகளை எல்லாம் இச்சட்டம் 47 சதவீதத்திற்கு உயர்த்திவிட்டது. இப் போர்க்காலச் சுங்க வரிகளை 'அநாகரிகமானவை; விஞ்ஞான ரீதியற்றவை, மிதமிஞ்சியவை' என்றெல்லாம் கூறுவது பொருந்தும். போருக்குப் பின்னருங்கூட இவ்வுயர் சுங்க வரிகள் பெரும்பாலும் தொடர்ந்து விதிக்கப்பட்டன. வருமானத்திற்காக விதிக்கப்பட்ட வரிகளிலேயே பின்னர்த் திருத்தங்கள் செய்யப் பட்டன. இறக்குமதிகளின்பேரில் மிக உயர்வான வரிகளை விதிப்பதன்மூலம் பாதுகாப்பு அளிக்கப்பெற்ற உள்நாட்டுத் தொழில்களில் முக்கியமானவை கம்பளியாடை, செம்பு, இரும்பு முதலிய தொழில்கள் ஆகும்.

மேற்கூறிய பாதுகாப்புக் கொள்கையாலும், இதன் விளைவான தொழில் சர்வாதீனத்தாலும் பற்பல தயாரிப்புப் பண்டங்களின் விலைகளும் உயர்ந்தன. இதனால் இத் தயாரிப்புப் பண்டங்களை நுகர்வோர்களெல்லோரும், குறிப்பாக

விவசாயிகள் மிகவும் பாதிக்கப்பட்டனர். இவ் விவசாயிகளைத் திருப்திபடுத்தவேண்டி, பின்னர் 1872-இல் தயாரிப்புப் பொருள்களுக்கு விதிக்கப்படும் சுங்க வரிகள் 10 சதவீதம் குறைவாக்கப்பட்டன. ஆயினும், இச்சுங்கவரிக் குறைப்புக்கொள்கையை அரசாங்கம் தொடர்ந்து கடைப்பிடிக்க முடியவில்லை. நாட்டில் ஏற்பட்ட நிதி நெருக்கடிகளும், அதிகாரம் வகிக்கும் அரசியல் கட்சிகளின் மாற்றமுமே இதற்குக்காரணங்கள். இதன்விளைவாக 1875-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட சட்டம் ஒன்று சுங்க வரிகளை மறுபடியும் பழைய நிலைக்கு உயர்த்தியது. இதற்குப் பின்னர் 1883 வரை, சுங்க வரிகளில் எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை.

## 1882-க்குப் பின்

19-ஆம் நூற்றாண்டின் கடைசி 20 ஆண்டுகளின்போது சுங்க வரி ஒரு முக்கிய அரசியல் பிரச்சினையாகியது. ஜனநாயகக் கட்சியினர் குறைவான சுங்க வரிகளையே ஆதரித்தனர். குடியரசுக் கட்சியினரோ தொழில் பாதுகாப்பளிக்கக்கூடிய உயர் சுங்க வரிகளையே கோரினர். இந்நிலையில் 1882-இல் நியமிக்கப்பட்ட சுங்க வரிக் கமிசனானது (*Tariff Commission*) குறைவான சுங்க வரிகளையே சிபாரிசு செய்தது. 1882-ஆம் ஆண்டில் நடைபெற்ற ஜனாதிபதி தேர்தலும், சுங்க வரிகளையைப் பிரச்சினையாகக்கொண்டே நடந்தது. இத் தேர்தலில் குடியரசுக் கட்சியினர் பெற்ற வெற்றியானது பாதுகாப்புச் சுங்க வரிக்கு ஆதரவாக மக்கள் அளித்த ஓர் ஆணை எனவே கருதப்பட்டது. இதன்பயனாக 1890-ஆம் ஆண்டில் மெக்கின்லே சுங்க வரிச் சட்டம் (*Mckinley Tariff*) ஒன்று நிறைவேறியது. இச் சட்டத்தின்கீழ் எல்லாத் தயாரிப்புப் பொருள்களின்பேரிலும் சுங்க வரியின் அளவு 49·5 சதவீதமாக உயர்த்தப்பட்டது. உணவுப் பண்டங்களின்பேரிலிருந்த ஒருசில வரிகள் மட்டும் குறைக்கப்பட்டன. மேலும், இச் சட்டம் பிற நாடுகளுடன் பரஸ்பர வாணிக ஒப்பந்தங்களை ஏற்படுத்திக்கொள்ள ஜனாதிபதிக்கு அதிகாரமளித்தது. இந்த ஒப்பந்தங்களின்

வாயிலாக அமெரிக்கச் சரக்குகளுக்குச் சில நாடுகளில் சலுகைகள் பெறவும் முடிந்தது.

மெக்கின்லே சுங்கச் சட்டம் கொண்டுவரப்பட்ட சிறிது காலத்திற்குள்ளாகவே ஜனநாயகக் கட்சியினர் தேர்தலில் வெற்றிபெற்று, அரசாங்கத்தைக் கைப்பற்றினர். உடனே 1894-இல் அவர்கள் வில்சன்-கார்மென் சட்டம் (*Wilson-Gorman Act*) என்ற சட்டமொன்றை நிறைவேற்றி, சுங்க வரிகளை மறுபடியும் குறைத்துவிட்டனர். ஆயினும், அடுத்த இரண்டு ஆண்டுகளுக்குள்ளாகவே குடியரசுக் கட்சியினர் மீண்டும் அதிகாரத்தைப் பெற்றுக்கொண்டனர். இதனால் 1897-இல் டிங்லே சுங்கச் சட்டம் (*Dingley Tariff Act*) என்ற ஒரு புதிய சட்டத்தைக் குடியரசுக் கட்சியினர் நிறைவேற்றி, சுங்க வரிகளையெல்லாம் மறுபடியும் 57 சதவீதத்திற்கு உயர்த்தினர். அதிலிருந்து 12 ஆண்டுகள் முடியும்வரை டிங்லே சுங்கச் சட்டம் எவ்வித மாறுதலுமின்றி நிலைத்திருந்தது. ஆனால், அதற்குப் பின்னர் சுங்க வரிகளுக்குப் பலத்த எதிர்ப்பொன்று கிளம்பியது, இதற்குக் காரணம், சுங்க வரிகளின் ஆதரவில் அமெரிக்காவில் டிரஸ்டுகளும், சர்வாதீனங்களும் வளர்ந்திருந்ததேயாகும். முதலில் டிரஸ்டு-எதிர்ப்புக் கிளர்ச்சி ஒன்று தோன்றியது. பின்னர் டிரஸ்டுகளுக்குப் பாதுகாப்பளித்த சுங்க வரிகளையும் மக்கள் எதிர்ப்பாராயினர். முடிவில் 1909-ஆம் ஆண்டில் பெயின்-ஆல்டிரிச் சட்டம் (*Payne-Aldrich Act*) ஒன்று நிறைவேற்றப்பட்டது. இதன்படி பல சரக்குக்களின் பேரில் சுங்க வரிகள் குறைக்கப்பட்டும், மற்றவற்றின்பேரில் அவை ஒழிக்கப்பட்டும் விட்டன. ஆயினும், இம் மாறுதல்கள் பொதுமக்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. ஆகவே, அடுத்த ஒருசில ஆண்டுகளில் ஜனநாயகக் கட்சியினரை மறுபடியும் மக்கள் பதவியிலேற்றினர். இக்கட்சியினர் உடனடியாகச் சுங்க வரிக் குறைப்பு நடவடிக்கையை மேற்கொண்டனர்.

1913-ஆம் ஆண்டில் அண்டர்வுட் சுங்கம் (*Underwood Tariff*) என்ற புதிய சுங்க வரி முறை ஒன்று கைக்கொள்ளப்பட்டது. இதன் நோக்கம், சுங்க வரிகளைக் குறைவுபடுத்தி, அமெரிக்கத் தொழிலில் தீவிரமான போட்டியை

ஏற்படுத்துவதேயாகும். ஆயினும், தடையிலா வணிக முறையை இச் சட்டம் புகுத்தவில்லை என்பதை ஈண்டுக் குறிப்பிட வேண்டும். பற்பல சரக்குக்களின்பேரிலிருந்த சுங்க வரிகளை மட்டும் இது குறைத்தது. அடுத்து 1916-ஆம் ஆண்டில், சுங்க வரிப் பிரச்சினைகளை ஆராயவும், அவைபற்றி அரசாங்கத்திற்கு அவ்வப்போது தக்க ஆலோசனை கூறவும் சுங்கவரிக் கமிசன் ஒன்றும் நியமிக்கப்பட்டது.

## முதலாவது உலகப்போரும் அதற்குப் பிந்திய காலமும்

முதலாவது உலகப் போர்க் காலத்தில் அமெரிக்கத் தொழில்கள் யாவும் விரிவடைந்தன. ஆயினும், இப் போர்க் குழவிகள் (*War Babies*) பின்னர் பிற நாட்டுப் போட்டியின் ஆபத்துக்குள்ளாகக்கூடியதொரு நிலை காணப்பட்டது. ஆகவே, 1920-இல் ஆட்சியை மீண்டும் கைப்பற்றிய குடியரசுக் கட்சியானது உள்நாட்டுத் தொழில் பாதுகாப்புக் கொள்கையை மறுபடியும் மேற்கொண்டது. இதற்கென அவசரச் சுங்கச் சட்டம் (*Emergency Tariff Act*) ஒன்றையும் 1921-இல் நிறை-வேற்றியது. இதைத் தொடர்ந்து 1922-இல் போர்டுனே-மெக்கம்பர் சட்டம் (*Fordney Mccumber Act*) ஒன்றும் தோற்றுவிக்கப்பட்டது. இவ்விரு சட்டங்களும் சேர்ந்து சுங்க வரிகளை 1909-ஆம் ஆண்டிலிருந்த மட்டத்திற்கும் மிகையாக உயர்த்தியதோடு, அவசியமானல் இவ் வரிகளைக் குறைந்தபட்ச அளவிற்குமேல் 50 சதவீதம் வரை உயர்த்துவதற்கும் ஜனதிபதிக்கு அதிகாரம் அளித்தன.

1930-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட ஹாலே-ஸ்மூத் சுங்கச் சட்டம் (*Hawley - Smoot Tariff*) தான் அமெரிக்கச் சுங்க வரிக் கொள்கையின் உச்சமெனக் கருதப்படவேண்டும். இச்சட்டம் பற்பல சரக்குக்களின் பேரிலும் சுங்க வரிகளை உயர்த்தியது. இப்புதிய வரி வீதங்களின் சராசரி அதிகரிப்பு மிக உயர்ந்ததல்லவாயினும் இவற்றின் பொதுவான விளைவோ, நாட்டில் பொருளாதார மந்தத்தையும், வர்த்தகத்தில் வீழ்ச்சியையும் மிக்க விரைவுபடுத்துவதாயிருந்தது. இதனல்

விவசாயிகளும், ஏற்றுமதியாளர்களும், வெளிநாட்டில் முதலீடு செய்வோரும் இச் சுங்கத்தை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யலாயினர். ஏனெனில், இவ்வுயர் சுங்கத்தின் விளைவாக அயல்நாட்டுச் செலுத்து நிலைப் பிரச்சினைகள் பலவும் மிகவும் மோசமாகின. இதனாலேயே 1000 பொருளாதார வல்லுநர்கள் சேர்ந்து அப்போதைய அமெரிக்க ஜனாதிபதி ஹூவர் *(President Hoover)* என்பவருக்கு, அவர் அச்சட்டத்தில் கையெழுத்திடவேண்டாமெனக் கோரி விண்ணப்பித்துக் கொண்டனர். ஆயினும், ஜனாதிபதி ஹூவர் என்பார் இச் சுங்கங்கள் உண்மையில் அமெரிக்க நாட்டுப் பொருளாதார நிலையைப் பெரிதும் முன்னேற்றக் கூடும் என்னும் நம்பிக்கை கொண்டவராகவே யிருந்தார்.

பின்னர், மேற்கூறப்பட்ட ஹாலே - ஸ்மூத் சட்டமானது 1934-இல் கொண்டுவரப்பட்ட ஒரு வர்த்தக ஒப்பந்தச் சட்டத்தால் *(Trade Agreement Act)* திருத்தம் பெற்றது. இவ்வர்த்தக ஒப்பந்தச் சட்டத்தின் கீழ்ப் பிறநாடுகளுடன் செய்துகொள்ளப்பட்ட பரஸ்பர ஒப்பந்தங்களின் பயனாகச் சுங்க வரிகள் யாவும் மறுபடியும் குறைக்கப்பட்டன. இவ்வகையில் 1934 முதல் 1939 வரையுள்ள காலத்தில் பற்பல நாடுகளுடனும் பரஸ்பர வர்த்தக ஒப்பந்தங்கள் செய்துகொள்ளப்பட்டன. இவற்றின் விளைவாகவே சுங்க வரிகளில் கணிசமான குறைவுகள் ஏற்பட்டன. இவ்வரி மாற்றங்கள் அமெரிக்க வாணிகம் அதிகரிப்பதற்குத் துணை புரிந்தது மட்டுமின்றி, உலக வாணிகம் மீட்சி பெறுவதற்கும் வழி செய்தன. பின்னர் 1948-இல் ஏற்படுத்தப்பட்ட 'சுங்கத் துறை - வாணிகத் துறைப் பொது ஒப்பந்தங்கள்' என்ற பன்னாட்டு அமைப்பில் *(General Agreement on Tariffs and Trade)* அமெரிக்காவும் ஓர் உறுப்பினராகியது. மேலும், உலகச் செழுமையை மீட்கும் நோக்குடனே அமெரிக்கா உலகத்து நாடுகளுடன் பல-தரப்பு வாணிக ஒப்பந்தங்கள் பலவற்றையும் செய்துகொண்டது.

அமெரிக்கச் சுங்க வரி முறையானது அந்நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியாயிருந்தது

என்பது உண்மையே. ஆயினும், அதே சமயத்தில் மற்ருெரு புறத்தில், இச்சுங்கவரிகளே அமெரிக்காவில் பற்பல தொழில் இணைப்புக்களும், சர்வாதீனங்களும் தோன்றுதற்குப் பேரளவு காரணமாயிருந்தன என்பதையும் ஏற்றுக் கொள்ளவேண்டும். இவ்வாறு அமெரிக்காவின் வாழ்வு, உண்மையில் சுங்க வரிகளாலேயே பெரிதும் உருவாக்கப்பட்டதாகுமென்ருல் மிகையாகாது. அத்துடன் அமெரிக்க நாட்டின் வரலாற்றில் சுங்க வரிகளின் காரணமாகவே பன்முறை, போர்களும் மூண்டிருக்கின்றன என்பதும் உண்மையே. இறுதியாக இச் சுங்க வரிகள் அமெரிக்க நாட்டின் அரசியல் வாழ்வையே தூய்மையற்றதாக்கி, அதன் பொருளாதார வாழ்வையும் களங்கப்படுத்திவிட்டன எனக்கூறல்வேண்டும்.

## வாணிகம்

அமெரிக்க நாட்டு வணிக வரலாறு - உள்நாட்டு வர்த்தக வரலாறும் அயல்நாட்டு வணிக வரலாறும் தொடர்ந்து வளர்ச்சி காணும் துறை ஒன்றின் வரலாறு ஆகும். அமெரிக்காவில் தொழிற் புரட்சி நிறைவேறும் வரை உள்நாட்டு வர்த்தகம்தான் முக்கியத்துவம் மிகுந்ததாயிருந்தது. அப்போது உள்நாட்டு வர்த்தகம், முக்கியமாகப் பண்டங்களை அவை உற்பத்தியாகும் இடங்களிலிருந்து அவை நுகர்வுக்குத் தேவைப்படும் இடங்களுக்குக் கொண்டு செல்லும் பணியாகவே இருந்து வந்ததாகும். ஆரம்பக் காலத்தில் ஆறுகளையும், கால்வாய்களையும் பின்பற்றியே இவ்வர்த்தகம் நிகழ்ந்தது. ஆனல், பிற்காலத்தில் இருப்புப்பாதைகளும் சாலைகளுமே வர்த்தகத்தின் பாட்டைகளாகி விட்டன. அமெரிக்க உள்நாட்டு வர்த்தகம் விரைவான வளர்ச்சிபெற்றமைக்குக் காரணங்கள் பலவாகும். மக்களின் தொடர்ந்த குடியேற்றப் பெயர்ச்சியும், அமெரிக்க மக்கள் தொகையின் தொடர்ந்த வளர்ச்சியும், புதிய நகரங்களின் தோற்றமும், அமெரிக்க அரசியல் அமைப்புச் சட்டத்தால் இராச்சியங்களுக்கிடையே நிலவியிருந்த வர்த்தகச் சுயேச்சையும் தாம் அமெரிக்க உள்நாட்டு வர்த்தகத்தின் துரித வளர்ச்சிக்குத் துணைபுரிந்தன. அண்மைக்காலம் வரை அமெரிக்காவில்

உற்பத்தியாகிய பண்டங்களுள் 90 சதவீதத்திற்கு மேலாக உள்நாட்டு நுகர்வோருக்கே சென்றது. அமெரிக்காவின் இத்தகைய சுய தேவை நிறைவுப் பொருளாதாரமே (*Self-sufficient economy*) அந்நாட்டில் 20-ஆம் நூற்றுண்டின் ஆரம்பம் வரைக்கும், வெளிநாட்டு வணிகத்தை விட உள்நாட்டு வர்த்தகத்தையே முக்கியத்துவம் மிகுந்ததாகச் செய்தது.

## அயல்நாட்டு வாணிகம்

உள்நாட்டுப்போருக்குப் பிற்காலத்தில் அமெரிக்காவின் அயல்நாட்டு வாணிகம் பெற்ற வளர்ச்சி மிகவும் பிரமிக்கத்தக்கதாகும். அயல்நாட்டு வாணிகத்துக்கு முதன் முதல் தூண்டுதல் அளித்த நிகழ்ச்சிகள், அமெரிக்கப் புரட்சிப் போரும், நெப்போலியப் போருமேயாகும். ஆனல், பின்னர் பிரிட்டனுடன் நடந்த போரினுல் இவ்வாணிகத்தின் வளர்ச்சி பேரளவு தடைப்பட்டது. 19-ஆம் நூற்றுண்டின் இடைக்காலம் வரை அமெரிக்காவின் ஏற்றுமதிகள் பெரும்பாலும் விவசாயப் பண்டங்களாகவே இருந்தன. அவற்றுள் 60 சதவீதம் பருத்தியேயாகும். உள்நாட்டுப் போரை அடுத்த அரை நூற்றுண்டுக் காலத்திற்குள் அமெரிக்காவின் ஏற்றுமதி வாணிகம் 24 மடங்கு உயர்ந்துவிட்டது. இறக்குமதி வாணிகமும் 16 மடங்கு அதிகரித்திருந்தது. அமெரிக்காவின் அயல்நாட்டு வாணிகம் இவ்வாறு மாபேரளவுக்கு வளர்வதற்குத் துணைபுரிந்த காரணங்கள் பலவாகும். அவற்றுள் முதலாவதாகக் குறிப்பிடப்பட வேண்டியவை, அங்குத் தொடர்ந்து நிகழ்ந்தவந்த நாட்டு விரிவும், தொடர்ந்து பெருகிவந்த குடியேற்றமும், மேலும் விவசாய கனிவளங்கள் நிறைந்த ஐக்கிய அமெரிக்க நாட்டு பெருநிலப்பகுதிகளின் புதுப்புது கண்டுபிடிப்பும் ஆகும். அடுத்துக் கூறப்படவேண்டியவை, சுங்க வரிச் சுவர்களின் (*Tariff Walls*) பாதுகாப்பில் விளைந்த தயாரிப்புத் தொழில்களின் துரிதப் பெருக்கமும், தொழில் சர்வாதீனங்கள் தொழில் இணைப்புக்களின் தோற்றமும், இரயில்வேக்கள் கப்பல் போக்குவரத்தின் முன்னேற்றமும் ஆகும். இவையே

உலக வாணிகத்தில் அமெரிக்காவை இடம்பெறச் செய்தன. அமெரிக்கத் தொழில்களுக்கு வெளிநாட்டுச் சந்தைகள் பெரிதும் தேவைப்பட்டன. ஆகவே, அமெரிக்காவில் தொழில் வளர்ச்சியடைய யடைய அந்நாட்டின் அயல்நாட்டு வாணிகமும் கட்டாயமாகப் பெருக நேரிட்டது. இவ்வாணிகத்தின் வளர்ச்சிக்கு ஏற்றாற்போலவே அமெரிக்காவின் பாங்குகளும், மற்றும் நிதி அளிப்பு நிலையங்களும் அதிக நிதி வசதிகளை இத்துறைக்கு அளிக்க முன்வந்தன.

தனியார் உரிமையிலும், தலையிடாக் கொள்கையிலும் அழுத்தமான நம்பிக்கை கொண்ட அமெரிக்கக் கூட்டரசு அரசாங்கங்கூட நாட்டின் அயல்நாட்டு வாணிகத்திற்குப் பல்வகைகளிலும் உதவி புரிந்துள்ளது என்பது குறிப்பிடத் தக்கது. கப்பல்களைக் கட்டுவித்தல், துறைமுகங்களை அமைத்தல், கடல்போக்குவரத்தின் ஆபத்துக்களைத் தவிர்க்கும் பாதுகாப்புக்களை ஏற்படுத்துதல் முதலிய அரசாங்க நடவடிக்கைகளால் அமெரிக்காவில் கப்பல் போக்குவரத்து வசதிகள் வெகுவாக முன்னேற்றமடைந்தன. 1913-க்குப் பிறகு அரசாங்க வாணிகத்துறை இலாகாவின் நடவடிக்கைகளும் அயல்நாட்டு வாணிகத்தின் வளர்ச்சிக்கு மிக்க உதவியா யிருந்தன. இவ்வாணிக இலாகாவில் இதற்கென ஏற்படுத்தப் பட்டிருந்த பல்வேறு பணியகங்களையும் நோக்கின், அமெரிக்கக் கூட்டரசு அரசாங்கமானது அயல்நாட்டு வாணிகத்தில் காட்டிவந்த ஆர்வமும் அக்கறையும் நன்கு புலப்படும். மேலும், வாணிக இலாகா வெளியிடும் அறிக்கைகளும், புள்ளி விவரங்களும், தகவல் ஏடுகளும் அயல்நாட்டு வாணிகத்துறைக்குப் பெரிதும் துணைபுரியக்கூடியனவாகும். அயல்நாடுகளில் அமர்த்தியுள்ள பிரத்தியேக பொறுப்பாளர்கள், வாணிகத்துறை அலுவலர்கள், மற்றும் அமெரிக்க ஸ்டேட் இலாகாவின் வர்த்தகப் பிரதிநிதிகள் முதலியோரின் மூலம் அமெரிக்காவின் வெளிநாட்டு வாணிகத்திற்கு மிகவும் பயன்படக்கூடிய வாணிகச் செய்திகளும் விவரங்களும் ஆங்காங்குச் சேகரிக்கப்பட்டுப் பின்னர், அமெரிக்காவின் அயல் வாணிகத்திலீடுபடுவோருக்கெல்லாம் இவ்விவரங்கள் வழங்கப்படுகின்றன. அதுவுமன்றி, அயல் வாணிகத்தில் ஈடுபட்டுள்ள கார்ப்பரேசன்கள் யாவும்

அவசியமாயின் தங்களுக்குள் தொழில் இணைப்புக்களை (*Combinations*) ஏற்படுத்திக் கொள்ளவும் அனுமதிக்கப்பட்டன என்பது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். ரூஸ்வெல்டின் நிர்வாக காலத்தில், அயல் வாணிகத்துக்கு இதற்கும் மிகையான ஆதரவை அளிக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. பிற நாடுகளுடன் ஒப்பந்தங்கள் செய்துகொள்ளல், அயல்நாடுகளுக்கு வாணிகங்கருதிக் கடன்களை அளித்தல், ஏற்றுமதி - இறக்குமதிப் பாங்கின் மூலம் அயல்நாட்டு வாணிகத்துக்குப் புது நிதி வசதிகளை ஏற்படுத்தல் முதலியவை அயல் வாணிகத்தை ஊக்குவிப்பதற்கு அந்நிர்வாகம் எடுத்துக் கொண்ட முக்கிய முயற்சிகளாகும்.

உலகப் பொருளாதார மந்தமும், அதன் பின்னர் இரண்டாவது உலகப் போரும் உலக வாணிக அரங்கில் அமெரிக்கா வகித்து வந்த பங்கில் பெரு மாற்றங்களை விளைவித்துள்ளன. உலகப் பொருளாதார மந்தத்தின் காரணமாக அமெரிக்க ஏற்றுமதியின் பெறுமானம் 8 மில்லியன் டாலர்களிலிருந்து 1 மில்லியன் டாலர் ஆக வீழ்ந்தது. அதே போன்று இறக்குமதிகளின் பெறுமானமும் 5 மில்லியன் டாலர்களிலிருந்து 1 மில்லியன் ஆகக் குறைந்துவிட்டது. ஆயினும், இரண்டாவது உலகப் போர் ஆரம்பித்த பின்னர் அமெரிக்காவின் அயல்நாட்டு வாணிகம் விரைவாகப் பெருகிவிட்டது. இதன் பயனாக அமெரிக்கா பெருந் தொகைகளைப் பிற நாடுகளுக்குத் தவணை ஒப்பந்தத்தின்கீழ் (*Lend-lease agreement*) கொடுத்துதவவும் முடிந்தது. இவ்வகையில் அயல் நாடுகளுக்கு அளிக்கப்பட்ட தொகைமட்டும் 43 மில்லியன் டாலர்களாகும். இதைத் தவிர, வேறு முறைகளில் அளிக்கப்பட்ட நிதி உதவிகளின் பெறுமானம் 30 மில்லியன் டாலர்களாகும்.

உலகப் பொருளாதார அரங்கில் அமெரிக்க நாடு மிகவும் சிக்கலான ஒரு பங்கை இன்று வகிக்கின்றது என்றால் மிகையாகாது. இன்று அமெரிக்கா உலகத்தின் கடனீவோனாக (*creditor nation*) ஆகிவிட்டதோடு, தனக்கு மிகவும் சாதகமானதொரு வாணிகக் கொடுப்பல் நிலையையும் (*favourable balance of Trade position*) அந்நாடு தொடர்ந்து அனுபவித்து வருகிறது. எனினும், நீண்டகால நோக்குடன் பார்க்கும்போது, இந்நிலை

உலகத்து நாடுகளுக்கு இறுதியில் நலம் விளைவிக்கக் கூடியது அல்ல என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். காரணம் 'இச் சமநிலையற்ற வாணிகக் கொடுப்பல் நிலை தொடர்ந்து நீடிக்குமே-யானால், வாணிகக் கடனாளி நாடுகள் அமெரிக்காவுக்குத் தங்கள் பாக்கிகளைத் தீர்க்க ஒன்று, பொன் செலுத்தியாகவேண்டும் அல்லது பண்டங்களை அளித்தாகவேண்டிவரும். ஆனால், இப்போதுள்ள நிலையில் அமெரிக்காவின் சுங்க வரிச் சுவர்கள், அயல்நாட்டுச் சரக்குக்களை அமெரிக்காவிற்குள் தாராளமாக நுழையாதபடி தடுப்பவையாயிருக்கின்றன. கடனாளி நாடுக-ளிடமோ அவர்கள் கடனைத் தீர்த்துக் கொள்ளப் போதிய அளவு பொன் இல்லை, ஆகவே, இச்சிக்கலைப் போக்கும் ஒரே வழி யாதெனில், அமெரிக்கா பிற நாடுகளுக்குப் பேரளவு கடன்-களையும், தாராள நிதி உதவிகளையும், மிகுதியான முதலீடுகளை-யும் அளிப்பதேயாகும்.'[1] இன்று உலகத்தின் பொருளாதாரம் அமெரிக்க நாட்டின் கொள்கையையே முற்றிலும் சார்ந்ததாய்த் தோன்றுகிறது என்றால் வியப்பில்லை. அமெரிக்க நாட்டின் உயர் திறம்தான் இன்று உலகத்து நாடுகளின் போட்டியில் அந்நாடு வெற்றிபெறுதற்குத் துணை புரிவதாயிருக்கிறது. இதனாலேயே அமெரிக்கா இன்று சாதகமானதொரு வாணிகக் கொடுப்பல் நிலையைத் தனக்குப் பெற்றுக்கொள்ளவும் முடிகிறது. மற்ற நாடுகள் அமெரிக்காவிடம் தங்களுக்குள்ள பாதக வாணிகக் கொடுப்பல் (*Unfavourable balance of Trade*) நிலையைத் தீர்த்துக் கொள்ளச் சக்தியற்றுள்ளமையால்தான், இன்று அமெரிக்கா இந்நாடுகளுக்குக் கடன்களை வழங்குவதன் மூலமாகத் தற்காலிக-மாகவாவது ஒரு வாணிகக் கொடுப்பல் சமநிலையை ஏற்படுத்திக் கொள்ளும் கட்டாயமேற்படுகிறது. ஆயினும், இந்நடவடிக்கை இறுதியில் அமெரிக்காவிடம் அயல்நாடுகளின் செலுத்து நிலையை (*Balance of payment position*) மேலும் மோசமானதாக்கி விடக்கூடும் என்று குறிப்பிடுதல்வேண்டும். ஆகவே, இன்று உலகப் பொருளதாரத்தின் நிலையை இத்துறையில் சீர்திருத்த வேண்டுமாயின் அதற்கு, புதுமுறை வாணிகக் கொள்கைகளும், நிதித்துறைக் கொள்கைகளும், திட்டங்களும் கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்பது தெளிவாகும்.

1. Ellsworth: International Economics.

# 11. தொழிலாளரும்!
# தொழிலாளர் சட்டங்களும்

அமெரிக்கத் தொழிலாளர் இயக்கம் பல்வகையாலும் முக்கியத்துவம் வாய்ந்தது என்று கூறவேண்டும். அமெரிக்க ஐக்கிய நாட்டின் தொழிலாளர் மொத்தத் தொகையில் ¼ பங்குக்கு மேல், அதாவது ஏறத்தாழ 16 மில்லியன் தொழிலாளர்கள் அந் நாட்டின் பற்பல தொழிலாளர் சங்கங்களில் உறுப்பினராயிருக்கின்றனர். இத்தொழிலாளர்கள் அமெரிக்க நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் மிகப் பெரும் பங்கைக் கொண்டுள்ளனர். மேலும், உலகில் இன்று அமெரிக்காவின் இணையற்ற பொருளாதார செழுமையைத் தொடர்ந்து பாதுகாத்து வருவதில் அந்நாட்டின் தொழிலாளர்களுக்கு ஒரு மகத்தான பங்கு இருக்கின்றது. உலகில் மற்றைய நாடுகளிலுள்ள தொழிலாளர்களைப் போலல்லாமல் அமெரிக்கத் தொழிலாளர்கள் வீணை அரசியல் ஈடுபாட்டைக் கைவிட்டவராய், நாட்டில் நிலவும் சுயேச்சைத் தொழில் முறைக்கு உட்பட்டே தங்களுடைய கூலிகளையும், வேலைச் சூழ்நிலைகளையும் உயர்வு செய்துகொள்ளும் ஒரே குறிக்கோளில் தங்கள் முழுக் கவனத்தையும் செலுத்துகின்றனர் என்பதை இங்குக் குறிப்பிடவேண்டும். புரட்சிகளை ஏற்படுத்தவோ இப்போது இருக்கின்ற சமூக அமைப்பை ஒழிக்கவோ முயற்சிக்காமல், நாட்டின் வருமானத்தில் முன்னைவிட அதிகமான பங்கைத் தாங்கள் அடைந்துகொள்வதையே அமெரிக்கத் தொழிலாளர்கள் நோக்கமாகக் கொண்டுள்ளனர். இன்று அமெரிக்கத் தொழிலாளர்கள் தாம் உலகிலேயே மிக

உயர்ந்த வாழ்க்கைத் தரத்தை அனுபவிக்கிறார்கள் என்பதும் உண்மையாகும்.

அமெரிக்க ஐக்கிய நாட்டில் தொழிலாளர்கள் ஒரு வலுப் பெற்ற சக்தியாக உருக்கொள்ளத் தாமதமேற்பட்டதற்குப் பல காரணங்கள் உண்டு. அமெரிக்க நாட்டில் குடியேற்றங்கள் மிகவும் பரவலாக அமைந்திருந்தமையாலும், ஆரம்பத்தில் விவசாயம் மற்றும் கிராமத் தொழில்களே நாடு முழுதும் ஓங்கியிருந்தமையாலும் அந்நாட்டில் தொழிலாளர்கள் ஒன்று-படுதல் அவ்வளவு எளிதாயில்லை. மேலும், உள்நாட்டுப் போர் ஆரம்பிக்கும்வரை அமெரிக்காவில் போக்குவரத்து வசதிகள் மிகக் குறைவாகவேயிருந்தன. இங்கிலேயில் பரந்துவிரிந்திருந்த அந்நாட்டின் பல்வேறு பகுதிகளிலுமுள்ள தொழிலாளர்களை ஒன்றுசேர்ப்பது என்பது சடுதியில் நிறைவேற முடியவில்லை என்றால் வியப்பில்லை. தவிரவும், நாட்டின் பொருளாதார வளர்ச்சியின் ஆரம்பக் காலத்தில் அங்கு முதலாளி தொழிலாளி என்று தீவிரமான வகுப்புப் பிரிவினை ஏதும் எழவுமில்லை. அதுபோது ஒவ்வொரு தொழிலாளியுமே ஒரு சிறு முதலாளி-யாகவே இருந்தான். பிறரை வேலைக்கு அமர்த்திக் கொண்டு தொழில் செய்பவன்கூட, தானும் ஒரு தொழிலாளியாகவே பணிபுரிய வேண்டிய அவசியம் அப்போதிருந்தது. அமெரிக்கா போன்ற ஒரு புதிய நாட்டில் எந்த ஒரு தொழிலாளியும் தனக்கு இயன்றவரை செல்வத்தை ஈட்டிக் கொள்வதற்கு அளவிலா வாய்ப்பு இருந்தது. குறிப்பாக, விவசாயத் துறையில் இத்தகைய வாய்ப்பு மிகுதியாயிருந்தது. புதிய நாடாகையால் அமெரிக்கா-வில் தீவிரமான வகுப்புவேற்றுமை மரபு ஏதுமில்லாதிருந்தது. மேலும், தொழிலாளர்களும் தங்கள் விருப்பம்போல் இடம் பெயர்ந்துகொள்வது சாத்தியமாயிருந்தது. இத்தகைய சூழ்நிலையில் தொழிலாளர்கள் ஒன்றுசேர்ந்து கொள்ளவேண்டிய அவசியமேதும் இல்லாதிருந்தது. சுருங்கக் கூறின், ஒவ்வொரு அமெரிக்கத் தொழிலாளியும் ஒரு செல்வந்தனைக் கூடிய சாத்தியம் அந்நாட்டில் காணப்பட்டமையால் தொழிலாளி வர்க்க உணர்ச்சி என்பது அந்நாட்டுத் தொழிலாளர்களிடையே காணப்படவில்லை. இவையன்றியும், அமெரிக்கத் தொழிலாளர்கள் பல்வேறு இனங்களையும் வர்க்கங்களையும் சார்ந்த மக்களா-

யிருந்தமையால் ஆரம்பக்காலத்தில் இவர்களிடையேபொதுவான இலட்சியங்கள் எவையுமிருக்கவில்லை. தொழிற்சாலைப் பணியில் ஒரு தொழிலாளிக்கு அதிருப்தி ஏற்பட்டால், அவன் அதைத் துறந்து வேறு துறையில் எளிதாக வேலைபெற்றுக் கொள்ளும் வாய்ப்பு நிறைய இருந்தது. ஆகவேதான், மற்ற நாடுகளிலுள்ளதைப் போல் அமெரிக்காவில் அரசியல் வாதிகளும், சட்டசபை உறுப்பினர்களும் அந்நாட்டுத் தொழிலாளரைத் தங்கள் அரசியல் நோக்கங்களுக்குப் பயன்படுத்திக் கொள்ளுதற்கு இயலவில்லை.

அமெரிக்க வரலாற்றின் ஆரம்பத்திலிருந்தே அந்நாட்டில் தொழிலாளர் இயக்கம் இருந்து வந்திருக்கிறது என்பது உண்மையே. ஆயினும், இத்தொழிலாளருக்கான சங்கங்கள் யாவும் ஆரம்பத்தில் தொழிலாளர் உதவிச் சங்கங்களாக (*Benevolent societies*) இருந்தனவேயன்றி, நவீன முறையிலமைந்த தொழிற் சங்கங்களாக இருக்கவில்லை என்று குறிப்பிடுதல்வேண்டும். 1786-இல் பிலடெல்பியாவைச் சேர்ந்த அச்சுத் தொழிலாளர்கள் யாவரும் ஒன்று சேர்ந்து குறைந்தபட்சக் கூலி கோரி, வேலை நிறுத்தம் செய்தனர். 1820 முதல் 1840 வரையுள்ள காலத்தைத்தான் அமெரிக்கத் தொழிலாளரின் ஆரம்ப எழுச்சிக் காலம் என்று கூறவேண்டும். 1827-இல் பிலடெல்பியா பொறித் தொழிலாளரின் தொழிற் கழகங்கள் (*Trade associations*) சேர்ந்து ஏற்படுத்திக்கொண்ட தொழிலாளர் ஐக்கியம் தான் (*Mechanics union of Trade Associations*) அமெரிக்காவில் தொழிலாளர் இயக்கத்தின் ஆரம்பத்தைக் குறிப்பதாகும். 1834-இல் தான் முதலாவதாக முக்கியத்துவம் வாய்ந்ததொரு தேசியத் தொழிற் சங்கம் (*National trade union*) அமைக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து மூன்று ஆண்டுகள் வரை நாட்டின் பல பாகங்களைச் சேர்ந்த பிரதிநிதிகளைக் கொண்ட பல தேசிய சம்மேளனங்கள் கூட்டப்பட்டன. ஆனால், 1837-ஆம் ஆண்டு நாட்டில் எழுந்த பீதியின் (*Pánic*) காரணமாக இத் தொழிற் சங்கம் மறைந்தொழிந்தது.

ராபர்ட் ஓவன் (*Robert Owen*) அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு 1825-இல் வருகை புரிந்தார். அதன் விளைவாக, அமெரிக்காவில்

தொழிலாளர் இயக்கமும், மனிதப் பணி இயக்கமும் (*Humanitarian movement*) புதியதொரு திருப்பம் பெற்றன. உன்னதமான ஓர் இலட்சிய சமூகத்தை உலகில் நிறுவும் நோக்கம் புதிதாக இவ்வியக்கங்களுக்குள் புகுந்தது. 1840-ஐ அடுத்த பத்து ஆண்டுகளில் உலகெங்கும் மனித உரிமைகளின் தத்துவமும், புரட்சிகளின் இலட்சியங்களும் மக்களிடையே ஓங்கிப் பரவியிருந்தன. அவ்வமயம் தொழிலாளர் உயர்விற்கான பற்பல சீர்திருத்தங்களும் விவாதிக்கப்பட்டன. இக்காலத்தில்-தான் பிரஞ்சுப் பொது உடைமையாளரான சார்லஸ் ஃபூரியர் (*Charles Fourier*) என்பவர் பரப்பிய கொள்கைகளால் ஃபூரியரிசம் என்றழைக்கப்பட்ட முக்கியமானதோர் இயக்கம் தோன்றியது. தொழிலாளர் சங்கங்களை அடிப்படையாகக் கொண்டு ஒரு தொழிற் சமூகத்தை (*Industrial society*) அமைப்பதே இவ்வியக்கத்தின் குறிக்கோளாகும். இக்காலத்தில் அமெரிக்காவிலும் சோஷலிஸக் காற்று ஒன்று வீசியது. இச்சோஷலிஸ இலட்சியங்களை நடைமுறைக்குக் கொண்டுவரும் முயற்சியில் பற்பல பரிசோதனைகளும் அமெரிக்காவில் மேற்கொள்ளப்பட்டன. ஆனால், அவப்பேறாக, இப்பரிசோதனை-களில் பல, தோல்விகண்டன. அது முதல் அமெரிக்கத் தொழிலாளர்கள் இலட்சிய சமூகத்தைத் தோற்றுவிக்கும் தங்கள் குறிக்கோளைக் கைவிட்டு, தங்களுக்குள்ள குறைபாடுகளில் குறிப்பிட்டவற்றை அகற்றிக் கொள்வதிலேயே மிக்க கவனம் செலுத்த ஆரம்பித்தனர். அடுத்த ஒரு சிறிது காலத்-திற்குக் கூட்டுறவு இலட்சியம் தொழிலாளர் மனத்தைக் கவர்ந்தது. ஆயினும், இவ்வியக்கமும் வலுவடையவில்லை. என்றாலும், உள்நாட்டுப் போருக்கு முந்திய பத்து ஆண்டுக் காலத்தில், தொழிலாளர் சங்கங்களை அமைக்கும் முயற்சிகள் பலவிடங்களில் மேற்கொள்ளப்பட்டன. இம்முறையில் தொழிற் சங்கங்களை நிறுவிக் கொள்வதற்கு அமெரிக்கத் தொழிலாளர்கள் செய்த ஆரம்ப முயற்சிகளின் பயனாகவே 1850-இல், அகில உலக அச்சுக்கலைத் தொழிலாளர்கள் சங்கமும் (*International Typographical union*), 1854-இல், தொப்பி தயாரிப்போர் தேசியத் தொழிற் சங்கமும் (*National trade union of the Hat*

*Finishers*), *1859*-இல், இரும்பு வார்ப்படக்காரர், பொறித் தொழிலாளர், கருமார் ஆகியோரின் சங்கமும் உருவெடுத்தன.

அமெரிக்கத் தொழிலாளர் இயக்கம் அது முதற்கொண்டு வலுப்பெற்றமைக்குப் பல காரணங்களைக் கூறலாம். முதலாவ-தாக, கூலிக்கு வேலைசெய்யும் தொழிலாளி வகுப்பினர் புதிதாக அமெரிக்காவில் தோன்றவாரம்பித்தனர். மேலும், இத்தொழி-லாளர்கள் யாவரும் பெருவாரியாக நகரங்களில் குவிந்து வாழவும் தொடங்கினர். அமெரிக்காவில் தொழிலாளர் இயக்கமொன்று தோன்றி வளர்வதற்கு இவையே அடிப்படைக் காரணங்களா-யிருந்தன. அடுத்தாற்போல, பண்டத் தயாரிப்பு, தொழில் உற்பத்தி முதலியவற்றின் பெருவாரியான வளர்ச்சியும் அமெரிக்காவில் பெருங் கார்ப்பரேசன்களைப் புதிதாகத் தோற்றுவித்தது. ஆகவே, இப்புதிய சர்வாதீன முதலாளித்துவ முறைக்கு (*Monopoly Capitalism*) எதிராகத் தொழிலாளர்கள் தங்களுக்குள் சங்கங்களை ஏற்படுத்திக்கொள்ளவும் ஒன்று சேர்ந்து கொள்ளவும் நேரிட்டது. பெரு நகரங்களில் எழுந்த பரந்த தொழிற்சாலைகள் தொழிலாளர்களை ஒன்றுகுவித்து, அவர்கள் ஒன்று சேர்வதற்கும் நிறைய வாய்ப்பளித்தன. இச் சூழ்நிலையில் தொழிலாளர்கள் தங்களுக்குள் நெருங்கிப் பழகவும், தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ளவும், தாங்கள் எளிதாக ஒன்று சேர்ந்து செயலாற்றவும் முடிந்தது என்றால் வியப்பில்லை. காகித உற்பத்தியிலும், அச்சிடுவதிலும் நிகழ்ந்த முன்னேற்றங்கள் தொழிலாளர்களிடையே கல்வி பரவுவதற்கு மிகவும் உதவியாயிருந்தன. அத்துடன், நாட்டில் புதிதாகக் கொண்டுவரப்பட்ட ஜனநாயகக் கல்வி முறையும், இரயில்-வேக்கள் மற்றத் தொடர்பு வசதிகளின் வளர்ச்சியும், உள் நாட்டுப் போரைத் தொடர்ந்து நிகழ்ந்துவந்துகொண்டிருந்ததான சமூக ஒருமைப்பாட்டு வளர்ச்சியும் தொழிலாளர் இயக்கத்திற்கு மேலும் துணை செய்தன. அதுவுமன்றி, அமெரிக்கத் தொழிலா-ளர்கள் வேலை செய்யும் சூழ்நிலையும் உள்நாட்டுப் போரிலிருந்தே மோசமாயிருந்தமையால், அமெரிக்காவில் தொழிலாளர் இயக்கத் திற்கு இதுவும் ஒரு தூண்டுதலை அளித்ததென்று கூற-வேண்டும். இவ்வகையில் அமெரிக்கத் தொழிலாளர் அனுபவித்த சங்கடங்கள் பற்பல. முதலாவதாக், தொழிலாள-

ருக்குக் கூலிகள் ட்ரக் முறையில்தான் (*Truck System*) அளிக்கப்பட்டு வந்தன. அதாவது, தொழிலாளர்களுக்கு அவர்களுடைய முழுக் கூலித் தொகை கையில் கொடுக்கப்படுவதில்லை. தொழிற்சாலை முதலாளிக்குச் சொந்தமான கடையில் தொழிலாளர்கள் கடனுகப் பெற்ற பண்டங்களுக்குச் செல்லவேண்டிய தொகை போக, மீதியே தொழிலாளர்கள் கையில் கொடுக்கப்பட்டது. தொழிலாளர்களின் வேலை நேரமும் மிக நீண்டதாக இருந்தது. நாளொன்றுக்குப் பலமணிநேரம் உழைக்க வேண்டியிருந்தது ; ஆனல், அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட கூலியோ மிகவும் குறைவு. மேலும், அவர்கள் வேலை செய்யும் தொழிற்சாலைகள் சுகாதார வசதிகளற்றவையாயும் தொழிலாளரின் ஆரோக்கியத்திற்குக் கேடுசெய்யக் கூடியவையாயும் இருந்தன. அத்துடன் தொழிலாளரின் உடலை மிக வருத்திக் கொடூரமாக வேலை வாங்கப்பட்டது. பெண்களும் குழந்தைகளுங்கூட கடுமையான வேலைகளிலீடுபடுத்தப்பட்டனர். பல தொழிலகங்களில் வேலை விதிகள் தொழிலாளர்களை மிகவும் இழிவு படுத்துபவையாயிருந்தன. மேலும், கண்டிப்பான தொழிலாளர் சட்டங்கள் எவையுமில்லாமையால் நிலைமை இன்னும் மோசமாகியது. இத்துணைக்கும் மேலாக, நியாயம் கோரி, நாட்டின் நீதி மன்றங்களைத் தொழிலாளர்கள் நாடுதற்குச் சட்டத்தில் வாய்ப்பிருக்கவுமில்லை. இவ்வாறுன நிலையே அமெரிக்காவில் தொழிலாளர் இயக்கத்தை இன்றியமையாததாக்கிவிட்டது.[1] இவைதவிர, உள்நாட்டுப் போரைத் தொடர்ந்து அமெரிக்காவில் ஏற்பட்டிருந்த பண வீக்கநிலையும் (*Inflation*), வேலை செய்யாது சுகமனுபவிக்கும் செல்வர் வகுப்பொன்றின் தோற்றமும் அமெரிக்கத் தொழிலாளர்களிடையே பொதுவானதோர் அதிருப்தியை உண்டாக்கின. இவற்றின் விளைவாகவே தொழிலாளர்கள் தங்கள் பாதுகாப்பையும் நலத்தையும் கருதிப் பற்பல சங்கங்களையும், கழகங்களையும் ஏற்படுத்திக் கொள்ளவாரம்பித்தனர். 1861-ஆம் ஆண்டிற்கும் 1873-ஆம் ஆண்டிற்குமிடையே இவ்வகையில் இருபத்து மூன்று தொழிற்சங்கங்கள் அமைக்கப்பட்டுவிட்டன. இவைகளுள் மிக்க முக்கியத்துவம் வாய்ந்த இரு

1. Fluegal and Faulkner: Readings in the Economic and Social history of the United States pp. 816-829.

பெரிய சங்கங்கள், தொழில் நைட்களின் உயரிய சங்கமும் (*Noble order of the Knights of Labour*), அமெரிக்கத் தொழிலாளர் கூட்டணியும் (*American Federation of Labour*) ஆகும்.

## தொழில் நைட்கள் சங்கம் (*Knights of Labour*)

தொழில் நைட்கள் சங்கம் என்பது எஸ். ஸ்டீபன்ஸ் என்பவரால் பிலடெல்பியாவில் 1869-ம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்டதாகும். இதில் எவரும் உறுப்பினராகலாம் என்றிருந்தது. கார்ல் மார்க்சின் கொள்கைகளைத் தங்கள் அரசியல் நோக்கமாகக் கொண்ட பல தொழிற் சங்கங்களைச் சேர்த்து, நெகிழ்வானதொரு கூட்டணி அமைக்கப்பட்டது. இக்கூட்டணியின் குறிக்கோளாவது, தொழிலாளர்கள் உற்பத்திசெய்யும் செல்வம் முழுவதையும் அவர்களே பெற்று அனுபவிக்க உதவுவதும், மேலும் அவர்கள் சமூகத்துறையிலும், அறநெறித்துறையிலும், அறிவுத்துறையிலும் தங்கள் தனி இயல்புகளை வளர்த்துக்கொள்வதற்குத் தேவைப்படும் ஓய்வு நேரத்தைத் தொழிலாளர்கள் பெற்றுக்கொள்ளத் துணைபுரிவதுமாகும். இச்சங்கத்தினர் தங்களுக்கெனப் பல அரசியல், பொருளாதாரத் திட்டங்களையும் வகுத்துக் கொண்டிருந்தனர். எட்டுமணி நேர வேலை நாள், வருமான வரி, வாரிசு உடைமை வரி, அஞ்சல் நிலையச் சேமிப்புப் பாங்குகள், வேலையில் காயமுற்ற தொழிலாளருக்குப் பொருளீடு, நிலத்தின் விலையேற்றத்தினால் நிலப்பிரபுக்களுக்கு உழைப்பின்றி வரும் இலாபத்தைச் சமூகத்திற்குச் சொந்தமாக்குதல் முதலிய திட்டங்களை இவர்கள் ஆதரித்தனர். மேலும், சமூகத்தின் பொது வசதிகளாகிய இரயில்வேக்கள், எரிவாயு வசதிகள், நீர்வசதிகள் முதலிய யாவற்றையும் நாட்டின் பொதுவுடைமையாக்க வேண்டுமென்றும் அவர்கள் கோரினர். பண்டங்களின் உற்பத்தி, வினியோகம் முதலியவற்றைத் தொழிலாளர்களின் கூட்டுறவுச் சங்கங்களிடமே விட்டுவிடவேண்டுமென்பதும் அவர்களுடைய கொள்கையாகும்.[1] ஆயினும், தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தை இவர்கள் ஆதரிக்கவில்லையென்பது மிகவும் குறிப்பிடத்தக்கது. அதற்குப் பதிலாக நேரிடை விவாத

1. Ely : Labour Movement in America p. 75.

மூலமும், சமரச மூலமும், தக்க திட்டவழி ஏற்பாடுகளின் மூலமுமே தொழிலாளர்களின் நிலையை உயர்த்த வேண்டுமென்று அவர்கள் விரும்பினர். ஆரம்பத்தில் இச்சங்கம் ஓர் இரகசிய அமைப்பாகவே இருந்தது. ஆனால், 1869-க்குப் பின்னர்த் தொழிலாளர்கள் இத் ‘தொழில் நைட்கள்’ சங்கத்தில் மிகுதியாகச் சேர்ந்தனர். 1886-ஆம் ஆண்டில் இச்சங்கத்தின் உறுப்பினர் எண்ணிக்கை 730,000 ஆக உயர்ந்துவிட்டது. ஆனால், அதற்குப் பின்னர் இச்சங்கம் தொழிலாளர் பேரில் தனக்கிருந்த செல்வாக்கை வெகு விரைவில் இழக்க நேரிட்டது. அதுபோது நாட்டில் நிகழ்ந்த பல வேலை நிறுத்தங்களும் மற்ற அரசியல் நடவடிக்கைகளும் இச்சங்கத்தின் கொள்கைகளுக்கு மாறாகவே இருந்தன. மேலும், சாதாரண தொழிலாளர்கள் இச்சங்கத்தின் உயர் இலட்சியத்தைப் புரிந்து கொள்ளச் சக்தியற்றவராக இருந்தனர். மற்றவர்களோ, இச்சங்க நிர்வாகத்தின் அதிகாரக் குவிப்பு முறையை எதிர்ப்பவர்களாக இருந்தனர். ஆகவே, வெகு விரைவில் இச்சங்கத்தின் உறுப்பினர்களிடையே மாறுபட்ட கட்சிகள் தோன்றலாயின. அத்துடன் அதன் மத்திய நிர்வாகத்தில் பல ஊழல்களும் எழுந்தன. ஆகவே, இச்சங்கம் தொழிலாளர்களின் ஆதரவை இழக்க நேரிட்டது. இவ்விளைவைத் துரிதப்படுத்தும் நோக்குடன் கார்னேஜி போன்ற பெருந் தொழிலதிபர்கள் “தொழிற்சாலைக் கதவடைப்பு” முறையையும் மற்றும், இச்சங்கத்தினை அழிக்கக் கருதி வேறு பல ஆயுதங்களையும் கையாண்டனர். இறுதியில், அமெரிக்கத் தொழிலாளர் கூட்டணி என்ற புதியதோர் அமைப்பு தோன்றவே (*American Federation of Labour*) நைட்களின் சங்கம் வீழ்ந்தது. ஆயினும், நைட்களின் சங்கத்தைப்பற்றிய ஒரு பேருண்மையை இங்கு உணர்தல் வேண்டும். அமெரிக்காவில் முதன் முதலாகத் தொழிலாளர்கள் தொழிற் சங்கங்களின் ஆற்றலை உணரச்செய்ததும், அமெரிக்கத் தொழில் முறையின் அப்போதைய கேடுகளை அந்நாட்டுப் பொதுமக்கள் அறியச் செய்ததும் இந்த நைட்கள் சங்கமேயாகும். இச்சங்கத்தின் மாபெருஞ் சாதனை, உழைப்பின் பெருமையை மீண்டும் மக்களுக்கு அறிவுறுத்தியதும், தொழிலாளர்கள் தங்களுக்குள் சங்க அமைப்பையும், ஒருமைப்-

பாட்டையும் ஏற்படுத்திக் கொள்ளவேண்டியதன் அவசியத்தை அவர்களுக்கு உணர்த்தியதும் ஆகும்.[1]

### அமெரிக்கத் தொழிலாளர் கூட்டணி
### *(American Federation of Labour)*

மேற்கூறப்பட்ட நைட்கள் சங்கத்தின் அதிகாரக் குவிவுக் கொள்கையை வெறுத்த தொழிலாளர் கழகங்களிடையே 1881-இல் நடந்த ஆலோசனைகளின் விளைவாகவே, அமெரிக்கத் தொழிலாளர் கூட்டணி என்ற புதியதோர் அமைப்பு தோற்றுவிக்கப்பட்டது. இப்புதிய அமைப்பை ஏற்படுத்திக் கொள்வதற்கான ஆலோசனைகளைத் திறம்படத் தலைமையேற்று நடத்தியவர் சாமுவேல் கோம்பர்ஸ் *(Samuel Gompers)* என்பவராவர். 1882-ஆம் ஆண்டு முதல் 1924-ஆம் ஆண்டுவரை இத் தொழிலாளர் கூட்டணியின் தலைவராகக் கோம்பர்சே தொடர்ந்து பணியாற்றி வந்தார். இந்தக் கூட்டணியின் வளர்ச்சிக்கு மிகவும் துணையாயிருந்தவை அன்னுருடைய மிதப்போக்கான ஆலோசனைகளும், அமைப்பாற்றலும், அவர் தம் பெருஞ் செல்வாக்கும் ஆகும். இந்த அமைப்பின் நோக்கமானது தொழில்களின் தன்னுட்சிக் கொள்கையொன்றை *(Craft autonomy)* கடைப்பிடிப்பதன் மூலம் தொழிற்சங்க இயக்கத்தை வலுப்படுத்துவதாகும். மேலும், கட்சி சார்பான அரசியல் ஈடுபாட்டைத் தவிர்த்து, தொழிலாளர்கள் தங்கள் பிரச்சினைகளை அவ்வப்போது நாட்டில் நிலவுகின்ற அரசியல் பொருளாதாரச் சட்டதிட்டங்களுக்குட்பட்டே, அவற்றைச் சுமுகமாகத் தீர்த்துக் கொள்ளும் முறையையே அது ஆதரித்தது. இத் தொழிலாளர் கூட்டணியின் வளர்ச்சியினை அறிந்து கொள்வதற்கு ஒரு சில புள்ளி விவரங்களைக் கூறலாம். 1881-ஆம் ஆண்டில் இக்கூட்டணியில் 262,000 உறுப்பினர்களே இருந்தனர். ஆனால், 1900-இல் இவ்வுறுப்பினர்களின் எண்ணிக்கை 550,000 ஆக அதிகரித்துவிட்டது; 1920-ஆம் ஆண்டிலோ இவ்வுறுப்பினர்களின் தொகை 5 மில்லியன்களாக உயர்ந்துவிட்டது. இத்தகைய வியத்தகு வளர்ச்சியுடன் தொழிலாளர் கூட்டணியின்

1. Faulkner: American Economic History p. 455.

முக்கியத்துவம் நின்றுவிடவில்லை. இந்தக் கூட்டணி தன்னுடைய கோரிக்கைகள் பலவற்றை நிறைவேற்றிக் கொள்வதிலும் மிகையான வெற்றி கண்டது. தொழிலாளருக்கு இழப்பு ஈடு அளித்தல் (*Worker's compensation*), முதியோருக்கு உபகாரச் சம்பளம் வழங்கல் (*Old age pension*), அமெரிக்காவில் சீனர்களின் குடியிறக்கத்தை மட்டுப்படுத்துதல், வேலை நேரத்தை நாளொன்றுக்கு எட்டு மணியாக்குதல், சிறுவர்களின் உழைப்பைப் பயன்படுத்துவதில் கட்டுப்பாடு விதித்தல் போன்ற இதன் கோரிக்கைகள் பற்பலவும் ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டன.

ஆரம்பத்தில் தோற்றுவிக்கப்பட்ட தொழிற் சங்கங்களின் பணி மிகவும் கடினமானதாகவேயிருந்தது. முதலாவதாக, இவைகள் தங்கள் உறுப்பினர்களின் சார்பில் பேரம் செய்யும் பிரதிநிதிகளாகத் தங்களை ஏற்றுக் கொள்ள மறுத்த பல தொழிலதிபர்களின் பிடிவாதத்தையும், தொழிலாளரின் அறியாமையையும், அவர்களின் அசட்டையையும், தங்களைப்பற்றிய பொதுமக்களின் ஐயப்பாட்டையும் எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது. அத்துடன் பத்தொன்பதாவது நூற்றுண்டின் இறுதியில் தொழிலாளர் இயக்கத்துக்குப் பாதகமான ஒரு நிலைமையும் புதிதாக உருவாகியது. இதற்குக் காரணங்கள், தொழில் துறையில் பிரம்மாண்டமான கார்ப்பரேசன்களின் புதிய தோற்றமும், விஞ்ஞான ரீதியான தொழிலாட்சி முறையின் புதிய வளர்ச்சியும், அடிக்கடி வேலை நிறுத்தங்கள் செய்ததால் தொழிற்சங்கங்களின் பேரில் பொதுமக்களுக்கேற்பட்ட வெறுப்பும் ஆகும். இவற்றுல் தொழிலாளர் இயக்கத்தின் வளர்ச்சிக்குத் தடங்கல் விளைந்ததென்றே கூறவேண்டும். அத்துடன், அண்மைக் காலம் வரை தொழிற் சங்கங்களின் அமைப்பை அனுமதிப்பதற்கு நாட்டில் எந்தச் சட்டமும் இல்லாமலிருந்தமையால், இச்சங்கங்களின் சட்டபூர்வமான நிலைமை சந்தேகத்திற்கிடமானதாகவும், பலவீனமானதாகவுமே இருந்துவந்தது. ஆகவே, எந்த ஒரு தொழிற் சங்க நடவடிக்கையையும் சட்ட விரோதமானதெனக் கூறி விலக்கிவிடும் அதிகாரம் நீதி மன்றங்களுக்கு இருந்தது.

இத்தகைய பாதுகாப்பற்ற நிலை அமெரிக்கத் தொழிலாளர் இயக்கத்தின் வளர்ச்சிக்கே ஒரு பெருந் தடையாய் இருந்தது. இதனால் அமெரிக்கத் தொழிலாளர்கள் நாட்டின் பிரம்மாண்டமான கார்ப்பொரேசன்களை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது மட்டுமன்றி, நாட்டின் பழஞ்சம்பிரதாயத்தில் ஊறிய நீதி மன்றத்தையும், காலங்கடந்த சட்டத் துறைக் கோட்பாடுகளையும், காலத்திற்கொவ்வாத பொருளாதார தத்துவங்களையும் எதிர்த்துப் போராடவேண்டியிருந்தது.[1] இத் தொழிற் சங்கங்களுக்கு ஏற்பட்ட பல்வேறு சங்கடங்களில் குறிப்பிடத்தக்கவை நீதி மன்றங்களின் பொதுத்தடை உத்தரவுகளும் (*Blanket Injunctions*), கூட்டரசின் படைகொண்டு தொழிலாளர் வேலை நிறுத்தங்களை அரசாங்கம் முறியடித்ததும், டிரஸ்ட் - எதிர்ப்புச் சட்டங்களைத் தொழிலாளர் சங்கங்களுக்கெதிராகப் பயன்படுத்தியதும் ஆகும்.

முதலாவது உலகப் போருக்கு முன்னர்த் தொழிலாளர்களுக்குள் மிகவும் தீவிரவாதிகளானவர்கள் சின்டிகலிஸ்ட் (*Syndicalist*) முறையில் சோஷலிச சமுதாயமொன்றை நிறுவிக்கொள்ள விரும்பினர். இவர்கள் ஆரம்பித்த புதிய சங்கத்திற்கு உலகத் தொழிலாளர்கள் சங்கம் (*Industrial Workers of the World*) என்று பெயரிடப்பட்டது. உலக முழுவதிலும் அதுபோது பரவிவந்த புரட்சிகர சோஷலிசத்தின் ஓர் அமெரிக்கப் பிரதியே இச் சங்கமாகும். நேரடி நடவடிக்கைக் கொள்கையும், புரட்சிகர மாறுதல் கொள்கையும் அதுபோது பெருவாரியான தொழிலாளர்களின் உள்ளங்களைக் கவர்ந்தன. ஆரம்பமுதலே இச் சங்கம் கட்சிப் பிளவுகளால் தடையுற்றதென்றாலும், 1909-க்கும் 1917-க்கும் இடையே இத் தொழிலாளர் சங்கமானது வன்செயல் போக்கினைக் கொண்டதாகவே விளங்கியது. அமெரிக்காவின் மேற்குப் பிரதேசங்களில் வாழ்ந்த தொழிலாளர்களிடையேதான் இச் சங்கத்தின் செல்வாக்கு மிகுதியாகக் காணப்பட்டது. இச் சங்கத்தின் புரட்சிகரமான திட்டமும், பலாத்கார முறைகளும் பொதுமக்களிடையே வெறுப்பைக் கிளப்பின. 1914-ஆம் ஆண்டுப் போரில் இச் சங்கம் அரசாங்கத்தின் போர்க் கொள்கைக்கு ஆதரவு அளிக்க மறுத்தபோது, அரசாங்கத்திற்கும்

1. Ware: The Labour Movement in the United States.

இச் சங்கத்திற்கும் நேரடி மோதல் ஏற்பட்டது. இதனால், அரசாங்கம் இச் சங்கத்தின் நடவடிக்கைகளைப் பல வழிகளிலும் கட்டுப்படுத்தியது. போருக்குப் பின்னர் இச் சங்கத்தின் எஞ்சிய உறுப்பினர்களில் பெரும்பாலோர் கம்யூனிஸ்ட் கட்சியுடன் இணைந்துகொண்டனர். இருப்பினும், இச் சங்கம் தொழிலாளர் இயக்கத்திற்கு ஒருவகையான தூண்டுதலளித்தது என்பதை மறுக்கவியலாது. திறமற்ற சாதாரணத் தொழிலாளர்களையுங்கூட ஒன்றுகூட்டி அவர்களுக்கும் சங்கமேற்படுத்த வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தியதுடன், இச் சங்கமே நீக்ரோக்களின் நலன்களையும் முதன்முதல் பாதுகாக்கத் துணிந்தது.

இச் சூழ்நிலையில் அமெரிக்கத் தொழிலாளர் கூட்டணிதான் அந் நாட்டுத் தொழிலாளர் சங்கங்களுக்குள் ஆற்றல் மிக்கதாகவும் செல்வாக்கு மிகுந்ததாகவும் தொடர்ந்து விளங்கிற்று. அதன் சமரசப் போக்கும், திறமான தலைமையும் தொழிலாளர்பேரில் அரசாங்கத்தின் பரிவை அதிகரிக்கச் செய்தது. இதன் பயனாகத் தொழிலாளர்களின் நலன்களைக் கவனிக்கவும், தொழிலாளர் தகராறுகளைத் தீர்க்கவும் தனியாக ஒரு தொழிலாளர் இலாகாவை அரசாங்கம் ஏற்படுத்தியது. மேலும், தொழிலாளர்களுக்கு மிகவும் ஆதரவான கிளேட்டன் சட்டம் ஒன்றும் (*Clayton Act*) 1914-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்டது. தொழிலாளர்களுக்கு எதிராகத் தடை உத்தரவுகளைப் பிறப்பிப்பதற்குக் கூட்டரசு நீதி மன்றங்களுக்கு இருந்த அதிகாரத்தை இச் சட்டம் கட்டுப் படுத்தியது. டிரஸ்ட் - எதிர்ப்புச் சட்டத்தின்கீழ்த் தொழிற் சங்கங்களின்பேரில் வழக்குத் தொடருவதைத் தடுக்கவும் தக்க ஏற்பாடு இச் சட்டத்திலிருந்தது. அடுத்து 1926-ஆம் ஆண்டில் கொணரப்பட்ட இருப்புப்பாதைத் தொழிலாளர் சட்டமானது (*Railroad Labour Act*) தொழிலாளர்களின் கூட்டுப் பேர உரிமையையும் (*Right of Collective Bargaining*) ஏற்றுக் கொண்டது. இச் சூழ்நிலையில்தான் நாட்டிலுள்ள தொழி-லதிபர்கள், தொழிற் சங்க இயக்கத்தை வலுவிழக்கச் செய்வதற்குத் தங்கள் செல்வாக்கையெல்லாம் பயன்படுத்தினர். இந் நோக்கத்துடனேயே தொழிலதிபர்கள் திறந்த தொழில் மனை முறை (*Open Shop System*), தொழிலாளர் கூட்டுறவுள்ள

விஞ்ஞான ரீதியான தொழிலாட்சி முறை போன்ற பல புதிய முறைகளைத் தங்கள் நிறுவனங்களில் புகுத்த ஆரம்பித்தனர். மேலும், தொழிலாளர்களை அவர்கள் பணிபுரியும் கார்ப்பொ-ரேசன்களிலேயே பங்குதாரர்களாகும்படி தூண்டியும், இத் தொழிலதிபர்கள் ஒரு 'நலவழி முதலாளித்துவத்தை' (*Welfare Capitalism*) ஏற்படுத்தும் பாவனை செய்தனர். இருப்பினும் தொழிலாளருக்கும் தொழிலதிபர்களுக்குமிடையே நீண்ட காலமாகவே போராட்டங்கள் நிகழ்ந்துவந்ததையும், இதனால் அடிக்கடி பலாத்காரம் கலந்த வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டு வந்ததையும் கண்ட அமெரிக்க மக்கள், உருப்படியான ஒரு தொழிலாளர் துறைக் கொள்கையைத் தாங்கள் வகுத்துக்கொள்ள வேண்டியதன் அத்யாவசியத்தை இறுதியாக உணர்ந்தனர்.[1]

## நியூ டீல் (*The New Deal*)

ரூஸ்வெல்ட் ஆட்சியில் தோன்றிய நியூ டீல் திட்டம் அமெரிக்கத் தொழிலாளர் இயக்கத்தின் வரலாற்றில் ஒரு முக்கிய திருப்பத்தைக் குறிப்பதாகும். இதற்கு முன்பெல்லாம் தொழில் மந்தங்களும், நிதி நெருக்கடிப் பீதிகளும் தொழிலாளர் இயக்கங்களுக்குச் சாவுமணியாய்த் தோன்றின. ஆனால், உலகப் பெரும் பொருளாதார மந்தமானது (*Great Depression*) அமெரிக்கத் தொழிலாளர்களுக்கு இதுவரை காணாத அளவிற்கு வேலையின்மையையும், துன்பத்தையும் விளைவித்ததெனினும், அதுவே இம்முறை அவர்களின் இறுதி விமோசனமாகவும் ஆகிவிட்டது என்றே கூறுதல் வேண்டும். இம் மந்தத்தின் கேடுகளைச் சமாளிக்க 1933-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட தேசியத் தொழில் துறை மீட்சிச் சட்டம் (*The National Industrial Recovery Act*) அமெரிக்கத் தொழிலாளர்களுக்கு ஒரு புது வாழ்வையே அளிப்பதாய் அமைந்தது. இச் சட்டம் அமெரிக்காவில் ஒவ்வொரு தொழிலிலும், நேர்மைப் போட்டியை உறுதிப்படுத்தும் விதிமுறையொன்றை ஏற்படுத்தியது. இதன்படி தொழிலாளர்கள் கூட்டுப் பேரம் நடத்திக்கொள்ளும் உரிமை ஏற்றுக்கொள்ளப்பட்டதுடன், குறைந்தபட்சக் கூலிகள்,

1. Konsula : Key to Economic Progress p. 89.

உயர்ந்தபட்ச வேலை நேரம், மற்றும் வேலை நிலைமை பற்றிய விதிகள் யாவும் நிர்ணயிக்கப்பட்டன. இச் சட்டத்தின் நடை முறையைக் கண்காணிப்பதற்காகத் தேசியத் தொழில் துறை மீட்சி நிர்வாகம் (*The National Industrial Recovery Administration*) ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. ஆயினும், இச் சட்டம் நாட்டின் அரசியலமைப்புச் சட்டத்திற்கு முரண்பாடானது என்று அமெரிக்க நீதிமன்றம் 1935-இல் தீர்ப்பு கூறியது. ஆனால், அதே ஆண்டில் நிறைவேற்றப்பட்ட தேசியத் தொழிலாளர் உறவுச் சட்டம் (*National Labour Relations Act*) ஒன்று, நீதிமன்றத்தால் ரத்து செய்யப்பட்ட முந்திய சட்டத்தில் தொழிலாளர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த அதே நல ஏற்பாடுகளை மீண்டும் உறுதிப்படுத்தியது. வேக்னர் சட்டம் (*Wagner Act*) என்றழைக்கப்பட்ட இப் புதிய சட்டத்தின் பல்வேறு ஏற்பாடுகளை அமுல் நடத்தவும், நிர்வகிக்கவும் தேசியத் தொழிலாளர் உறவுச் சபை ஒன்றும் தோற்றுவிக்கப்பட்டது. 1937-ஆம் ஆண்டில் அமெரிக்க சுப்ரீம் நீதிமன்றம் வேக்னர் சட்டத்தை, அது அரசியல் சட்டத்திற்கு முரணானதல்ல எனக் கூறிய தீர்ப்பானது தொழிலாளர் இயக்கத்திற்கே ஒரு பெருஞ் செல்வாக்கை அளித்தது. இதன் பயனாக, முன்னர் வேலையிலிருந்து நீக்கப்பட்டிருந்த 3 இலட்சம் தொழிலாளர்கள் மறுபடியும் வேலையில் அமர்த்தப்பட்டனர். அத்தொழிலாளர்களுக்கு, அவர்கள் வேலையிலிருந்து நீங்கியிருந்த இடைக் காலத்திற்குக் கூலியாகச் சேர வேண்டியிருந்த மொத்தத் தொகையான 9 மில்லியன் டாலர்களும் பின்னர் தொழிலதிபர்களால் வழங்கப்பட்டுவிட்டது. அமெரிக்காவில் 1940-ஆம் ஆண்டிற்குள்ளாகவே தொழிலாளர் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 9 மில்லியன்களாக அதிகரித்திருந்தது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

### தொழிற் சங்கங்களின் காங்கிரசு (*Congress of Industrial Organisations*)

அமெரிக்காவில் தொழிலாளர் ஐக்கியத்தின் வரலாற்றில் 1935-ஆம் ஆண்டுதான் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஏனெனில், இவ்வாண்டிலேயே முன்பு கூறப்பட்ட வேக்னர் சட்டம் நிறைவேற்றப்பட்டது. அத்துடன் இவ்வாண்டிலேயே-

தான் ஜான் லூயி (*John Lewis*) என்பவரின் தலைமையில் அமெரிக்கத் தொழிற் சங்கங்களின் காங்கிரசு என்ற புதியதொரு தொழிலாளர் ஐக்கியம் அமைக்கப்பட்டது. இப்புதிய அமைப்பை அவசியமாக்கிய காரணத்தை ஆராய்வோம். முன்பு கூறப்பட்ட அமெரிக்கத் தொழிலாளர் கூட்டணியானது (*American Federatian of Labour*) தொழிலாளர் சங்கங்களின் ஓர் இணைப்பேயாகும். அத்துடன் அது ஒரு பணக்காரர் சங்க அமைப்பாகவே (*Union of the rich*) இருந்து வந்தது. ஆனால், ஜான் லூயி என்பவரோ தேச முழுமைக்குமாகத் தொழில்வாரி சங்கங்கள் அமைக்கப்படவேண்டும் என்றே விரும்பினர். இந் நோக்கத்துடனேயே அவர் தொழிற் சங்கக் காங்கிரசு என்ற அமைப்பைத் தோற்றுவித்தார். ஆரம்பத்தில் இக் காங்கிரசின் உறுப்பினர்கள் பழைய அமெரிக்கத் தொழிலாளர் கூட்டணியிலிருந்து விலகிய ஒரு மில்லியன் தொழிலாளர்களேயாகும். இக் காங்கிரசானது தனியார் தொழில் துணிவிலும் தனி மனிதனின் சுயேச்சையிலும் நம்பிக்கை கொண்ட ஒரு ஜனநாயக அமைப்பாகவே இருந்தது. ஆயினும், மற்ற அமைப்புக்களைக் காட்டிலும் இது தீவிரமிகுந்த போராட்ட மனப்பான்மையுடையதாகவே இருந்தது. இக் காங்கிரசுக்கு முக்கிய ஆதரவு பெருவாரி உற்பத்தித் தொழில்களில் வேலைபார்க்கும் அரைகுறைத் திறவகைத் தொழிலாளர்களிடமிருந்தும், திறமில்லாவகைத் தொழிலாளர்களிடமிருந்துமே கிடைத்தது. மேலும், இக் காங்கிரசு அரசியலில் ஈடுபடவும் முனைந்தது. வாக்காளர்களின் ஆதரவைத் தேடுவதற்கென அரசியல் கமிட்டிகளையும் ஏற்படுத்திக் கொண்டது. அமெரிக்காவின் தலைசிறந்த தொழிலாளர் அமைப்புக்களாகிய அமெரிக்கத் தொழிலாளர் கூட்டணியும், தொழிற் சங்க காங்கிரசும் அடுத்த 20 ஆண்டுகளில் தங்களை மென்மேலும் வலுப்படுத்திக் கொண்டன. அமெரிக்கத் தொழிலாளர்களின் மொத்தத்தில் 50 சதவீதத்தினர் கூட்டணியிலும், 40 சதவீதத்தினர் காங்கிரசிலும் உறுப்பினர்களாயிருந்தனர். மீதி உள்ளவர்கள் இவ்வமைப்புக்களோடு இணைக்கப்படாத தனிப்பட்ட சங்கங்களில் உறுப்பினர்களாவர்.

இரண்டாவது உலகப்போர்க் காலத்தில், தொழிலாளர்கள் முதலாளிகளிடையே நிலவிய உறவு திருப்திகரமானதாகவே

இருந்தது. ஆனால், போருக்குப் பின்னர் வேலை நிறுத்தங்களாலும், வேறு பல சங்கடங்களாலும் அமெரிக்கத் தொழிலாளர்கள் பெரிதும் பாதிக்கப்பட்டனர். 1947-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட டாஃப்டு-ஹார்ட்லே சட்டம் (*Taft Hartley Act*) இவ்வகையில் தொழிலாளருக்குப் பாதகமானதாயிருந்தது. தொழிலாளர் இயக்கத்தின் ஆற்றலைக் கட்டுப்படுத்த நிறைவேற்றப்பட்ட இச் சட்டத்தை "அடிமைத் தொழில் சட்டம்" (*Slave Labour Act*) என்று கூறித் தொழிலாளர்கள் கண்டித்தனர். தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதானால், இச்சட்டத்தின் கீழ் அவர்கள் இரண்டு மாதங்களுக்கு முன்பே முதலாளிகளுக்கு முன்னறிவிப்பு செய்தல் வேண்டுமென்றிருந்தது. மற்றும், அரசியல் நடவடிக்கைகளுக்காகத் தொழிற் சங்கங்கள் நிதி வசூல் செய்வதையும், தொழிற் சங்க உறுப்பினரைத் தவிர மற்றையோருக்கு வேலை மறுக்கும் முறையையும் (*Closed Shop System*) இச் சட்டம் தடை செய்தது. மேலும் அத்தியாவசியத் தொழில்கள் எவற்றிலும் வேலைநிறுத்தம் ஏற்படுமேயானால், அதைச் சமாளிக்க அமெரிக்க ஜனாதிபதி எந்த அவசியமான சிறப்பு நடவடிக்கையையும் காங்கிரசுக்குச் சிபாரிசு செய்யலாம் என்றும் இச் சட்டத்தில் இருந்தது. அமெரிக்கக் கூட்டரசு அரசாங்கத்துப் பணியாளரின் எந்த வேலை நிறுத்தமும் இச் சட்டத்தால் தடை செய்யப்பட்டது. மேலும், 'அமெரிக்க நாட்டுத் தொழில் சமரசப் பணி' என்ற அமைப்பு அரசாங்கத்தின் தொழில் இலாகாவிலிருந்து பிரிக்கப்பட்டு, 'கூட்டரசு அரசாங்க மத்தியஸ்த, சமரசப் பணி' என்னும் ஒரு தனி அமைப்பாக ஆக்கப்பட்டது.

மேற்கூறியவாறு அமெரிக்கத் தொழிலாளர்களுக்குப் பற்பல இடர்ப்பாடுகள் ஏற்படினும், 1950-ஐ அடுத்த 10 ஆண்டுகளில் தொழிற் சங்க உறுப்பினர்களின் எண்ணிக்கை தொடர்ந்து வளர்ந்தது. இவ்வுறுப்பினர்களின் எண்ணிக்கை இன்று 17 மில்லியன்களாக வளர்ந்துவிட்டது மிகவும் குறிப்பிடத் தக்கது. இந்நிலையில் 1955-இல் ஏற்பட்ட தொழிற் சங்க இணைப்பு ஒன்று அமெரிக்கத் தொழிலாளர் இயக்கத்துக்கே மிக்க முக்கியத்துவமுடையது ஆகும். 'அமெரிக்கத் தொழிற்

சங்கங்களின் காங்கிரசானது மறுபடியும் அமெரிக்கத் தொழிலாளர் கூட்டணியுடன் இணைக்கப்பட்டுவிட்டதே அந்நிகழ்ச்சியாகும். இவ்வாறெழுந்த கூட்டு அமைப்பானது மிகவும் வலிமை வாய்ந்ததொரு தொழிலாளர் அமைப்பாக ஆகிவிட்டது. இப்புதிய அமைப்பிற்குத் தலைவர்களாக இருந்து வழிகாட்டியவர்கள் வால்ட்டர் ருயூத்தர் (*Walter Reuther*) என்பவரும் ஜார்ஜ் மியனி (*George Meany*) என்பவருமாவர். இதன் விளைவாக அமெரிக்கத் தொழிலாளர்களின் வாழ்வில் புதியதொரு திருப்பமும் ஏற்பட்டுள்ளது. மற்றும் அமெரிக்கத் தொழிலாளர் இயக்கத் தலைவர்கள், தங்கள் இயக்கத்தில் வெளியாருடைய தலையீடுகளை நீக்கிக் கொள்ளவும் முனைந்துள்ளனர் என்பது நோக்கத்தக்கது. இப்புதிய போக்கை நாம் அறிந்து கொள்ளுதற்கு மேற்கூறப்பட்ட இணைப்புச் சங்கத்தின் தலைவர் வெளியிட்டுள்ள கருத்து ஒன்றே போதுமானதாய் இருக்கும். "தொழிலாளர்களுடைய நலன்களும் தொழிலதிபர்களுடைய நலன்களும் ஒன்றுக்கொன்று நெருங்கிய சார்புடையனவாகும். மேலும், சுயேச்சையான தொழில் துணிவைப் போன்று சுயேச்சையான தொழிலாளர்களும், ஒரு சுயேச்சை அரசாங்கத்தின் கீழேதான் இயங்கக்கூடும். ஆகவே, அமெரிக்கத் தொழிலாளர்கள் அரசாங்கக் கட்டுப்பாடுகளின் விரிவை விரும்பவில்லை. அவர்கள் தங்களுடைய குறிக்கோள்களை அடைந்து கொள்ளுதற்குக் கூட்டுப் பேரமுறை ஒன்றையே நம்பியிருக்கின்றனர்." இக்கூற்றால் விளங்கும் உண்மையாதெனின், அமெரிக்கத் தொழிலாளர் தலைவர்கள் தங்கள் சங்கங்களுக்கு மட்டுமன்றி, தங்கள் நாட்டிற்கும் கடமைப்பட்டவர்கள் என்பதை அவர்கள் நன்கு உணர்ந்துள்ளனர் என்பதாகும்.

இன்று அமெரிக்கத் தொழிலாளர்களின் பெருங்கவலை அந்நாட்டில் கடைப்பிடிக்கப்பட்டுவரும் தொழிற் சீரமைப்பும் (*rationalisation*), தொழில் நுண்ணியல் வளர்ச்சியுமேயாகும். இவ்விரு சீர்திருத்தங்களும் தொழிலாளர்களுக்குக் கேடு விளைவிக்காத வகையில் நிறைவேற்றப்படவேண்டும் என்பதே அவர்களின் அவா. இன்று அமெரிக்க நாட்டில் தொழிற் சங்கங்கள் அந்நாட்டுத் தொழிலாளர்களுக்குத் தொடர்ந்த முறையில் கூலி வருமானம் கிடைக்கச் செய்யும் முயற்சிகளின்

பயனுகவே, இன்று அந்நாட்டில் நுகர்வோரின் வாங்கும் ஆற்றல் (*Purchasing power of consumers*) பெரிதும் காக்கப்பட்டு வருகிறது. அதே சமயத்தில் தொழில் துறையில் நடத்தப்படும் புது ஆராய்ச்சிகளின் பயனுகவும் தொழிலாளருக்குப் புதுப்புது வேலே வாய்ப்புக்கள் தோன்றிய வண்ணமிருக்கின்றன. இவ்வாறெல்லாம் தொழிற் சங்கங்கள்தாம் நாட்டில் பெருவாரி நுகர்வோர் சந்தையொன்றைத் தோற்றுவிப்பதிலும், அதைப் பாதுகாப்பதிலும் முக்கிய பங்கு வகித்துவருகின்றன. இன்று அமெரிக்கப் பொருளாதார அமைப்பிற்கே தொழிற் சங்கங்கள்தாம் மாபெருந் தூணுக விளங்குகின்றன என்று கூறினுல் முற்றும் பொருந்தும்.

## பிற்சேர்க்கை

### மக்கள் தொகையும் குடியிறக்கமும்
### (*Population and immigration*)

அமெரிக்காவின் துரிதமான வளர்ச்சியைச் சாத்தியமாக்கிய முக்கிய காரணங்கள் அந்நாட்டின் மக்கள் தொகை வளர்ச்சியும், அந்நாட்டிற்குள் பிறநாட்டு மக்களின் தொடர்ச்சியான குடியிறக்கமும் ஆகும். இம்மக்கள் தொகையின் பெருவளர்ச்சிக்கு ஆதாரமாகச் சில புள்ளிவிவரங்களைக் கூறலாம். அமெரிக்கப் புரட்சியின் இறுதியில் அந்நாட்டின் மக்கள் தொகை ஏறத்தாழ 4 மில்லியன்களே ஆகும். ஆனுல், உள்நாட்டுப் போரின் ஆரம்பத்தில், இத்தொகை 31 மில்லியன்களாக அதிகரித்து விட்டது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியிலோ இம்மக்கள் தொகை அநேகமாக இரட்டித்தேவிட்டது. அதுபோது அதன் எண்ணிக்கை 62 மில்லியன்களாகப் பெருகியிருந்தது. 20 - ஆம் நூற்றுண்டு தொடங்கிய பின்னரும் இவ்வளர்ச்சி தொடர்ந்து நிகழ்ந்தது. 1940-ஆம் ஆண்டிற்குள் அமெரிக்க மக்கள் தொகை மறுபடியும் இரட்டித்துவிட்டது. அவ்வாண்டில் 130 மில்லியன்களாக இருந்த அம் மக்கள் தொகை மேலும் அதிகரித்து, இன்று 180 மில்லியன்களாக ஆகியிருக்கின்றது. இவ்வாறு ஆரம்பத்தில் 4 மில்லியன் மக்களையே கொண்டிருந்த அமெரிக்க நாடு, இன்று 180 மில்லியன் மக்களைக் கொண்ட-

தொரு பெருநாடாகியுள்ளது. இது, அமெரிக்கா பொருளாதாரத்திலும், படைபலத்திலும் பிரம்மாண்டமானதொரு வளர்ச்சி அடைந்து, உலகில் இன்று ஆற்றல் மிக்கதொரு வல்லரசாகிவிட்டதையே பிரதிபலிப்பதாகும். சிறிது சிந்தித்துப் பார்க்கின், அமெரிக்க நிலப்பரப்பின் குடியேற்றமும், அந்நாட்டின் குடியிருப்புக்களும், அமெரிக்க நாட்டின் வளர்ச்சியும் சாத்தியப்பட்டதற்கு அந்நாட்டில் இவற்றையெல்லாம் நிறைவேற்றிவைக்கப் போதிய எண்ணிக்கை மக்கள் கிடைத்தமையே காரணமாகும். இம் மக்கள் தொகை வளர்ச்சியானது இரண்டு வகைகளில் விளைந்ததாகும். ஒன்று, நாட்டிற்குள் இயற்கையாய் விளைந்த மக்கள் தொகை அதிகரிப்பாகும்; மற்றொன்று, ஐரோப்பாவிலிருந்து தொடர்ந்து அமெரிக்காவிற்குள் மக்கள் குடியிறக்கம் செய்தமையால் ஏற்பட்ட அதிகரிப்பாகும். அந் நாட்டில் மக்கள் தொகை பரவிய விதம் எவ்வாறெல்லாம் மாறிவந்தது என்பதை மக்களின் மேற்கு நோக்கிய குடியேற்ற ஓட்டம் நன்கு காட்டுவதாகும். ஆனல், பின்னர் நிகழ்ந்த தொழிற் புரட்சியும், விவசாய வளர்ச்சியும் அமெரிக்க மக்களின் இப் பிரதேசவாரிப் பரவலை மறுபடியும் மாற்றியமைத்தன.

### குடியிறக்கம் (*Immigration*)

அமெரிக்க வரலாற்றின் ஆரம்ப முதலே வெளியிலிருந்து அமெரிக்காவுக்குள் தொடர்ந்து நிகழ்ந்த மக்கள் குடியிறக்கம் அந்நாட்டுப் பொருளாதார வளர்ச்சியின் ஒரு முக்கிய அம்சம் ஆகும். முதலாவது உலகப் போருக்கு முந்திய நூற்றண்டில் அமெரிக்காவுக்குள் குடியிறக்கம் புரிந்து, அங்குக் குடியிருப்புக்களை நிறுவிக்கொண்ட மக்களின் மொத்த எண்ணிக்கை 34 மில்லியன்கள் ஆகும். இவ்வாறு பல்வேறு நாடுகளிலிருந்தும் அமெரிக்காவிற்குள் வந்திறங்கிய மக்களின் தொடர்ந்த வருகையானது அமெரிக்க நாட்டிற்குப் பல்வகையாலும் நலமுடைத்தாய் இருந்தது. புதிய நிலங்களை வேளாண்மைக்குக் கொண்டுவருவதற்கும், புதிய தொழில்களை அந்நாட்டில் நிறுவுவதற்கும் அத்தியாவசியமாகத் தேவைப்பட்ட மக்கள் வளத்தை இது அளித்ததுமன்றி, அமெரிக்காவின் பொருளாதார வளர்ச்சிக்கே அடிக்கல் போன்றதாய தொழில் துணிவையும், முன்னேடித்

துணிகரத்தையும் மிகையாக அந்நாடு பெறுதற்கும் இதுவே ஏற்ற வாய்ப்பளித்தது என்றே கூறவேண்டும். அமெரிக்க அரசாங்கம் ஆரம்பக் காலத்தில் குடியிறக்கத்தைப் பெரிதும் வரவேற்று, அதற்கு ஆதரவும் அளித்தது. 1868-ஆம் ஆண்டின் பர்லிங்டன் ஒப்பந்தப்படி வெள்ளையரல்லாத சீனக் குடியேற்றக்காரர்களையுங்கூட அமெரிக்கா இவ்வகையில் வர-வேற்றது. 1880-ஆம் ஆண்டு வரை குடியேற்றக்காரர்களில் பெரும்பகுதியினர் ஐரோப்பாவின் வடக்கிலிருந்தும், வடமேற்கிலிருந்துமே வந்தனர். ஆனால், அத்தேதிக்குப் பின்னர் வந்த குடியேற்றத்தினர் ஐரோப்பாவின் தெற்கிலிருந்தும், கிழக்குப் பகுதியிலிருந்துமே மிகுதியாக வந்தனர். ஐரோப்பாவின் கிழக்குப் பகுதியிலிருந்து வந்த குடியேற்றக்காரர்களுக்கெல்லாம் அமெரிக்காவின் உயர்வான தொழில் கூலிகளும், மிகுதியான வேலை வாய்ப்புக்களும், அமெரிக்காவின் ஜனநாயக முறை அரசாங்கமுமே பெருங் கவர்ச்சியாயிருந்தன.

ஆனால், 1880-ஆம் ஆண்டுமுதல் அமெரிக்க அரசாங்கத்தின் குடியிறக்கக் கொள்கையில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. அதாவது, இவ்வாண்டுமுதல் அமெரிக்க அரசாங்கம் குடியிறக்கத்தைத் தடுப்பதற்கான பல சட்டங்களை நிறைவேற்றுவதில் முனைந்தது. இதற்கு எடுத்துக்காட்டாக, சீனக் குடியிறக்கத்தினரின் பேரில் புதிதாக விதிக்கப்பட்ட தடையைக் கூறலாம். இச் சீனத் தொழிலாளர்கள் குறைந்த கூலிகளுக்கு வேலை செய்ய முன் வந்தமையால் அமெரிக்கத் தொழிலாளர்களின் கூலிகளும் வாழ்க்கைத் தரமும் பாதிக்கப்படுவதாயின. ஆகவே, சீனர்களின் குடியிறக்கத்தை முற்றிலும் தடுக்கும் சட்டங்கள் 1882-இலும், 1884-இலும் கொண்டுவரப்பட்டன. மேலும், 1885-ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டம் ஒப்பந்தத் தொழிலாளர் முறையை (*Contract Labour*) அறவே தடை செய்தது. அதற்குப் பின்னர் இயற்றப்பட்ட பல சட்டங்களும் குடியிறக்கத்தினர் பேரில் பற்பல கட்டுப்பாடுகளை விதித்தன. குடியிறக்கத்தைக் கட்டுப்படுத்தும் நோக்குடன் தலைவரியும் (*Poll Tax*), எழுத்தறிவுச் சோதனையும், வேறு பல கட்டுப்பாடுகளும் சட்டமூலம் விதிக்கப்பட்டன. 1921-ஆம் ஆண்டுச் சட்டமொன்று இவ்வகையில் மிகவும் தீவிரமான தடைகளை

விதித்தது. இதன்படி அமெரிக்காவுக்குள் குடியிறக்கம் புரியும் மக்களின் ஆண்டுத் தொகை $2\frac{1}{2}$ இலட்சமெனக் குறைத்து வரையறுக்கப்பட்டது. அதுபோது அமெரிக்காவில் 10 மில்லியன் மக்கள் அந்நாட்டின் குடியுரிமை அளிக்கப்பெருமல் வாழ்ந்து வந்தனர் என்ருல் இந்நடவடிக்கையின் அவசியம் விளங்கும். ஆகவே, இம் மக்களுக்குக் குடியுரிமை அளிக்கப்படும் முன்னர்ப் புதிதாக மேலும் குடியிறக்கத்தினரை அனுமதிக்கக் கூடாதென அமெரிக்கக் கூட்டரசு அரசாங்கம் முடிவு செய்ததில் வியப்பில்லை. ஆயினும், அமெரிக்க மக்கள் தொகை வளர்ச்சி யின் விளைவுகளை நோக்கும்போது மால்தூசினுடைய கோட்பாடு அமெரிக்காவில் பொய்த்துவிட்டது என்றே கூறலாம். எப்படி யெனில், ஒவ்வொரு தலைமுறையிலும் அமெரிக்க மக்களின் தொகை இரட்டித்துக்கொண்டே வந்திருக்கிறது. ஆயினும், அந்நாட்டின் கூலிகளும், வாழ்க்கைத் தரமும் இதனுல் எவ்விதத் திலும் வீழ்ச்சியடையவில்லை. மக்கள் தொகை வளர்ச்சியுடன் கூட அவைகளும் வளர்ந்து கொண்டே வந்திருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும். உண்மையைக் கூறவேண்டு மாயின், அமெரிக்க நாட்டு மக்கள் தொகை வளர்ச்சியே அந் நாட்டின் முன்னேற்றத்திற்கும், செழுமைக்கும் ஓர் அடிப்படைக் காரணமாக இருந்து வந்திருக்கிறது.

# 12. நாணயச் செலாவணியும், பாங்குத்துறையும், நிதித்துறையும்

அமெரிக்கா ஒரு காலனியாக இருந்தபோது அதன் நாணயச் செலவாணியின் பேரில் இங்கிலாந்து பிடி வைத்திருந்தது. இது அமெரிக்கக் காலனி மக்களுக்கு வெறுப்பூட்டியது. தாய் நாட்டின் பிடியிலிருந்து அமெரிக்கா விடுதலை பெற்ற பின்னர், தனக்கு வேண்டியமட்டும் ஆணை நாணயச் செலவாணியைத் (*Fiat Money*) தங்குதடையின்றிப் படைத்துக்கொள்வது எளிதாயிற்று. அமெரிக்க நாட்டுப் புரட்சியின் போது அந்நாட்டிற்கு இருந்த மிகவும் சங்கடமான ஒரு நிதிப் பிரச்சினை, இங்கிலாந்துடன் போர் புரிதற்குத் தேவைப்பட்ட நிதி வசதியை ஏற்படுத்திக் கொள்வதாகும். அமெரிக்கக் காங்கிரசுக்கு அதுசமயம் வரி விதிக்கும் அதிகாரம் ஏதும் இல்லாதிருந்தது. இவ்வதிகாரம் ஒருவேளை இருந்திருந்தாலுங்கூட காலனி மக்கள் வரி ஏதும் செலுத்தச் சம்மதித்திருப்பார்களா என்பது மிகவும் ஐயப்பாட்டிற்குரியதாகும். ஆகவேதான் அமெரிக்க அரசாங்கம் காகிதப் பணத்தை நாடவேண்டியிருந்தது. 1775-ஆம் ஆண்டிற்கும் 1779-ஆம் ஆண்டிற்கும் இடையே 191.55 மில்லியன் டாலர்கள் மதிப்புள்ள காகிதப்பணம் அமெரிக்கக் கூட்டரசால் வெளியிடப்பட்டது. இதற்கும் மேலாக, பதிமூேரு அமெரிக்க இராச்சியங்கள் தத்தம் இராச்சியத்தில் 246.36 மில்லியன் டாலர்கள் மொத்த மதிப்புடைய காகிதப் பணத்தைத் தனியாக வெளியிட்டுக் கொண்டமையால் நிலைமை மிகவும் குழப்பமாகியது. மேலும், இப்பண வெளியீடு புதிய நாடாகிய

அமெரிக்காவில் அப்போதிருந்த பணத் தேவைக்குப் பெரிதும் மிகையாகவே தோன்றியது. ஆயினும், ஸ்பானியர்களும், ஃபிரஞ்சுக்காரர்களும் அமெரிக்காவுக்கு அளித்த உதவிக் கொடைகளின் பயனுகை அமெரிக்க டாலர் தன் மதிப்பை இழக்காமலிருக்க முடிந்தது. ஆனால், 1777-க்குப் பின்னர் டாலரின் மதிப்பு விரைவாக வீழ்ந்தது. டாலரின் இந்த மதிப்பு இறக்கத்தின் காரணமாக 1881-ஆம் ஆண்டில் ஒரு சோடி செருப்பின் விலை 100 டாலர்களாகவும் ஒரு பவுண்டு தேயிலையின் விலை 90 டாலர்களாகவும் விலை ஏறியிருந்தன. சுருங்கக் கூறின், அமெரிக்க நாட்டு நாணயச் செலவாணி முறை அதுபோது மிகவும் குழப்பமான நிலையில்தான் இருந்தது. மேலும், மாருத வருமானம் உள்ள வகுப்பினர்கள் யாவரும் இவ்விலையேற்றங்களினுல் பெரிதும் பாதிக்கப்பட்டனர். மேற் கூறப்பட்ட காகிதப் பணவெளியீடு மட்டுமன்றி, தன் போர்க் காலச் செலவைச் சமாளிப்பதற்கு அமெரிக்க அரசாங்கம் கடன் பத்திரங்களை வெளியிட்டும், உள்நாட்டில் கடன்களை எழுப்பியும், லாட்டரிகள், கொடைகள் முதலியவற்றின் மூலமும் தனக்கு வேண்டிய நிதிகளைத் திரட்டிக் கொள்ள நேர்ந்தது. பேராசிரியர் செலிக்மேன், அமெரிக்கப் புரட்சிப் போரின் மொத்தச் செலவை 104.04 மில்லியன் டாலர்கள் என்று மதிப்பிட்டுள்ளார். ஆயினும், அப்போரின் இறுதியில் நாட்டில் 437.91 மில்லியன் டாலர்கள் மதிப்பீடுள்ள காகிதப்பணம் புழக்கத்திலிருந்தது. இவை அமெரிக்கக் காங்கிரசாலும், பல்வேறு இராச்சியங் களாலும் வெளியிடப்பட்டனவாகும். இத்துடன் ஒரு சிறிது கள்ளச் செலாவணியும் புழக்கத்திலிருந்தது என்பதை மறுக்க முடியாது. இந்நிலையில் இச் செலாவணிக் குழப்பத்திலிருந்து தப்பிக் கொள்ளும் வகையில் பண்டமாற்று முறையும், ஆங்கிலேயர், ஸ்பானிஷ்காரர், போர்த்துக்கீசியர் ஆகியவர்களின் தங்கக் காசுகளும் நாட்டில் பொதுவாக வழக்கத்திற்கு வர ஆரம்பித்தன. இந்நிலை புரட்சிப் போரை அடுத்த சில ஆண்டுகள் வரை நீடித்தது. 1785—1786-ஆம் ஆண்டுகளில் அமெரிக்காவில் பொருளாதார மந்த நிலை ஏற்பட்டமையினுல் அந்நாட்டு விவசாயிகளும், கடனளிகளும், ஏழ்மை வகுப்பினரும் மிகையான காகிதப் பண வெளியீட்டைக் கோரினர். ஆனல்,

தொழில் துறையினரோ இக்காகிதப் பண வெளியீட்டின் பல தீங்குகளையும் உணர்ந்தவராய் மேற்கூறிய கோரிக்கையை எதிர்த்தனர்.

## புரட்சிக்குப்பின்

அடுத்து, புரட்சிக்குப் பின்னர் நிலவிய நிலையை ஆராய்வோம். அமெரிக்க அரசாங்கத்தின் நிதித் துறை அமைப்பைத் திட்டமிட்டவர்களில் முக்கியமானவர் ஹாமில்டன் என்பவராவர். கூட்டரசின் தந்தையரில் ஒருவராகிய இவர் அதன் நிதித் துறை நிபுணராவார். இவரது முயற்சியால் அமெரிக்க நாட்டுத் தேசியக் கடனாகிய 77.12 மில்லியன் டாலர்கள் மதிப்புள்ள கடன் தொகை ஒரு செம்மையான முறையில் ஒழுங்குபடுத்தப்பட்டது. இந்நடவடிக்கையால் புதிய அமெரிக்கக் கூட்டரசு அரசாங்கத்தின் நாணயம் மீண்டும் உறுதிப்படுத்தப்பட்டது. மேலும், ஹாமில்டனின் கருத்தாகிய ஆயத்தீர்வை விதிப்பு (Excise duty), அதற்குப் பலத்த எதிர்ப்பிருந்தும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

ஹாமில்டனின் சிபாரிசுகளில் மிகவும் முக்கியமான ஒன்று அமெரிக்க நாட்டிற்கு ஒரு தேசியப் பாங்கு நிறுவுவது ஆகும். அமெரிக்க நாட்டு அரசியலமைப்பு அமுலுக்கு வருமுன்பே அமெரிக்காவில் பல பாங்குகள் நிறுவப்பட்டிருந்தன. இவற்றுள் மிகவும் முக்கியமானது வட அமெரிக்கப் பாங்கு (Bank of North America) என்பதாகும். இப்பாங்கு பிலடெல்பியாவில் 1882-இல் தொடங்கப்பட்டதாகும். தேசியப் பாங்கு நிறுவப்பட வேண்டுமென்னும் ஹாமில்டனின் கருத்தை ஜெபர்சன் என்பவரும், அவருடைய கட்சியினரும் எதிர்த்தனர். இருப்பினும், இறுதியில் ஹாமில்டனின் அறிவுரை ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதன்படி 1791-இல் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் முதலாவது தேசியப் பாங்கு நிறுவப்பட்டது. இப் பாங்கின் அமைப்பைப்பற்றி ஒரு சில குறிப்புக்களைக் கூறவேண்டும். இப்பாங்கு 10 மில்லியன் டாலர்கள் மூலதனத்துடன் ஆரம்பிக்கப்பட்டது. இதில் 1/5 பாகத்தை அமெரிக்கக் கூட்டரசு அரசாங்கம் தன்னுடைய மூலதனப்

பங்காக அளிக்கவேண்டியிருந்தது. இப்பாங்கின் நிர்வாகம் 25 இயக்குநர்களைக் கொண்ட ஓர் அவையின் கையில் இருந்தது. இந்த இயக்குநர்கள் யாவரும் பங்குதாரர்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களாவர். இப்பாங்கு 10 மில்லியன் டாலர்கள் வரை தாள் பணத்தை (Notes) வெளியிடும் அதிகாரத்தைப் பெற்றிருந்தது. மேலும், கிளைகளைத் திறக்கவும், டெபாசிட்டு களைப் பெறவும், தனிப்பட்டவர்களுக்கும், இராச்சிய அரசாங்கங் களுக்கும், கூட்டரசு அரசாங்கத்திற்கும் கடன்களை வழங்கு வதற்கும் இது அதிகாரம் பெற்றிருந்தது. அரசாங்கத்தின் நாணயம் இப்பாங்கிற்கு உறுதுணையாக இருந்தமையால், அது பழமை பேணி, திறம்பட வேலை செய்ய முடிந்தது. அத்துடன் இராச்சியப் பாங்குகள், தங்க நாணய இருப்பு ஏதுமின்றித் தாள் பணம் வெளியிடுவதையும் இத் தேசியப் பாங்கு தடுத்து விட்டது. ஆனால், ஆரம்பம்முதலே இப்பாங்கின்பேரில் இராச்சியப் பாங்குகளும், மற்றும் பலரும் பொறாமை கொண்டனரென்று கூறவேண்டும். ஏனெனில், அவர்களுக்கு இத்தேசியப் பாங்கு ஒரு நிதித் துறை சர்வாதீனமாகவே தோன்றியது. 1811-இல் இத் தேசியப் பாங்கு தன் உரிமைப் பத்திரத்தைப் புதுப்பித்துக் கொள்ளக் கோரியபோது, அமெரிக்க நாட்டு செனட் சபையில் இக்கோரிக்கை தோற்கடிக்கப்பட்டது. இவ்வாறு இப்பாங்கு முடிவுற்றது.

மேற்கூறிய இத் தேசியப் பாங்கின் ஒரு முக்கிய சாதனை, புதிய அமெரிக்கக் கூட்டரசு அரசாங்கத்திற்குப் பத்திரமான தொரு தாள் நாணயத்தை முதன்முதலாக ஏற்படுத்திக் கொடுத்ததாகும். 1792-இல் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் முதலாவது நாணயச் செலவாணிச் சட்டம் ஒன்று நிறைவேற்றப் பட்டு, அமெரிக்க டாலரின் மதிப்பு உறுதிப்படுத்தப்பட்டது. இச் சட்டத்தின்படி, அமெரிக்க டாலரின் மதிப்பு, ஓரத்தில் வரியுடைய ஸ்பெயின் டாலரின் மதிப்புக்குச் சமமாக்கப்பட்டதுடன், அமெரிக்கப் புதிய டாலரின் மதிப்பு 24·75 குன்றிமணி அளவு எடையுள்ள தங்கத்தின் மதிப்புக்கு ஈடாக்கப்பட்டது. அமெரிக்க வெள்ளி டாலரின் மதிப்பும் இவ் வகையிலேயே வரையறுக்கப் பட்டது. தங்கத்துக்கும் வெள்ளிக்குமிடையே 1 : 15 என்ற மதிப்பு வீதத்தை அடிப்படையாகக்கொண்டு, ஒரு வெள்ளி

டாலரில் 371·25 குன்றிமணி அளவு சுத்த வெள்ளி இருக்க வேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது. மேலும், வெள்ளி டாலர் களையும், தங்க டாலர்களையும் வரையறையின்றி அச்சடிக்கவும் அனுமதி தரப்பட்டது. அத்துடன், சத நாணய முறையும் (Decimal System) சட்டமூலம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இது முதல் 1853-வரை இவ்விரட்டை நாணய முறை (Bimetallic Currency) கொள்கையளவில் தொடர்ந்து இருந்துவந்த தெனினும், ஜெபர்சன் தாம் பதவிக்கு வந்தபின்னர், 1806-இல், வெள்ளி நாணயம் அச்சிடப்படுவதை நிறுத்திவிட்டார். மேலும், தங்க வெள்ளி நாணயங்களின் மாற்றுகை வீதமும் 1 : 16 என்று மாற்றப்பட்டது. அடுத்து அமெரிக்க நாணய முறையில் நிகழ்ந்த ஒரு மாற்றமும் குறிப்பிடத்தக்கது. கலிபோர்னியாவில் தங்கச் சுரங்கம் கண்டுபிடிக்கப்பட்டதன் விளைவாகத் தங்கத்தின் மதிப்பு வெகுவாகக் குறைந்துவிட்டது. இதன் காரணமாக, அமெரிக்க அரசாங்கமும் பொன் நாணயத் திட்டத்திற்கு ஒப்பான ஒரு நாணய முறையையே நடைமுறையில் கடைப்பிடிக்கவேண்டிய தாயிற்று.

## 1811 - 1860

முன்னர்க் கூறப்பட்ட முதலாவது அமெரிக்கத் தேசியப் பாங்கு மறைந்த பின்னர், நாட்டின் பல்வேறு இராச்சியங்களிலு முள்ள இராச்சியப் பாங்குகள் கண்மூடித்தனமாக மிதமிஞ்சிய அளவுக்குத் தாள் பணத்தை வெளியிட்டன. இவ்வாறு அமெரிக்க இராச்சியப் பாங்குகள், நிதித்துறையில் சூழ்ச்சிகளையும் தகாத முறைகளையும் கையாண்டது நாடறிந்த உண்மையாகும். இதன் விளைவாக, அமெரிக்காவின் தாள் பணம் மிக்க மதிப்பிறக்கம் அடைந்ததுடன், நாட்டின் நாணயச் செலவாணியில் மக்களின் நம்பிக்கையும் பொதுவாகக் குறைந்துவிட்டது. இச் சூழ்நிலையில் தான் அமெரிக்காவில் இரண்டாவது தேசியப் பாங்கு ஒன்று 1816-ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. இப் புதிய தேசியப் பாங்கின் அனுமதித்த மூலதனம் 35 மில்லியன் டாலர்கள் ஆகும். இதில் 20 சதவீதம் கூட்டரசு அரசாங்கத்தின் பங்காக அளிக்கப்படவேண்டியிருந்தது. இப் பாங்கின் ஆட்சியைப்

பற்றிய விதிமுறைகள் முதலாவது தேசியப் பாங்கின் விதிமுறைகளைப் போன்றவையேயாகும். ஆனால், இப் புதிய பாங்கின் ஆட்சியில் செய்யப்பட்ட ஒரு சிறு மாற்றமென்னவென்றால், அதன் 25 இயக்குநர்களில் 5 பேர்களை அமெரிக்க ஜனாதிபதியே தேர்ந்தெடுக்கவேண்டுமென்றிருந்தது. இப் பாங்கு தன்னுடைய மூலதனத்திற்குச் சமமான தொகை வரை, நோட்டுக்களை வெளியிட அதிகாரம் பெற்றிருந்தது. இவ்வாறு வெளியிடப்படும் நோட்டுக்கள் ஒவ்வொன்றும் 5 டாலர் அல்லது அதற்கு மேற்பட்ட மதிப்புடையதாகவே இருக்கவேண்டுமென்றும் விதிக்கப்பட்டது.

மேற்கூறிய சாதகமான ஏற்பாடுகள் இருந்துங்கூட, இத் தேசியப் பாங்கு 1823-ஆம் ஆண்டு வரை, நாட்டின் நிதித் துறையில் அதன் முழுப் பங்கையும் ஏற்றுச் செயல் புரிய முடியாமற்போயிற்று. இதற்குக் காரணம் இப் பாங்கின் ஆட்சியாளர்கள் கடைப்பிடித்த மிகவும் எச்சரிக்கையான கொள்கையே யாகும். 1823-ஆம் ஆண்டில் நிக்கொலஸ் பிட்டில் (*Nicholas Biddle*) என்பவர் ஜனாதிபதியான பின்னரே இப் பாங்கு தன்னுடைய நடவடிக்கைகளை மேலும் விரிவாக்கிக்கொள்ள முடிந்தது. ஆயினும், இவ்விரண்டாவது தேசியப் பாங்கின் ஆயுளும் முதலாவது தேசியப் பாங்கின் ஆயுளைப் போலவே குறுகியதாய் அமைந்துவிட்டது. இரண்டாவது தேசியப் பாங்கின் உரிமைப் பத்திரத்தைப் புதுப்பிப்பதுபற்றிப் பெரியதொரு கருத்து வேறுபாடும் சர்ச்சையும் ஏற்பட்டன. முன்போலவே இராச்சியப் பாங்குகள் யாவும் இத்தேசிய பாங்கின் முடிவுக்கு வழி தேடின. இம் முடிவு வந்தெய்திய விதம் வியப்பிற்குரியதாகும். இத் தேசியப் பாங்கின் தீவிர எதிர்ப்பாளர்களில் மிகவும் முக்கியமானவராகிய ஜாக்சன் என்பார் (*President Jackson*) அமெரிக்க ஜனாதிபதியாகப் பதவியேற்க நேர்ந்தது. இதன் விளைவாக, இப் பாங்கின் உரிமைக்காலம் முடிவதற்கு முன்னரே, அமெரிக்க நாட்டு அரசியற் கருவூலத் துறையினர் (*United States Treasury*) இப் பாங்கிற்குத் தாங்கள் இதுவரை அளித்துவந்த ஆதரவை நிறுத்திக்கொண்டுவிட்டனர். ஆகவே, தன் உரிமைப் பத்திர காலம் முடிவடையும் தேதியாகிய 1836-ஆம் ஆண்டிற்கு முன்பே

இப் பாங்கு தன் முடிவைக் கண்டது. இருப்பினும், இவ்விரண்டாவது தேசியப் பாங்கு ஓருண்மையைத் தெளிவாக்கியது. ஒழுங்கான முறையில் அமைக்கப்பட்ட ஒரு மையப் பாங்கு (*Central Bank*) நாட்டிற்கு அளிக்கக்கூடிய பயனை இது நன்கு எடுத்துக்காட்டிவிட்டது. ஆனால், தன் பங்குதாரர்களுக்கு இலாபம் பெற்றளிக்கும் நோக்குடன் அமைக்கப்படும் தனியார் வாணிகப் பாங்கு எதுவும், நாட்டின் தேசியப் பாங்காகப் பணி புரிவதற்கு ஏற்றதுமல்ல, மக்களால் விரும்பப்படுவதுமல்ல என்பதும் இதனால் தெளிவாகியது. ஆகவேதான், நாட்டின் நாணய முறையை இத்தகைய ஒரு மையப் பாங்கின் மூலம் ஒழுங்குபடுத்தச் செய்த முயற்சி அமெரிக்காவில் மறுபடியும் தோல்வியுற்றது.

இந் நிலையில், இராச்சியப் பாங்குகளைக்கொண்டே கூட்டரசு அரசாங்கத்தின் நிதி நடவடிக்கைகளை நடத்திக்கொள்ள அடுத்து முயற்சி செய்யப்பட்டது. ஆனால், இம் முயற்சியும் திருப்தியளிக்கக் கூடியதாக இல்லை. 1837-ஆம் ஆண்டில் அமெரிக்காவில் ஒரு நிதித்துறை பீதியும் (*Financial Panic*) ஏற்பட்டது. இதைச் சமாளிப்பதற்காக அரசாங்கம் நாட்டின் நிதி, நாணயப் பொறுப்புக்களை ஏற்க அரசியற் கருவூல முறை (*Government Treasury System*) ஒன்றை நாடு முழுதும் ஏற்படுத்தியது. இதன்படி வாஷிங்டன் நகரத்தில் மையக் கருவூலம் ஒன்றையும், மற்றும் நாட்டின் பல்வேறு பாகங்களிலும் கிளைக் கருவூலங்களையும் அரசாங்கம் நிறுவியது. தனித்தியங்கும் இக் கருவூல நிறுவன முறையானது அரசாங்க நிதிகளைக் கையாள்வதில் மிக்க பாதுகாப்பும், நிறை திறமையும் பெற்றதாக விளங்கியதென்பதில் ஐயமில்லை. மேலும், பாங்கு நோட்டுக்களின் மிதமிஞ்சிய பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கும் இக் கருவூல முறை ஏற்றதாக இருந்தது. ஆனால், இம் முறையில் ஒரு பெருங் குறையும் காணப்பட்டது. இம்முறை நாட்டின் நிதிகளில் பெருந் தொகைகளைச் சில சமயங்களில் முடக்கிவைத்தும், மற்றும் சில சமயங்களில் திடீரெனப் பெருந்தொகைகளைப் பொதுமக்களுக்குச் செலுத்தியும் இடர் விளைத்தது. இதனால் நாட்டின் வாணிகத்

திற்கும் செலாவணி முறைக்கும் உறுதியற்றதொரு நிலையும் ஏற்பட்டது.

மேற்கூறிய நிதித் துறைச் சங்கடங்கள் மேலும் அதிகரிப்பதற்கு இராச்சியப் பாங்குகள் காரணமாயின. இவைகள் கணக்கு வழக்கின்றி மிகையாகப் பாங்கு நோட்டுகளை வெளியிட ஆரம்பித்தன. இத்தகைய இராச்சியப் பாங்குகளின் எண்ணிக்கை 1820-ஆம் ஆண்டில் 307 ஆக இருந்தது. ஆனால், 1860-இல் இவைகளின் எண்ணிக்கை 1601 ஆக உயர்ந்துவிட்டது. இப் பாங்குகளின் மூலதனமும் 102 மில்லியன் டாலரிலிருந்து 433 மில்லியன் டாலராக அதிகரித்திருந்தது. இப் பாங்குகளால் வெளியிடப்பட்ட நோட்டுக்களின் தொகையோ 16·60 மில்லியன் டாலரிலிருந்து 207 மில்லியன் டாலருக்கு அதிகரித்திருந்தது என்பது குறிக்கத்தக்கது. உண்மையைக் கூறப்போனால், 1837-ஆம் ஆண்டில் அமெரிக்காவில் ஏற்பட்ட நிதித் துறை நெருக்கடிக்கும் (*Financial crisis*), பின்னர் 1840-1850-ஆம் ஆண்டுகளில் அங்கு ஏற்பட்ட மந்த நிலைக்கும் இந்த இராச்சியப் பாங்குகளும் அவற்றின் நோட்டு வெளியீடுகளுமே முக்கிய காரணங்களாகும்.

**உள்நாட்டுப் போரும், அதன் பின்னரும்**

அமெரிக்க நாட்டு உள்நாட்டுப்போர் அந்நாட்டின் நிதித் துறையின்பேரிலும், பாங்குத் துறை அமைப்பின் பேரிலும் புரட்சிகரமான விளைவுகளை ஏற்படுத்தியது. உள்நாட்டுப் போருக்கு வேண்டியிருந்த நிதித் தேவையின் காரணமாகவே நாட்டின் சுங்கவரி வீதங்கள் அதிகரிக்கப்பட்டன. புதியதொரு கூட்டரசுப் பாங்கு முறையும் நாட்டில் ஏற்படுத்தப்பட்டது. மேலும், இப்போரின் காரணமாகவே, நாட்டின் நாணயச் செலாவணியிலும் ஆணைக் காகிதப் பணம் (*Fiat paper money*) புகுத்தப்பட்டது. இதை யொட்டியே பணவீக்க நலக் கொள்கையினருக்கும் (*Inflationists*), பணவடிப்பு நலக்கொள்கையினருக்குமிடையே (*Contractionists*) மிகவும் கடுமையான சச்சரவு ஒன்றும் ஏற்பட்டது.

உள்நாட்டுப் போரினால் ஏற்பட்ட செலவுத்தொகை அக்கால நிலையில் மிகவும் பிரம்மாண்டமானதாகவே இருந்தது. இச்

செலவின் அளவு 9,000 மில்லியன் டாலர்கள் ஆகும். அப்போரின் நான்கு ஆண்டுக் காலத்தில் அமெரிக்கா செலவழித்த தொகையானது, அந்நாடு அப்போருக்கு முந்திய காலம் முழுதும் செலவழித்திருந்த மொத்தத்தைவிட மிகையானதாகுமென்றால் வியப்புண்டாகும். இச்செலவைச் சமாளிப்பதற்குச் சுங்க வரிகளும், சாதாரண வரிகளும், மற்றும் எல்லா வருமான வரிகளுமே முழுவதும் பயன்படுத்தப்பட்டன. இவை தவிர, கடன்கள் மூலமும் பணம் திரட்டப்பட்டது. வருமான வரியும் அப்படித்தான் ஒரு போர்க்கால நடவடிக்கையாகப் புகுத்தப்பட்டது. 1865-ஆம் ஆண்டில் அமெரிக்க நாட்டு அரசாங்கக் கடன் 2846 மில்லியன் டாலர்களாக இருந்தது. 1917-ஆம் ஆண்டுவரை இதுவே மிக உயர்ந்த கடன் தொகையாகும். போருக்கான நிதியைப் பெறும் முயற்சியில் ஒன்ருக, "கிரீன் பேக்ஸ்" (*Green backs*) என்ற ஒருவகை நோட்டின் வெளியீடும் அமெரிக்காவில் 1862-ஆம் ஆண்டிலேயே ஆரம்பிக்கப்பட்டது. இவ்வகையான நோட்டுக்கள் 450 மில்லியன் டாலர் மதிப்பு வரை வெளியிடப்பட்டிருந்தன. இதனுல் விளைந்த பிரச்சினையே அடுத்த அரை நூற்றுண்டுக்காலத்திற்கு அமெரிக்காவின் பெரியதோர் அரசியல் நிதித் துறைப் பிரச்சினையாக இருந்தது என்று குறிப்பிடல் வேண்டும்.

### தேசியப் பாங்கு முறை (*National Banking System*)

1836-ஆம் ஆண்டில் அமெரிக்க நாட்டின் இரண்டாவது தேசியப் பாங்கு கலைக்கப்பட்டதிலிருந்து, அமெரிக்கக் கூட்டரசு அரசாங்கம் பல ஆண்டுகள் வரை நாட்டின் பாங்குத் துறைமீது எவ்வித மேற்பார்வையும் செய்யவில்லை. 1863-ஆம் ஆண்டில் அமெரிக்க நாட்டிற்கெனத் தேசியப் பாங்கு முறை ஒன்று ஏற்படுத்தப்பட்டபின்னரே இக்கண்காணிப்பு மறுபடியும் மேற்கொள்ளப்பட்டது. இத்தேசியப் பாங்குச் சட்டத்தின்கீழ், ஐந்து நபர்களுக்குக் குறையாத எண்ணிக்கையுள்ள பங்குதாரர் குழுக்களே பாங்குகளை ஆரம்பிக்க உரிமைச் சாசனங்கள் வழங்கப்பட்டன. இச்சட்டத்தின்படி ஏற்படுத்தப்பட்ட ஒரு பாங்கின் பங்குதாரர்கள், தங்கள் பாங்கின் மூலதனத்தில் மூன்றில் ஒரு பங்கிற்கு

ஈடான தொகைக்கு, கூட்டரசுப் பத்திரங்களை அவ்வரசாங்கத்திடம் ஒப்படைக்கவேண்டுமென்று கூறப்பட்டது. இதற்குப் பதிலாக, அப்பாங்குகள் தங்களிடமுள்ள கூட்டரசுப் பத்திரங்களின் நிலவர சந்தை மதிப்பில் 90 சதவீத அளவு வரை நோட்டுக்களை வெளியிட்டுக்கொள்ள அனுமதிக்கப்பட்டன. இம்முறையின் விளைவாக நாட்டில் புழங்கும் நிதிகளில் பெரும் பகுதி நியூயார்க் நகரத்தில்தான் மிதமிஞ்சிக் குவிந்தன. இதனால் அமெரிக்க நாட்டின் பல்வேறு மண்டலங்களுக்கிடையேயும் வரி வீதங்களில் வேறுபாடுகள் தோன்றலாயின. மேலும், இப்பாங்குகளைக் கட்டுப்படுத்துதற்கான மைய நிறுவனம் எதுவும் இல்லாதிருந்தது ஒரு பெருங் குறையாய் அமைந்தது. ஆயினும், இக்குறைகளைப் போக்குவதற்குப் பல்லாண்டுகள் வரை எவ்வித முக்கிய நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. 1893-இலும், 1897-இலும் ஏற்பட்ட பீதி நிலையைக் கண்ட பின்னரே மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கவேண்டியதன் அவசியம் உணரப்பட்டது. அடுத்து 1907-ஆம் ஆண்டில் ஏற்பட்ட பாங்குத் துறை நெருக்கடியானது, பொது மக்களைப் பாங்குத் துறைச் சீர்திருத்தத்தின் அவசியத்தில் அக்கறை செலுத்தத் தூண்டியது. இதன் பயனாக 1908-ஆம் ஆண்டில் ஆல்டிரிச் விரீலாந்து சட்டத்தின் (*Aldrich Vreeland Act*) கீழ்த் தேசியப் பணத்துறைக் கமிசன் (*National Monetary Commission*) ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இக் கமிசன் விடுத்த அறிக்கையில் அமெரிக்க நாட்டிற்கு "பெடரல் ரிசர்வ் பாங்கு முறை" (*Federal Reserve System*) ஒன்று ஏற்படுத்தப்படவேண்டுமெனச் சிபாரிசு செய்யப்பட்டிருந்தது. இந்தச் சிபாரிசின் பேரிலேயே 1913-ஆம் ஆண்டில் அமெரிக்காவில் 'பெடரல் ரிசர்வ் சட்டம்' (*The Federal Reserve Act*) ஒன்று நிறைவேற்றப்பட்டது.

### பெடரல் ரிசர்வ் முறை (*Federal Reserve System*)

1913-ஆம் ஆண்டு பெடரல் ரிசர்வ் சட்டத்தின்கீழ் அமெரிக்க ஐக்கிய நாடு 12 பெடரல் பிராந்தியங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பிராந்தியத்திற்கும் ஒரு பெடரல்

ரிசர்வ் பாங்கு நிறுவப்பட்டது.[1] மேலும், அமெரிக்க நாட்டில் இயங்கிய பாங்குகள் தேசியப் பாங்குகள் (*National Banks*) எனவும், இராச்சியப் பாங்குகள் (*State Banks*) எனவும் இருவகையாகப் பாகுபடுத்தப்பட்டன. தேசியப் பாங்குகள், தங்களுடைய செலுத்தப்பட்ட மூலதனம், இருப்புக்கள் ஆகிய இவ்விரண்டின் கூட்டுத் தொகையில் 6 சதவீதம் வரை பெடரல் ரிசர்வ் பாங்குப் பத்திரங்களில் முதலீடு செய்யவேண்டும் என்று விதிக்கப்பட்டது. இராச்சியப் பாங்குகளும் ரிசர்வ் பாங்குகளால் வெளியிடப்படும் பத்திரங்களை வாங்குவதற்கு அனுமதிக்கப்பட்டன. ஒவ்வொரு பிராந்திய ரிசர்வ் பாங்கிற்கும் 9 நபர்கள் அடங்கியதோர் இயக்குநர் குழு ஏற்படுத்தப்பட்டது. இவர்களில் 6 பேர்கள் ரிசர்வ் பாங்கின் உறுப்பினர் - பாங்குகளாலும் (*Member Banks*) 3 பேர்கள் வாஷிங்டனிலிருக்கும் பெடரல் ரிசர்வ் குழு (*Federal Reserve Board*) என்ற மைய நிறுவனத்தாலும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்றிருந்தது. மேற்கூறப்பட்ட 'பெடரல் ரிசர்வ் குழு' தான் அமெரிக்கப் பெடரல் ரிசர்வ் பாங்குகளின் பேரில் ஆட்சியும், மேற்பார்வையும் புரியும் அதிகாரம் பெற்ற மையக் குழுவாகும். இது வாஷிங்டன் நகரத்தில் இருந்து அலுவல் புரியக் கூடியதாகும். மற்றும், பெடரல் ரிசர்வ் ஆலோசனைக் கவுன்சில் (*Federal Reserve Advisory Council*) ஒன்றும் இத்திட்டத்தில் இடம் பெற்றிருந்தது. இக்குழுவில் ஒவ்வொரு பெடரல் ரிசர்வ் பிராந்தியத்திற்கும் ஒரு பிரதிநிதி உறுப்பினர் உண்டு.

மேற்கூறப்பட்ட பெடரல் ரிசர்வ் பாங்குகள் தனி நபர்களிடமோ, தொழில் நிறுவனங்களிடமோ, நேரடியான உறவு ஏதும் வைத்துக் கொள்வது இல்லை. அவை உறுப்பினர் பாங்குகளிடம் மட்டுமே தொடர்பு கொண்டுள்ள பாங்குகளின் பாங்கு (*Bankers' Bank*) ஆகும். அவற்றின் அலுவல்கள் வழக்கமான மையப் பாங்கு அலுவல்களே (*Central-banking Functions*)யாம். அவையாவன : உறுப்பினர் பாங்குகள் கொண்டுவரும் வாணிக உண்டியல்களை மறுகழிவு செய்தல் (*Rediscounting*); உள்நாட்டு, வெளிநாட்டுப் பரிவர்த்தனை உண்டியல்களை (*Bills of exchange*)

1. 12 பிராந்தியங்களாவன : போஸ்டன், நியூயார்க், பிலடெல்பியா, கிளீவ்லாந்து, ரிச்மாண்டு, அட்லாண்டா, சிகாகோ, செண்ட்லூயி, மின்னியாபோலிஸ், கான் சாஸ் சிடி, டல்லாஸ், சான்பிரான்சிஸ்கோ.

வாங்குவது, விற்பது; உறுப்பினர்-பாங்குகளுக்குக் கடன்களை வழங்குவது; மேலும், பெடரல் ரிசர்வ் நோட்டுகளை வெளியிடுவது. உறுப்பினர்-பாங்குகள் அவற்றின் பிராந்திய ரிசர்வ் பாங்கிடம், தங்கள் நடப்பு வைப்புக்களில் (*Demand-deposits*) 3 சதவீதத்தை இருப்பாக ஒப்படைக்கவேண்டுமெனவும் விதிக்கப்பட்டது. அடுத்து, பெடரல் ரிசர்வ் பாங்குகள் தங்கள் நோட்டு வெளியீடுகளுக்குக் காப்பு இருப்பாக (*Reserve*) அவற்றின் 40 சதவீதம் பெறுமானத்திற்கு, பொன் இருப்பு வைத்திருக்கவேண்டுமெனவும் கோரப்பட்டது. 1933-ஆம் ஆண்டிற்குப் பின், மேற்கூறிய பொன் இருப்புக்குப் பதிலாக அரசாங்கக் கருவூலம் அளிக்கும் பொன் இருப்புப் பத்திரங்கள் (*Gold Certificates*) வைத்திருந்தால் போதுமெனவும் கூறப்பட்டது. மேலும், பெடரல் ரிசர்வ் பாங்குகள் தங்களிடமுள்ள டெபாசிட்டுகளுக்குக் காப்பு இருப்பாக, அவற்றின் பெறுமானத்தில் 35 சதவீதத்திற்குச் சட்டச் செலாவணியை (*Legal tender*) வைத்திருக்கவேண்டுமெனவும் விதிக்கப்பட்டது. இந்தப் பெடரல் ரிசர்வ் பாங்கு முறையானது நாட்டிற்குப் பல நலன்களை அளித்துள்ளது என்றே கூறுதல் வேண்டும். நாட்டின் பாங்குத் துறையை, பெடரல் ரிசர்வ் முறை அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்குள்ளாகப் பெரிதும் ஒருமைப் படுத்தியது. மேலும், முன்னிலும் முன்னேற்றமான பாங்கு வசதிகளையும், நெகிழ்ச்சி நலமுடையதொரு நாணயச் செலாவணி முறையையும் இது நாட்டிற்கு அளித்தது. இதனால் தாராள வசதிகளை அளிக்கக் கூடிய பாங்குமுறை ஒன்று அமெரிக்காவில் அமைக்கப்பட்டுவிட்டது. ரிசர்வ் பாங்குகள் நாட்டின் அரசாங் கத்திற்கு ஏஜன்டுகளாக அலுவல் புரிந்து, அதற்குரிய டெபாசிட்டுக்களைப் பெற்றும், அந்த டெபாசிட்டுகளை வேண்டியபடி மாற்றியும் அரசாங்கத்திற்குத் துணைபுரிந்தன. இதன் காரணமாக, முன்னிருந்த தனித்தியங்கும் அரசியற் கருவூல முறை 1920-ஆம் ஆண்டில் நீக்கப்பட்டது.

### நாட்டின் நாணயத் துறைச் சீர்திருத்தம்

அமெரிக்க உள்நாட்டுப் போரின் ஒரு முக்கிய பின்விளைவு, அந்நாட்டு நாணயச் செலாவணிப் பணப் பெருக்கத்தால்

ஏற்பட்ட பிரச்சினையாகும். இதுவே கிரீன்பேக்கிசம் (*Green backism*) என்றும் குறிப்பிடப்பட்டது. நாட்டின் கடனாளி மக்கள், குறிப்பாக நாட்டிலுள்ள விவசாயிகள், நாணய வடிப்பு நடவடிக்கை (*Contraction of Currency*) எதையும் எதிர்த்தனர். ஏனெனில், இப்பணவடிப்பானது விலை வீழ்ச்சி செய்வதால் அவர்களுக்குப் பாதகமாக அமையும் என்று விவசாயிகள் யாவரும் அஞ்சினர். இந்நிலையில் அரசாங்கத்தின் நாணயச் செலாவணிக் கொள்கையும், பொன் நாணயச் செலாவணியின் (*Specie Payment*) மீட்சியும் நாட்டில் கடுமையான வாத எதிர்வாதங்களை எழுப்பின. பணவீக்க வரவேற்புப் போராட்டத்தினரின் கோரிக்கைகளில் ஒன்று, வெள்ளி நாணயத்தின் தங்குதடையற்ற அச்சிடுகையாகும். இப் போராட்டத்தினரின் வற்புறுத்தலுக்கு இணங்கி, அரசாங்கம் 1878-ஆம் ஆண்டில் 'பிளாண்டு அல்லிசன் சட்டத்தை' (*Bland Allison Act*)யும், பின்னர், 1890-ஆம் ஆண்டில் ஷெர்மேன் சட்டத்தையும் நிறைவேற்றிவைத்தது. இச்சட்டங்களின் பயனாக வெள்ளி நாணயமும், வெள்ளி இருப்புப் பத்திரங்களும் பேரளவில் நாணயத்தில் சேர்க்கப்பட்டன. இப் பணவீக்கக் கோரிக்கைப் போராட்டமானது ஒரு வகையில், நாட்டின் விவசாயத் தொழில் நலிவைத் தடுப்பதற்கான ஓர் எதிர் நடவடிக்கையேயாகும். மேலும், தொழில் முதலாளித்துவத்தின் வல்லமைக்கு ஒரு மாற்று எதிரான இயக்கமாகவும் இது கருதப்படவேண்டும். ஆயினும், விலைவாசிச் சரிவு தொடர்ந்தது. அதுவும் குறிப்பாக, பொன் நாணயத் திட்டத்தைப் பல நாடுகள் கடைப்பிடிக்க ஆரம்பித்தமையினால் இவ்விலை வீழ்ச்சி தொடர்ந்து நிகழ்வதாயிற்று.[1]

19-ஆம் நூற்றாண்டின் இறுதி இருபது ஆண்டுக்காலத்தில் அமெரிக்க நாட்டின் சமூக, பொருளாதார, அரசியல் வாழ்க்கை முழுவதிலும் அந்நாட்டின் நிதித் துறை, நாணய முறை பற்றிய வாதங்கள்தாம் மேலோங்கியிருந்தன. அதுபோது, நாட்டின் பணப்பெருக்கம், மலிவுப் பணநிலை, குறைவான வட்டிவீதநிலை முதலியவற்றில் பல பரிசோதனைகளும் நிகழ்த்தப்பட்டன. இவ்விவாதங்கள் யாவும் இறுதியில் 1900-ஆம் ஆண்டில்

1. Hepburn : A History of Currency in the United States of America.

நிறைவேற்றப்பட்ட நாணயச் சட்டத்தின் விளைவாக மறைந்தன. இச்சட்டம் நாணயத்தின் மதிப்பிற்கு ஒரு மூல அலகாக (*Standard unit of value*) பொன்னாலாய டாலர் ஒன்றைப் புதிதாக ஏற்படுத்தியது. இப் பொன் டாலர் பத்தில்-ஒன்பது பங்கு தூய உலோகம் கொண்டதும் 25.8 குன்றிமணி எடை அளவுள்ளதுமான ஒரு நாணயமாகும். மேலும், நாட்டின் மற்றெல்லா வகை நாணயங்களின் மதிப்பும் இப்பொன் டாலருக்குச் சரி சமமான வகையிலேயே தீர்மானிக்கப்பட வேண்டும் என்றும் இச்சட்டத்திலிருந்தது. தவிரவும், நாட்டின் பொன் திட்டத்திற்குக் காப்பு இருப்பாக 150 மில்லியன் டாலர்களை வைத்திருக்கவும், கிரீன்பேக் நோட்டுக்களையும், 1890-ஆம் ஆண்டு அரசியற் கருவூல நோட்டுக்களையும் புழக்கத்திலிருந்து நீக்கிக் கொள்ளவும் இச்சட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. முடிவாகக் கூறுமிடத்து, 1900-ஆம் ஆண்டின் நாணயச் செலாவணிச் சட்டமும், 1913-ஆம் ஆண்டு பெடரல் ரிசர்வ் பாங்குச் சட்டமுந்தாம் அமெரிக்க நாட்டில் புதுமையானதொரு நாணய முறையையும் பாங்கு முறையையும் தோற்றுவித்தன என்று கூறவேண்டும். இதன் பயனாகவே, நியூயார்க்கின் பணச் சந்தையான 'வால் தெரு' (*Wall Street*) உலக நிதித் துறையின் பேரில் ஆதிக்கஞ்செலுத்தக் கூடிய வலிமை பெற்றது. அமெரிக்க நாட்டில் நிலவும் ஒற்றை பாங்கு முறையும் (*Unit Banking*), நியூயார்க் பணச் சந்தையின் அமைப்பும் ஒழுங்கும், அந்நாட்டுப் பங்குப் பத்திர மார்க்கெட்டின் ஊகவாணிக முதன்மையும், அமெரிக்க நாட்டு ஆற்றலும் இன்று உலக நாடுகளிடையே கவலையை ஏற்படுத்தியிருக்கின்றன என்றால் மிகையாகாது.[1]

### நியூ டீல் திட்டம்

முதலாவது உலகப் போரை அடுத்த காலம் அமெரிக்க நாட்டு நாணய வரலாற்றிலும், பாங்கு வளர்ச்சி வரலாற்றிலும் உறுதிப்பாடில்லாத காலமாகவே இருந்தது என்று குறிப்பிடவேண்டும். அமெரிக்கப் பெடரல் ரிசர்வ் பாங்கு

1. Fetter : Modern Economic Problems, p. 48

முறையின் தோற்றம் நாட்டின் பாங்குத் துறையில் பல முக்கிய சீர்திருத்தங்களைச் செய்திருந்ததெனினும், 1920-ஆம் ஆண்டிற்கும் நியூ டீல் பரிசோதனைக் காலத்திற்குமிடையே அமெரிக்காவில் நூற்றுக்கணக்கான பாங்குகள் முறிவுற்றன. குறிப்பாக 1931-ஆம் ஆண்டிற்குப் பின்னர் அமெரிக்க நாட்டின் நிதித் துறை அமைப்பு மிகவும் இடர் நிரம்பியதொரு கட்டத்தை அடைந்தது. நிதித் துறையில் இந்நிலையைச் சமாளிக்கும் ஒரு நோக்குடனும் கொண்டுவரப்பட்டதான நியூ டீல் திட்டத்தில் நிதிச் சீர்திருத்தத் திட்டமொன்றிருந்தது. பணவீக்கத்தை வளரச் செய்யும் கொள்கை, பாங்குத் துறையில் சீர்திருத்தம், பண்டச் சந்தை, பத்திரச் சந்தை இவ்விரண்டின் பேரிலும் கூடுதலான மேற்பார்வை முதலியனவே இத்திட்டத்தின் முக்கிய கூறுகளாகும். ஜனதிபதி ரூஸ்வெல்ட்,'நாம் திண்ணமாக எல்லாப் பொருள்களின் மதிப்பிலும் ஒரு கூடுதலை ஏற்படுத்தத் தீர்மானித்துள்ளோம். இதற்கு நமக்கு இரண்டு வழிகளே உண்டு. ஒன்று, கடனாளிகளின் நிதிமுறிவின் மூலமும் (*Bankruptcies*), ஈடுசுவாதீன நடவடிக்கை மூலமும் (*Foreclosures*) கடன்களைச் சொத்துக்களின் மதிப்பிற்குக் கீழாகும்படி குறைத்துவிடலாம். மற்றென்று, சொத்துக்களின் பெறுமானத்தைக் கடன்களின் மதிப்பிற்கு மேலாக உயரும்படி கூடுதலாக்கிவிடலாம். இவற்றுள் பின்னர்க் கூறப்பட்டதே சட்ட நேர்மையானமுறையிலும், மனித வாழ்க்கையின் இலட்சியங்களை அழிக்காத வகையிலும் நாட்டை மறுபடியும் உறுதியான அடிப்படையில் அமர்த்துவதற்கு ஏற்ற ஒரே வழியாகும்'' என்று முழங்கிய கூற்று நியூ டீல் திட்டத்தின் நோக்கத்தை நன்கு தெளிவு படுத்துவதாகும்.

1933-ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள், 10-ஆம் நாள் ஜனதிபதி ரூஸ்வெல்ட் நாட்டின் நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டபோது, அமெரிக்க நாட்டின் பாங்கு முறையும், நாணய முறையும் அநேகமாக முடங்கிக் கிடந்தனவென்றே கூற வேண்டும்.

1932-ஆம் ஆண்டில் மட்டும் 1400-க்கு மேற்பட்ட பாங்குகள் அமெரிக்க ஐக்கிய நாட்டில் முறிவுற்றன. மேலும்,

1933-ஆம் ஆண்டின் ஆரம்ப மாதங்களில் பாங்குகளின் முறிவு வளர்வீதத்தில் அதிகரித்தது. இந்நிலையைச் சமாளிப்பதற்கு அவ்வாண்டு மார்ச்சுத் திங்கள் 6-ஆம் நாளன்று ரூஸ்வெல்ட் நாடு முழுவதிலும் பாங்குகளின் கடன் பொறுப்புக்களை ஒத்திவைக்கும் ஓர் ஆணையைப் பிறப்பித்தார். ஆயினும், இதற்குள்ளாகவே பல பாங்குகள் மூடப்பட்டுவிட்டன. அடுத்து, 1933-ஆம் ஆண்டு மார்ச்சு 9-ஆம் நாள், 'நெருக்கடி காலப் பாங்குச் சட்டம்' (*Emergency Bank Act*) ஒன்றும் நிறைவேற்றப்பட்டது. இச்சட்டத்தின்கீழ் நாட்டின் நாணயத் துறையிலும், கடன் செலாவணித் துறையிலும், பொன் வெள்ளி உலோகச் சந்தையிலும், அயல் நாணயங்களின் சந்தையிலும் எல்லா நடவடிக்கைகளையும் கட்டுப்படுத்தும் அதிகாரம் ஜனாதிபதிக்கு அளிக்கப்பட்டது.

மற்றொரு சட்டத்தின் மூலம் பெடரல் டெபாசிட்டு இன்சூரன்சு முறையொன்று ஏற்படுத்தப்பட்டு அமெரிக்க நாட்டின் பாங்குத் துறை மேலும் வலுப்படுத்தப்பட்டது. 1935-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட 'பாங்குமுறைச் சட்டம்' (*Banking Act*) ஒன்று மேற்கூறிய திட்டங்கள் யாவற்றையுமே நிலையானதாக்கியது. மேலும், நாட்டின் செலாவணியைக் கட்டுப்படுத்துதற்கு முன்னிலும் அதிகமான அதிகாரங்களையும், பெடரல் ரிசர்வ் முறைக்கு இச்சட்டம் அளித்தது. புதிதாக அளிக்கப்பட்ட இந்த மேற்கொண்ட செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளில் (*Weapons of Credit Control*) குறித்த துறைச் செலாவணிக் கட்டுப்பாடு முறையும் (*Selective Credit Control*), மாறும் காப்பு இருப்பு விகித முறையும் (*Variable reserve-ratio system*) முக்கியமானவையாகும். தவிரவும், வறுமையால் பீடிக்கப்பட்ட பாங்குகளுக்குக் கடன் உதவி அளிப்பதற்கென தேசியக் கடன் அளிப்புக் கார்ப்பரேசன் (*National Credit Corporation*) ஒன்றும், புனரமைப்பு நிதிக் கார்ப்போரேசன் (*Reconstruction Finance Corporation*) ஒன்றும் ஏற்படுத்தப் பட்டன. அத்துடன் பாங்குக் குழுக்களுக்கு (*Groups of banks*) அவற்றின் பிராமிசரி நோட்டுக்களின் பேரில், கடன்களை

அளிப்பதற்குப் பெடரல் ரிசர்வ் பாங்குகளுக்கு அதிகாரமும் அளிக்கப்பட்டது.

இக்காலத்திலேயேதான் நாட்டின் பொருளாதார நிலையை மேலும் சீர்படுத்துவதற்காக நாணய முறையிலும் மாற்றங்கள் செய்யப்பட்டன. 1931-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் பொன் நாணயத் திட்டத்தை இங்கிலாந்து கைவிட்டதையொட்டி அமெரிக்காவிலும் இந்நாணயத் திட்டம் அதிர்ச்சிக்குள்ளாகியது. ஆயினும், 1934-ஆம் ஆண்டு 'பொன் இருப்புச் சட்டத்தின்' *(Gold Reserve Act)* பிரகாரம் வரம்பிடப்பட்ட பொன்கட்டித் திட்டமுறை ஒன்று பதிலாக நிறுவப்பட்டது. ஆனால், இதைவிட 1933-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் நாட்டில் அமுலிலிருந்த பொன் வாங்குகைத் திட்டமே நிர்வகிக்கப்பட்ட நாணய முறை *(Managed Currency)* ஒன்றை நிறுவுவதற்கு மிகவும் ஏற்ற நடவடிக்கையாகுமென அமெரிக்க ஜனாதிபதி கருதினார் என்பதை இங்குக் குறிப்பிடவேண்டும். அமெரிக்க நாட்டு சமூகத்திற்குள் பணத்தைக் கூடுதலாகப் பாய்ச்சி, அதன் வாயிலாக மக்களின் வாங்கும் சக்தியும் பண்டங்களின் விலைவாசியையும் உயர்த்துதற்குப் பலவகையான பணப் பெருக்க நடவடிக்கைகளும் கையாளப்பட்டன. இவைகளில், பொன் விலையை உயர்த்தியதும், வெள்ளியை உயர்ந்த விலை அளித்து வாங்கியதும், டாலரின் மதிப்பைக் குறைத்ததும் முக்கியமான செயல்களாகும். இவ்வகையில் அமெரிக்க டாலரின் நிகழ்மதிப்பு முன்பு 1900-ஆம் ஆண்டில் நிலவியிருந்த அமெரிக்க நாட்டுப் பொன் டாலரின் 59.06 சதங்களுக்கே ஈடாகுமெனத் தீர்மானிக்கப்பட்டது. டாலரின் இம்மதிப்புக் குறைப்பால் அமெரிக்க நாட்டுப் பொன் இருப்பின் பெறுமானம் அதிகரிக்கவே இதனால் விளைந்த இலாபங்களைக் கொண்டு, 'அயல்நாணயப் பரிவர்த்தனை உறுதிப்பாட்டு நிதி, *(Exchange Stabilisation Fund)* ஒன்றும் அமெரிக்காவில் நிறுவப்பட்டது. இந்நிதியின் அளவு அதுபோது 2000 மில்லியன் டாலர்களாயிருந்தது. இரண்டாம் உலகப்போர் காலத்திலும், அதற்குப் பின்னரும் அமெரிக்க நாட்டு நாணய முறையும், செலாவணி முறையும் செம்மையாகவே செயல் புரிந்தன.

அக்காலத்தில் அமெரிக்க நாட்டிற்குப் புதிதாக நேரிட்ட இடர்ப் பாடுகளும், பொறுப்புக்களும் இத் திட்டங்களும் எத்தகைய கேட்டையும் விளைவிக்கவில்லை. *1945*-ஆம் ஆண்டில் அமெரிக்க ஐக்கிய நாடு 'பிரெட்டன் உட்' ஒப்பந்தத்தில் ***Brettenwood Agreement***) கையெழுத்திட்டதுடன், பின்னர்ப் பன்னாட்டுச் செலாவணி நிதியிலும் (*International Monetary Fund*), உலக பாங்கிலும் (*World Bank*), உறுப்பினராகவும் ஆகியது. இன்றோ அமெரிக்க ஐக்கிய நாடு உலகத்தின் நிதிக் கேந்திர மாகவும், உலகத்தின் பெரு நிதியாளனாகவும், உலக நாடுகளுக் கெல்லாம் கடன் ஈவோனாகவும் ஆகிவிட்டது.

# 13. அகண்ட அமெரிக்கா

சென்ற நூற்றுண்டின் இறுதியில் அமெரிக்காவில் அதுவரை நிகழ்ந்து வந்ததான மேற்குப்புறப் பெயர்ச்சி (*Westward Movement*) முடிவுற்றது. இதற்கு மேலாக அமெரிக்க ஐக்கிய நாட்டில் புதுக்குடியிருப்புகளை நிறுவிக் கொள்ளவும், புதிய நிலவளங்களைப் பெற்றுக்கொள்ளவும், நாட்டின் தொடர்ந்த விரிவை ஆக்கிக்கொள்ளவும் நிலப்பரப்புக்கள் இனி இல்லாத காரணத்திஞல் அமெரிக்க சமூகம் அமைதியற்று அங்கலாய்க்கும் ஒரு நெருக்கடி நாட்டில் தோன்றியது. அமெரிக்காவின் பொருளாதார வல்லமை முன்பு என்றுங்காணுத வேகத்தில் பெருகிக்கொண்டிருந்த அதே நேரத்தில்தான் அமெரிக்கமக்களின் மேற்குப்புறப் பெயர்ச்சியும் பசிபிக் பெருங்கடலை அடைந்தது. அமெரிக்காவின் மக்கள் தொகையும் 1870-ஆம் ஆண்டிற்குப் பின்னர் இரட்டித்துவிட்டது. அதுபோதே அந்நாட்டின் விவசாயப் பண்ட உற்பத்தியும், தொழிற் பண்ட உற்பத்தியும் நம்பத்தகாத அளவுக்கு அதிகரித்திருந்தன. மேலும், அமெரிக்காவின் வளங்களோ எல்லையற்றுக் கிடந்தன. 1892-ஆம் ஆண்டில் அமெரிக்க ஏற்றுமதிகளின் பெறுமானம் 1000 மில்லியன் டாலர்களைத் தாண்டி விட்டது. ஆயினும், இந்தப் பெரிய ஏற்றுமதிகூட அமெரிக்க நாட்டின் மொத்த ஆக்கத்தில் (*National Product*) 5 சதவீதமேயாகுமென்ருல் அந்நாட்டின் பிரம்மாண்டமான உற்பத்தி தெற்றெென விளங்கும். இந் நிலையில் அமெரிக்க ஐக்கிய நாடு தன்னுடைய பண்ட உற்பத்தியை விற்பதற்கு மட்டுமன்றி, தன்னிடம் குவிந்து வந்த

மூலதனத்தை முதலீடு செய்து கொள்ளவும் வெளிநாட்டுச் சந்தைகளை நாட வேண்டியதாயிற்று.

மேற்கூறிய சூழ்நிலையில்தான் அமெரிக்க ஐக்கிய நாட்டின் புதிய ஏகாதிபத்தியம் ஒன்று உலகில் தோன்றியது. டாலர் ஏகாதிபத்தியமெனப்படும் இது ஓரளவுக்கு அரசியல், சமய, கலாசாரக் காரணங்களாலும் விளைந்ததெனக் கருதப்படலா மாயினும், பேரளவுக்கு இது அமெரிக்க நாட்டின் பிரம்மாண்ட பொருளாதார வளர்ச்சியினுல் எழுந்ததேயாகும் என்று கூற வேண்டும். முதலாவது உலகப் போர் வரை பிறநாட்டு மூலதனந்தான் அமெரிக்க நாட்டை நோக்கிப் பாய்ந்தது எனினும், 19-ஆம் நூற்ருண்டின் இறுதியிலேயே அமெரிக்கா வெளிநாடுகளில் முதலீடு செய்யத் தொடங்கிவிட்டது. 1897-ஆம் ஆண்டிற்குள்ளாகவே அமெரிக்க ஐக்கிய நாட்டின் வெளிநாட்டு முதலீடு 654·5 மில்லியன் டாலர்களாகிவிட்டது. முதலாவது உலகப் போரின் ஆரம்பத்திலேயே இம் முதலீட்டின் பெறுமானம் 2500 மில்லியன் டாலர்களாக அதிகரித்துவிட்டது. இப் புது ஏகாதிபத்திய முறை உலகம் முழுவதிலும் ஒரே மாதிரியாகவே இருந்தது. அமெரிக்காவுக்கு முன்னரே ஏகாதிபத்திய விரிவுத் துறையில் ஈடுபட்டிருந்த மற்ற ஐரோப்பிய நாடுகள் கடைப்பிடித்த அதே புதிய பாணியைத்தான் அமெரிக்காவும் இப்போது கடைப்பிடித்தது என்றே குறிப்பிட வேண்டும். ஆயினும், இப் புதிய ஏகாதிபத்தியத்தின் அடிப்படை நோக்கமும் பழைய ஏகாதிபத்தியத்தின் நோக்கத்தைப் போன்றதாகவே இருந்தது. அதாவது முதலீடு செய்யும் பேரரசு தனக்குப் பல பொருளாதார நலன்களைப் பெற்றுக் கொள்வதே இந்நோக்கமாகும். இப் புது வகை ஏகாதிபத்தியத்தினர் தங்களுக்கு மேலும் நிலங்களைப் பெற்றுக்கொள்வதையோ, புதிய குடியேற்றங்களை நிறுவிக்கொள்வதையோ நாடவில்லை. ஆனல், இவ்வர்க்கத்தினர் தங்கள் 'சரக்குகளையும் பணத்தையும்' பிற நாடுகளுக்கு அனுப்பி, அவை வாயிலாகத் தங்களுக்குச் சாதகமான சந்தைகளையும், தங்கள் செல்வாக்கு நிறைந்த

மண்டலங்களையும் ஏற்படுத்திக்கொள்ள விழைந்தார்கள் என்றே குறிப்பிட வேண்டும்.

இவ்வாறு தன். எல்லைகளுக்கப்பால் அமெரிக்கா தன்னுடைய வல்லமையைப் பரவச் செய்யக் கையாண்ட முறைகள் பழைய ஏகாதிபத்திய முறைகளிலிருந்து வேறுபட்டவையாயினும், அவற்றின் இறுதி விளைவு ஒன்றாகவே இருந்தது. தன்னுடைய பொருளாதார ஏகாதிபத்தியம் போதிய பயனளிக்கக் கூடியதாயில்லை என்றபோதே நேரடியான ஆக்கிரமிப்பையும், பலவந்தமான சலுகை ஒப்பந்தங்களையும் அமெரிக்கா நிறைவேற்றிக் கொண்டது. வலுவற்றதும் வறுமையுற்றதுமான அயல்நாட்டு அரசாங்கங்களுக்குச் சில சமயங்களில் அமெரிக்கா கடன்களை அளித்தமையால், அந்த அரசாங்கங்கள் தங்கள் கடன்களைத் திருப்பிக்கொடுக்க இயலாதபோது; அமெரிக்கா அந்நாடுகளின் நிர்வாகத்தில் தலையிட்டும் தன் கடன் பாக்கியை வசூல் செய்ய முனைந்தது, அக்கடனாளி நாடுகளின் வரி வசூல் நிர்வாகத்தைத் தன் அதிகாரத்திற்குட்படுத்தி அதில் கட்டுப்பாடுகள் செய்தும், அந்நிர்வாகத்தை ஒழுங்குபடுத்தத் தன் ஆலோசகர்களை நியமித்தும், அமெரிக்கா தனக்குச் சேர வேண்டிய தொகைகளைத் திரும்பப் பெற்றுக்கொள்ள முயன்றது. இதன் விளைவே அந்நாடுகளின் பேரில் அமெரிக்க ஆதிபத்தியத்தின் தோற்றமாகும். இவ்வகையிலேயே அமெரிக்க ஐக்கிய நாடு ஹெய்தி தீவின் பேரிலும், சாந்தா டொமிங்கோ என்ற நாட்டின் பேரிலும் தன் ஆதிபத்தியத்தை நிறுவிக் கொண்டது. முதலில் ஒரு நாட்டிற்குள் பொருளாதார ஊடுருவலும், பின்னர் அதைத் தொடர்ந்து அந்நாட்டு ஆதி மக்களுடன் சச்சரவும், இதனால் குடியேற்றத்தினர் தங்களைக் காப்பாற்றுமாறு தாய்நாட்டை அழைக்கும் கோரிக்கையுந்தாம் பொருளாதார ஏகாதிபத்தியத்தின் வழக்கமான மற்றொரு முறையாகும். இவ்வகையாகத்தான் ஹவாய் பிரதேசம் அமெரிக்காவால் கைப்பற்றப்பட்டது. சிற்சில சமயங்களில் சமயப் பரப்பாளரும், வாணிகருமே இவ்வகையில் முன்னோடிகளாக இருந்திருக்கின்றனர். இவர்களைத் தொடர்ந்தே பின்னர், அரசியல்வாதிகளின் ஆதரவு கொண்டு தொழில் முதலாளிகளும், இறுதியாகப் படை வீரர்களும், கடல் வீரர்களும் அங்குச்

சென்றிருக்கின்றனர். ஆனால், பழைய ஏகாதிபத்திய முறையின் கடைசிக் கட்டமான பாதுகாப்பாண்மையும் (*Protectorate*) ஆக்கிரமிப்பும் இன்றைய சூழ்நிலையில் தேவையில்லாது போகலாம். ஏனெனில், நேரடி நிர்வாகத் தொல்லையைத் தவிர்த்துக் கொள்ளுதற்கு இன்று பொருளாதார ஏகாதிபத்திய முறை துணைபுரியக் கூடியதாயிருக்கிறது. அமெரிக்காவின் இவ்வகை ஏகாதிபத்திய சாதனைக்குக் கியூபா ஓர் எடுத்துக் காட்டாகும்.

அமெரிக்க ஏகாதிபத்திய விரிவின் புதியதொரு கட்டத்தைக் குறிப்பதுதான் 1878-ஆம் ஆண்டு ஸ்பானிஷ்-அமெரிக்கப் போராகும். இவ்வாண்டிற்குள் கியூபாவில் அமெரிக்காவின் முதலீடுகள் மிக முக்கியமான அளவுக்குப் பெருகி விட்டன. இந் நிலையில் அமெரிக்க முதலாளிகள் கியூபாவில் தங்களுக்குப் பாதுகாப்பளிக்குமாறு கோரினர். அமெரிக்கர்களுக்குக் கியூபா இத்தகைய பொருளாதார முக்கியத்துவத்தைக் கொண் டிருந்ததுடன் கூட, அது அமெரிக்கக் கண்டத்தின் ஒரு பகுதியாகவே அமெரிக்கர்களால் கருதப்பட்டது. மேலும், கியூபா மெக்சிகோ வளைகுடாவுக்கும் மத்திய அமெரிக்காவுக்கும் ஒரு வாயில் போல் அமைந்திருந்தது. இக்காரணங்களை மனத்தில் கொண்ட அமெரிக்கர்கள் கியூபாவைத் தங்கள் ஆதிக்கத்திற்குள் கொண்டு வருவதற்குத் தக்கதொரு வாய்ப்பை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர் என்றே கூற வேண்டும். இதற்குச் சான்றாக 1858-ஆம் ஆண்டில் ஸ்டீபன் டக்லஸ் என்பார் கூறிய கூற்றை எடுத்துக் காட்டலாம். இதுபற்றி அவர் கூறியதாவது "கியூபாவை அடையவேண்டுவது நம்முடைய ஊழ்வசமாகும். இப்பிரச்சினையைக் குறித்து வாதம் செய்வது மடமையாகும். கியூபா இயற்கையிலேயே அமெரிக்கக் கண்டத்தைச் சேர்ந்ததே." அடுத்து, கியூபா ஸ்பானிஷ் அரசை எதிர்த்துச் செய்த புரட்சிக்கும் அமெரிக்க மக்கள் ஆதரவு அளித்தனர் என்றால், இது இயற்கையே எனக் கருதலாம். தங்களுடைய கடந்த காலப் புரட்சியின் நினைவுகொண்ட ஓர் அண்டை நாட்டு மக்கள் இவ்வாறு நடந்து கொள்வது எதிர்பார்க்கக் கூடியதே. ஆயினும், இதனால் ஏற்பட்ட விளைவை நோக்கின் வியப்பூட்டுவதாயிருக்கும். ஸ்பானிஷ் அரசுக்குப்

பதிலாகக் கியூபாவில் அமெரிக்க ஏகாதிபத்திய அரசு நிறுவப்பட்டதுதான் அவ்வியப்பாகும். இவ்வாறே பழைய ஸ்பானிஷ் காலனிகளான பிலிப்பைன்ஸ், போர்டோரிகோ, கௌடிமேலா போன்ற நாடுகளின் பேரிலும் அமெரிக்க ஏகாதிபத்தியம் நிறுவப்பட்டுவிட்டது. இத்தகைய ஆக்கிரமிப்புக்கள் யாவும் உண்மையில் அமெரிக்கா முன்னர் எதிர்த்துப் புரட்சி செய்த அதே ஏகாதிபத்தியப் பாதையில் இப்போது அமெரிக்காவே இறங்குவதைத்தான் குறிப்பதாகும். அமெரிக்க விவசாய வகுப்பினரும் தொழிலாளர் வகுப்பினரும் நாட்டிலுள்ள ஏகாதிபத்திய எதிர்ப்பாளர்களுக்கு ஆதரவளித்தனர். இவர்கள் யாவரும் பொருளாதார நலங்கருதிப் பிற நாடுகளை அமெரிக்கா ஆக்கிரமித்துக்கொள்வதை எதிர்த்தனர். ஆயினும், ஜனாதிபதி மெக்கின்லே (*McKinley*) என்பார், நாட்டின் தொழில் வாணிகத்துறையினர் ஆதரவை வைத்துக்கொண்டு 1899-ஆம் ஆண்டில் ஆக்கிரமிப்புக் கொள்கையை உறுதிப்படுத்தினார். இந்த நடவடிக்கையின் உண்மை நோக்கங்கள் யாவருக்கும் தெளிவாகிய போதிலும் அமெரிக்க ஜனாதிபதி, ஆக்கிரமிக்கப்பட்ட நாடுகளுடன் அமெரிக்கா செய்துகொண்ட ஒப்பந்தம் பொருளாதாரப் பேராசையினாலோ அரசியல் அவாவினாலோ எழுந்ததல்லவென்றும், அது அமெரிக்காவின் பொதுநல நோக்கால் தூண்டப்பட்ட ஒரு நற்செய்கையாகும் என்றும் விளக்க முயன்றார். ஆனால், அமெரிக்கச் செய்கையின் உண்மை நோக்கத்தை மெய்யாக அறிந்து கூறியவரான செனட் உறுப்பினர் பெவரிட்ஜின் கூற்றில்தான் அதிக நாணயமிருக்கிறது. அவர் கூறுவது : "பிலிப்பைன்ஸ் நாடு என்றும் நமதாகும். பிலிப்பைன்ஸ் நாட்டை அடுத்துச் சீன நாட்டில் எல்லையற்ற சந்தைகள் கிடக்கின்றன. நாம் இவை இரண்டையும் விட்டுப் பின் வாங்கப் போவதில்லை ; மேலும், இத்தீவு நாடுகளின் பேரில் நமக்குரிய கடமையை நாம் கைவிட முடியாது ; நம் இனத்தின் புனிதமான கடமையில் நமக்குள்ள பங்கை நாம் கைவிட முடியாது. ஏனெனில், உலகத்தின் நாகரிக சமூகத்திற்கு, கடவுளுக்குக் கீழ் நாமே பொறுப்பாளியாகும்".[1] இதற்கு நேர்மாறாக, ஏகாதிபத்திய - எதிர்ப்புக் கூட்டத்தின் தலைவரும் அமெரிக்க செனட்

1. Faulkner : American Economic History p. 559

சபை அங்கத்தினருமாகிய ஹோரர் என்பார் ஆபிரகாம் லிங்கனின் கருத்துக்களை வற்புறுத்தி, கூறிய கூற்றானது முற்போக்கு உளம் படைத்த அமெரிக்கர்களின் உன்னத உணர்ச்சிகளைப் பிரதிபலிப்பதாயிருந்தது. அன்னாரின் கூற்றாவது: "எந்த ஒரு மனிதனும் மற்றொரு மனிதனை உடைமையாக்கிக் கொள்ளும் அளவிற்குத் தகுதியுடையவனாகக் கடவுளால் ஒருபோதும் கருதப்பட்டதில்லை; அதேபோல் எந்த ஒரு நாடும் மற்றெந்த ஒரு நாட்டையும் உடைமையாக்கிக் கொள்ளும் தகுதியுடையதாக ஒருபோதும் படைக்கப்பட்டதில்லை. நம் வரலாற்றின் முதல் நூற்றாண்டுக்காலத்தின் பாடம், நம்முடைய சுதந்தரப் பிரகடனமும், நம் நாட்டின் அரசியல் அமைப்புச் சட்டமும் தோல்வியுற்றன என்பதேயாகுமெனில், அதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. மேலும், ஸ்பெயின் நாடு 16-ஆம் நூற்றாண்டில் தொடங்கிய அதே முறையில்தான் அமெரிக்க நாடு 20-ஆம் நூற்றாண்டிலும் தொடங்க வேண்டும் என்றால் அதை நான் ஏற்றுக்கொள்ள வியலாது"[1]

பனாமாக் கால்வாய் பற்றிய அமெரிக்க அரசியல் தந்திரமும் அமெரிக்காவின் பொருளாதார ஊடுருவல் விருப்பமுந்தான் கரிபியன் பிரதேசம் வரை தன் ஆதிக்கத்தை விரித்துக்கொள்ள அமெரிக்காவைத் தூண்டின என்று கூற வேண்டும். இறுதியில் கியூபாவுடன் சலுகை ஒப்பந்தம் செய்து கொண்டு, அதை அமெரிக்கா தன் பாதுகாப்பாண்மைக்கு (*Protectorate*) உட்பட்ட ஒரு நாடாக்கிக்கொண்டது. இதே கொள்கைதான் போர்டோரிகோவை அமெரிக்கா ஆக்கிரமித்துக் கொண்டதும், அங்குக் கடைப்பிடிக்கப்பட்டது. அமெரிக்காவின் இப்போக்கு, பனாமாக் கால்வாய்ப் பிரதேசத்தைத் தன் ஆதிக்கத்திற்குள் கொண்டு வருவதற்கான சில தொடர்ந்த செயல்களில் அமெரிக்காவை வலுக்கட்டாயமாக இறங்கச்செய்தது. பனாமாக் கால்வாயைத் தான் அமைத்துக் கொள்வதற்குச் சாதகமாக அமெரிக்கா பல ஏற்பாடுகளைச் செய்தது. இவற்றுள் பிரிட்டனுடன் அமெரிக்கா செய்துகொண்ட புதியதோர் ஒப்பந்தமும், பனாமா நாட்டில் ஒரு புரட்சிக்காக அமெரிக்கா அளித்த உதவியும், புதிய பனாமாக் கம்பெனியின்

1. C. Bowles: New Dimensions of Peace, p. 246

(*New Panama Company*) உரிமைகளை அமெரிக்கா வாங்கியமையும், பனமாவின் புதிய குடியரசுக்கு அமெரிக்க ஒப்புதலும் முக்கியமாகும். பனமாக் கால்வாய் அமைக்கப்பட்ட பின்னர் மத்திய அமெரிக்காவும், கரிபியன் பிரதேசமும் அமெரிக்காவுக்கு முன்னிலும் அதிக முக்கியத்துவமுடையனவாகி விட்டன. தவிரவும், இந்நாடுகளில் காணப்பட்ட உறுதியற்ற அரசுகளும், மற்றும் புரட்சி நிகழ்ச்சிகளும் இந்நாடுகளுக்குக் கடன் ஈந்த, பிற நாடுகள் இங்குச் செய்த தலையீடுகளும் இப்பிரதேசத்தில் அமெரிக்காவின் வளரும் முதலீட்டுக்கு ஒரு நிலையான இடராகத் தோன்றின. இதன் விளைவாகவே "ரூஸ்வெல்ட் துணை முடிவு" (*Roosevelt Corollary*) என்று வரலாற்றில் அழைக்கப்படுவதான புதியதொரு அமெரிக்கக் கொள்கை இத்துறையில் உருவாக்கப்பட்டது. இக்கொள்கையைத்தான் 1904-ஆம் ஆண்டில், ஜனதிபதி தியோடர் ரூஸ்வெல்ட், அமெரிக்கநாட்டுக் காங்கிரசுக்கு அனுப்பிய செய்தியில் பின்வருமாறு தெளிவுபடுத்தினர். "ஒரு நாடு தன் சமூக, அரசியல் துறைகளில் நியாயமான அளவு திறமையாகவும், கண்ணியமாகவும் செயல்புரிவதற்குத் தெரியுமென்பதைத் தன் நடத்தையால் காட்டி விடுமாயின், மேலும் நாட்டில் ஒழுங்கை நிலைநாட்டியும், தன் கடமைகளைத் தவருது செலுத்தியும் வருமாயின், அந்நாடு அமெரிக்க ஐக்கிய நாட்டின் எவ்விதத் தலையீட்டிற்கும் ஆளாகாது. ஆனல், ஒரு நாடு தொடர்ந்து தீங்கில் ஈடுபட்டாலும், இன்றைய நாகரிக சமூகத்தின் கட்டுப்பாடுகள் யாவும் பொதுவாகத் தளர்ந்து விடுமளவுக்கு வலுவற்றுப்போனலும், இறுதியில் எங்கும் போலவே அமெரிக்காவிலும், அந்நிலையானது நாகரிகமடைந்த மற்றொரு நாட்டின் தலையீட்டை அவசியமாக்கி விடுவதாயிருக்கும். ஆனல், மேற்குலகில் இந்நிலை ஏற்படின், அமெரிக்க ஐக்கிய நாடு இத்துறையில் கைக்கொண்டுள்ள மன்ரோ கொள்கையை (*Munro Doctrine*) அமுல் செய்ய நேரிடும். மேற்கூறப்பட்டது போன்ற தொடர்ந்த படுமோசமான தீய நடத்தையின் போதும், வலுவிழந்த நிலையின்போதும் அமெரிக்க ஐக்கிய நாடுகள், தமக்கு எவ்வளவுதான் விருப்பமில்லாவிடினுங் கூட மன்ரோ கொள்கையைப் பிரயோகிக்கவும்,

உலக அமைதிக் காவல்கருதி ஓர் அதிகாரத்தினை அந்நாட்டின்மீது செயற்படுத்தவும் கட்டாயப்படுத்தப்படலாம்''.

மேலே கூறப்பட்ட வகையில் அமெரிக்காவின் ஆதிபத்தியத்தை தவிரிவடையச் செய்வதில் நடத்தப்பட்ட முதல் பரிசோதனையாகக் கருதப்பட வேண்டுவது சாந்தாடொமிங்கோ, ஹெய்தி ஆகிய இவ்விரு பிரதேசங்களின்பேரிலும் அமெரிக்கா முதன் முதல் பயன்படுத்திய 'டாலர் அரசியல் தந்திரம்' (*Dollar Diplomacy*) ஆகும். அடுத்து, நிகராகுவா நாட்டில் அமெரிக்கா செய்த தலையீடும் இவ்வகையைச் சார்ந்ததேயாகும். அமெரிக்க ஆதிபத்தியக் கொள்கையின் சிறந்த எதிர்ப்பாளரான ஜனாதிபதி வில்சன் கூட வெர்ஜின் தீவுகளை அமெரிக்கா வாங்கிக் கொள்வதற்குக் காரணமாக இருந்தார் என்றால் வியப்புண்டாகும். இவ்வாறு 1898-1918-க்குள் அடங்கியுள்ள இருபதே ஆண்டுகளில் அமெரிக்க ஐக்கிய நாடு, கரிபியன் கடல் பிரதேசத்தை அமெரிக்காவின் ஓர் ஏரி போலாக்கிக்கொண்டது என்று கூறுதல் பொருந்தும். எப்படியெனில், போர்ட்டோரிக்கோ ஆக்கிரமித்துக் கொள்ளப்பட்டது; வெர்ஜின் தீவுகள் வாங்கிக்கொள்ளப் பட்டன; கியூபா, பனமா, டொமினிக்கன் குடியரசு, நிகராகுவா, ஹெய்தி நாடுகள் அமெரிக்கக் காப்பாண்மைக்கடங்கிய பிரதேசங்களாக ஆக்கப்பட்டன. மேலும், கரிபியன் கடலைச் சுற்றியும் அமெரிக்கக் கடற்படைத் தளங்கள் பல பரந்து நிறுவிக் கொள்ளப்பட்டிருந்தன. ஆனால், பின்னர் அமெரிக்கப் பொருளாதார ஆதிபத்தியத்தை, மேற்கொண்டு, மெக்சிகோவிலும் ,கியூபாவிலும், கனடாவிலும், தென் அமெரிக்காவிலும் விரிவடையச் செய்தற்கு அமெரிக்கக் கூட்டரசு அரசாங்கம் அதிக முயற்சியிலீடுபட முன்வரவில்லை. ஆயினும், அமெரிக்க அரசாங்கம் தூர கிழக்குப் பிரதேசத்தில், அதிலும் குறிப்பாகச் சீனாவில், உண்மையான அக்கறை காட்டியது என்றே சொல்ல வேண்டும். ஆனால், இத் தூர கிழக்கில் அமெரிக்கா எதிர்பார்த்த விளைவுகள் எவையும் ஏற்படாமை அந் நாட்டிற்கு ஏமாற்றமளித்தது.

முதலாவது உலகப் போருக்குப் பின்னர்தான் அமெரிக்கா சில பொருளாதாரக் காரணங்களுக்காகவும், பிற காரணங்களுக்காகவும் தன்னுடைய ஆதிபத்திய விரிவுக் கொள்கையை மாற்றிக்

கொண்டது. ஏனெனில், கடந்த கால அனுபவம் 'ஆதிபத்திய இலட்சியம்' (*Imperial Ideal*) எவ்வாறு அமெரிக்க நாட்டின் ஜனநாயகத் தத்துவத்திற்கு முரணனது என்பதை நன்கு உணர்த்திவிட்டது. மேலும், அமெரிக்கத் தொழில் துறையினர் யாவரும் ஓர் உண்மையை உணர்ந்துகொண்டனர். அதாவது, அமெரிக்கப் பேரரசின் மனமில்லாத உறுப்பினர்களைக் காட்டிலும், சுயேச்சையான நட்புறவால் பிணைக்கப்படும் நாடுகளே அமெரிக்காவுக்கு — பொருளாதாரத் துறையிலுங் கூட—அதிக நலம் பயப்பனவாகும் என்பதை இவர்கள் நன்கு உணர்வாராயினர். இதன் பயனகவே, அது ஆதிபத்தியத்துடன் அதுவரை செய்துவந்த சல்லாபத்தை அமெரிக்கா விரைந்து நிறுத்திக்கொண்டது. சான்டாடொமிங்கோவில் தன் படைபலத் தலையீட்டிற்கு அமெரிக்கா 1924-ஆம் ஆண்டில் முற்றுப்புள்ளி வைத்தது; நிகராகுவாவிலிருந்து 1933-ஆம் ஆண்டிலும், ஹெய்தியிலிருந்து 1934-ஆம் ஆண்டிலும் தன் கப்பற் படை வீரர்களை அமெரிக்கா திரும்ப அழைத்துக் கொண்டது; பிலிப்பைன்சுக்கு சுதந்தரம் வழங்கும் சட்டத்தை 1934-ஆம் ஆண்டில் நிறைவேற்றியது; கியூபாவுடனும் பனமாவுடனும் சமத்துவ அடிப்படையில் ஒப்பந்தங்கள் செய்து கொள்ளப் பட்டன; தென் அமெரிக்காவைப் பொறுத்தமட்டில் "பண்புடை நண்பன் கொள்கை" (*Good neighbour Policy*) கடைப்பிடிக்கப் பட்டது. மேலும், 1933-ஆம் ஆண்டில் மான்டிவிடியோவிலும், பின்னர் 1938-ஆம் ஆண்டில் லீமாவிலும் நடந்த மாநாடுகளில், அமெரிக்க ஐக்கிய நாடு, ஏகாதிபத்தியத்திற்கும் தலையீட்டிற்கும் எதிரான தன்னுடைய திண்ணமான கொள்கையைத் திட்டவட்டமாக வெளிப்படுத்தியது.

மற்ற ஏகாதிபத்தியங்களைப் போலவே, அமெரிக்க ஏகாதிபத்தியமும் தன்னுடைய ஆதிபத்தியத்திற்குட்பட்ட பிரதேசங்களின் பொருளாதார வளர்ச்சிக்கெல்லாம் தானே பொறுப்பேற்றுக்கொண்டிருந்தது. பண்டைக்கால ரோமானியரைப் போலவும், நவீன கால ஐரோப்பியர்களைப் போலவுமே தன் செல்வாக்கிற்குட்பட்ட நாடுகளில் அமைதியை நிலைநாட்டியும், பொறுப்புள்ள அரசாங்கத்தை நிறுவியும், போக்குவரத்துத் தொடர்பு வசதிகளைக் கூடுதலாக்கியும், பள்ளிகளையும், மருத்துவ

மனைகளையும் நிறுவியும், நவீன நாகரிகத்தின் எல்லா நலன் களையும் அந் நாடுகளுக்கு அமெரிக்க முதலீட்டின் மூலமாகவும் தொழில் நுண்முறை வாயிலாகவும் அமெரிக்கா அளித்தது என்பதைக் கூறுது விடுதல் தவறுகும். ஆயினும், ஏகாதிபத்திய முறை அளிக்கக்கூடிய பொருளாதார, சமூக, கலாச்சார நலன்கள் எவ்வளவாயிருப்பினும், ஏகாதிபத்தியமும் ஜனநாயகமும் ஒருமித்துப் போவதியலாது என்பதனை ஜனநாயகத்தில் நம்பிக்கையுள்ள அமெரிக்கர்கள் யாவருமே உணர்ந்திருந்தனர் என்பது பாராட்டுக்குரியது.

## 'தலையிடாக் கொள்கைக்கும்', தனித்திருக்கை கொள்கைக்கும் எதிரான எழுச்சி

அமெரிக்காவின் பொருளாதார வளர்ச்சி முழுதும் பேரளவுக்கு அந் நாட்டின் தனி மனிதனின் தொழில் துணிவு சுயேச்சையினுலும், அரசாங்கத்தின் 'தலையிடாக் கொள்கையினு லுமே' விளைந்ததெனக் கூற வேண்டும். ஆயினும், காலம் செல்லச் செல்ல நாட்டின் வாணிகம், சுங்கம், நாணயத்துறை, பாங்குத்துறை, தொழிலாளர் துறை முதலிய யாவற்றிலும் அரசாங்கத்தின் கட்டுப்பாடுகள் சிறிது சிறிதாகக் கூடுதலாகி வந்தன. அதே சமயம், வரி விதிப்புக் கொள்கை மூலமும், தேசியக் கடன் கொள்கை மூலமும் நாட்டின் பொருளாதார வாழ்வின்பேரில் மறைமுகமான தலையீடு ஒன்றையும் அரசாங்கம் மேற்கொண்டது. அடுத்து, தொழில் துறையில் போட்டி வளர்ந்து முதலாளித்துவ முறை முதிரவே, தனி நபர்களும், கார்ப்பொரேசன்களும் 'சுயேச்சைத் தொழில் துணிவை' அகற்றி விட்டு, தங்கள் நலத்தை வளர்த்துக்கொள்ளும் நோக்குடன் தங்களுக்குள் தொழில் இணைப்புக்களையும், தொழில் சர்வாதீனங் களையும் ஏற்படுத்திக் கொள்வாராயினர். இவ் வகையில் தொழிலதிபர்கள் அமெரிக்காவில் சுயேச்சைத் தொழில் துணி-வுக்குக் குழி தோண்டினர். ஆனுல், பின்னர் அரசாங்கம் பொது மக்களின் கருத்துக்கிணங்க இச் சர்வாதீனங்களைக் கட்டுப்

படுத்தவும், போட்டி முறையை மீண்டும் நிலைநிறுத்தவும் தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டியதாயிற்று.

அமெரிக்க அரசின் தலையிடாக் கொள்கை, அந் நாட்டின் தொழில் துறையில் பெருகி வந்ததான பொருளாதார ஆதிபத்தியப் போக்கின் காரணமாகச் சிறிது சிறிதாகப் பொடிந்து போய்க் கொண்டிருந்தது. அடுத்து முதலாவது உலகப் போரின்போது ஏற்பட்ட நெருக்கடியினால், இக் கொள்கை முற்றிலும் முறிவுற்றது என்றே கூறவேண்டும். அப் போரில் இறங்குவதற்கு வெகு முன்னரே அமெரிக்க அரசாங்கம் தனியார் தொழில் துறையில் செய்திருந்த தலையீடுகளால் அந் நாட்டு மக்களின் பொருளாதார வாழ்வு முற்றிலும் மாறுதலடைந்துவிட்டது. அமெரிக்கா போரில் இறங்கிய பின்னரோ நாட்டின் பண்ட உற்பத்தி, வினியோகம், வர்த்தகம் ஆகியவற்றின் பேரிலும் மையக் கட்டுப்பாடும், மையக் கட்டளையும், மைய் மேற்பார்வையும் அத்தியாவசியமாகிவிட்டன. இதுவரை கண்டிராத அரசாங்கக் கட்டுப்பாடுகள் யாவும் கூட்டரசுச் சபைகள் மூலமும், சிறப்புக் குழுக்கள் அல்லது கார்ப்பொரேசன்கள் மூலமும் நாட்டில் நிறுவப்பட்டன. இக் குழுக்களுக்கும், சபைகளுக்கும் விரிவான அதிகாரங்கள் வழங்கப்பட்டிருந்தன. நாட்டு வளம் முழுதும் திரட்டிச் செயல் புரியும் போர் நிர்வாகத்தின் கொள்கையானது பொருளாதாரத் துறையிலுங்கூட நிறைவேற்றப்பட்டது. இதிலிருந்து அமெரிக்க அரசாங்கத்தின் கொள்கைப்போக்கில் ஏற்பட்டிருந்த புதிய திருப்பம் தெளிவாகக்கூடும்.

முதலாவது உலகப் போரின்போது அமெரிக்க ஐக்கிய நாடு அதன் அப்போதைய நிலையில் மிகையான இலாபங்களை அடைந்துகொள்ள முடிந்தது. இப்போரின் விளைவாக அமெரிக்காவில் புதியதொரு தொழிற் புரட்சி ஏற்பட்டதுடன், அமெரிக்கா சந்தையைப் பிடித்துக்கொள்ளவும் இதுவே வாய்ப்பளித்தது. இதுவே உலக அரங்கில் அமெரிக்காவின் நிலையை வலுப்படுத்தி, அதற்கிருந்த சந்தை வசதியைப் பெருகச் செய்து, அமெரிக்க ஏற்றுமதிகளுக்கு எதிர்பாராத வாய்ப்புக்களை அளித்து, இறுதியில் அந்நாட்டின் தொழில்

வளர்ச்சியையும் விரைவுபடுத்தியது. முதலாவது உலகப் போரில் இறங்குகையில், அமெரிக்கா ஐரோப்பாவின் கடனாளி யாகவே காட்சியளித்தது. மேலும், முன்னரே நிறுவப் பட்டிருந்த அரசாங்கங்களுக்கெல்லாம் அமெரிக்கா ஓர் அமைதி கலைக்கும் தீவிரவாதியாகவே அப்போரின் ஆரம்பத்தில் பட்டது. ஆனால், அப்போரின் இறுதியில் அமெரிக்காவின் தோற்றம் முற்றிலும் மாறிவிட்டது. நிலவும் அரசைக் குலைக்கும் ஒரு தீவிரவாதியாகப் போருக்கு முன்னர் விளங்கிய அமெரிக்கா, அப்போரின் இறுதியில் நசுக்கப்பட்டோரின் நம்பிக்கைக் காவலனாகவும், சுயேச்சையை நாடிய எல்லாவிடங் களிலுமுள்ள எல்லா மனிதர்களுக்கும் உயிர்ப்பூட்டும் ஓர் ஒளியாகவும், செல்வத்தில் சிறந்து, ஆனால் பழமைப்பற்று நிறைந்து, காட்சியளித்தது. தவிரவும், உலகத்து நிதிக்காவல னாகவும், நிலை உறுதி காப்போனாகவும், புரட்சியையும் மாற்றத் தையும் வெறுண்டெதிர்க்கும் பகைவனாகவும் போருக்குப் பின்னர் அமெரிக்கா மாறிவிட்டது விந்தையாய்த் தோன்றிற்று.

### போருக்குப் பின் பொருளாதார நிலைமை

முதலாவது உலகப் போருக்குப் பின்னர் அமெரிக்காவில் ஒரு தொழிற் பொலிவு காணப்பட்டது. 1920-30க்குட்பட்ட பத்தாண்டுக் காலத்தை ஒரு பொருளாதாரச் செழுமையுகத்தின் ஆரம்பமெனவே பலர் நம்பினர். ஆனால், அவப்பேருக இப்பத்தாண்டின் முடிவில் அமெரிக்கப் பொருளாதார வரலாற்றில் இதுவரை காணுததொரு மிகப் பெரிய பொருளாதார நெருக்கடி வந்துதித்தது. அதற்கு முன் நிலவிய குறுங்காலச் செழுமையானது போரின் பின்விளைவேயாகும். மேலும், அவ்வமயம் அமெரிக்கப் பொருளாதார அமைப்பின் அடித்தளமும் வலுப்பெற்றதாயிருக்கவில்லை என்பது தெளிவு. போரினல் பிறந்த பணவீக்கம் நாட்டில் விலைகளை உயரச் செய் திருந்தது; நிலத்தின் மதிப்பு நகரங்களில் மிக உயர்ந்தது. பங்குப் பத்திர மார்க்கெட்டில் பங்குகளின் மதிப்பு முன்பு

கண்டிராத அளவை எட்டிப் பிடித்தது. தவிரவும், தொழில்களில் சில மிதமிஞ்சி விரிவடைந்தன ; அதே சமயத்தில் விவசாயம் போன்ற சில தொழில்கள் நிலை குலைந்து மந்தத்திற்குள்ளாயின. உயர் சுங்க வரிகளினுலும், தொழில் துறை திறத்தாலும், போர்க் காலத்தில் ஈந்த கடன்களின் வரவாலும், அமெரிக்காவிற்கு ஒரு சாதகமான அயல்நாட்டுச் செலுத்து நிலை ஏற்பட்டிருந்தது. ஆனுல், பிற நாடுகளுக்குத் திரும்பவும் அமெரிக்கா தீவிர கடனளிப்பு செய்தமையால் மேற்கூறப்பட்ட சாதகமான செலுத்து நிலையும் மாறி, சம செலுத்து நிலையாகவே ஆகியது. விடுதலைக் கடன் என்ற பெயரால் (*Liberty Loan*) அமெரிக்க அரசாங்கம் தன் பொறுப்பில் பிற நாடுகளுக்குக் கடனை வழங்கி யிருந்த 9.58 பில்லியன் டாலர் தொகையோடு கூட, வெளிநாடு களில் அமெரிக்கா செய்திருந்த முதலீடுகளும் மிகையாகப் பெருகியிருந்தன. 1914-ஆம் ஆண்டில் 0.35 பில்லியன் டாலர் களாக இருந்த இத்தொகை 1929-ஆம் ஆண்டில் 77 பில்லியன் டாலர்களாக அதிகரித்துவிட்டது என்பதைக் குறிப்பிட வேண்டும்.

ஆயினும், போருக்குப் பின்னர்ச் செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தங்களில் போர்க் கடன் செலுத்துகைகளும், போர் இழப்பீடு செலுத்துகைகளும் யாவற்றிலும் வருங்காலத் தொந் தரவுகள் பல மறைந்து நின்றன. இவற்றையே கீன்சு போன்ற பொருளாதார வல்லுநர்கள் முற்கூட்டியே எச்சரித்திருந்தனர். ஜெர்மனியை முறியடிப்பதிலும், ஜனநாயகத்தை உலகில் பாது காப்பதிலும் தான் புரிந்த சேவைகளுக்காக அமெரிக்கா போரினுல் பாழடைந்த 20 ஐரோப்பிய நாடுகளிடமிருந்து 11.56 பில்லியன் டாலர்களைப் பெற வேண்டுமென்று இருந்தது. இக்கடன்களை 1987-ஆம் ஆண்டிற்குள் வட்டியும் முதலுமாகக் கொடுத்துத் தீர்த்துவிட வேண்டுமெனவும் தீர்மானிக்கப்பட்டி ருந்தது. இச் செலுத்துகைகளின் மொத்தம் வட்டியும் முதலுமாக, 22.18 பில்லியன் டாலர்கள் எனக் கணக்கிடப் பட்டது. மேலும், போரின்போது அமெரிக்காவிடமிருந்து

போர்த் தளவாடக் கருவிகளைப் பெற்றிருந்த ஐரோப்பிய நாடுகள் பல அதற்கு ஈடாகப் பொன்னும், வெள்ளியும் அமெரிக்காவிற்குச் செலுத்த வேண்டுமெனவும் ஏற்பாடாகியிருந்தது. 1931-ஆம் ஆண்டில் தோன்றிய நிதி நெருக்கடி வரை பல ஐரோப்பிய நாடுகளும் இவ்வகையில் அமெரிக்காவிற்கு 2.62 பில்லியன் டாலர்கள் செலுத்தியிருந்தன. இவ்வரவுகளின் பயனாகவே அமெரிக்க ஐக்கிய நாடு பெரியதொரு பொற்குவியலைப் பெற்றுக் கொண்டது. ஆகவே அவ்வமயம் பொன் நாணயத் திட்டம் அமுலிலிருந்த ஐரோப்பிய நாடுகளில் பெரும்பாலானவை தங்கள் நாணயச் செலாவணிகளின் அளவை மட்டுப்படுத்திக் கொள்ளவேண்டிய கட்டாயமேற்பட்டது. மேலும், அமெரிக்காவுக்கு இந்நாடுகளின் போர்க் கடன் செலுத்துகையும், இழப்பீடு செலுத்துகையும், மற்றும் அமெரிக்காவின் உயர் சுங்க வரிகளும் இந்நாடுகளின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சங்கடங்களை ஏற்படுத்தின. தவிரவும், அமெரிக்க நாட்டில் நிலவிய பாதுகாப்பு வரி முறையின் ஆதரவில் வலுப்பெற்ற தொழில் சர்வாதீனங்களும், தொழில் இணைப்புக்களும் அந்நாட்டில் முறைப்பானதொரு பொருளாதார அமைப்பை ஏற்படுத்தியிருந்தன. இந்தப் பொருளாதாரக் கட்டுமானம் அமெரிக்காவில் ஒரு போலி நம்பிக்கை உணர்வை வளரச் செய்தது. இத்தகைய மெல்லிய அடித்தளத்தின் பேரில் தான் அதுபோது அமெரிக்க மக்களுக்கு உயர்வானதொரு வாழ்க்கைத்தரமும், அமெரிக்க நாட்டிற்கு வளர்ச்சியுறும் அயல் நாட்டு வாணிகமும் அவாவுடன் எழுப்பப்பட்டிருந்தன. இந்தப் போலியான செழுமைத் தோற்றத்தை நிலையானதாகக் காட்டியவை அமெரிக்கர்களின் நன்னம்பிக்கை மனப்பாங்கும், இன்ப ஆர்வமும் தாம்.

இச்சூழ்நிலையில்தான், திடீரெனவும், எதிர்பாராத விதமாகவும் 'வால் தெருமுறிவு' வந்துற்றது. இதுவே 1929-ஆம் ஆண்டு, அக்டோபர் திங்களில் அமெரிக்கப் பங்குத் பத்திரச் சந்தையில் உடனடியாக ஒரு நெருக்கடியை ஆரம்பித்து

வைத்தது. இதன் விளைவாக, அமெரிக்காவில் ஏற்பட்ட பங்குப் பத்திரங்களின் விலை வீழ்ச்சியினால் ஒரே மாதத்தில் ஏற்பட்ட இழப்பு மொத்தம், ஜெர்மனி போர்க் கடனாக 60 ஆண்டுகளில் செலுத்த வேண்டியிருந்த தொகையைப் போல் நான்கு மடங்கெனக் கணக்கிடப்பட்டது. இதிலிருந்து அந்நெருக்கடியின் பயங்கரம் தெற்றென விளங்கும். இதனால் நாட்டில் ஒரு பெரும் பீதி ஏற்பட்டிருந்தது. கடன்களில் பளு வெகுவாகப் பெருகியது. நாட்டின் நிலைமை மோசமாகிக் கொண்டு போயிற்று. விலைகள் நொறுங்கின; பாங்குகள் முறிந்தன; தொழிற்சாலைகள் மூடப்பட்டன. உலக மகா பொருளாதார மந்தத்தின் பவனிக்கு வழி விலகிற்று.

# 14. பொருளாதார மந்தமும், நியூ டீல் புத்தாக்கத் திட்டமும்

## நியூ டீல் திட்டமும் அதற்குப் பின்னரும்

1920-கள் (அதாவது 1920-1930-க்குட்பட்ட காலம்) அமெரிக்காவின் 'பொன்னான இருபதுகள்' (*Golden Twenties*) என்று கருதப்படும் அளவிற்கு அப்பத்து ஆண்டுகள் அமெரிக்காவின் பொருளாதார வரலாற்றில் ஒரு செழுமைக் காலத்தை ஆரம்பித்துவைத்தன. ஆனால், இப்பொலிவுக்காலம் 1929-ஆம் ஆண்டில் ஏற்பட்ட மாபெரும் பொருளாதார நெருக்கடியின் காரணமாகத் திடீரென முடிவுற்றது. அதைத் தொடர்ந்து 1930-களில் உலக மகா பொருளாதார மந்தமும் வந்துற்றது. ஏன்? 1929-ஆம் ஆண்டுடன் முடிவுறும் ஒரு நூற்றாண்டுக் காலத்திற்கு மேலாகவே மந்தங்களும், செழுமைகளும் அமெரிக்கப் பொருளாதார வளர்ச்சியின் தனி இயல்பாகவே இருந்து வந்திருக்கின்றன. இவ்வாறான வாணிகச் சகடங்கள் உலக முழுவதிலுமே முதலாளித்துவ முறையின் ஒரு நிலையான பண்பாக இருந்து வந்திருக்கின்றன என்பது உண்மையே. ஆயினும், 1929-ஆம் ஆண்டு நெருக்கடியை அடுத்து வந்த மந்தமானது இதுவரை எப்போதுமே காணாத ஒன்றாகும். கேடளாவிய இச்சூழ்நிலையில் அமெரிக்காவின் கட்டு திட்டமற்ற முதலாளித்துவ அமைப்பு முறையானது ஜனாதிபதி ரூஸ்வெல்டின் வளர்திறம் வாய்ந்த தலைமையில் முற்றிலும் ஒழிந்துபடவே, 'நியூ டீல்' திட்டத்தின் வாயிலாகப் புதியதொரு முதலாளித்துவ சமூகத்தை ரூஸ்வெல்ட் நிறுவ முடிந்தது.

'திட்டமிட்ட முதலாளித்துவ முறை' (*Planned Capitalism*) ஒன்றை உலகிலேயே மிகுந்த தனியார் சுயேச்சை சமூகமாகிய அமெரிக்காவில் ஆரம்பித்துவைத்த நியூடீல் திட்டத்தின் விவரங்களை நாம் ஆராயுமுன்பு, அமெரிக்காவை 1929-ஆம் ஆண்டுக்குப் பின்னர் ஒரு பொருளாதார முறிவில் ஆழ்த்திய முக்கிய காரணங்களை முதலில் ஆராய்வது நலந்தருவதாயிருக்கும்.

## நியூ டீல் திட்டத்தின் தொடக்கத்தில் அமெரிக்காவின் நிலை

மேற்கூறிய நெருக்கடிக்கும், மந்தத்திற்கும் முக்கியமான காரணங்கள் முதலாவது உலகப் போருக்குப் பின்னர் உலகத்தின் பொருளாதார நிலைமையில் ஏற்பட்டிருந்த ஆழ்ந்த மாற்றங்களும், அமெரிக்க ஐக்கிய நாடு அதுபோது உலகப் பொருளாதார அரங்கில் வகித்துவந்த மிக முக்கிய பங்குமேயாகும். அமெரிக்காவில் போலிச் செழுமை ஒன்று நிலவியிருந்தது என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம். நிலவிலைகள் உயர்ந்திருந்தன. மோட்டார் வண்டி உற்பத்தித் தொழில், கட்டடத் தொழில், மின்சார சாமான்கள் தயாரிப்புத் தொழில் முதலியன அதுபோது அமெரிக்காவில் மிதமிஞ்சிய அளவுக்கு வளர்ந்திருந்தன. மேலும், அமெரிக்காவின் உற்பத்தித்திறவுயர்வாலும், பாதுகாப்புச் சுங்கவரி முறையாலும், போர்க் கடன் வரவுகளினாலும் அவ்வமயம் அமெரிக்காவிற்கு மிகவும் சாதகமானதொரு அயல்நாட்டு வாணிகக் கொடுப்பல் நிலையும், அயல்நாட்டுச் செலுத்து நிலையும் ஏற்பட்டிருந்தன. இதன் விளைவாக அமெரிக்கா பிற நாடுகளுக்குத் தாராளமான கடன் விற்பனை, தொடர்ந்த மூலதனக்கடன் முதலியவற்றை அளிப்பதற்கான கொள்கையொன்றைக் கடைப்பிடிக்க நேரிட்டது. 1929-ஆம் ஆண்டு நெருக்கடிக்கு முன்பு அமெரிக்கப் பங்குப் பத்திரச் சந்தையில் ஊகவாணிகம் (*Speculation*) -வாணிகச் சூதாட்டம்- திகைப்பூட்டும் அளவுக்குப் பெருகியிருந்தது. இதனால் வாணிகச் சூதாட்டத்தின் மூலம் இலாபம் திரட்டும் நம்பிக்கையும் ஆர்வமும் மிகையாகப் பரவியிருந்தன. உறுதியற்றதான இந்த அடித்தளத்தின் பேரில் பிரம்மாண்டமான தொகைகளுக்குக்

கடன்களும் எழுப்பப்பட்டிருந்தன. அதுவுமன்றி, உலக நாடுகளுக்குள் சிக்கல் நிறைந்ததான ஓர் அயல்நாட்டுச் செலுத்து முறையும் எழுந்திருந்தது. அமெரிக்க ஐக்கிய நாடே இத்துறையில் உலகத்தின் நிதி மையமாகவும் ஆகிவிட்டது. வால் தெரு முறிவு (*Wall street collapse*) ஏற்பட்டதன் காரணமாக, அமெரிக்கா முன்பு ஐரோப்பிய நாடுகளுக்கு அளித்துவந்த கடன்களை மட்டுப்படுத்தவேண்டிய அவசியமும் ஏற்பட்டது. ஆனால், இந்நாடுகள் தங்களுடைய பொன் இருப்புக்களை முன்னமேயே இழந்து, அதனால் நாணயச் செலாவணியின் அளவையும் மிகவும் குறைத்துக் கொண்டிருந் தமையால், இந்நாடுகளிலெல்லாம் விலைவாசி-அமைப்பு சீர்குலைந்த துடன், மக்களின் வாங்கும் சக்தியும் அழிந்துபட்டு, வேலையில்லாத் திண்டாட்டமும் பெருகியிருந்தது. இந்நிலையில் இந்நாடுகளுக்குக் கடன் வழங்குதலை அமெரிக்கா மட்டுப்படுத்த நேரிட்டமை மேலும் நிலைமையை மோசமாக்கியது. 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை அமெரிக்காவில் வெற்று நிலங்கள் பரந்து கிடந்தனவாதலான், உழைக்க விரும்புவோர் யாவருக்குமே வேலையும் இல்லமும் கிடைக்குமாறு அதுபோது வாய்ப்புக்கள் நிறைந்திருந்தன. ஆனால், இந்நூற்றாண்டின் ஆரம்பத்தில் அமெரிக்கக் கண்டத்தின் எல்லைகளைக் குடியேற்றத் தினர் எட்டிவிட்டனராதலால், இனி அங்குப் புதிய வேலைவாய்ப் புக்களுக்கு இடமில்லாது போயிற்று. அத்துடன் அமெரிக்கா உற்பத்தி செய்த பண்டங்களை முன்போல் ஐரோப்பியச் சந்தைகள் இப்போது வாங்கிக் கொள்ளவும் சக்தியற்றிருந் தமையால், அமெரிக்கப் பொருளாதாரமுங்கூட உலக மகா மந்தத்தின் விளைவுகளைத் தாங்கிக் கொள்ள முடியாமல் தவித்தது. அமெரிக்காவிடம் அவ்வமயம் நிறைய பொன் இருப்பு இருந்தது. மேலும், மிகவும் திறமிக்கதும், மிகு உற்பத்திக்கேற்றதுமான ஒரு பொருளாதார அமைப்பையும் அதுபோது அமெரிக்கா பெற்றிருந்தது. ஆனால், அப் பொருளாதார அமைப்பின் மூலம் உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களையும், சேவைகளையும் வாங்கிக்கொள்ளும் அளவிற்கு மக்களிடம் போதிய வாங்கும் சக்தி இல்லாதிருந்தது. சுருங்கக் கூறின், மிகைபாடும் வறுமையும் ஒருங்கே காணும் முரண்பாட்டு

நிலை அமெரிக்காவில் நிலவியிருந்தது. ஒரு புறம் கோதுமையும், பருத்தியும், ரப்பரும், மோட்டார் வண்டிகளும், மற்றப் பண்டங்களும் ஏராளமாக உற்பத்தியாயின. ஆனால், மற்றொரு புறத்திலோ இப்பண்டங்களை வாங்கிக் கொள்வதற்கு ஏற்ற சந்தை அமெரிக்காவில் இல்லாதிருந்தது. இதன் விளைவாகத், தொழிற்சாலைகள் மூடப்படவேண்டிவந்தது ; தொழிலாளர்களும் வேலையிழக்க நேரிட்டது. உலகத்தின் மொத்தப் பொன் இருப்பில் மூன்றில் இரண்டு பாகம் அதுபோது அமெரிக்காவில்தான் குவிந்திருந்தது ; அமெரிக்காவும் பிறநாடுகளுக்குத் தாராளமாகக் கடன்களை வழங்கியிருந்தது. அமெரிக்க நாட்டின் பாங்குகளில் டெபாசிட்டுகளும் அதிகரித்துக்கொண்டுதான் வந்தன. இவ்வளவுமிருந்தும் அமெரிக்காவின் பொருளாதாரம் உருக்குலைந்து, சக்தியற்றுவிட்டதென்றால் அதற்கு உலக மகா மந்தத்தின் வலிமையே காரணமாகும். இதனால் விளைந்த விலைவாசிகளின் திடீர் சரிவு பல நாடுகளிலும் மக்களின் கடன்களுக்களை உயரச் செய்தது. அத்துடன் நாடுகளின் அயல் நாட்டுச் செலுத்துகையிலும் இதனால் நிதிநிலைக் குழப்பம் ஏற்பட்டது. இந்நிகழ்ச்சிகள் தாம் 1931-ஆம் ஆண்டில் உலக நெருக்கடியையும், அதைத் தொடர்ந்த நெருக்கடி ஆண்டுகளையும் விளைவித்தன. 1933-ஆம் ஆண்டுக்குள்ளாகவே உலகத்தில் 40 நாடுகள்வரை தங்கள் பொன் நாணயத் திட்டத்தைக் கைவிட்டுவிட்டதுடன் தங்கள் நாணயங்களின் மதிப்பையும் வீழச் செய்தன. 'இச்செயல் நெருக்கடியை மேலும் தீவிரமாக்கியது. இஃதிவ்வாறிருக்க, பலரிடையே அமெரிக்கா உலக நாடுகளுடைய இடுக்கண் பேரிலும், பிறநாடுகளின் வேலையில்லாத் திண்டாட்டத்தின் பேரிலுமே தன் செழுமையை வளர்த்துக் கொள்கின்றதென்ற நம்பிக்கையொன்றும் தோன்றலாயிற்று. இதன் காரணமாகவே, அமெரிக்காவின் கடனாளி நாடுகள் பலவும் தங்கள் கடன்களை அமெரிக்கா முற்றிலும் ரத்து செய்யவேண்டுமெனவும் கோரின. தனித்து நின்ற அமெரிக்காவோ தன் வரைக்கும் பொருளாதார தேசியக் கொள்கை ஒன்றையே கடைப்பிடிக்க முயன்றது. ஆனால், அது எவ்வாறு வெற்றி பெற இயலும்? 20-ஆம் நூற்றாண்டின் சமுதாயத்தில் உலக நாடுகளின் செழுமை, உலக நாடுகளின் அமைதியைப்

போலவே எந்த ஒரு நாட்டினரும் தனியே பிரித்தனுபவிக்க முடியாத ஒன்ருகிவிட்டது!

## ஜனாதிபதி ஹூவர் தலைமையில் அமெரிக்காவின் பொருளாதார மீட்சிக்கு ஆரம்ப எத்தனங்கள்

பொருளாதார மந்தம் ஏற்பட்டபோது அமெரிக்காவில் ஜனாதிபதி ஹூவர் தலைமையில் குடியரசுக் கட்சியின் நிர்வாகம் நடந்துகொண்டிருந்தது. அந்நிர்வாகம் 'தலையிடாக் கொள்கை யிலும்'' தனியார் சுயேச்சை'யிலும் ஆழ்ந்த நம்பிக்கை வைத்திருந்தமையால், நாட்டின் மந்த நிலையால் விளையக்கூடிய பேராபத்தைச் சிறிதும் உணராது, தலையிடாக் கொள்கையையே மேலும் கடைப்பிடித்து வந்தது. அதுபோது நாட்டின் பொருளாதாரத்திற்கு அவசியமாயிருந்த பல்வேறு மாற்றங்களையும் நிறைவேற்றிக்கொள்ள அந்நிர்வாகம், தன் சுயேச்சை இயக்கத்தாலேயே வேண்டிய வேண்டியாங்கு சரிசெய்துகொள்ளக் கூடிய விலைக் கருவியின் ஆற்றலையே நம்பியிருந்தது. ஆனல், அந்நிருவாகத்தனர் எதிர்பார்த்தபடி விலைக்கருவியின் சுயேச்சை இயக்கம் மந்தத்தின் கேடுகளை அகற்றிவிட இயலவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. விலைகள் தொடர்ந்து வீழ்ந்துகொண்டிருந்தன; 14 மில்லியன் தொழிலாளர்கள் வேலையிழந்தனர்; பாங்குகளும், கடன் வழங்கு நிலையங்களும் முறிந்தன; மக்களும் அச்சமுற்றனர். இந்நிலையில் ஜனாதிபதி ஹூவரும்கூட அவருடைய முன்னைய 'கூட்டுத் தன்னுதவி'க் கொள்கையையும் 'தலையிடாக் கொள்கை'யையும் கைவிட்டுவிட்டு, நாட்டின் பொருளாதார இக்கட்டைச் சமாளிக்க, ஒரு சில எதிர்பாராத நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டிய கட்டாயமேற்பட்டது. இதற்காக நாட்டின் தொழிலதிபர்கள், வாணிகர்கள், தொழிலாளர் தலைவர்கள், விவசாயக் கழகங்கள் முதலியோருடன் ஜனாதிபதி மாளிகையில் பல மாநாடுகளும் நடத்தப்பட்டன. அமெரிக்கப் பொருளாதாரத்தின் நடப்புக்கு வலிமையூட்டவும், தனிநபர்களும். உள்ளூர் அரசாங்கங்களும் தங்களுடைய பொருளாதார வளர்ச்சித் திட்டங்களை மிகுதிப்படுத்த வேண்டி அவர்களுக்குத் தக்க ஆதரவளிக்கவும் எழுந்துள்ள திடீர் அவசியத்தை இம்மாநாட்டுக்கு

வந்தவர்களுக்கு அறிவுறுத்தவேண்டியதாயிற்று. தவிரவும், அரசாங்கத்தின் பொதுக் கட்டடப் பணிகளின் பேரில் கூடுதலான தொகைகளைச் செலவு செய்யவேண்டி ஜனாதிபதி விடுத்த கோரிக்கையையும் அமெரிக்கக் காங்கிரசு ஏற்றது.

நாட்டில் ஏற்பட்ட நிதித் துறை முறிவிற்கு 4 திங்களுக்கு முன்னரே, 'விவசாயப் பொருள் விற்பனைச்சட்டம்' ஒன்று நிறைவேற்றப்பட்டிருந்தது. மேலும், 'அமெரிக்கக் கூட்டரசின் விவசாயப் பண்ணைகள் சபை' (*Federal Farm Board*) என்ற அமைப்பின் அதிகாரத்திற்குட்பட்ட 'தானிய விலை உறுதிப்பாடு கார்ப்பொரேசன்' (*Grain Stabilisation Corporation*) ஒன்று விவசாயப் பண்டங்களின் விலைகளை உயர்த்துதற்கென நிறுவப்பட்டது. இத்தகைய பரிசோதனைகளில் ஹூவர் நிர்வாகம் அரை பில்லியன் டாலர்களைச் செலவிட்டது. ஆயினும், இப் பரிசோதனைகளால் பயனேதும் ஏற்படவில்லை. போரில் பணி செய்து ஓய்வுபெற்றவரின் சேமத்திற்காக 1931-ஆம் ஆண்டில் அமெரிக்கக் காங்கிரசு ஒரு பில்லியன் டாலர்களை ஒதுக்கியது. இது அவர்களுக்குச் சிறிது நலமளித்ததாயினும் நாட்டின் பொருளாதார மீட்சிக்குத் துணைபுரியக்கூடவில்லை. இதற்கு அடுத்த ஆண்டில் மறுபடியும் மேற்கூறிய ஓய்வுபெற்ற படையினர் தங்களுக்குப் போனசு பாக்கியை வழங்குமாறு அரசாங்கத்திடம் கோரினர். இக்கோரிக்கையை ஏற்குமாறு காங்கிரசு சபையை வற்புறுத்துவதற்காக அவர்கள் 'போனஸ் போராட்டப்படை' ஒன்றையும் அமைத்துக் கொண்டிருந்தனர். ஆயினும், அமெரிக்க செனட் சபை இக்கோரிக்கைக்கு இணங்க மறுத்ததுடன் இப்போராட்டக்காரர்களை வாஷிங்டனிலிருந்து வெளியேற்றுவதற்கு இறுதியாகக் கூட்டரசுத் துருப்புக்களைப் பயன்படுத்தவும் வேண்டியிருந்தது. 1932-ஆம் ஆண்டு ஜனவரியில் ஹூவரின் நிர்வாகம் 500 மில்லியன் டாலர் மூலதனத்தைக் கொண்ட சீரமைப்பு நிதிக் கார்ப்பொரேசன் (*Reconstruction Finance Corporation*) ஒன்றை ஏற்படுத்தி அதன் மூலமாகப் பாங்குகள், இன்சூரன்சுக் கம்பெனிகள், மற்றும் லேவாதேவி நிறுவனங்கள் யாவற்றுக்கும் தாராளமாகக் கடன்களை வழங்கத் தக்க வழி செய்தது. இக் கார்ப்பொரேசன் தள்ளாடிக்கொண்டிருந்த பல

பாங்குகளையும், இரயில் பாதைக் கம்பெனிகளையும், இன்சூரன்சுக் கம்பெனிகளையும் முழுதும் முறிந்து போகாதவாறு காப்பாற்றி, அமெரிக்காவின் நிதித் துறையிலிருந்த இடர்ப்பாட்டை ஓரளவுக்குக் குறைத்ததென்று கூறவேண்டும். ஜனாதிபதி ஹூவர் நாட்டின் பொருளாதார மந்தத்தைச் சமாளிப்பதற்காக எடுத்துக் கொண்ட மிகவும் தீவிரமான நடவடிக்கை இதுவேயாகும். மற்றும் அவர் பதவியிலிருக்கும் காலத்திலேயே கூட்டரசு நிலப் பாங்குகள் (*Federal Land Banks*) பற்றியும் இல்லக் கடன் பாங்குகள் (*Home Land Banks*) பற்றியும் கூட சட்டமியற்றப்பட்டது. இச்சட்டம் ரூஸ்வெல்ட் நிர்வாகம் பதவி ஏற்பதற்கு முன்னரே நிறைவேற்றப்பட்டிருந்தது. இது இவ்வாறிருக்க, அமெரிக்காவின் பொருளாதார மீட்சியானது உலகத்தின் பொருளாதார மீட்சியுடன் பிரிக்க முடியாதபடி பிணைத்ததாகும் என்றே ஹூவர் நம்பினார். ஆகவே தான், அவர் உலக நாடுகளுக்கிடையே ஒன்றுக்கொன்று கொடுக்கவேண்டியிருந்த கடன் பாக்கிகளை ஓராண்டுக்கு ஒத்திவைக்கும் ஏற்பாடு ஒன்றையும் வகுப்பதற்கு முனைந்தார். மேலும், உலகப் பொருளாதார மாநாடு ஒன்றைக் கூட்டவும் அவர் முயற்சி செய்தார். ஆயினும், அவர் பதவியை விட்டு நீங்கிய பின்னரே இம்மாநாடு கூடியது.[1]

## புதுமையான பொருளாதாரச் சிந்தனைகள்

மேற்கூறப்பட்ட பொருளாதார மந்தத்தின் விளைவுகளில் ஒன்று உலகெங்கும் பொருளாதார இலட்சியத்திலும் பொருளாதாரக் கோட்பாட்டிலும் மாற்றம் ஏற்படுத்துதற்கான தூண்டுதலை அது தோற்றுவித்ததாகும். இச்சூழ்நிலையில்தான் பண்டை முதலாளித்துவத்தின் கொள்கைகளைத் தீவிரமாகக் குறை கூறிவந்த தார்ன்ஸ்டீன் வெப்ளன் (*Thornstein Veblen*) என்பார் பொருளாதார வல்லுநர்களிடையே மிகவும் செல்வாக்கைப் பெற்றிருந்தார். மேலும், அதுபோது சோசலிசத்திலும், கம்யூனிசத்திலும் ஆர்வம் திரும்பியிருந்தது. அவ்வமயம், அமெரிக்காவில் முதலாளித்துவத்தின் வீழ்ச்சியைக் கண்கூடாகக் கண்ட பல அமெரிக்கர்கள் 'தலையிடாக் கொள்கை'யில் தங்கள் நம்பிக்கையை உடனடியாக இழந்ததுடன், பொருளாதார

1. Faulkner: American Economic History p. 651

மந்தத்தின் பெருங் கொடுமையிலிருந்து நாட்டை மீட்பதற்கும் அவர்கள் அரசாங்கத்தின் உதவியையே வெளிப்படையாகக் கோருதற்கு ஆரம்பித்தனர். உலக மகா பொருளாதார மந்தத்தின் போது, உலகில் பல பாகங்களிலும் இலட்சக் கணக்கான மக்கள் உணவின்றிப் பட்டினியால் வாடியிருந்த அதே சமயத்தில், அமெரிக்காவில் உணவுப் பண்டங்களின் விலைகளை வீழாமல் உயர்த்தி வைத்திருப்பதற்காக அப்பண்டங்களைக் கட்டாயமாக அழித்திவிட வேண்டி வந்ததைக் கண்ட அமெரிக்கர்கள், பழம் முதலாளித்துவக் கொள்கைகளில் நம்பிக்கையற்றதிலும், அரசாங்கத் தலையீட்டை வரவேற்றதிலும் வியப்பில்லை. இச் சூழ்நிலையில்தான் கேம்பிரிட்ஜ் பொருளாதார வல்லுநராகிய ஜே. எம். கீன்ஸ் என்பார் புதிதாக மொழிந்து வந்த புரட்சிகர மான கோட்பாடுகள் அமெரிக்க நாட்டு இளம் பொருளாதார வல்லுநர்கள் பலரின் கவனத்தை ஈர்க்கத் தொடங்கின. கீன்ஸ் பழமைப் பொருளாதாரக் கொள்கைகள் பலவற்றை உதறிவிட்டு, 'பற்றுக்குறை நிதி ஆக்கம்' (*Deficit Financing*) என்ற பயனுள்ள புதிய கருத்தை யாவருக்கும் அறிமுகப்படுத்தினர். இப்புதிய கொள்கை ஏற்கெனவே அமெரிக்க நிர்வாகத்தின ரால் கையாளப்பட்டு வந்தது என்பதையும் இங்குக் குறிக்க வேண்டும். தன்னுடைய 'பொதுக் கோட்பாடு' (*General Theory*) என்ற நூலில் கீன்ஸ் அமெரிக்க நிர்வாகத்தின் இக் கொள்கையையே நடைமுறையிலும் கருத்தளவிலும் ஏற்றுக் கொண்டு அதற்கு ஆதரவு அளித்தார். அதுமுதல் அமெரிக்க நியூ டீல் திட்டத்தின் பொருளாதார வல்லுநர்கள் யாவருக்குமே கீன்சின் இந்நூல் ஒரு கீதையாகிவிட்டது என்றே கூறவேண்டும்.

### நியூ டீல் திட்டம்: ஆரம்பமும் நோக்கங்களும்

ஜனநாயகக் கட்சியின் தலைவரான ரூஸ்வெல்ட் 1933-ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள், நான்காம் நாளன்று அமெரிக்க ஜனாதிபதியாகப் பதவியேற்றார். அவர் பதவியேற்ற காலம் அமெரிக்க ஐக்கிய நாடு, தன் வரலாற்றிலேயே மிகவும் மோச மானதொரு பாங்குத் துறை நெருக்கடியில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்த காலம். இப் புதிய ஜனாதிபதி, இதுவரை எந்த ஒரு சுயேச்சை நாட்டின் வரலாற்றிலும் காணாத ஒரு பொரு

ளாதாரத் திட்டப்பாடு முறையொன்றினுள் பாய்ந்து, வரலாற்று முக்கியத்துவம் பெற்றுவிட்டார். தம் தலைமையில் நடப்பதான விசைத் திறம் வாய்ந்த புதிய நிர்வாகத்தின் நோக்கங்களை அவரே பின்வருமாறு வருணித்தார். "நம்முடைய தற்போதைய பணி என்னவென்றால், நம்மிடம் இப்போதுள்ள பொருளாதார வளங்களையும், அவைகளின் பயன்பாட்டுத் திட்டங்களையும் நடைமுறையில் செயலாட்சி செய்வதேயாகும். மேலும், நம்முடைய மிகுதிப்படியான உற்பத்தியை விற்பதற்குவேண்டிய அயல்நாட்டுச் சந்தைகளை மீண்டும் ஏற்படுத்திக்கொள்ள முயல்வதும், அடுத்தாற்போல் நம்முடைய நுகர்வுக் குறைவு (*Under Consumption*) பிரச்சினையைச் சமாளிப்பதும் நம் நுகர்வுக்கு ஏற்ப நம் உற்பத்தியைச் சரி ஒப்பாக்கிக்கொள்வதும், நம் உற்பத்திப் பண்டங்களையும், செல்வத்தையும் முன்னிலும் நேர்மையான முறையில் பகிர்ந்தளிப்பதும், நாட்டில் இப்போதுள்ள பொருளாதார அமைப்பை மக்களின் நலனுக்கேற்ப மாற்றிக்கொள்வதும் நம்முடைய உடனடிப் பணியாகும்." இக்கூற்றிலடங்கியுள்ள கொள்கையின் அடிப்படையில் உருவாகிய திட்டமே ரூஸ்வெல்டின் நியூ டீல் திட்டமாகும். நியூ டீல் திட்டத்தின் குறிக்கோள் அமெரிக்கச் சமூகத்தைப் பொது நல அரசு (*Welfare State*) என்ற புதியதொரு சமூக தத்துவத்தின் அடிப்படையின் பேரில் அமைத்தலாகும். இவ்வாறு தனிப்பட்டோரின் சுயநல நோக்கங்களை மையமாகக்கொண்ட சர்வாதீன முதலாளித்துவத்தை (*Monopoly Capitalism*) நீக்கிவிட்டு அதற்குப் பதிலாக சமூக நலத்தையே குறிக்கோளாகக் கொண்டதும் புத்தாக்கத் திறங்கொண்டதுமாகிய புதியதொரு முதலாளித்துவத்தை (*Creative Capitalism*) தோற்றுவிப்பதற்கே நியூ டீல் திட்டம் வகுக்கப்பட்டதாகும். இந் நோக்கங்களைத்தான் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் தன்னுடைய புகழ்பெற்ற சொற்பொழிவு ஒன்றில் பின்வருமாறு சுட்டியிருக்கின்றார்: "வளங்களின் வீண் செலவு, ஊதாரித்தனம், சுரண்டல் முதலியவை நிறைந்த பழைய சமூக, பொருளாதார அமைப்பு எக்காலத்திற்கும் அழிந்து ஒழிந்து போய்விட்டது. அதற்குப் பதில் இன்று புதியதொரு கூட்டுறவு சமுதாயம் படிப்படியாக உருவாகிக் கொண்டிருப்பதை நாம் பார்க்கலாம். யாருக்குமே தனிச் சலுகைகளற்ற இப் புதுச் சமுதாயம் வகுப்புவாதப் போராட்டங்களை நீக்கி வருவதையும்,

கூட்டுறவுப் பொது அரசு இலட்சியத்தை மனித இனம் அடைதற்கு உதவி புரிந்து வருவதையும் நாம் இன்று கண்கூடாகக் காண்கின்றோம். உலக நாகரிகம் பின்செல்ல முடியாது; அது நிலையாக அப்படியே நிற்கவும் கூடாது. நாம் இந்த இலட்சியத்திற்காகப் பல புதிய முறைகளை இன்று மேற்கொண்டுள்ளோம். நாம் இவற்றை அவ்வப்போது குறையில்லாதவையாக்குவதும், முன்னேற்றம் செய்துகொள்வதும், தேவைக்கேற்ப மாற்றம் செய்துகொள்வதும், எப்பொழுதுமே முன் செல்வதுமே நம் பணி.'' பண்டை உலகின் முதலாளித்துவத்திற்கு அடிப்படையாயிருந்த இலாப நோக்கம், தனியார் சுயேச்சை இவை பற்றியும் அன்னார் கூறியுள்ளவை நோக்கத்தக்கவை: "நியாயமான இலாபத்தை யாரும் எதிர்ப்பவர்கள் அல்லர். ஆனால், இன்று மக்களில் ஒரு பெரும் பகுதியினர் மீத்துயருற்றிருக்கின்றனர். இந் நிலையில் இலாபத்திற்கும், இரக்கத்திற்கும் இடையே தேர்ந்து கொள்வதில் எவ்வித தயக்கமும் இருக்க முடியாது''[1]

மேற்கூறிய நோக்கங்களைச் சட்டமூலம் நிறைவேற்றுவதற்காக ஜனாதிபதி ரூஸ்வெல்ட் தாம் பதவியேற்ற ஒரு சில நாட்களுக்குள்ளேயே அமெரிக்கக் காங்கிரசின் சிறப்புக் கூட்டத் தொடரொன்றைக் கூட்டினார். இக் கூட்டம் அமெரிக்காவின் பொருளாதார அமைப்பு முழுவதையும் முற்றிலுமாக மாற்றிவிடக்கூடிய பொருளாதாரத் துறைச் சட்டங்கள் பலவற்றை நிறைவேற்றியது. தவிரவும், வேறு சில முக்கிய நடவடிக்கைகளும் முன்னமேயே எடுக்கப்பட்டிருந்தன. நாட்டில் உள்ள எல்லாப் பாங்குகளுக்கும் கடன் செலுத்துகை ஒத்திவைப்புச் சட்டமொன்றை ஜனாதிபதி தோற்றுவித்திருந்ததுடன், பொன் ஏற்றுமதியின் பேரிலும் ஒரு தடையை விதித்திருந்தார். இந்நிலையில் எல்லாப் பாங்குகளும் மூடிவைக்கப்படவே, அமெரிக்கப் பொருளாதார வாழ்க்கையே அநேகமாக அசையாது நின்றுவிட்டது என்றே கூறவேண்டும்.

### பாங்குத் துறை சீர்திருத்தம் (*Banking Reform*)

பாங்குத் துறையில் சீர்திருத்தம் ஏற்படுத்துவதற்கு மேற்கொள்ளப்பட்ட முதல் நடவடிக்கை 'பாங்குத் துறை' அவசரச்

1. Speeches of President Roosevelt.

சட்டம் (*Emergency Banking Act*) ஆகும். இச் சட்டம் *1933*-ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள் 9-ஆம் தேதி அமெரிக்கக் காங்கிரசின் இரு சபைகளிலும் நிறைவேறியது. இச்சட்டம் முன்னர் ஜனதிபதி விடுத்திருந்த பாங்குத் துறை ஆணையை உறுதிப்படுத்தியதுடன் அமெரிக்க ஜனதிபதிக்கு, நாட்டின் கடன் செலாவணி, நாட்டின் நாணயம், பொன், வெள்ளி, அயல் நாணய மாற்று முதலிய யாவற்றிலும் நடக்கக்கூடிய எல்லா வாணிக பேரங்களையும் கட்டுப்படுத்துவதற்கு வேண்டிய அவசர அதிகாரங்கள் இச்சட்டத்தில் அளிக்கப்பட்டன. மேலும், இச் சட்டம் பெடரல் ரிசர்வ் பாங்கு முறைத் திட்டத்தின் சில முக்கிய கூறுகளில் திருத்தங்களையும் ஏற்படுத்தியது. இச்சட்டத்தின் பயனுக முன்பு மூடப்பட்டிருந்த பல பாங்குகள் மறுபடியும் திறக்கப்படவும் அவைகள் தங்கள் வழக்கமான நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் வழி ஏற்பட்டது. முன்பு நிறுவப்பட்டிருந்த சீரமைப்பு நிதிக் கார்ப்பொரேசனுக்கு இப்போது முன்னிலும் அதிகமான அதிகாரங்கள் வழங்கப்பட்டன. இதனுல் இக்கார்ப் பொரேசன் அமெரிக்க ஐக்கிய நாட்டின் நிதித்துறை, பாங்குத் துறை நடவடிக்கைகளின் பேரில் மேலதிகாரமும் மேற் பார்வையும் கொண்ட ஒரு நிறுவனமாகிவிட்டது. மேலும், இப்பாங்குத் துறைச் சட்டத்தின் மற்ருெரு நோக்கத்தையும் இங்குக் குறிப்பிடவேண்டும். பாங்குகள் கண்மூடித்தனமாக வாணிகச் சூதாட்டத்தினருக்குக் கடன்களை வழங்குவதையும் பாங்குகள் ஒன்றின் மேல் ஒன்று பிடிபெற்றுக் கொள்வதையும் (*Inter-Bank Controls*) தடுப்பதன் மூலம் பாங்குகளின் சொத்துக்களை மிகவும் பத்திரமான வழிகளிலும் உச்ச பயன் தரத்தக்க முறைகளிலும் ஈடுபடுத்திக் கொள்ளுதற்குத் தக்க வழி வகைகளை ஏற்படுத்திக் கொடுப்பது இச்சட்டத்தின் நோக்கங் களில் ஒன்ருகும், தவிரவும், இச்சட்டம் முதலிட்டுப் பாங்குத் தொழிலையும், டெபாசிட் பாங்குத் தொழிலையும் பிரித்து அவற்றை இரு தனித் துறைகளாக்கிவிட்டது. மேலும், நடப்பு வைப்புக்களின் பேரில் (*Demand Deposits*) வட்டி அளிப் பதையும் இச்சட்டம் தடை செய்துவிட்டது. இன்னும், நாட்டின் வாணிகச் சூதாட்டத் துறைக்கு அளிக்கப்படும் கடன்களைக்

கட்டுப்படுத்துவதற்காக இச்சட்டம் பெடரல் ரிசர்வ் சபைக்கு மிகவும் விரிவான அதிகாரங்களையும் அளித்திருந்தது.

மேற்கூறியவையே யன்றி, பாங்குத் துறையின் முன்னேற்றத்திற்கென இன்னும் சில நடவடிக்கைகளும் மேற்கொள்ளப் பட்டன. 'பெடரல் டெபாசிட் இன்சூரன்சு கார்ப்பொரேசன்' ஒன்றும் இச்சட்டத்தால் ஏற்படுத்தப்பட்டு, நாட்டிலுள்ள எல்லாத் தேசியப் பாங்குகளும் கட்டாயமாக இத்திட்டத்தில் பங்கெடுத்துக் கொள்ளும்படி வற்புறுத்தப்பட்டன. இத்திட்டத்தின்படி, பாங்குகளில் போடப்பட்டுள்ள 10,000 டாலருக்கு மேற்படாத டெபாசிட்டுகள் யாவற்றுக்கும் முழு இன்சூரன்சுப் பாதுகாப்பு அளிக்கப்பட்டது. அடுத்து, 10,000 டாலருக்கு மேலும் 50,000 டாலருக்குக் குறைவாயுமுள்ள டெபாசிட்டுகளுக்கு 75% இன்சூரன்சுப் பாதுகாப்பும், 50,000 டாலருக்குமேற்பட்ட தொகையுள்ள டெபாசிட்டுகளுக்கெல்லாம் 50% இன்சூரன்சுப் பாதுகாப்பும் இத்திட்டத்தின்கீழ் அளிக்கப்பட்டது. இத்திட்டம் டெபாசிட்டு போடும் மக்களின் மனத்தில், மீண்டும் நம்பிக்கையை ஏற்படுத்த உதவியதென்றால் மிகையாகாது. இத்திட்டத்தை, 1935-ஆம் ஆண்டு பாங்குத் துறைச் சட்டம் நிலையானதாக்கிற்று.[1] மேற்கூறிய நடவடிக்கைகளின் வாயிலாகப் பெரும்பான்மையான பாங்குகள் திரும்பவும் தங்கள் வேலையைத் தொடங்குதற்கு ஏற்றவாறு உறுதியாக்கப்பட்டிருந்தன. ஆயினும், இப்பாங்குத் துறைச் சட்டம் ஒழுங்கில்லா நிருவாகத்தாலும், கட்டுபடியாகாத பொருளாதார நிலைமையாலும் உழன்று கொண்டிருந்த பாங்குகளைப் பாதுகாக்க விரும்பவில்லை. ஆகவே, இத்தகைய பாங்குகள் பல கலைக்கப்பட்டுவிட்டன.

1933-ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட 'செக்யூரட்டிகள் சட்டம்' (*The Securities Act*) தொழில் கார்ப்பொரேசன்களில் முதலீடு செய்வோருக்கெல்லாம் பாதுகாப்பு அளிக்கும் ஒரு முயற்சியாயிருந்தது. இச்சட்டத்தின்படி எல்லாக் கார்ப்பொரேசன்களும் தங்களுடைய பங்குப் பத்திரங்களின்

1. இந்தியாவில் அண்மையில் ஏற்பட்ட பாங்கு நெருக்கடியின் காரணமாக இந்திய ரிசர்வ் பாங்கு இந்த அமெரிக்கத் திட்டத்திற்கு ஒப்பான ஒரு திட்டத்தை இந்தியாவுக்குச் சிபாரிசு செய்துள்ளது.

தன்மைபற்றிய முழு விவரங்களையும் வெளியிடவேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது. மேலும், புதிய பத்திரங்களைக் கார்ப்பொரேசன்கள் வெளியிடுவதன் பேரிலும் தீவிரமான கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. அடுத்து 1934-இல் கொண்டு வரப்பட்ட 'பங்குப் பத்திர சந்தைச் சட்டம்' (*The Securities Exchanges Act*) பங்குப் பத்திர சந்தைகளின் செயல் முறைக்கும் அவற்றின் கட்டுப்பாட்டிற்கும் அவசியமான விதிகளைக் கொண்டிருந்ததுடன், வாணிகச் சூதாட்ட நடவடிக்கைகளையும் தடை செய்தது. மேற்கூறிய இச்சட்டங்களைச் செயலாட்சிபடுத்துவதற்குப் பங்குப் பத்திரங்கள் கமிசன் (*Securities Exchanges Commission*)' ஒன்றும் நிறுவப்பட்டது. இந்த ஆரம்ப நடவடிக்கைகள் ஒரு சில நாட்டில் செலாவணிச் சுருக்கத்தை விளைவிக்கும் போக்குடையனவாயிருந்தன. பின்னர் நாட்டிலெழுந்த பணவீக்க நிலைக்கும் இதுவே ஓரளவு விளக்கமாகவும் அமைகின்றது.

### பணத்துறைக் கொள்கை (*Monetary Policy*)

நியூ டீல் முறையின் நிதித் துறைத் திட்டமானது முக்கூறான நோக்கங்களைக் கொண்டதாயிருந்தது. பாங்குத் துறையில் சீர்திருத்தம், பங்குப் பத்திர சந்தைகள் பண்டச் சந்தைகளின் பேரில் மிக்க கண்காணிப்பு, பணவீக்கக் கொள்கை இம் மூன்றுமே அத்திட்டத்தின் முக்கிய கூறுகளாகும். இவைகளில் பாங்குத் துறை சீர்திருத்தங்களும், பங்குப் பத்திர சந்தையின் கட்டுப்பாடும், அமெரிக்கப் பொதுமக்களின் ஆதரவைப் பெற்றிருந்தன. ஆனால், இத்திட்டத்தின் மூன்றும் கூறாகிய பணவீக்கக் கொள்கையோ தீவிரமாகக் கண்டிக்கப்பட்டது. இப்புதுத் திட்டத்தின்கீழ் மேற்கொள்ளப்பட்ட பொன் இருப்புக் கட்டுப்பாட்டுச் சட்ட உட்பிரிவின் ரத்துகையும், அரசாங்கத்தின் பொன் வாங்கும் கொள்கையும், எல்லாவற்றிற்கும் மேலாக, பற்றாக் குறை நிதியாக்கம் மூலம் தீர்மானமாகப் படைக்கப்பட்ட பணவீக்கமும் (*Deliberate inflation through deficit financing*) இதுபோன்ற பிற நடவடிக்கைகளும் பழமரபிற்கு முரணானவையாக இருந்தன. இக்காரணங்கொண்டே பொருளாதார வல்லுநர் பலரும் இந்நடவடிக்கைகளுக்கு ஆதரவளிக்கவில்லை.

மேலும், இந்நடவடிக்கைகள் யாவும் அயல்நாட்டு நாணய மாற்றையும், அயல்நாட்டு வாணிகத்தையும் பாதித்ததுடன் உலக நாடுகள் பலவற்றின் பொருளாதாரத்திற்கும் கேடு விளைவித்தன. முன்னர்க் குறிப்பிட்ட உலகப் பொருளாதார மாநாடு தோல்வியுற்றமைக்கும் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் அமெரிக்காவில் கடைப்பிடித்த இத்தகைய நாணயத் துறை, பணத்துறைப் பரிசோதனைகளே ஓரளவிற்குக் காரணமெனலாம். எப்படியெனில் திட்டப்பாட்டிற்குள் இயக்கப்படுவதான இப்புதிய பண முறையும், திட்டமிடப்பட்ட பொருளாதாரமும் பழைய மரபினருக்கு அதுபோது புரட்சிகரமான கருத்துக்களாகவே தோன்றின.

மேற்கூறியவாறு பழைய போக்கைக் கைவிட்ட ரூஸ்வெல்ட், நாட்டின் நாணயத் துறையில் 'பண்ட வழிப் பெறுமான டாலர்' (Commodity dollar) அல்லது உறுதிப் பணமுறை என்றதொரு புதுக் கருத்தைக் கைக்கொள்ளலானார். ரூஸ்வெல்டின் இக்கருத்தைச் சர் பேசில் பிளாக்கெட்[1] என்பார் விரிவாக விளக்கியுள்ளார். இதன்படி ரூஸ்வெல்டின் கருத்தாவது நாட்டில் விலைகள் யாவும் பொன் விலையையே சார்ந்துள்ள ஒரு நாணய முறைக்குப் பதிலாக, பண்டங்களுடைய வாங்கும் சக்தி வாயிலாகவே தன் பெறுமானம் அளவிடப்படுவதாயும், மாதத்திற்கு மாதமும் ஆண்டுக்கு ஆண்டும் தன்பெறுமானம் உறுதிப்பாடுடையதாயுமிருக்கின்ற ஒரு நாணய முறைதான் சமுதாயத்தின் நலத்திற்கேற்றதாயிருக்கும் என்பதாகும். ஆனால், இத்தகைய விலைவாசி உறுதிப்பாட்டை ஏற்படுத்துதற்கு 1933-ஆம் ஆண்டில் நிலவிய மிகத் தாழ்வான விலைவாசி மட்டத்தை ஏற்றதாகக் கொள்ளுதல் கூடாது. ஆகையினால், நம் முதல் குறிக்கோளாக இருக்கவேண்டியது யாதெனின், நாட்டின் விலைவாசி மட்டத்தை 1924-26 காலத்தில் நிலவியதும், அதுபோது பெரும் பகுதி மக்களால் விரும்பப்பட்டதும் ஆகிய மிக இயல்பானதொரு மட்டத்திற்கே உயர்த்திடுவதாகும். உலகில் பெரும்பான்மையான நாடுகள் தங்கள் விலைவாசி மட்டத்தை உயர்த்திக் கொள்வதற்கு விரும்பினவாயினும், ஒரு சில நாடுகளே இதைச் செயல்படுத்தும் நடவடிக்கைகளை

1. Sir Basil Blackett : 'Planned Money'

விரைந்து மேற்கொண்டன. இவ்வாறு செயலில் ஈடுபட்ட நாடுகளில் அமெரிக்காவும் ஒன்ருகும். இதுசமயம் பணவீக்க நிலையில் எழுச்சிபற்றியும் உலகநாடுகளில் நிலவிய அச்சம் பற்றியும் சர் பேசில் பிளாக்கெட் தம்முடைய கோலாலம்பூர் பேருரையில் கூறியிருந்த கூற்று இங்கு மிகவும் குறிப்பிடத்தக்க-தாகும். அவர் கூறியதாவது : 'பணவீக்கம் என்பதன் உண்மையான பொருள் என்னவென்ருல், அவசியமானபோது நம் பொருளாதார நடவடிக்கைகளை நடத்திச் செல்வதற்குத் தேவையாகின்ற நாணயத்தைப் போதுமளவுக்கு அச்சடித்துக் கொள்வது என்பதேயாகும். பணச் சுருக்கம் (பணவடிப்பு) என்ருல், நாட்டின் நடவடிக்கைகளுக்கு ஏற்ப விரும்பத்தக்க அளவிற்கு நாட்டின் நாணயத்தை மட்டுப்படுத்திக் கொள்வது என்பதே பொருளாகும். உண்மையில் இவ்விரண்டுமே விரும்பத்தக்கவையல்லதான். இருப்பினும், மனித சமுதாயத்தின் நலத்தைப் பாதுகாப்பதற்கு இவை அவசியமாகின்றன. மனித குலம் பொன் சிலுவையின் பேரில் அறையப்பட்டு அவதியுரும-லிருக்கவேண்டுமாயின் இந்நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியது அவசியமாகிவிடும்'.[1]

1933-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களின்போது அமெரிக்-காவில் நாணயத்துறைப் பீதி ஒன்று ஏற்பட்டு, நாட்டின் செலாவணியின் அளவில் சுருக்கம் விளைந்தது. இந்நிலையைச் சமாளிக்கும் நோக்குடன் 1933-ஆம் ஆண்டு, ஏப்ரல், 5-ஆம் நாள் அமெரிக்க ஜனதிபதியால் உத்தரவு ஒன்று பிறப்பிக்கப்-பட்டது. பொன்னைப் பதுக்கிவைப்பதை அவ்வுத்தரவு தடை செய்ததுடன், பொன் ஏற்றுமதியின் பேரிலும் தடையேற்படுத்-தியது. 1933, ஏப்ரல், 19-ஆம் நாள் அமெரிக்க ஐக்கிய நாடு பொன் நாணயத் திட்டத்தைக் கைவிட்டது. அதுபோதே அமெரிக்கா தன் பொருளாதார மறுசீராக்கத்திலும் புதியதொரு கட்டத்தை அடைந்தது. இப்புனரமைப்புத்திட்டத்தில் அமெரிக்க டாலரின் மதிப்புக் குறைப்பு நடவடிக்கை ஒரு முக்கிய பங்கு வகித்தது. இப்புதிய சூழ்நிலைக்கேற்றவாறு பண்டங்-களின் விலைவாசிகளை உயர்த்துவதற்கும், கடன்களின் பளுவைக் குறைப்பதற்கும் டாலரின் மதிப்புக்குறைப்பு நடவடிக்கை

1. Blackett's address to the Rotary Club at Kaulalampur

இன்றியமையாததாயிற்று. 1933-ஆம் ஆண்டு, ஜூன் திங்கள், 5-ஆம் நாள் நிறைவேற்றப்பட்டதாய பொன் செலுத்து-ஒழிப்புச் சட்டமானது (*Gold Repeal Act*) அமெரிக்க ஐக்கிய நாட்டில் அரசாங்கத் துறையிலும், தனியார் துறையிலும் பொன் செலுத்துகைப் பொறுப்புக்களை விதிப்பவையான சட்டப் பிரிவுகள் யாவற்றையும் ரத்து செய்தது. மேலும் இச்சட்டம் நாட்டின் பணவீக்கம் பற்றிய அரசாங்கத்தின் கொள்கையையும் தெளிவாக்கியது. தவிரவும் 'தாமஸ் திருத்தம்' (*Thomas Amendment*) என்ற ஒரு சட்டத் திருத்தத்தின் வாயிலாக அமெரிக்க ஜனாதிபதிக்கு நாட்டின் நாணயத் துறையில் மேலும் பல அதிகாரங்கள் அளிக்கப்பட்டன. இதன்படி நாட்டின் செலாவணிப் பெருக்கம், நாணயத்தின் மதிப்புக்குறைப்பு, பொன் வாங்குகை, வெள்ளி வாங்குகை இன்னோரன்ன முறை-களின் வாயிலாக நாட்டின் விலைவாசிகளை உயர்த்துவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ள அமெரிக்க ஜனாதிபதிக்கு முன்னிலும் கூடுதலான அதிகாரங்கள் வழங்கப்பட்டன.

## 1933-ஆம் ஆண்டு உலகப் பொருளாதார மாநாடு

அமெரிக்க நாட்டு ஜனநாயகக் கட்சியின் பொருளாதாரக் கொள்கையில் ஒரு முக்கிய கூறாக உள்ளது அமெரிக்க நாட்டின் சுங்கவரி முறையில் மாற்றம் ஏற்படுத்துவதும், உலக நாடுக-ளிடையே பொருளாதாரக் கூட்டுறவை வளர்ப்பதும் ஆகும். 1933-ஆம் ஆண்டு, ஜூன் திங்களில் உலக நாடுகளின் பொருளாதார மாநாடு ஒன்றைச் சர்வதேச சங்கம் (*League of Nations*) இலண்டனில் கூட்டியது. இம்மாநாட்டிற்கு வர இசையுமாறு அமெரிக்காவும் தூண்டப்பட்டது. இதன்படி அமைச்சர் ஹால் என்பவரின் தலைமையில் ஆற்றல்படைத்த பேராட்குழு ஒன்று அமெரிக்காவிலிருந்து இம்மாநாட்டுக்குச் சென்றது. இம்மாநாட்டில் உலக நாடுகளுக்குள் இருவேறு கருத்துக்கள் எழுந்தன. உலக நாடுகளுக்கிடையே வாணிகத்-திற்குத் தடையாயிருந்த சுங்கவரிகளைப் பொதுவாகக் குறைத்து-விடுதற்கு அமெரிக்கா ஒப்புக் கொண்டது. ஆனால், பிரான்சும்,

மேற்கு ஐரோப்பாவின் பொன் திட்டச் சார்பு வட்டார நாடுகளும் *(Gold Block Countries)* சுங்கவரி மாற்றத்திற்கு முன்னதாக நாணயங்களின் மதிப்பு உறுதிப்பாட்டைத்தான் *(Currency stabilisation)* மேற்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தின. ஆனால், இத்தகையதொரு நாணய உறுதிப்பாட்டுத் திட்டத்தை ஏற்றுக்கொண்டு தன் நியூடீல் திட்ட அடிப்படையான பணவீக்கக் கொள்கையைக் கைவிட்டுவிட ரூஸ்வெல்ட் தயாராக இல்லை. ஆகவே, ரூஸ்வெல்டின் நியூ டீல் திட்ட நாணயச் செலவாணிக் கொள்கையே இவ்வாறு உலக நாடுகளின் பொருளாதார மாநாடு முறிவுற்றதற்குக் காரணமாகியது எனலாம்.

இருப்பினும், மேற்கூறிய உலகப் பொருளாதார மாநாடு முடிவுறுந்தருவாயில் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் ஊக்கமூட்டும் செய்தி ஒன்றை அதற்கு அனுப்பிவைத்திருந்தார். இச் செய்தியில் அவர் உலக நாடுகளின் கூட்டு முயற்சிகளால் விளையக்கூடிய பயனில் தம்முடைய ஆழ்ந்த நம்பிக்கையைத் தெரிவித்துக் கொண்டதுடன், உலகத்தின் பொருளாதார நலப் பாட்டை மீண்டும் நிலைநிறுத்துவதில் தம்முடைய தொடர்ந்த கூட்டுறவை அளிக்கவும் உறுதி கூறியிருந்தார். ஆனால், அதுபோது அமெரிக்காவில் நியூ டீல் கொள்கையால் நிகழ்ந்து கொண்டிருந்த அதே பொருளாதார மீட்சி முன்னேற்றம் அமெரிக்க ஐக்கிய நாட்டிலிருந்து வேலையில்லாத் திண்டாட்டத் தையும் பிறநாடுகளுக்கு மேலும் அதிகமாக ஏற்றுமதி செய்து கொண்டிருந்தது. இம்முரண்பாட்டால் சீற்றமடைந்த உலகப் பொருளாதார மாநாட்டுப் பிரதிநிதிகளில் ஒருவர் அமெரிக்க ஜனாதிபதியின் கூட்டுறவுச் செய்தியை முன்பு ஜப்பான் சர்வதேச சங்கத்திலிருந்து விலகிக் கொள்ளுந்தருவாயில் விடுத் திருந்த ஓர் உறுதிக் கூற்றுடன் ஒப்பிட்டார். ஜப்பான் அச் செய்தியில் உலக சமாதானத்திற்கும் போர் ஆயுத ஒழிப்பிற்கும் தன்னுடைய முழு ஆதரவைத் தருவதாக உறுதி கூறியிருந்தது. ஆனால், அதே நேரத்தில் ஜப்பான் மஞ்சூரியாவில் தன்னுடைய போர் நடவடிக்கைகளைத் தீவிரமாக்கியிருந்ததுடன், ஆயுதக் குவிப்புப் பந்தயத்திலும் முனைந்திருந்தது. அமெரிக்க ஜனாதி

பதியின் செய்தியும் இத்தகையதாயிருக்குமோ என அப்பிரதிநிதி ஐயம் தெரிவித்தார்.

உலகப் பொருளாதார மாநாட்டின் முறிவுக்குப் பின்னர், ரூஸ்வெல்ட் தொடர்ந்து தன்னுடைய நாணய மதிப்புக் குறைப்புக் கொள்கையைச் செயல்படுத்தி வந்தார். இதுபற்றி அவர் அமெரிக்கக் காங்கிரசுக்கு அனுப்பியிருந்த செய்தியில் தம் கொள்கையைப் பின்வருமாறு விளக்கிக் கூறியிருந்தார். (1) அயல்நாட்டுச் செலுத்துகைகளுக்கு மட்டுமே பொன் அவசியமாதலாலும், நாட்டின் நாணயம் இறுதியாகப் பொன்னைத் தான் அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டியுள்ளதாதலாலும், நாட்டின் எல்லைகளுக்குள் இருக்கின்ற பொன் முழுவதையும் பெற்றுக்கொள்ளும் உரிமை நாட்டின் அரசாங்கத்திற்கு மட்டுமே உண்டு. (2) தனிப்பட்டவரிடமிருந்த பொன் முழுவதையும் அமெரிக்க அரசாங்கம் திரும்பப் பெற்றுக் கொண்டது போன்றே அமெரிக்க பெடரல் ரிசர்வ் பாங்குகளிடம் காப்பு இருப்பாயுள்ள 3500 மில்லியன் டாலர் பெறுமானமுள்ள பொன்னையும் அமெரிக்க நாட்டு அரசுக் கருவூலம் (கஜானா) பெற்றுக் கொள்ளுதற்கு அதற்கு அதிகாரம் அளிக்கப்பட வேண்டியது அவசியமாகும். (3) நாட்டின் பொன் இருப்புக்களை இணைத்து முடித்த பின்னர் டாலர் நாணயத்தின் மதிப்பை மீண்டும் புதிதாகத் தீர்மானிக்கும் அவசியம் எழுகிறது.

1933-ஆம் ஆண்டு, அக்டோபர், 22-ம் நாள் அமெரிக்க ஜனாதிபதி, டாலரின் மதிப்பை மேலும் இறங்கச் செய்யும் நோக்குடன் பொன்னைத் தொடர்ந்து வாங்கும் கொள்கை ஒன்றை ஆரம்பித்தார். தவிரவும் புதிதாக அமெரிக்காவில் அவ்வப்போது வெட்டியெடுக்கப்படும் பொன்னின் விலையை ஒரு சில நாட்களுக்கொருமுறை அவர் தீர்மானிக்கத் தொடங்கினார். ஆயினும், அயல்நாட்டுச் சந்தைகளில் அமெரிக்க டாலரின் பரிவர்த்தனை மதிப்பு இந்நடவடிக்கையினால் எவ்விதத்திலும் பாதிக்கப்படவில்லை. பின்னர், இலண்டனிலும், பாரிசிலும் திறந்த சந்தையில் பொன் வாங்குதலை அமெரிக்கா மேற்கொண்டபோதுதான் டாலரின் மதிப்பில் ஒரு மாற்றம் நிகழ்ந்தது. ஆனால், டாலரின் பரிவர்த்தனை வீதத்தில் ஏற்பட்ட

ஏற்ற இறக்கங்கள் மக்களிடையே ஒருவித அச்சத்தை உண்டு பண்ணிற்று. இதன் விளைவாக அமெரிக்காவிலிருந்து மூலதனம் பேரளவில் இலண்டனுக்கும், பாரிசுக்கும் வெளியேறியது. இம்மூலதன ஏற்றுமதியானது அமெரிக்கத் தொழில்களின் பேரில் பாதகமான விளைவுகளை ஏற்படுத்தியது. இதன் காரணமாக, முன்பே தள்ளாடிக் கொண்டிருந்த ஒரு சில அமெரிக்கத் தொழில்களில் மேலும் மந்த நிலை அதிகரித்தது. அரசாங்கம் பொன் வாங்குகைக் கொள்கையைக் கைவிட்ட பின்னரே நாட்டில் ஓரளவு உறுதியான நிலை ஏற்பட்டது.

## 60 செண்ட் டாலர் (*Sixty Cents Dollar*)

1934-ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்களில் அமெரிக்க ஜனாதிபதி டாலரின் மதிப்புக் குறைப்பு நடவடிக்கை ஒன்றை மேற்கொண்டார். இதன்படி 1900-ஆம் ஆண்டில் வெளியிடப் பட்ட பழைய டாலர் (100 சென்டுகள்) இப்போது 59.06 சென்டுகளுக்கே ஈடாக்கப்பட்டது. மேலும் அமெரிக்காவில் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வந்த பற்றுக்குறை வரவு செலவுத் திட்டங்களின் (பட்ஜெட்டுக்களின்) காரணமாக அங்கு ஓர் உறுதியற்ற நிலையும் ஏற்பட்டிருந்தது. இந்நிலையே மேற்கூறியபடி டாலரின் மதிப்புக்குறைப்புக்கு உடனடிக் காரணமாகியது என்று கூறவேண்டும். இவ்வாறு டாலரின் மதிப்புக் குறைப்பால் அரசாங்கத்திற்கு ஏற்பட்டிருந்த இலாபத்தில் 2000 மில்லியன் டாலர் தொகையைக்கொண்டு 'நாட்டின் நாணயப் பரிவர்த்தனை உறுதிப்பாடு நிதி' (Exchange Stabilisation Fund) ஒன்று புதிதாக ஏற்படுத்தப்பட்டது என்பதையும் குறிப்பிடவேண்டும். மேற்கூறிய இந்நடவடிக்கைகளின் காரணமாக அமெரிக்க பட்ஜெட்டின் பெரும் பற்றுக் குறையான வரவு நிலை மாறி, கணிசமான மிகுதியுள்ள வரவு நிலை ஒன்று புதிதாகத் தோன்றியது. பட்ஜெட்டில் நிகழ்த்திய இவ்வித்தை டாலரின் அயல் நாணயப் பரிவர்த்தனை மதிப்பில் முன்னர் அடிக்கடி ஏற்பட்டு வந்த ஏற்ற இறக்கங்களையெல்லாம் ஒழித்துவிட்டது. அமெரிக்க வாணிகத்துறையிலீடுபட்டவர்களுக்கு இதனால் மீண்டும் நம்பிக்கை பிறந்தது. இப்பயனை

விரும்பியே மேற்கூறிய நடவடிக்கைகள் யாவும் மேற்கொள்ளப் பட்டன என்பதை இங்கு ஞாபகத்தில் வைக்கவேண்டும் தவிரவும் அமெரிக்கா, வெளிநாட்டுச் சந்தைகளில் பொன்னை வாங்குவதற்கு ஆரம்பித்ததன் காரணமாகப் பொன் அமெரிக்காவை நோக்கி மறுபடியும் ஏராளமாகப் பாய ஆரம்பித்தது. முதலாவது உலகப் போருக்குப் பின்னர் ஐரோப்பிய நாணயங்களுக்கு ஏற்பட்டிருந்த மதிப்பு இறக்கத் தைப்போல் இப்போது அமெரிக்க டாலருக்கும் மேலும் மதிப் பிறக்கம் ஏற்படும் என்ற அச்சமும் ஒழிந்தது. இவ்வாறே முதலாவது போருக்குப் பின்னர் பிரான்சும், மற்றும் பல ஐரோப்பிய நாடுகளும் தங்கள் நாணயங்களின் மதிப் பிறக்கத்தின் மூலமும், பணவீக்கத்தின் வாயிலாகவும் தங்கள் பிரம்மாண்டமான உள்நாட்டுக் கடன்களை ஒழித்துக் கொண்டி ருந்தன. ஆயினும், அதே சமயத்தில் அவைகளின் பொன் நாணயத் திட்ட முறை உண்மையில் அந்நாடுகளின் கடன்களை மேலும் அதிகரிப்பதாகவேயிருந்தது. இவைகளுடன் ஒப்பிட்டால் அமெரிக்க நியூ டீல் திட்டத்தின் நாணயக் கொள்கையானது மிகவும் புரட்சிகரமானதாகவும் புதுமையானதாகவும் இருந் தாலும், மற்ற நாடுகளின் நடவடிக்கைகளைவிட மிக்க முக்கியத் துவம் வாய்ந்ததாகும் என்பதில் ஐயமில்லை. இத் திட்டத்தின் கீழ் ரூஸ்வெல்ட் கடைப்பிடித்த மீட்சிப் பணப் பெருக்கக் கொள்கையானது (*Policy of Reflation*) அமெரிக்க நாட்டின் பொருளாதாரச் செழுமை மீட்சிக்கே மிக்க ஊக்கமளிக்கக் கூடியதாயிருந்தது.

### வெள்ளி இருப்புக் கொள்கை (*Silver Policy*)

ஜனதிபதி ரூஸ்வெல்ட் கைக்கொண்ட வெள்ளி வாங்குகைக் கொள்கையானது உண்மையில் நியூ டீல் பணத்துறைத் திட்டங் களில் ஒன்றாகும். 1934-ஆம் ஆண்டு, ஜூன் திங்களில் நிறைவேற்றப்பட்டதான 'வெள்ளி வாங்குகைச் சட்டம்', அமெரிக்க ஐக்கிய நாட்டின் நாணயத் துறையில் வெள்ளியை முன்னைவிடக் கூடுதலாகப் பயன்படுத்த ஊக்கமளிப்பதற்கான ஒரு நடவடிக்கையேயாகும். அமெரிக்காவிலிருந்து ஏற்றுமதி

யாகின்ற விவசாயப் பண்டங்களுக்காகச் செலுத்தப்படும் வெள்ளிக்கு, அதன் சந்தை நடைமுறை விலைக்குமேல் 25% கூடுதலான விலையை அளிக்கும்படி அரசுக் கருவூலத்திற்கு அமெரிக்க செனட் சபை முன்னமேயே அதிகாரம் கொடுத்திருந்தது. ஆரம்பத்தில் நியூ டீல் திட்டத்தின் வெள்ளிக் கொள்கை அமெரிக்க ஐக்கிய நாட்டின் வெள்ளி வாணிகருக்கு மனநிறைவளிக்கவே உருவாக்கப்பட்டதெனினும், காலம் செல்லச் செல்ல இக்கொள்கை அமெரிக்க நாட்டின் ஏற்றுமதி வாணிகத்திற்கொரு செயற்கை உதவியாகத்தான் தொடர்ந்து கடைப்பிடிக்கப்பட்டு வந்தது என்று குறிப்பிட வேண்டும்.

### நியூ டீல் நாணயத் துறைப் பரிசோதனைகளின் விளைவுகள்

அமெரிக்காவின் இப்புதுமையான நாணயத் துறைப் பரிசோதனைகள் யாவற்றையும் வெளியுலக நிதித் துறையாளர்கள் யாவரும் மிக்க ஆவலுடன் கவனித்து வந்தனர். மேலும், அமெரிக்காவின் இப்பரிசோதனைகள் யாவும் உலகம் முழுவதிலுமே தங்கள் விளைவுகளைப் பரவச் செய்திருந்தன. அமெரிக்க நியூ டீல் பரிசோதனைகள் பொன் திட்ட முறையில் அமைந்த உலக நாணயங்களையெல்லாம் இக்கட்டுகளுக்குள்ளாக்கியது. அதன் நேரடி விளைவுகள் அத்துடன் நின்றுவிடவில்லை. பொன் நாணயத் திட்ட நாடுகளில் பொன் இருப்புக்கள் கூடுதலாகி வந்த அதே நேரத்தில், பொன் நாணயத் திட்டத்திலிருந்து இந்நாடுகளைக் கட்டாயமாக விலகிக் கொள்ளச் செய்ததும் இந்த நியூ டீல் பரிசோதனைகளேயாம். அதுபோதே உலக நாடுகளின் பட்ஜெட்டுகளில் பெரு வரவு பற்றுக்குறைகளும் (Budget Deficits), உலக வாணிகச் சுருக்கமும், உலகத்தின் பல பாகங்களிலும் நிகழ்ந்த சமூக, அரசியல் அமைதியின்மையும் சேர்ந்து உலக முழுவதிலும் ஒரு பொருளாதாரக் குழப்ப நிலையை ஏற்படுத்தியிருந்தன. இச் சூழ்நிலையில் உலகநாடுகளின் அயல்நாட்டு வாணிகம் தேய்ந்து போய்க் கொண்டிருந்த காரணத்தால், பல நாடுகள் தங்களுடைய அயல் பொறுப்புக்களின் பளுவைச் சமாளிக்க இயலாது பிற நாடுகளுக்குத் தங்கள் கடன் பாக்கிகளைச் செலுத்தத்தவறின.

அவ்வமயம் அமெரிக்கா தன் நாணயச் சட்டத்திலிருந்து பொன் பற்றிய சட்டப் பிரிவுகளை நீக்கிக் கொண்டதும், தன் டாலரின் மதிப்பைக் குறைவாக்கிக் கொண்டதும் பொன் திட்ட ஒப்பந் தங்களின் புனிதத் தன்மையையே அழித்தது. இச்சூழ்நிலையில் பிற நாடுகளுக்குச் செலுத்தப்பட வேண்டிய பொறுப்புக்களைப் பல நாடுகள் காலந் தாழ்த்தியமையினாலும், அவற்றை நிறை வேற்றத் தவறியமையினாலும் உலக நாடுகளிடையே நட்பும் நன்மதிப்பும் குறையத் தொடங்கின. ஆகவே, இந்த நியூ டீல் திட்டத்தின் விளைவாகத்தான் உலக நாடுகள் முன்னர் அமைத் திருந்த நிதி மாளிகையின் அடிப்படை பலவீனப்பட்டது எனலாம். இந்தக் கேடுகள் யாவும் உலகம் முழுவதிலும் பங்குப் பத்திர சந்தைகளில் அதிர்ச்சிகளாகப் பிரதிபலிக்கப்பட்டன. இச்சந்தைகளின் நடவடிக்கைகளோ நிலைகுலைந்தன. நியூ டீல் பரிசோதனைகளால் விளைந்த உறுதியின்மையின் காரணமாகவே இலண்டனிலும், பாரிசிலும், மற்றவிடங்களிலும் நிதிச் சந்தை பங்குப் பத்திர சந்தைகளில் வாணிகர்களின் நடவடிக்கைகளில் பெருந் தயக்கமும் எச்சரிக்கையும் தோன்றலாயின. இவ் வாறான சூழ்நிலையைச் சமாளிக்கும் முயற்சியில்தான் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் இத்துறையில் உடனடியாகத் தலையிட வேண்டி வந்தது. அமெரிக்க ஐக்கிய நாட்டில் வாணிகச் சூதாட்ட நடவடிக்கைகளை உடனடியாகக் கட்டுப்படுத்தி அவர் உத்தரவுகளைப் பிறப்பித்தார். ஜனாதிபதியின் இச்செயல் மீண்டும் இத்துறையில் நம்பிக்கையை உண்டாக்கிற்று. ஆனால், ரூஸ்வெல்டின் இப்பணக் கொள்கை பற்பல கோணங்களி லிருந்தும் குறை கூறப்பட்டது. அவருடைய மீட்சிப் பணப் பெருக்கக் கொள்கை அதுபோது முழு அளவுக்கு வெற்றி பெற வில்லை என்பது உண்மைதான். ஆனால், இன்றோ இக்கொள்கை உலகெங்கும் ஆர்வத்துடன் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. பணத் துறையில் நியூ டீல் திட்ட நடவடிக்கைகளின் துணிகரத்திற்கு உண்மையில் இதுவே ஒரு பெரும் பாராட்டு ஆகும்.

## வேலை ஆட்குறைப்பு, வேலையில்லாதோருக்கு இடருதவி, பொதுக் கட்டடப் பணிகள்

பாங்குத் துறை, நிதித் துறை ஆகியவற்றில் ஏற்பட்டிருந்த நெருக்கடியைச் சமாளித்த பின்னர், ரூஸ்வெல்டின் நிர்வாகம்

மேற்கொண்ட முதல் அலுவல் அந்நாட்டில் அப்போது வேலை யில்லாது துயருற்ற 14 மில்லியன் மக்களுக்கும், குறை-வேலை யுடையவராயிருந்த பேரெண்ணிக்கையினருக்கும் இடருதவி அளிக்கும் ஏற்பாடாகும். இதற்குதவியாகக் கூட்டரசு அரசாங் கத்தின் படைத் துறைப் பணியாளர்களுடையவும், படை சாராப் பணியாளர்களுடையவும் ஊதியங்களைக் குறைக்கவும், படை யிலிருந்து ஓய்வு பெற்றவர்களின் ஓய்வூதிய முறையில் காணப்பட்ட கேடுகளைக் களையவும் 1933-ஆம் ஆண்டு, மார்ச்சு 12-ஆம் நாள் ஜனாதிபதிக்கு அதிகாரமளிக்கப்பட்டது. இதன் கீழ் அவ்வாண்டு ஏப்ரல் மாதம், முதல் தேதியன்று பிறப் பிக்கப்பட்ட ஓர் உத்தரவின்படி படையிலிருந்து ஓய்வு பெற்றோருக்களிக்கப்படும் ஓய்வூதியத் தொகை ஆண்டுக்கு 400 மில்லியன் டாலர் குறைவுபடுத்தப்பட்டது.

மேற்கூறிய நடவடிக்கையுடன் வேலையில்லாதோருக்கு இடருதவித் திட்டம் ஒன்றும் (*Unemployment Relief*) மேற் கொள்ளப்பட்டது. இத்திட்டத்தின்கீழ்க் குறிப்பிடத்தக்க பல ஏற்பாடுகள் செயல்படுத்தப்பட்டன. முதலாவதாக, 500 மில்லியன் டாலர் கொண்டதொரு தனிப்பட்ட இடருதவி நிதி வேலையில்லாதோரின் நேரடி உதவிக்கென ஏற்படுத்தப் பட்டது. அத்துடன், 3300 மில்லியன் டாலர் செலவு பிடிக்கக் கூடிய பிரம்மாண்டமானதொரு பொதுக் கட்டடப் பணித் திட்ட மொன்றும் தயாரிக்கப்பட்டது. வேலையற்றோரின் இடருதவிச் சட்டத்தின்கீழ், வேலையில்லாதோரை நாட்டின் பொதுக் கட்டடப் பணிகளில் வேலைக்கு அமர்த்தவும், அவர்களுக்குத் தேவையான வீட்டு வசதி, உணவு, உடை, மருத்துவ உதவி, ரொக்கப்படி முதலிய யாவற்றையும் அளிக்கவும் ஜனாதிபதிக்கு அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. 1933-ஆம் ஆண்டு, மே திங்களில் நிறைவேற்றப்பட்ட கூட்டரசு அவசர இடருதவிச் சட்டமானது (*Federal Emergency Relief Act*) கூட்டரசு அவசர இடருதவி நிர்வாகம் ஒன்றை ஏற்படுத்தியது. வேலையில்லாதோரின் இடருதவிக்காக அமெரிக்க நாட்டின் பல்வேறு இராச்சியங் களுக்கும் உதவிக் கொடைகளை அளிப்பது இந்நிர்வாகத்தின் பொறுப்பாகும். தவிரவும், 1933-ஆம் ஆண்டில் கொண்டு வரப்பட்டதான தேசிய வேலை ஏற்பாட்டுப் பணித்துறைச்

சட்டமும், தேசியத் தொழில் மீட்சிச் சட்டமும் கூடுதலான வேலை வாய்ப்புக்களை அளித்ததுடன், வேலை நாள் நேரத்தைக் குறைத்தும் கூலிகளை உயர்த்தியும் நலமீந்தன. மேலும், வேலை இல்லாதோருக்கு வேலை அளிப்பதற்கென, அமெரிக்காவின் பொதுக் கட்டடப் பணி நிர்வாகம் 7,000 மில்லியன் டாலர்களைச் செலவிட்டது. ஆயினும், இந்நிர்வாகம் தன் முயற்சியில் முழு வெற்றிபெற இயலவில்லை என்றே கூறவேண்டும். ஆகவே தான் 1935-ஆம் ஆண்டில் வேலை அமர்த்து நடவடிக்கையை விரைவுபடுத்த வேண்டி, வேலைத் திட்ட நிர்வாகம் ஒன்றும் தனியாக ஏற்படுத்தப்பட்டது. இந்நிர்வாகம் 1942-ஆம் ஆண்டு வரை தொடர்ந்து இருந்துவந்தது. அதன் 7 ஆண்டு வாழ்க்கையில் இந்நிர்வாகம் 10,500 மில்லியன் டாலர்வரை செலவழித்திருந்தது. இதுவன்றி, அமெரிக்க நாட்டின் வட்டார ஆட்சி நிர்வாகங்கள் (*Local Government Authorities*) 2,700 மில்லியன் டாலர் வரை இத்துறையில் தாங்களே செலவழித்திருந்தன. அமெரிக்க ஐக்கிய நாட்டில் இவ்வேலைத் திட்ட நிர்வாகம் தன் உச்ச ஆட்சியின்போது 8½ மில்லியன் பேர்களுக்கு வேலையளித்ததுடன், மொத்தம் 25 மில்லியன் மக்களுக்கு மறைமுக நலம் விளைவித்தது என்றும் கூறவேண்டும். இவ்வேலைத் திட்ட நிர்வாகத்தின் சாதனைகளில் அது நாட்டிற்கு அமைத்துத் தந்த 1,22,000 பொதுக் கட்டடங்களும், 664,000 மைல்கள் நீளமுள்ள சாலைகளும், 77,000 புதிய பாலங்களும், 285 விமான நிலையங்களும், 24,000 மைல்கள் நீளமுள்ள புயல் வெள்ள வடிகால்களும் முக்கியமாகக் குறிப்பிடப்பட வேண்டியவையாகும். மேலும், நாட்டில் முன்னமேயிருந்த ஆயிரக்கணக்கான பொது வசதி அமைப்புக்களைப் பழுது பார்த்தும் இந்நிர்வாகம் நாட்டிற்கு நலம் பயந்தது என்பதைக் கூறுதல் அவசியம். தவிரவும், இந்நிர்வாகம் பல மலர்ச் சோலைகளையும், விளையாட்டிடங்களையும், நீர்த் தேக்கங்களையும், மற்றும் பல சமூக வசதிகளையும் அமைத்துத்தந்ததைக் கூறுதுவிடின் நேர்மை ஆகாது. சாதாரணத் தொழிலாளர்களுக்கு மட்டுமன்றி, இந்நிர்வாகம் கல்வி, கலைத் துறைப் பணியாளர்களுக்குங்கூடப் பேருதவி புரிந்திருக்கின்றது. வெள்ளை உடைப் பணியாளர்களாகிய ஆசிரியர்கள், நடிகர்கள், கலைஞர்கள், எழுத்தாளர்கள் முதலியோ

ருக்கும் துணை புரிந்ததுடன் இந்நிர்வாகம் அதன் தேசிய இளைஞர் நிர்வாகக் கிளையின் மூலமாக உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கும். கல்லூரி மாணவர்களுக்குங்கூட உதவி அளித்தது என்றால் இந்நிர்வாகத்தின் சேவைகள் தெற்றெனெ விளங்கும்.[1]

ரூஸ்வெல்டின் பொருளாதார 'அறிஞர் குழு'வினர் (*Brain Trust*) தயாரித்த திட்டங்களாகிய வேலையற்றோர் இடருதவி பொதுக் கட்டடப் பணித்திட்டம் முதலிய யாவற்றுக்கும் எண்ண எழுச்சியளித்தவை கேம்பிரிட்ஜ் பொருளாதாரப் பள்ளியும். அதன் பெருந் தலைவரான ஜே. எம். கீன்ஸ் என்பாருமே என்பதை அக் குழுவினரே ஒத்துக்கொண்டனர் என்பதையும் இங்குக் குறிப்பிடுதல் வேண்டும். அமெரிக்காவில் இத் திட்டத்தின் ஆதரவாளர்கள் தங்கள் வாதத்தைக் கூறுகையில் பொதுக் கட்டடப் பணிகளின்பேரில் செலவு செய்யப்படும் தொகை மொத்தமானது அதிர்ச்சியடையச் செய்யுமளவுக்கு பிரம்மாண்டமாகத் தோன்றினும், அவைகளின் நிகரச் செலவீடு உண்மையில் குறைவானதேயாகும் என்று சுட்டிக் காட்டினார்கள். மேலும், இப் பணிகளின்பேரில் செலவழிக்கப்படும் உடனடிச் செலவை ஈடுகட்டுமளவிற்கு வேலையற்றோர் இடருதவிச் செலவில் அரசாங்கத்திற்கு ஒரு பெருஞ் சேமிப்பும், அரசாங் கத்தின் வரி வருமானத்தில் ஒரு கூடுதலும் விளைகின்றன என்பதையும் மறுக்க முடியாது. தவிரவும், இப் பொதுப் பணிகளால்தான் நாட்டில் நிலைமுதல் சொத்துக்கள் பலவும் புதிதாகப் படைக்கப்படுகின்றனவாதலால், இவை உடனடியான நிதி ஆதாயம் எதையும் அளிக்காவிடினும் நீண்ட காலத்தில் நாட்டிற்கு வருமானமளிக்கக் கூடியனவாகும் என்பதையும் மறக்கலாகாது. மேலும், இப் பொதுப் பணிகளுக்குச் செலவழிக்கப்படும் பணத் தொகையின் பயன் அத்துடன் முடிந்துவிடுவதில்லை. நாட்டின் பொருளாதாரக் கூட்டிற்குள் பாய்ச்சப்படும் இப் பணமானது, அதன் பொருளாதார வளர்ச்சி முறையில் தொடர்ச்சியான பல சங்கிலி விளைவுகளை ஏற்படுத்து கிறது. முதலில் செலவிடப்படும் தொகையைப்போல் பன் மடங்குக்கு நாட்டின் வாணிகத்திலும், தொழிலிலும், விவசாயத்

1. Faulkner: American Economic History, p. 674.

திலும் வாங்கும் சக்திப் பெருக்கம் ஒன்றை ஏற்படுத்திவிடுகிறது. தவிரவும், இச் செலவீட்டால் புதிதாக வேலைபெறும் நபர்கள் முன்பு அவர்கள் வேலையற்றிருந்தபோதோ அரசாங்கத்தின் உதவித் தொகையை (*Dole*) நாடி வாழ்ந்தபோதோ அனுபவித்ததைவிட மேலான வாழ்வு ஒன்றை இதனால் இப்போது அடைகின்றனர். பொதுப் பணிகளை ஆரம்பிப்பதன் மூலம் வேலையற்றோருக்கு வேலை அளிக்க வகை செய்யும் இத் திட்டத்தின் அடிப்படைச் சித்தாந்தம் பின்வருமாறு: " உழைப்பதற்கு மக்கள் உரிமையுடையவர்களாவர்; ஆதலால், பிறரின் ஈகையை நாடி வாழ்வதைவிட யாவரும் தங்கள் உழைப்பாலேயே வாழ்வதுதான் உயர்வானதாகும். இந்த அடிப்படைக் கொள்கையின் பேரிலேயே இத் திட்டம் வகுக்கப்பட்டதாகும்".

மக்களுக்கு வேலை அளிப்பதற்கு ரூஸ்வெல்ட் எடுத்துக் கொண்ட பல நடவடிக்கைகளில் முக்கியமான ஒன்று பொது வசதிக் கார்ப்பொரேசன்களை (*Public Utility Corporations*) ஆரம்பித்து அவைகளின் மூலம் வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதாகும். இவ்வகையில் ஆரம்பிக்கப்பட்டதே டென்னசி நதி தீர நிறுவனம் (*Tennesse Valley Authority*) ஆகும். இது 1933-ஆம் ஆண்டு, ஜூன் திங்களில் ஆரம்பிக்கப்பட்டதாகும். அமெரிக்காவில் டென்னசி நதி பாயும் வெளியானது நெருக்கமில்லாத பரவலான மக்கள் தொகை கொண்ட 40,000 சதுர மைல் பரப்புடைய நிலவெளியாகும். இது எட்டு அமெரிக்க இராச்சியங்களில் பரவிக்கிடந்த வளங்குறைந்ததொரு பிரதேசமாயிருந்தது. டென்னசி ஆற்றின் மசில் ஷோல்கள் (*Muscle Shoals*) என்ற ஆழமில்லாப் பகுதியில் நிறுவப்பட்டிருந்ததான நீர் மின் ஆற்றல் உற்பத்திப் பொறி ஒன்றை டி. வி. ஏ. (*T. V. A.*) தன் நிர்வாகத்திற்கு எடுத்துக்கொண்டதுடன், அவ் யாற்றின்பேரில் பல அணைகளைக் கட்டுவித்தற்கான பெரும் திட்டங்களையும் அது மேற்கொண்டது. இவ்வாறு டென்னசி பாயும் நிலப்பரப்பு முழுவதையுமே பல்வகையிலும் வளமிக்கதாக்கும் வகையில் டென்னசி ஆறு பயன்படுத்தப்பட்டது. அவ் யாற்றின் துணை கொண்டு இந் நிறுவனம் மின்சக்தி உற்பத்தியை அதிகரித்ததுடன், அப் பிரதேசத்தில் தொழில் வளர்ச்சியையும் விவசாய முன்னேற்றத்தையுங்கூட அது ஊக்குவித்தது. மேலும், இந்

நிறுவனம் பெருவாரியான மக்களுக்குப் புதிதாக வேலையும் அளித்தது. சுருங்கக் கூறின், நியூ டீலின் பொதுக் கட்டடப் பணித் திட்டத்தின் மிக உன்னதமான நினைவுச் சின்னமாக டி. வி. ஏ. விளங்கிற்று. தவிரவும், இது உலகத்தின் பல நாடுகளுக்கும் இத் துறையில் ஒரு நல்ல முன் மாதிரியாகவும் திகழ்ந்தது.[1]

பொதுக் கட்டடப் பணிகளின் மூலமாக மக்களிடையே வேலையில்லாத் திண்டாட்டத்தை நீக்கியதுடன் நியூ டீலின் தொழிலாளர் திட்டம் வேறு பல வழிகளிலும் நாட்டின் தொழிலாளர்களுக்குப் பெரு நன்மை புரிந்தது. அமெரிக்கத் தொழிலாளர்களுக்குச் சமூகப் பாதுகாப்பை (*Social Security*) அதிகரித்து, அவர்களுக்கு அமெரிக்கப் பொருளாதார அமைப்பில் முன்னைவிட முக்கியமானதொரு இடத்தை அளிப்பதும் இத் திட்டத்தின் நோக்கமாகும். 1935-ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட சமூகப் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் வயதானவர்களுக்கான இன்சூரன்சுத் திட்டத்தை அமுல் நடத்தும் இராச்சியங்களுக்கெல்லாம் கூட்டரசு அரசாங்கம் உதவிக் கொடைகள் வழங்குதற்கு அதிகாரமளிக்கப்பட்டது. பல ஐரோப்பிய நாடுகளில் முன்பே நிறுவப்பட்டிருந்த சமூகப் பாதுகாப்பு ஏற்பாட்டைத்தான்—வறுமை விடுதலை—இத் திட்டம் அமெரிக்காவில் ஏற்படுத்த முயன்றது. இதன் பயனாக அமெரிக்க ஐக்கிய நாட்டின் எல்லா இராச்சியங்களும் 1937-ஆம் ஆண்டுக்குள்ளாக, தங்கள் தங்கள் பிரதேசங்களில் முதலாளிகள் தொழிலாளிகள் இருசாராரும் கூட்டாகப் பங்குக் கட்டணம் செலுத்தும் சமூகப் பாதுகாப்புத் திட்டங்களை ஏற்படுத்திக் கொண்டுவிட்டன. ஆரம்பத்தில் இத் திட்டம் வாணிகத் துறையிலும், தொழில் உற்பத்தித் துறையிலும் ஈடுபட்டுள்ள கூலித் தொழிலாளர்களுக்கும், ஊதியம் பெறும் பணியாளர்களுக்கும் மட்டுமே ஏற்படுத்தப்பட்டிருந்தது. ஆனால், 1952-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட ஒரு திருத்தச் சட்டத்தின் பயனாக விவசாயிகள் தவிர, இதர சொந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ள எல்லாத் தொழிலாளர்களும், வீட்டு வேலைக்காரர்களும், விவசாயத் தொழிலாளர்களும், மற்றுமுள்ள பலவகைத் தொழி

1. The Damodar Valley Authority in India is modelled after the T. V. A.

லாளர்களும் இத் திட்டத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்டுவிட்டனர். இவ்வாறு ஆதாயம் தரும் வேலைகளில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களில் ஏறத்தாழ 75 சதவீதத்தினர் இத் திட்டத்திற்குள் கொண்டுவரப்பட்டுவிட்டனர்.

நியூ டீல் திட்டத்தின் சாதனைகள் இத்துடன் நின்றுவிடவில்லை. சிறுவர் உழைப்பு, வேலை நாள் நேரம், கூலிகள், தொழிற் சங்க உரிமைகள் முதலிய பிரச்சினைகளுக்கும் இத் திட்டம் தீர்வு கண்டது. எல்லாவற்றிற்கும் மேலாக நியூ டீல் திட்டம்தான் அமெரிக்கப் பொருளாதார அமைப்பில் தொழிலாளர்களுக்கு நாட்டின் உற்பத்தியில் அவர்களுக்குரிய முக்கிய பங்கை நிலை நிறுத்தியது. இச் சீர்திருத்தங்களை நியூ டீல் திட்டம் மேற்கொள்ளுதற்குக் காரணமாயிருந்த அதன் மனித நல இலட்சியங்களையும், தொழிலாளர்பால் அது காட்டிய பரிவன்பையும் அமெரிக்காவிலுள்ள எல்லா மக்களும், கட்சிகளும் வேறுபாடின்றிப் பாராட்டின. 1937-ஆம் ஆண்டில் ரூஸ்வெல்ட் விடுத்த ஒரு சிறப்புச் செய்தியில் அவர் தம்முடைய இலட்சியத்தைப் பின்வருமாறு தெரிவித்திருந்தார்: 'சமூக முன்னேற்றத்தின் எல்லைகளை மேலும் விரிவடையச் செய்வதற்கு வேண்டிய மேற்கொண்ட நடவடிக்கைகளை எடுப்பதற்கான காலம் நமக்கு வந்துவிட்டது. தன்னிறைவு பெற்றுவிட்டதும், தன்மானம் வாய்ந்ததுமான ஒரு ஜனநாயகம் இளஞ்சிறுரைத் தொழிலாளர்களாக்கி வருத்துதற்கு எவ்வித நியாயமும் இருக்க முடியாது; அதேபோல் தொழிலாளர்களின் கூலிகளை வெட்டுதற்கும், தொழிலாளர்களின் வேலை நேரத்தை நீட்டுதற்கும் எவ்விதப் பொருளாதார ஆதாரமும் இருக்க முடியாது'.

### நியூ டீல் திட்டமும் விவசாயமும்

நியூ டீல் திட்டத்தின் மிக முக்கிய கூறுகக் கருதப்பட வேண்டுவது விவசாயத்தின் மறு சீராக்கமும், விவசாயப் பண்டங்களின் விலைகளை உயர்த்துவதும், விவசாயக் கடன் பளுவை நீக்குவதும் ஆகும். விவசாயப் பண்ணை இடர் நீக்க

மசோதா (*Farm Relief Bill*) கையெழுத்தாகிய 1933-ஆம் ஆண்டு, மேத் திங்கள், 12-ஆம் தேதி முதல் இந்த விவசாய மீட்புத் திட்டம் அமுலுக்கு வந்தது. இச் சட்டத்தில் விவசாயப் பண்டங்களின் விலைகளை உயர்த்துதற்கும், இதை நிறைவேற்றிக் கொள்ளுதற்குப் பண வீக்க நடவடிக்கையைக் கடைப்பிடித்தற்கும் ஏற்பாடுகள் இருந்தன. இப் புதிய முறைகளைக் கையாண்டு அமெரிக்க விவசாயிகளுக்குச் செழுமையைத் தோற்றுவிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்டுக்குத் தூண்டுதலாயிருந்தவர்கள் அவருடைய மிக நெருங்கிய கூட்டாளிகளும், அமெரிக்கக் கிராம சமூகத்தின் பேராதரவாளர்களுமாகிய ரேமண்டு மோலி என்பவரும், ரெக்சுபோர்டு டக்வெல் என்பாரும் ஆவர். இச் சட்டத்தின் குறிக்கோளை நிறைவேற்றுதற்கு ஏற்படுத்தப்பட்ட விவசாயத் துறை ஒழுங்குபாடு நிர்வாகம் (*Agricultural Adjustment Administration*) என்ற அமைப்பு, விவசாயப் பண்டங்களின் விலைகளை உயர்த்துவதற்கு மூன்று வழிகளில் முயற்சித்தது. அவைகளாவன :

(1) பயிர் செய்யப்படும் விளை நிலத்தின் பரப்பில் குறைவேற்படுத்தல்.

(2) பயிரிடுவதைக் கைவிடும் குடியானவர்களுக்குப் போனஸ் ஊதியம் வழங்குதல்.

(3) விவசாயிகளுக்குச் செலவுகளைக் குறைக்கக் கூடியதான விற்பனை ஒப்பந்தங்களைச் செய்து கொள்ளுதல். இந் நடவடிக்கைகள் முதன் முதலில் பருத்தி, கோதுமை, சோளம், பன்றி வளர்ப்பு, புகையிலை முதலியவற்றில்தாம் செயல் படுத்தப்பட்டன. ஆனால், பின்னர் இவை கால் நடைக்கும், பால் பண்ணைத் தொழிலுக்கும், சீனிக் கிழங்கிற்கும், இதர உற்பத்திகளுக்கும் பயன்படுத்தப்பட்டன. ஆயினும், நியூ டீல் திட்டத்தின் இப்பிரிவு மிகவும் கடுமையாகக் கண்டிக்கப்பட்டது. 'உலகில் கோடிக்கணக்கான மக்கள் பட்டினியால் வாடுகின்ற போது, உணவுப் பண்டங்களின் உற்பத்தியைச் சுருக்குகின்ற

கருத்தானது கருணையுள்ளம் படைத்த யாவருக்கும் பைத்தியக் காரச் செயலாகவே தோன்றியது'.[1]

விவசாயிகளின் கடன்களைக் குறைக்கவும், அவர்களின் நிலங்களைக் கடன் பாக்கிக்காக ஈடு சுவாதீனப்படுத்துவதைத் தவிர்த்து, விவசாயிகளுக்குப் பாதுகாப்பு அளிக்கவும் இக் காலத்திலேயே பல சட்டங்கள் இயற்றப்பட்டுத் தீவிரமான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இச் சட்டங்களில் முக்கியமானவை பண்ணை அடைமான மீள் நிதிச் சட்டம் (*Farm Mortgage Refinancing Act*) பண்ணை அடைமான ஈடு சுவாதீனச் சட்டம் (*Farm Mortgage Foreclosure Act*) முதலியனவாகும். இச் சட்டங்கள் அமுலுக்கு வந்த ஓர் ஆண்டிற்குள்ளேயே விவசாயப் பண்ணைக் கடன் வழங்கு நிர்வாகம் (*Farm Credit Administration*) 2,000 மில்லியன் டாலர் தொகையைக் கடனாக வழங்கியிருந்ததென்றால் இந் நடவடிக்கைகளின் பிரம்மாண்டம் விளங்கும்.

விவசாயப் பண்ணைகளின் இடர் நீக்கத்திற்கென 1933-38 ஆண்டுகளில் மேற்கொள்ளப்பட்ட பல நடவடிக்கைகளையும் நோக்குங்கால் அவற்றின் சிறப்புக்கூறுகள் சில நமக்கு எளிதில் புலப்படும். மற்றெந்தத் துறையையும் விட விவசாயத் துறையில் தான் பொருளாதாரத் திட்டப்பாடு மிகவும் ஊக்கத்துடன் செயல்படுத்தப்பட்டிருந்தது. இதன்போக்கில் நுகர்வோரின் நலன் பற்றி அதிக அக்கறை காட்டப்படவில்லை. மேலும், விவசாயத் தொழில் ஒரு சலுகை பெற்ற தொழிலாகவே இருந்துவந்தது. விவசாயத் தொழிலுக்கான நிதி வசதியை உதவும் பொறுப்பை அரசாங்கம் தானே நேரிடையாக எடுத்துக் கொண்டது. இந்நடவடிக்கைகள் யாவும் 'சுயேச்சைத் தொழில் முயற்சி' துறைக்குள் பெருங் குறுக்கீடுகள் புரிவதாயிருந்தன. ஆயினும், குடியானவர்கள் இதைப் பொருட்படுத்தவில்லை என்று குறிப்பிடவேண்டும். காரணம் மேற்கூறப்பட்ட விவசாயத் துறை ஒழுங்குபாட்டு நிர்வாகம் (*A. A. A.*) விவசாயப் பண்டங்களின் விலை மட்டத்தை உயர்த்துவதில் வெற்றி பெற்றதுடன், குடியானவர்களின் கடன் பளுவையும் குறைத்து

1. Faulkner: American Economic History, p. 662

அமெரிக்க விவசாயத்தை ஒரு பேரழிவிலிருந்து மீட்டது. ஆயினும், இத்திட்டம் வெற்றி முரசு கொட்டிய அதே நேரத்தில், 1936-ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் அமெரிக்க சுப்ரீம் நீதி மன்றமானது மேற்கூறிய ஏ. ஏ. ஏ. (*A. A. A.*) நிர்வாகத்தை அது அரசியல் சட்டத்திற்கு முரணானது எனத் தீர்ப்பளித்துவிட்டது. இதனால் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் விவசாயத் துறை செயலாட்சியை இராச்சிய அரசாங்கங்களின் கைக்கு விட்டுவிட நேர்ந்தது. இருப்பினும், இராச்சிய நிர்வாகங்களுக்கு இத்துறையில் துணை புரிதற்காக அமெரிக்கக் கூட்டரசு அரசாங்கம் அவற்றிற்கு ஆதரவுக் கொடைகளை (**Subsidies**) வழங்கி வந்தது.

### நியூ டீல் திட்டமும் தொழில் துறையும் (*Industry and New Deal*)

அமெரிக்கக் காங்கிரசின் சிறப்புக் கூட்டம் 1933-ஆம் ஆண்டு, ஜூன் திங்கள் 16-ஆம் நாள் ஒத்தி வைக்கப்படு முன்னர், அது நிறைவேற்றியிருந்த மசோதாக்களிலெல்லாம் மிக்க முக்கியம் வாய்ந்ததும், புரட்சிகரமானதுமாகிய மசோதா தொழில் மீட்சி மசோதாவே (*Industrial Recovery Bill*) ஆகும். இச்சட்டம் அமெரிக்கத் தொழில் துறையில் குறிப்பிடத்தக்க பெரு மாற்றங்களைச் செய்தது. இதுபற்றி ரூஸ்வெல்ட் குறிப்பிட்டுள்ளதை ஈண்டு நோக்குவோம். ' இச்சட்டத்தின் நோக்கம் தொழிலில் நியாயமான இலாபம் கிடைக்க வழி செய்வதும், தொழிலாளர்களுக்கு வாழ்க்கைக்குப் போதிய கூலிகளை உறுதிப்படுத்துவதுமேயாகும். இதை நிறைவேற்றுதற்காக இச்சட்டம் நேர்மையாகத் தொழில்புரிவோருக்கும், தொழிலாளர்களுக்கும் கேடு விளைவிக்கும் கொள்ளைக்கார முறைகளையும் வழக்கங்களையும் ஒழிப்பதற்கு முனைகின்றது " என்று ரூஸ்வெல்ட் அச்சட்டத்தின் நோக்கத்தை வருணித்தார். சுருங்கக் கூறின், தேசியத் தொழில் மீட்சிச் சட்டத்தின் (*National Industrial Recovery Act-NIRA*) நோக்கமாவது தொழிலில் ஓர் உள்-ஒழுங்குபாட்டைப் புகுத்துவதும், மிகை உற்பத்தியைத் தடுப்பதும், கூலிகளை உயர்த்துவதும், தொழிலாளர் வேலை

நேரத்தைக் குறைப்பதும், உற்பத்திப் பண்டங்களின் விலைகளை உயர்த்துவதும் இந்நடவடிக்கைகள் எல்லாவற்றின் மூலமாகவும் நாட்டின் தொழிலில் மீட்சியையும் செழுமையையும் ஏற்படுத்துவதாகும்.[1]

தேசியத் தொழில் மீட்சி சட்டத்திலுள்ள பல்வேறு ஏற்பாடுகளையும் செயல்படுத்துதற்காகத் தேசிய மீட்சி நிர்வாகம் (*National Recovery Administration*) ஒன்றும் ஏற்படுத்தப் பட்டது. 1933-ஆம் ஆண்டு, ஜூன் திங்கள் 18-ஆம் தேதி ஜெனரல் ஹியூக் ஜான்சன் என்பார் தேசிய மீட்சி நிர்வாகத்தின் ஆட்சியாளராக நியமிக்கப்பட்டார். அமெரிக்க ஜனாதிபதி இச் சட்டத்தில் அளிக்கப்பட்டிருந்த தம்முடைய அதிகாரங்களில் பலவற்றினை இந்நிர்வாக ஆட்சியாளரிடம் ஒப்படைத்திருந்தார். இந்நிர்வாகியும் ஜனாதிபதியைப் போன்றே ஊக்கத் திறம் வாய்ந்த ஒரு தலைவராகவே விளங்கினார் என்பது குறிப்பிடப்பட வேண்டியதாகும். இந் நிர்வாகத்தின் நடவடிக்கைகளை நெறிப்படுத்தும் பொறுப்பு 1933-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் முதல், அமைச்சர் குழு உறுப்பினர்களையும் மற்றோரையும் கொண்டதொரு பொதுக் கழகத்திடம் (*General Council*) விடப்பட்டது.

மேற்கூறப்பட்ட தேசிய மீட்சி நிர்வாகத்தின்படி அமெரிக்காவில் ஒவ்வொரு தொழிலுக்கும் தனியாக ஒரு விதிக் கோவையை வகுப்பதற்கு ஜனாதிபதிக்கு அதிகாரமளிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு தொழிலிலும் தொழிலாளரின் வேலை நேரத்தையும், அவர்களின் கூலி வளர்ச்சி முறையையும், அத்தொழிலில் உற்பத்தியாகும் பண்டத்தின் விற்கும் விலையையும், ஒவ்வொரு காலத்திலும் உற்பத்தி செய்யப்பட வேண்டிய அளவையும், தொழிலாளர்களின் வேலைச் சூழ்நிலையையும் பற்றிய விதி முறைகளை ஏற்படுத்துதற்கான அதிகாரம் ஜனாதிபதிக்கு அளிக்கப்பட்டிருந்தது. ஒரு குறிப்பிட்ட தொழிலுக்கு ஜனாதிபதியால் தனியான விதிக்கோவை ஒன்று சட்ட முறைப்படி வெளியிடப்பட்டதானால், நாடு முழுதும் அத்

1. Ranch Basil: History of the New Deal, 1933-38

தொழில் இரண்டு ஆண்டுக் காலத்துக்கு அவ்விதிக் கோவைக்குக் கட்டுப்பட்டதாகிவிடும். இந்த இரண்டு ஆண்டுக் காலத்தின் போது அத்தொழிலுக்கு டிரஸ்டு-எதிர்ப்புச் சட்டங்களின் அமுல் நிறுத்தி வைக்கப்படும். ஆனால், சர்வாதீனங்களின் பேரில் உள்ள தடை தொடர்ந்து இருந்துவரும். ஆரம்பத்தில் பல்வேறு தொழில்களும் தங்களுக்கு ஏற்றதெனத் தாங்கள் கருதும் விதிக் கோவைகளின் வரைவுகளை ஜனாதிபதிக்குத் தாங்களாகவே அனுப்பிக் கொடுக்கலாம். ஆனால், ஜனாதிபதி தம் கருத்தின் பேரிலோ சம்பந்தப்பட்ட தொழிலில் ஈடுபட்டுள்ளோரின் அல்லது நுகர்வோரின் முறையீட்டின்பேரிலோ ஒரு தொழிலுக்குத்தாமே கட்டளை விதி முறைகளை வகுக்கப் புக ஜனாதிபதிக்கு அதிகாரம் உண்டு. மேலும், அவரால் வகுக்கப்பட்ட இவ்விதி முறைகளை மீறுவோருக்குக் கடுந் தண்டனைகளை விதிக்கவும் அன்னாருக்கு அதிகாரம் இருந்தது.

இவ்வகையில் ஏற்பட்ட முதல் விதிக்கோவை பருத்தித் தொழிலுக்குரியதாகும். இது 1933-ஆம் ஆண்டு, ஜுலை, 17-ஆம் தேதி அமுலுக்கு வந்தது. எண்ணெய்த் தொழில், இரும்பு, எஃகுத் தொழில் போன்ற மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த சில தொழில்கள் ஜனாதிபதிக்கு அனுப்பிக் கொடுத்த விதிக்கோவை வரைவுகள் அவரால் ஏற்றுக் கொள்ளப்படக் கூடியவையாக இல்லாதிருந்ததால் இத்தொழில்களுக்கு அவரே தம்முடைய பரந்த அதிகாரங்களைப் பயன்படுத்தித் தக்க விதிக்கோவைகளை வலுக்கட்டாயமாகப் புகுத்த வேண்டியது ஏற்பட்டது. இத்துறையில் எழுந்த முக்கியமான இக்கட்டு ஒன்று, 'திறந்த தொழில்மனை' (*Open shop*) முறையைக் கடைப்பிடிப்பதற்குத் தங்கள் உரிமையில் தொழிலதிபர்கள் உறுதியாக நின்றதாகும். இப்பணி முதல்வர்கள் இது பற்றித் தொழிற் சங்கங்களுடன் பேச்சுவார்த்தை நடத்தவும் மறுத்தனர். இதனால் இத்தொழில்களுக்குத் தனிப்பட்ட விதிக் கோவைகளை வகுப்பதில் சுணக்கமேற்பட்டமையால், நெருக்கடி நடவடிக்கையாக ஜனாதிபதி 'பிளாங்கெட்டு விதிக்கோவை' (*Blanket code*) என்ற பொது முறையான விதிக்கோவையொன்றை இத் தொழில்களில் உடனடியாக அமுல் செய்ய நேரிட்டது. இப்

பொதுமுறை விதிக்கோவை தொழிலாளர்களின் வேலை நேரத்தையும், ஊதிய வீதங்களையும் கட்டுப்படுத்துவதா யிருந்தது. இப் பொதுமுறை விதிக்கோவையிலுஞ் சரி, தொழில்களின் தனி உரித்தான விதிக்கோவைகளிலுஞ் சரி, சிறுர் உழைப்பு விலக்கம் ஒரு முக்கியமான கட்டுப்பாடாகக் காணப் பட்டது. இச்சீர்திருத்தம் கருணை உள்ளம் படைத்த பலர் பல்லாண்டுகள் கிளர்ச்சி செய்து வேண்டிய ஒன்ருகும் என்பதை இங்குக் குறிப்பிடுதல் வேண்டும்.

தேசிய மீட்சி நிர்வாகம் அமுலில் இருந்த குறுகிய காலத் திற்குள் அதன் தலைவரான ஜெனரல் ஜான்சனின் தலைமையில் பேருக்கத்துடன் பரந்த பிரச்சார இயக்கம் ஒன்று மேற்கொள்ளப்பட்டது. இப்பிரச்சாரத்திற்குச் செய்தித் தாள்களும், வான் தந்தியும், சினிமாப் படங்களும், பொதுக் கூட்டங்களும் பெருவாகப் பயன்படுத்தப்பட்டன. ஜனதிபதியால் வெளியிடப்பட்ட விதிக் கோவைகளை ஏற்று, அவற்றில் கையெழுத்திட்ட பணி முதல்வர்கள் (தொழிலதிபர்கள்) யாவருக்கும் நீல நிறக் கழுகு பொறித்த சின்னங்கள் அடையாளமாக வழங்கப்பட்டன. இத்தகைய தொழில் முதல்வர்களுடன் மட்டுமே தொடர்பு வைத்துக் கொள்ளச் சம்மதித்த நுகர்வோருக்கும் இச்சின்னம் வழங்கப்பட்டது. தவிரவும், இம்மீட்சித் திட்டம் பண்டங்களின் விலைகளைக் கூடியவரையில் ஒரேமாதிரியான மட்டத்தில் நிலைபேறுறச் செய்யவும், தற்கொலைக்கு ஒப்பான விலை வெட்டுகளைத் தடுக்கவும், போட்டிச் சமமான தொழில்களில் கூலிகளையும், வேலை நேரத்தையும் ஒரே தன்மைத்தாக ஆக்கவும், வேலை நேரத்தை மேலும் வெட்டு செய்யவும், மணிக்கூறு கூலிகளை உயர்த்தவும், சர்வாதீனங்களின் ஆட்சியிலிருந்து பாதுகாப்பு அளிக்கவும், சிறு தொழில்களுக்கு வேண்டிய பாதுகாப்பை ஏற்படுத்தவும் முயன்றது என்பதை அறிய வேண்டும். இவ்வகையில் கூலி உயர்விலுைம் வேலை நேரக் குறைப்பினுைம் ஏற்படக்கூடிய கூடுதலான செலவைச் சமாளிக்க வேண்டியுள்ள எல்லாத் தொழில்களுக்கும் தாராளமாகக் கடன்களை வழங்கித் துணை புரிதற்கு மறு சீராக்க நிதிக்

கார்ப்பொரேசனுக்கு (Reconstruction Finance Corporation) அதிகாரம் அளிக்கப்பட்டிருந்தது. இவ்வாறெல்லாம் அமெரிக்கத் தொழில் அமைப்பை, அதை அச்சுறுத்திய வீழ்ச்சியிலிருந்தும், அழிவிலிருந்தும் காப்பாற்றவும் மேலும், பொருளாதாரத் திட்டப்பாட்டு மூலமாக அமெரிக்கத் தொழிலை முதலாளித்துவ முறை அமைப்பிற்குள்ளாகவே மறுபடியும் புத்தாக்கம் செய்யவுமே நியூ டீலின் தொழில்துறைத் திட்டம் வழங்கப்பட்டது. இத்திட்டத்தின் பயன் விளைவுகளும் பேரளவுக்கு வெற்றிகரமானவையாகவேயிருந்தன எனலாம். இத்திட்டத்தின் காரணமாக அமெரிக்காவில் தொழிலின் உற்பத்தி அளவும், தொழிலில் வேலைக்கமர்த்தப்பட்டோரின் அளவும் 37 சதவீதம் உயர்ந்தன. மேலும், கூலிகளும் 25 சதவீதம் கூடுதலாயிருந்தன என்றும் தெரிகிறது.

ஆயினும், அவப்பேருன வகையில் மேற்கூறப்பட்ட தேசியத் தொழில் மீட்சிச் சட்டத்தை அது அமெரிக்க நாட்டின் அரசியல் சட்டத்திற்கு முரணானது என்று அந்நாட்டின் சுப்ரீம் நீதி மன்றம் 1935-ஆம் ஆண்டு, மே திங்களில் தீர்ப்பு கூறியது. இதன் விளைவாகத் தேசிய மீட்சி நிர்வாகமும் கலைக்கப்பட வேண்டியதாயிற்று. அதுவன்றி அமெரிக்கத் தொழிலாளருக்கும் இது ஒரு பேரடியாயிற்று. ஆயினும், இந்நெருக்கடியைத் தவிர்க்க அமெரிக்கக் காங்கிரசு வேக்னர் சட்டம் என்ற புதிய சட்டமொன்றை உடனடியாக நிறைவேற்றி, முந்திய தேசியத் தொழில் மீட்சிச் சட்டத்தின்கீழ்த் தொழிலாளர் அனுபவித்துவந்த எல்லா உரிமைகளையும் இழப்பின்றிப் பாதுகாத்தது. அமெரிக்க சுப்ரீம் நீதிமன்றமும் வியப்பளிக்கும் வகையில் இப்புதிய சட்டத்தை 1937-ஆம் ஆண்டில் ஏற்றுக் கொண்டது.

### நியூ டீல் திட்டத்தின் வரிக் கொள்கையும் வாணிகக் கொள்கையும்

அமெரிக்கச் சமூகத்தை நியூ டீல் இலட்சியத்திற்கேற்ப மாற்றியமைப்பதற்கு நாட்டின் வரித்துறைக் கொள்கையிலும் வாணிகத்துறைக் கொள்கையிலும் தக்க திருத்தங்களைச் செய்து

கொள்ள வேண்டியது அவசியமாயிற்று. இதன்படி அமெரிக்க அரசுக் கருவூலத்தின் அமைச்சர், நிதித்துறை வல்லுநர்கள், பொருளாதார வல்லுநர்கள் முதலியோரின் ஆலோசனையின் பேரில் நாட்டின் வரி அமைப்பு முழுவதையுமே திருத்தம் செய்தார். இப்புது வரித் திட்டத்தின்படி முதலீட்டுப் பண்ட உற்பத்தித்தொழில்கள் (Capital Industries) 8 சதவீதம் உச்சம் வரை இலாபம் ஈட்டிக் கொள்ளலாமென்றும், 8 சதவீதத்திற்கு மேற்பட்ட கார்ப்பொரேசன் வருமானத்திற்கு வளர்வீதத்தில் வரிவிதிக்கப்படவேண்டும் என்றும் தீர்மானிக்கப் பட்டது. தவிரவும் உழைப்பூதியங்கள், மற்றும் தம் முயற்சி வருவாய்கள் (உழைத்துப் பெறும் ஊதிய வகைகள்) பேரில் விதிக்கப்படும் வரி வீதத்தைவிட முதலீட்டு வருமானங்களின் (உழைத்துப்பெரு வருமான வகைகள்) பேரில் விதிக்கப்படும் வரி வீதம் கூடுதலாக்கப்பட்டது. சுருங்கக் கூறின், அரசாங் கத்தின் வரிக் கொள்கையானது அதற்கு வருமானமளிக்கும் ஒரு சாதனமாக மட்டுமன்றிச் சமூகப் பொருளாதார நியாயத்தை நிலைநிறுத்தும் ஒரு கருவியாகவும் அமெரிக்காவில் அது போது பயன்படுத்தப்பட்டதென்று கூறுவது பொருந்தும்.

ரூஸ்வெல்ட் தம் வாணிகக் கொள்கையை 1933-ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் விவரித்துக் கூறியிருந்தார். அவர் கூற்றின்படி அக்கொள்கை அமெரிக்கத் தொழிலையும் விவசாயத் தையும் அவற்றின் பேரிலிருந்த கட்டுப்பாடுகளிலிருந்து விடுவித்து அவற்றிற்குத் துணை செய்வதாகும். இந் நோக்கத்துடனேயே அமெரிக்க வாணிகத்திற்கு உதவி புரியும் முயற்சியில் பல நாடுகளுடனும் இருமுக வாணிக ஒப்பந்தங்கள் பல செய்து கொள்ளப்பட்டன. 1933-ஆம் ஆண்டில் உலக வாணிகத்தின் மொத்தப் பெறுமானம் 1929-ஆம் ஆண்டிலிருந்த வாணிகத்தின் பெறுமானத்தில் 70 சதவீதமாகக் குன்றிவிட்டது. அதிலும் அமெரிக்க ஐக்கிய நாட்டு வாணிகம் மிகவும் கடுமையாகப் பாதிக்கப்பட்டிருந்தது. அமெரிக்க ஐக்கியநாட்டின் ஏற்றுமதியை எடுத்துக் கொள்வோமாகில், 1929-ம் ஆண்டி லிருந்த அதன் அளவில் 52 சதவீதத்திற்கும், அதன் பெறுமானத்தில் 32 சதவீதத்திற்கும் அது 1933-இல்

விழுந்துபட்டது. இவ்வாறு ஏற்றுமதி வாணிகத்தில் ஏற்பட்ட பெரு வீழ்ச்சியானது அமெரிக்காவில் மீத்துயர் விளைத்தது. மக்களுக்கும், இயந்திரப் பொறிகளுக்கும், வேலையில்லாமல் போயிற்று. நாட்டின் கப்பல்கள் சுமையின்றித் துறைமுகத்தில் தேங்கிக் கிடந்தன. விவசாயப் பண்ணைகளை நாடியிருந்த குடும்பங்கள் வருமானமிழந்து தவித்தன; தொழிலாளர்களின் இல்லங்கள் அதிருப்தியில் ஆழ்ந்தன. இச்சூழ்நிலை அமெரிக்க அரசாங்கம் எத்தகைய பொருளாதாரத் திட்டத்தையும் வகுத்து, அதை வெற்றிகரமாகச் செயல்படுத்துவதை மிகவும் கடினமாக்கிற்று. தன்னுடைய நியூ டீல் திட்டத்தின் வாசகத்தில் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் மேற்கூறிய நெருக்கடியைச் சமாளிக்கும் வழிவகைபற்றிக் கூறியுள்ள கூற்று கவனிக்கத்தக்கதாகும். 'ஒவ்வொரு நாடும் தன் வரித் திட்டத்தையும், சுங்க முறையையும் விரைவில் மாற்றியமைத்துக்கொள்ளவும், திடீரான நிலைமை மாற்றங்களைச் சமாளித்துக் கொள்ளவும், ஏற்றுமதி இறக்குமதிகளில் பேரேற்ற இறக்கங்களைத் தவிர்த்துக் கொள்ளவும் தயாரான நிலையில் எப்போதும் இருத்தல் வேண்டும். அப்போது தான் விரைவாக மாறுபடும் ஒரு சமூகத்தின் தேவை மாற்றத்திற்கேற்ப நாட்டின் அயல்நாட்டு வாணிகப் போக்கையும், பொருளாதார நடவடிக்கையின் இயக்கத்தையும் சரிப்படுத்திக் கொள்ள முடியும்.'[1]

## நியூ டீல் திட்ட எதிர்ப்பு: *(Opposition to New Deal)*

1934-ஆம் ஆண்டின் இறுதிக்குள், நியூ டீல் திட்டம் வெளிப்படையான ஒரு வெற்றியைப் பெற்றிருந்தது. வாணிகத் துறையில் இலாப வாய்ப்பு மீண்டது; பாங்குத் துறை சீர்திருத்தப்பட்டு, வலுவாக்கப்பட்டிருந்தது. வட்டி வீதங்கள் வெகுவாகக் குறைக்கப்பட்டிருந்தன. ஆனால், வாணிகத்திலும் தொழிலிலும் போட்டி குன்றியிருந்தது. உற்பத்தி குறைவு பட்டிருந்தது; விலைகளோ உயர்த்தப்பட்டிருந்தன. நாட்டின் சுங்க வரி உயர்த்தப்படவில்லையாயினும், டாலரின் மதிப்பை

1. Speeches of President Roosevelt.

அரசாங்கம் குறைவாக்கிய காரணத்திஞல் சுங்கவரிகளில் 60 சதவீத உயர்வு ஒன்று ஏற்பட்டாற் போலாகிவிட்டது.

ஆயினும், வாணிகத்துறையில் நம்பிக்கை தாஞக மீளும்வரை காத்திருக்க ஜஞதிபதி தயாராக இல்லே. ஆகவே, மேற்கூறிய நடவடிக்கைகளோடுகூட, மக்களிடையே வாங்கும் ஆற்றலே வளரச்செய்து அதன்மூலம் நாட்டின் பொருளாதாரக் குறை பாடுகளே நிரப்புதற்குப் பிரமிக்கத்தக்கதொரு புது முயற்சியில் ஜஞதிபதி முனேந்தார். இக் குறிக்கோளுடனேயே ரூஸ்வெல்ட் தம் நிர்வாகத்தின் முதல் நான்கு ஆண்டுக் காலத்திற்குள் 12,000 மில்லியன் டாலர் தொகையைக் குடியானவர்களின் இடருதவி யிலும், பொதுக் கட்டடப் பணிகளிலும் செலவிட்டார். இவ்வாறு வாங்கும் ஆற்றலே மக்களுக்கு அளிப்பதால் பண்டங்களுக்கான தேவை அதிகரிப்பதுடன் வாணிகத்துறையில் நம்பிக்கையும் மீளும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆஞல், எதிர்பார்த்த அளவுக்கு வெற்றி கிடைக்கவில்லே. இச் செலவீட்டால் ஏற்பட்ட தேவை அதிகரிப்பு முன்பிருந்த தொழிற்சாலேகளே மறுபடியும் இயங்கச் செய்ததாயினும், புதிய தொழில் மனேகளே ஆரம்பிக்கு மளவுக்குத் தொழில் முதல்வர்களுக்கு இது ஊக்கம் அளிக்கக் கூடவில்லே. காரணம், தொழில் முதல்வர்கள் அரசாங்கம் இட ருதவியாக மேற்கொண்டு வந்த பொதுப்பணிகளே எல்லாம் எந்த நேரமும் நிறுத்திக்கொண்டுவிடக்கூடும் என்று அஞ்சினர். தவிரவும், தொழில் முதல்வர் பலருக்கு நியூ டீல் திட்டம் ஒரு இடச்சாரித் திட்டமாகவே தோன்றிற்று. இது ஒன்றே வாணிகர் களின் ஊக்கத்தை அழிக்கப் போதுமானதாயிருந்தது என்ருல் மிகையாகாது. தொழிலாளர்களுக்கு வலிமையளிக்கவும், தொழிற் சங்கங்களுக்கு ஆதரவளிக்கவும், கூலிகளே உயர்த்தவும் ஜஞதிபதி தேசிய மீட்சி நிர்வாகத்தின்மூலம் செய்த முயற்சிகள் யாவும் பழ மரபில் நம்பிக்கையுடைய தொழில் முதல்வர்களுக்குத் தகாதவையாகத் தோன்றின. அதேபோல ஜஞதிபதியின் பிரம்மாண்டமான பொதுக் கட்டடப் பணித் திட்டமொன்றைச் செயல்படுத்துவதற்கு அவசியமான நிதியைப் பெறவேண்டி மேற்கொள்ளப்பட்ட வரவு பற்றுக்குறை பட்ஜெட்டுகளும், பணப் பெருக்கக் கொள்கைகளும் பழமரபு சார்ந்த பொது நிதி

யியலின் புனித விதிகளுக்கு (*Canons of Orthodox Finance*) முற்றிலும் முரணுகவே தோன்றின. ஆகவே, ஜனுதிபதியால் நியூ டீல் திட்டத்தின்கீழ்ச் செலவழிக்கப்பட்ட பெருந்தொகைகள் யாவும் தொழில் துணிவோரின் பணப் பெட்டிக்குள் பாய்ந்து நின்றுவிட்டன. அவை அங்கிருந்து அரசாங்கக் கடன்களின் வாயிலாக மறுபடியும் அரசாங்கத்தின் கைகளையே வந்தடைந்தன. மீண்டும் இத்தொகைகள் முன்னர் வருணித்தபடி பொதுப் பணிகள்மூலம் மக்களிடையே வழங்கப்படுவதாயின. இவ்வாறு தொழில் முதல்வர்களின் அச்சத்தாலும், அறியாமையினுலுமே நியூ டீல் கொள்கைத் திட்டம் தோல்வியுற வேண்டிய தாயிற்று என்ருல் முற்றிலும் பொருந்தும்.

சாலைகள்—அமைப்பு, காடுகள்—வளர்ப்பு, மண்வள—பாதுகாப்பு ஆகிய பணிகளை மட்டும் நியூ டீல் திட்டத்தின் தொழில் மீட்சிக்கான முக்கிய நடவடிக்கைகளாக அரசாங்கம் கொண்டிருந்தவரை அமெரிக்க நாட்டின் தொழிலுக்கு இவற்ருல் அதிகப் பயன் ஒன்றும் ஏற்பட்டுவிடவில்லை. ஆயினும், தொழிலின் நன்மையைக் கருதி ஜனுதிபதி நாட்டின் பொது வசதிப் பணிகள் (*Public Utilities*) துறையில் புகுந்து டி. வி. ஏ. (*T. V. A.*) போன்ற கார்ப்பொரேசன்களைத் தோற்றுவிக்க முற்பட்டபோது, அவர் தனியார் தொழில் முயற்சிக்கு எதிரான ஒரு போட்டியை வளர்ப்பதாகவே குற்றஞ் சாட்டப்பட்டார். டி. வி. ஏ. போன்ற நிறுவனங்கள் கனரகத் தொழிலுக்கும், நுகர்வோருக்கும் நிரம்ப செழுமையளிக்கக் கூடியனவாயினும் தனியார் தொழில் இவற்றை விரும்பவில்லை. இதன் காரணமாகவே, இவற்ருல் தொழில் முதல்வர்களின் நம்பிக்கை அதிர்ச்சியுற்றது.

ஆயினும், பொருளாதார மந்தத்தின் பேரிடியால் அதுபோது அதிர்ச்சியுற்றிருந்த தொழில் முதல்வர்கள் ஜனுதிபதியின் இந் நடவடிக்கைகளுக்கு ஆரம்பத்தில் எவ்வித எதிர்ப்பும் தெரிவிக்கவில்லை; உண்மையில் ஆரம்பத்தில் அவர்கள் நியூ டீல் திட்டத்தை வரவேற்று, ஜனுதிபதியுடன் ஒத்துழைக்க முன் வந்தார்கள். ஆனுல், மந்தத்தினுல் ஏற்பட்டிருந்த ஆரம்ப அதிர்ச்சி மறையவே தொழிற் சங்கங்களையும், டென்னசி நதி திர நிறுவனத்தையும் ஜனுதிபதி தோற்றுவிக்கத் தொடங்கியபோது,

அமெரிக்க நாட்டுத் தொழில் முதல்வர்கள் அவருக்கு எதிர்ப் பளிக்கத் திரண்டனர். இறுதியில் இவர்கள் அமெரிக்க சுப்ரீம் நீதிமன்றத்தின் மூலம், ஜனாதிபதி ரூஸ்வெல்டின் தேசிய மீட்சி நிர்வாகத்தையும், அமெரிக்க விவசாயத்துறை ஒழுங்குபாட்டு நிர்வாகத்தையும் அமெரிக்காவின் அரசியல் சட்டத்திற்கு முரணானவை என்று தீர்ப்பு பெற்று வெற்றி பூண்டார். நியூ டீல் திட்டத்திற்கு இவ் வகையில் சாவு மணி அடிக்கப்பட்டுவிட்டது.

## நியூ டீல் திட்டத்துக்குக் கண்டனம் (Criticism)

நியூ டீல் திட்டமானது பலரால் வெவ்வேறு காரணங் களுக்காகக் குற்றங் காணப்பட்டது. சிலர் அத்திட்டத்தைத் தீவிரமானது, புரட்சிகரமானது என்று கண்டித்தனர்; மற்ற வர்களோ அத்திட்டத்தை மிகவும் பிற்போக்கானது என்று கூறிப் பழித்தனர். ஆர்தர் லூயி போன்ற நுண்ணறிவாளர்கள் இத் திட்டத்தின் பயன் குறித்து ஐயம் தெரிவித்தனர். இவ்வகையில் லூயி வெளியிட்ட கருத்து கவனிக்கத் தக்கதாகும். 'ஜனாதிபதி ரூஸ்வெல்ட் புதிதாகப் பதவி ஏற்று, 'ஒயிட் ஹவுஸ்' மாளி கைக்கு வந்திறங்கியபோது அன்னருடைய அரசாங்கத்தின் பேரில் பொதுமக்கள் கொண்டிருந்த உணர்ச்சி ஆர்வத்தைப் போல் இதுவரை எங்குமே கண்டதில்லை. எனினும், இந் நிர்வாகத்தின்போது அமெரிக்க நாட்டின் வடக்குப் பகுதி பொருளாதார மீட்சியில் ஒரு சிறிதும் முன்னேற்றம் அடைய வில்லை. மற்றக் கேடுகளைப்போலவே பொருளாதாரக் கேடுகளும் நல்ல எண்ணங்களாலேயே மட்டும் நீக்கப்படக் கூடியவை அல்ல. மேலும், அதுவே சிறந்து விளங்கும் மருந்து என்பதுமில்லை. தவிரவும், இதுவே விரைவில் பிரச்சினைக்குத் தீர்வுகாணக் கூடியதென்றோ வெற்றியை நிரம்ப அளிக்க வல்லது என்றோ கொள்ளவும் முடியாது. ஆகவே, ஜனாதிபதி ரூஸ்வெல்டின் பொருளாதாரக் கொள்கையின் பெரும் பகுதி எப்படி இருக்கிறதென்றால் மிகுந்த சுரம் கண்ட நோயாளி ஒருவனுக்கு மிகவும் ஐயமற்ற மருத்துவம் அவனைக் குளிர்

அறைப் பெட்டிக்குள் மூடி வைப்பதாகும் என்று எண்ணும் ஒருவரின் சித்தாந்தத்தைப் போலவேயிருக்கிறது.'[1]

நியூ டீல் திட்டமாவது பொருளாதார மந்தத்தை வெல்வதற்கு அமெரிக்க நாடு மேற்கொண்ட அமெரிக்கத் தனி முறையாகும். இம்முறை மற்ற நாடுகள் கையாண்ட முறைகளைவிடச் சிறந்தது என்றே அமெரிக்காவில் பெரும்பாலோர் கருதினர். நாட்டைப் பொருளாதார மந்தத்தின் சிக்கலிலிருந்து விடுவிப்பதற்குப் பல்வேறு வழிகளிலும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. கடன்பட்டோருக்குத் துணை புரியவும், உற்பத்திக்கு ஊக்க மளிக்கவும் பண வீக்க முறையும், நிருவகிக்கப்பட்ட நாணய முறையும் கையாளப்பட்டன ; பாங்குகள், இன்சூரன்சுக் கம்பெனிகள், இருப்புப் பாதை நிறுவனங்கள், உற்பத்தித் தொழில்கள் யாவற்றையும் நிதி முறிவிலிருந்து காப்பாற்றி, அவற்றை உறுதியான அடிப்படையில் திரும்பவும் நிலைநிறுத்து வதற்குப் பொதுமக்களின் நம்பிக்கையை மீளச் செய்வது மிகவும் இன்றியமையாததாகிவிட்டமையால், அரசாங்கம் இந்நிறுவனங்களுக்கெல்லாம் வேண்டிய மட்டும் தாராளமாகக் கடன் நிதிகளை வாரி வழங்கிற்று. பொதுக் கட்டடப் பணிகள் திட்டமொன்றை மேற்கொள்வதன் வாயிலாக வேலை யில்லாதோருக்கெல்லாம் வேலை வாய்ப்புக்கள் அளிக்கப்பட்டன. தவிரவும், வரவெஞ்சிய மூலம் மக்களின் வாங்கும் ஆற்றலைப் பெருக்கி நாட்டின் பொருளாதாரத்திற்குப் புத்துயிர் அளிக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. நியூ டீல் திட்டத்தின் பல திறப்பட்ட இம்முறைகளையும் போற்றவோ தூற்றவோ செய்வதியலும் என்றால் வியப்பில்லை.

எப்படியாயினும் இதுவரை எப்பொழுதும் காணாத வகையில் அமெரிக்க அரசாங்கம் நாட்டின் சமூகத் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் தலையீடு செய்தது என்பதை உண்மையில் மறுக்கவியலாது. உரிமையற்ற மக்களுக்குப் பாதுகாப்பளிக்கவும், நாட்டின் ஆண்டு வருமானத்தைப் பெருக்கச்

1. Lewis : Economic Problems of Today, p. 170.

செய்யவும், பல்வேறு வகை உற்பத்தியாளர்களிடையேயும் அந்நாட்டு வருமானத்தை நேர்மையான முறையில் பகிர்ந்தளிக்கவுமே அமெரிக்க அரசாங்கம் செயற்பட்டுவருகின்றது. இந்நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக அமெரிக்க அரசாங்கம் மக்களுக்கு சமூகப் பாதுகாப்பை உறுதி செய்யும் முழுப் பணியையும் தானே ஏற்றுக்கொண்டதுடன் தொழில் துறையிலும், புதுத் தொழில் தொடங்குவோனாகவும், தொழில் நடப்பிலும் பங்கு கொள்பவனாகவும் இன்று ஆகிவிட்டது. 'சுருங்கக் கூறின், நேற்றுவரை, தலையிடாக் கொள்கையில் ஆழ்ந்த நம்பிக்கையுடையதாக அல்லது தொழில் முனைப்பற்றதாக இருந்த நம் அரசாங்கம் இன்று ஒரு தொழில் முன்னோடி அரசாங்கத் தோற்றமெடுத்திருக்கின்றதென்றால் மிகையாகாது. இன்று நம் அரசாங்கம் தொழிலுக்குரிய இயந்திரப் பொறி தளவாடங்களை அமைக்கவும், இயக்கவும் செய்கிறது; பண்டங்களையும், சேவைகளையும் வாங்கவும் விற்கவும் செய்கிறது. கடன் நிதிகளை வழங்குகிறது; பண்டங்களைக் கிடங்குகளில் சேமித்து வைக்கிறது; போக்குவரத்துக்காகக் கப்பல்களையும், இருப்புப்பாதைகளையும் தொழில்படுத்துகிறது. ஒருவகையில் பார்க்கும்போது அரசாங்கம் இம்முயற்சிகளின் வாயிலாக வலுவற்ற சாதாரண மக்கள் சுரண்டப்படுவதைத் தடுப்பதற்குரிய பாதுகாப்புக்களை எழுப்பவே முனைந்திருக்கின்றது என்பது விளங்கும். ஆனால், மற்றொரு வகையில் நோக்கின், அரசாங்கம் தனியார் தொழில் முயற்சியுடன் போட்டியிடவும், மேலும் தனியார் தொழிலுக்குப் பதில் அரசாங்கத் தொழிலை நிலை நிறுத்திக்கொள்ளவும் முனைகின்றது என்றே தோன்றும். ஆயினும், முதலாளித்துவ முறையுடன் தொடர்பறுத்துக் கொள்ளாமலே இப்புது முயற்சிகளில் அரசாங்கம் ஈடுபடுகிறது'.[1] ரூஸ்வெல்ட் தம்முடைய பல்வேறு சட்டங்களின் மூலமும் தாம் மேற்கொண்டுள்ள முயற்சி முதலாளித்துவத்தைக் காப்பாற்றுவதற்கேயன்றி அதை ஒழிப்பதற்கல்ல என்று உறுதி கூறியதுடன், அதைச் சாதித்துக் காட்டிவிட்டார்

1. Louis Hacker: American Problem of Today.

என்று இங்குக் குறிப்பிட வேண்டும். நியூ டீல் திட்டத்தால் புதிய விளைவு ஏதுமுண்டென்றால் அது அரசாங்கத்தின் ' தலையிடாக் கொள்கை ' நலிவை விரைவுபடுத்தியதாகும்.

## முடிவுரை

முடிவாகக் கூறுமிடத்து நியூ டீல் பரிசோதனை ஆரம்பத்தில் திட்டமிடப்பட்ட அளவுக்கு வெற்றி பெறவில்லையென்றே கூற வேண்டும். ஆனால், ' திட்டமிட்ட பொருளாதாரம் ' (*Planned Economy*) ' கட்டுக்குட்படுத்தப்பட்ட முதலாளித்துவம் ' (*Controlled Capitalism*) போன்ற புதுக் கருத்துக்களை உலகிற்கு அறிமுகப்படுத்தி, அவற்றை உலகம் முழுதும் பரவச் செய்தும் நியூ டீல் உலகில் ஒரு ஆழ்ந்த விளைவையே ஏற்படுத்திவிட்டது. மேலும், நியூ டீல் திட்டம் உலகுக்கு ஒரு பேருண்மையை எடுத்துக் காட்டியது. தங்கு தடையற்றதும் சுரண்டல் நிறைந்ததுமான தனியார் சுயேச்சையின் பொற்காலம் முடிவுற்றது என்பதையும் பொதுமக்களின் நலனுக்கேற்றவாறு நாட்டின் பொருளாதாரத்தைத் திட்டமிட்டுக் கொள்ளும் புதிய ஊழி ஒன்று தொடங்கிவிட்டது என்பதையும் நியூ டீல் பறை சாற்றிவிட்டது. நியூ டீல் திட்டமானது பொருளாதாரத் துறையில் ஒரு பெரும் பரிசோதனையாகும். அது வருங் காலத்திற்கு ஒரு பெரும் பாடமாகவும் அமைந்தது. அதைத் துணிகரமாகச் செயல்படுத்திய நாட்டின் பெருந்தலைவர் ஊக்கப் பண்பும், எதிர்ப்பை எல்லாம் துணிவுடன் சமாளிக்கும் ஆற்றலும் நிறைந்தவராயிருந்தார். மேலும், நாட்டின் சுப்ரீம் நீதிமன்றத்தின் நியூ டீல் திட்டத்திற்குப் பாதகமான தீர்ப்புக் களையுங்கூட அவர் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு, தாம் மேற்கொண்ட பணியைத் தயங்காது முடித்தார் என்பதைக் குறிப்பிட வேண்டும். ஜனாதிபதி ரூஸ்வெல்ட் போன்ற ஜனநாயகத் தலைவர்களே நாட்டின் சக்தியை எல்லாம் ஒன்று திரட்டிப் பயனுள்ள பாதைகளில் செலுத்தியும், சுயேச்சை பெற்ற நாட்டு மக்களைத் தொலை நோக்குடனும், ஆற்றலுடனும், துணிவுடனும் முன்னேற்றப் பாதையில் அழைத்துச் சென்றும் ஜனநாயகப் பாதையில் எவ்வாறு நாடுகள் முன்னேறக்கூடும்

என்பதை உலகிற்கு எடுத்துக்காட்டியுள்ளனர். நியூ டீல் திட்டம் தான் அதற்கடுத்த ஊழியில் நிலவியதான நேர்மைக் கொள்கைத் திட்டம் ஒன்றுக்கும் (*Fair Deal*) வழிகோலியது என்று கூறினல் உண்மையாகும். தவிரவும், நியூ டீல் திட்டமே இரண்டாவது உலகப் போரின் நெருக்கடியை அமெரிக்கா உறுதி நம்பிக்கையுடன் சமாளிக்கக் கூடியவாறும், அப்போரில் சுயேச்சை உலகு வெற்றி பெறுதற்குப் பேரளவுக்கு அது துணைபுரியக் கூடுமாறும், அமெரிக்கப் பொருளாதாரத்தை வலுப்படுத்தியிருந்தது.

# 15. இரண்டாம் உலகப் போரும் அதற்குப் பின்னரும்

## *இரண்டாவது உலகப் போரின் ஆரம்பத்தில் அமெரிக்காவின் நிலை*

முன்னர்க் கூறியவாறு ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டின் நியூ டீல் திட்டம் ஒரு புரட்சிகரமான பொருளாதாரச் சீரமைப்புத் திட்டமாகும். இத்திட்டம் மையச் செயலாட்சியையும், பொருளாதாரத் திட்ட முறையையும் அடிப்படையாகக் கொண்டதாகும். அவப் பேருக, நியூ டீல் திட்டம் அமெரிக்க சுப்ரீம் நீதிமன்றத்தின் தீர்ப்புகளினால் ஓரளவுக்குச் சேதமுற்றது. ஆனால், இரண்டாவது உலகப் போர்க் காலத்தில் அமெரிக்காவில் நிகழ்ந்த 'உற்பத்தி விந்தைக்கு' (*Miracle of Production*) அந்நாட்டைத் தயார்படுத்தியதில் நியூ டீலுக்கு ஒரு பெரும் பங்கு உண்டு. இவ்வாறு, அமெரிக்காவின் பொருளாதாரத்தின் பேராற்றல் இரண்டாம் உலகப் போரின்போது அச்சு நாடுகளின் பிரம்மாண்டமான போர் எந்திரத்தினை முறியடித்து அழித்ததுடன், போரினால் அழிவுற்ற நாடுகளின் மறு சீராக்கத்திற்கும் பேரளவு துணை புரிந்தது. மார்சல் திட்டம் போன்ற பல சீராக்கத் திட்டங்களின் மூலம், போரினால் சேதமடைந்த நாடுகளுக்கு அமெரிக்கா புத்துயிரளித்தது என்பது உலகறிந்த ஒன்றாகும். மேலும், பொருளாதார வளர்ச்சியில் பின் தங்கிய நாடுகளின் விரைவான வளர்ச்சிக்கும் பிரம்மாண்டமானதொரு பொருளாதார உதவித் திட்டத்தை அமெரிக்கா செயல்படுத்திப் பேருதவி புரிந்தது என்பதை மறக்கலாகாது. இன்று

அமெரிக்கா தன்னுடைய வல்லமை வாய்ந்த பொருளாதாரப் பேராற்றலின் கவசத்தைப் புனைந்தே சுயேச்சை உலகின் பாது காவலனாகவும், தலைவனாகவும் காட்சியளிக்கின்றது.

1939-ஆம் ஆண்டு, ஆகஸ்டுத் திங்களில் இரண்டாவது உலகப் போர் தொடங்கியபோது அமெரிக்காவில் பொருளா தாரத் துறையில் ஒரு குழப்பமான நிலையே காணப்பட்டது. காரணம், ரூஸ்வெல்ட் செயல்படுத்தியிருந்த பற்பல பொருளா தாரச் சோதனைகளும் எதிர்பார்த்தபடியே விளைவுகளைத் தவறாது அளிக்கவில்லை என்பதேயாம். எதிர்நோக்கியிருந்த வற்றிற்கு மாறான விளைவுகள் தோன்றவே பொருளாதாரக் குழப்பம் வந்தெய்தியது. ஆயினும், இரண்டாம் உலகப் போரானது அமெரிக்காவின் இந்நிலையைத் திடீரென மாற்றிக் கேட்டைத் தவிர்த்தது. இப்போர் அமெரிக்காவின் தனிமைக் கொள்கையை (*Isolationism*) உடனடியாகத் தகர்த்தது. அத்துடன் அந்நாட்டில் புதியதொரு பாதுகாப்புத் திட்டத்தையும் விரைவில் உருவாக்கி அமெரிக்காவைப் பொருளாதார மந்த நிலையிலிருந்து விடுவித்தது. பர்ல் துறைமுகத்தின் தாக்கு தலுக்கு (1941, டிசம்பர், 7-ஆம் நாள் நிகழ்ந்த ஜப்பானியத் தாக்குதல்) வெகு முன்பே அமெரிக்க ஐக்கியநாடு போர்ப் பாதுகாப்புத் தளவாட உற்பத்திக்கான பெருந் திட்டம் ஒன்றை மேற்கொண்டு விட்டது. இத்திட்டம் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டத்தை முழுவதும் போக்கியதுடன், போர்த் தொழில் களின் மூலம் பெரும் இலாபங்களையும் அமெரிக்கா ஈட்டிக் கொள்ளத் துணை செய்தது. ஆரம்பத்தில் அமெரிக்கப் பொருளாதாரத்திற்கு ஒரு சாரம் (*Scaffolding*) போன்று அமைக்கப்பட்ட நியூ டீல் (பொருளாதார) திட்டத்தைப் போருக்குப் பிந்திய காலத்தில் ஒரு வலுவான கட்டடமாகவே மாற்றிவிட்ட சிற்பி ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டேயாவர். இத் திட்டத்தின் உறுதியான வளர்ச்சியே மந்தம், வேலையில்லாமை, கடுந்துயரம் முதலியன நிறைந்த ஓர் ஊழியிலிருந்து அமெரிக்கச் சமூகத்தை வரம்பில்லாச் செல்வமும், எல்லையில்லா வேலை வாய்ப்பும், உயர்வான வாழ்க்கைத் தரமும் நிறைந்ததொரு புதிய ஊழிக்கு அழைத்துச் சென்றது என்றால் முரணாகாது. இரண்டாவது உலகப் போர் மூண்ட ஒரு சில வாரங்களுக்

குள்ளேயே அமெரிக்க அரசாங்கம் தன்னுடைய 'நடுநிலைமைச் சட்டத்தை' (*Neutrality Act*) திருத்தம் செய்துகொண்டு, போரிடும் நாடுகள் யாவும் தன்னிடத்தில் ஆயுதங்களையும், மற்றப் போர்த் தளவாடங்களையும் ரொக்கம் செலுத்திப் பெற்றுக் கொள்ளுதற்குத் துணைபுரிய முன்வந்தது. மேலும், மறு சீராக்க நிதிக் கார்ப்பொரேசனும், ஏற்றுமதி-இறக்குமதி பாங்கும் அயல்நாடுகளுக்கு அமெரிக்கச் செலாவணியையும், கடன்களையும் அளித்துத் துணைபுரிந்தன. ஆயினும், கடன்-வாய்தா முறைச் சட்டம் (*Lend-Lease Act*) நிறைவேற்றப்பட்டவுடன்தான் அமெரிக்கா உண்மையாகவே உலகத்தின் பொருளாதாரப் போர் முனையில் இறங்கியது என்று கூறலாம். 1941-ஆம் ஆண்டில் மட்டும் இவ்வகையில் அமெரிக்கா 50 பில்லியன் டாலர் தொகையை நாட்டின் பாதுகாப்பிற்காகச் செலவு செய்திருந்தது. அரசாங்கத்தின் இப் பெருஞ் செலவீடு நாட்டின் ஆண்டு வருமானத்தின்பேரிலும் அமெரிக்கப் பொருளாதார அமைப்பின் பேரிலும் மிக முக்கியமான பொருளாதார விளைவுகளை ஏற்படுத்தியது. இதன் பயனாகவே நாட்டின் தொழில் உற்பத்தி 1939-1941-க்கு இடையிலுள்ள இரண்டு ஆண்டுகளில் இரட்டித்துவிட்டது. அதே இரண்டாண்டுகளுக்குள் நாட்டின் ஏற்றுமதியும் 3.1 பில்லியன் டாலர் மதிப்பிலிருந்து 5.1 பில்லியன் டாலர் அளவுக்குக் கூடிவிட்டது. நுகர்வுப் பண்டங் களின் உற்பத்தியும் 25 சதவிதம் உயர்ந்திருந்தது. நாட்டில் வேலையின்மை பெரும்பாலும் மறைந்தொழிந்தது. மேலும், அதுபோது வாழ்க்கைச் செலவுப் புள்ளியில் ஏற்பட்டிருந்த உயர்வைவிடக் கூலிகளில் ஏற்பட்டிருந்த உயர்வே மிகையாகவிருந்தது. அமெரிக்கா 1941-ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்களில் போரில் இறங்கிய நேரத்தில் நாட்டின் எல்லாத் துறைகளும் செழுமை நிறைந்து காணப்பட்டன.

**போர்க்கால உற்பத்தி**

1940 முதல் 1945 வரை உள்ள ஐந்து ஆண்டுகளில் அமெரிக்கா போருக்கான படைக்கலங்களைத் திரட்டுவதிலும், போர்புரிவதிலும் ஈடுபட்டிருந்தபோது போர்த் தளவாடங்களின் உற்பத்திக்காக 186 பில்லியன் டாலர் தொகையைச்

செலவிட்டிருந்தது. இருப்பினும், பர்ல் துறைமுகத் தாக்குதல் நிகழ்ந்தபோது அமெரிக்காவிடம் 1157 போர் விமானங்களும், ஏறத்தாழ அதே எண்ணிக்கையுள்ள டாங்குகளும் மட்டுமே இருந்தன. ஆனால், அடுத்த ஐந்து போர் ஆண்டுகளில் வியக்கத் தக்க அளவிற்குப் போர்த் தளவாட உற்பத்தி உயர்ந்து விட்டது. அமெரிக்கா அதுபோது 86,338 டாங்குகளையும், 297,000 விமானங்களையும், 17.4 மில்லியன் துப்பாக்கிகளையும், 64,000 விமானம் தாங்கிக் கப்பல்களையும், ஆயிரக்கணக்கான போர்க் கப்பல்களையும், சரக்குக் கப்பல்களையும், போக்குவரத்துக் கப்பல்களையும் உற்பத்தி செய்துகொண்டுவிட்டது. மேலும், அமெரிக்காவின் வாணிகக் கப்பல் குழாம் அதுபோது நான்கு மடங்காக அதிகரித்திருந்ததுடன், அதன் கப்பற் படையின் பீரங்கி ஆற்றலும் 10 மடங்காக உயர்ந்துவிட்டது. அத்துடன் 1941-ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள் தொடங்கி ஐந்து ஆண்டுக் காலத்தில் அமெரிக்கா உலகத்தின் மற்ற நாடுகளுக்காகக் கடன்-வாய்தா முறைத் திட்டத்தின் (*Lend Lease Programme*) கீழ் 49.1 பில்லியன் டாலர் பெறுமானமுள்ள சரக்குகளையும் சேவை களையும் அளித்திருந்தது என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும்.

இரண்டாவது உலகப் போர்க் காலத்தில் அமெரிக்காவின் பொருளாதார அமைப்பில் முழு நிறைவான புரட்சியொன்று நிகழ்ந்தது. அமெரிக்காவிடம் அதுபோது விவசாயத் துறை யிலும் தொழில் துறையிலும் உளதாயிருந்த மாபெரும் உற்பத்தி அமைப்பும் போரினல் ஏற்பட்டிருந்த தேவையை முழுவதுமாக நிறைவு செய்யக்கூடவில்லை. ஆகவே, போரின் தேவைக்கேற்ப அமெரிக்காவில் விவசாயத்துறையில் பெரியதொரு வளர்ச்சியும், தொழில் துறையில் ஒரு மறு சீரமைப்பும் விரிவ்பாடும் உடனடி யாக நிறைவேற்றப்பட்டன. தவிரவும், நாட்டின் பாதுகாப்புத் துறை இலாக்காக்களுக்கு வேண்டி ஏராளமான ஆட்கள் புதிதாக வேலைக்கமர்த்திக் கொள்ளப்பட்டிருந்தமையால், மற்ற உற்பத்தித் துறைகளுக்கு ஆட்கள் பற்ருக்குறை ஏற்பட்டுவிட்டது. இந்நிலை யைச் சமாளிக்கும் முயற்சியில்தான் இயந்திரங்களின் பயன் பாட்டை அதிகரிக்கவும், தொழில் துறையில் புதிய நுட்ப வளர்ச்சி களை மிகுதியாக ஏற்படுத்திக்கொள்ளவும் வேண்டியதாயிற்று.

மேலும், பல்வகை மூலப் பொருட்களும் பற்றுக்குறையாகிவிட்டிருந்தமையால் பல புதுத்துறையான உற்பத்திகளையும் கைக்கொள்ள வேண்டியதாயிற்று. செயற்கை ரப்பர், செயற்கைக் கல்லெண்ணெய் (*Gasoline*), ஆன்டி-பயாடிக் மருந்து வகைகள் (*Anti-Biotic Drugs*), ராடார் பொறி, அணுசத்தி முதலியவை போரினால் விளைந்த பல நுண்தொழில் வளர்ச்சிகளுள் மிகவும் முக்கியமானவையாகும். இவற்றின் பயனாக, இரண்டாவது உலகப் போரின் இறுதியில் அமெரிக்கா பெற்றிருந்த தொழில் இயந்திரப் பொறிகளும், தொழில் உற்பத்தித் தளவாடங்களும் போருக்குமுன் அமெரிக்கா பெற்றிருந்தவற்றைக் காட்டிலும் பன்மடங்கு திறம் மிகுந்தவையாகவிருந்தன. இதற்குச் சான்றாக, 1945-ஆம் ஆண்டில் அமெரிக்காவின் உற்பத்தியைக் கூறலாம். அவ்வாண்டில் அமெரிக்கா உலகத்தின் தயாரிப்புப் பண்ட உற்பத்தி மொத்தத்தில் பாதிக்குமேல் தானே உற்பத்தி செய்தது வியப்பூட்டும் உண்மையாகும்.

## பொருளாதாரத் திட்டப்பாடும் கட்டுப்பாடும்
## (*Economic Planning and Control*)

இரண்டாவது உலகப் போரின் விளைவாக அமெரிக்காவில் புதியதொரு பொருளாதாரத் திட்டப்பாட்டு முறையும், சமூகத்தின் பொருளாதார வாழ்வின்பேரில் பரந்ததொரு அரசாங்கக் கட்டுப்பாட்டு முறையும் எழுந்திருந்தன என்று கூற வேண்டும். போர் உற்பத்தி சபை (*War Production Board*), விலைவாசி நிர்வாக அமைப்பு (*Organisation for Price Administration*) போன்ற பல புதிய ஏற்பாடுகளின் மூலமாக அமெரிக்காவின் பொருளாதாரத்துறை மிக்க திறத்துடன் தொழிற்படுத்தப்பட்டிருந்தது. மேலும், இந் நிறுவனங்களின் துணைகொண்டு உள்நாட்டில் பொதுமக்களுக்கான பண்டங்களிலிருந்த பற்றுக்குறைகள் நன்கு சமாளிக்கப்பட்டதுடன், விலைவாசி உயர்வும் திறமையாகக் கட்டுப்படுத்தப்பட்டது. சான்றாக, அமெரிக்காவில் முதலாவது உலகப்போரின் காலத்தில் விலைவாசியில் ஏற்பட்டிருந்த உயர்வை இரண்டாம் உலகப் போர்க் காலத்தில் அங்கு ஏற்பட்டிருந்த விலையேற்றத்துடன் ஒப்பிட்டுக்

காட்டலாம். முதலாம் போர்க் காலத்தில் விலைவாசிகள் 62 சதவீதம் ஏறியிருந்தன. ஆனால், இரண்டாம் போர்க் காலத்தில், அதுபோது நாட்டிற்குப் பிரம்மாண்டமான போர்ச் செலவீடும், பெரும் பண வீக்க நிலையும் ஏற்பட்டிருந்துங்கூட விலைவாசிகள் 33 சதவீதமே ஏறியிருந்தன. தவிரவும், பங்கீடு முறை, விலைக் கட்டுப்பாடு, கூலிக் கட்டுப்பாடு, வரி விதிப்பு, கடன் எழுப்புகை, அரசு நிதி நடவடிக்கை முதலிய யாவும் இரண்டாம் போர்க் காலத்தில் முன்னிலும் மிகவும் பரந்த அளவில் மேற்கொள்ளப் பட்டிருந்தன என்பதைக் குறிப்பிட வேண்டும். அத்துடன் அவற்றில் மிகுந்த வெற்றியும் கிட்டியிருந்தது.

## போர் நிதி (*War Finance*)

முதலாவது உலகப் போரின்போது அமெரிக்காவிற்கேற்பட்டிருந்த போர்ச் செலவீடு குறைவானதேயெனினும் அதைச் சமாளிப்பது அதுபோது அமெரிக்காவிற்கு மிக்க சங்கடமாயிருந்தது. ஆனால், இரண்டாவது போரின் பிரம்மாண்டமான செலவீட்டை அமெரிக்கா சங்கடமின்றிச் சமாளிக்க முடிந்தது என்றால், அதற்குக் காரணம் முன்னிலும் வெற்றிகரமாக அமெரிக்கா இப்போது தனக்கு ஒரு நிதித்துறைத் திட்டத்தை வகுத்துக் கொண்டிருந்ததும், நாட்டின் பொருளாதார அமைப்பிலும் ஒழுங்குபாட்டிலும் புதிய நுண்முறைகளை வளர்த்துக் கொண்டிருந்ததுமேயாகும். 1941-ஆம் ஆண்டு தொடங்கி ஐந்து ஆண்டுக் காலத்தில் அமெரிக்க நாடு செலவழித்திருந்த மொத்தத் தொகையாகிய 317.6 பில்லியன் டாலரில், 281.5 பில்லியன் டாலர்வரை நேரடியாகப் போர்த்துறைக்கே செலவிடப் பட்டது. மேலும், கூட்டரசு அரசாங்கத்தின் செலவு (*Federal Expenditure*) 1941-ம் ஆண்டில் 12.8 பில்லியன் டாலராக இருந்தது. 1945-ஆம் ஆண்டில் 100 பில்லியன் டாலரை எட்டிப் பிடித்திருந்தது. அதே காலத்தில் நாட்டின் பொதுக் கடனும் 48.9 பில்லியன் டாலரிலிருந்து 258.7 பில்லியன் டாலராகத் தாவிவிட்டது. இங்கு ஒருண்மையைக் குறிப்பிடுவது நலமாயிருக்கும். முதலாவது உலகப் போரின்போது போர்ச் செலவீட்டிற்காக வரி விதிப்பின்மூலம் பெறப்பட்ட தொகையானது போர்ச் செலவீடு மொத்தத்தில் என்ன சதவீதமோ, அதைவிட

மிகையான சதவீதத் தொகை இரண்டாவது போர்க்கால வரி விதிப்பின்மூலம் போர்ச் செலவீட்டிற்குப் பெறப்பட்டது என்பதை அறியவேண்டும். இவ்வகையில் 1941-ஆம் ஆண்டில் 5.7 பில்லியன் டாலராயிருந்த கூட்டரசின் வரித் தொகை, போரின் இறுதியில் 44 பில்லியன் டாலராக உயர்ந்துவிட்டது. இரண்டாவது போர்க் காலத்தில் அமெரிக்காவில் நிதித்துறையானது சீரிய வகையில் நிர்வகிக்கப்பட்டமையாலும், பங்கீடு, விலைக் கட்டுப்பாடு, கூலிக் கட்டுப்பாடு முதலிய நடவடிக்கைகளும் மிக்க திறமையுடன் செயல்படுத்தப்பட்டமையாலும், அப்போரின் இறுதியில் அமெரிக்கா பெரும் பொருளாதார ஆற்றல் முதிர்ச்சியுடன் வெளித் தோன்றியது. இவ்வாற்றலே போருக்குப் பிந்திய காலத்தின் பல எதிர்பாராத சங்கடங்களையும் நெருக்கடிகளையும் சமாளிப்பதற்கு அமெரிக்காவிற்கு உறுதுணையாயிற்று என்றால் மிகையாகாது.

### போருக்குப் பிந்திய சிக்கல்கள் — பிற நாடுகளுக்கு உதவி

போருக்குப் பிந்திய காலத்தில் பொருளாதார மந்தமும், உறுதியற்ற நிலையும் தோன்றக்கூடுமென அச்ச மனப்பான்மை கொண்ட சில பொருளாதார வல்லுநர்கள் முன்னெச்சரிக்கை செய்திருந்தனர். ஆயினும், அம்மாதிரியான இடர்ப்பாடான நிலை எதுவும் விளையவில்லை. மாறாக, அமெரிக்கப் பொருளாதாரம் முன்போலவே உறுதிப்பாட்டுடன் நிலை நின்றதோடு, போர் முடிந்த ஒரு குறுகிய காலத்திற்குள்ளேயே அமைதிக் காலத்திற்கேற்ற வகையில் அமெரிக்கப் பொருளாதாரத்தை மாற்றி அமைத்துக்கொள்வதிலும், விலை, கூலி முதலிய கட்டுப்பாடுகளை நீக்கிக் கொள்வதிலும் மிகுந்த வெற்றி கிடைத்துவிட்டதென்று குறிப்பிடல் வேண்டும். அமெரிக்காவும் தன் பண்டைக் கொள்கையாகிய தனித்து நிற்கும் போக்கைக் கைவிட்டு, போருக்குப் பின்னர்ப் பன்னாட்டுப் பொருளாதாரக் கூட்டுறவுக் கொள்கையொன்றை ஆர்வத்துடன் கடைப்பிடிக்க ஆரம்பித்தது.

ஐக்கிய நாடுகள் அமைப்பின் பொருளாதார நிலையங்களும், சாதனங்களும் அமெரிக்காவுக்கு, அது உலகத்தின் பொருளாதார

சமூகத்திற்கு ஒரு தலைவனாக நின்று பணியாற்றும் வாய்ப்புக்கள் பலவற்றை அளித்திருந்தன என்றே கூறல்வேண்டும். போருக்குப் பின்னர் நிறுவப்பட்ட இரு பேருலக நிறுவனங்களாகிய பன்னாட்டு நாணய நிதியிலும் (*International Monetary Fund*), உலக பாங்கிலும் அமெரிக்காவே தலைமையான உறுப்பினராகத் திகழ்கின்றது. இது போன்றே பொருளாதாரத் துறையில் மிக்க வியப்பளிக்கக் கூடியதும், பிரம்மாண்டமானதுமாகிய மார்சல் திட்டத்தையும் (*Marshall Plan*) அமெரிக்கா தான் உருவாக்கியிருந்தது. ஐரோப்பிய நாடுகளின் மறு சீராக்கத்திற்கான இத்திட்டம் அமெரிக்கப் பொருளாதாரக் கூட்டுறவு நிர்வாகத்தின் மூலமாகவே செயல்படுத்தப்பட்டதாகும். உண்மையில் இது அமெரிக்காவின் ஒரு நீண்ட காலப் பொருளாதாரச் சூதாட்டம் என்றே வர்ணிக்கப்படவேண்டும். இதை அமெரிக்கா ஆரம்பித்ததன் நோக்கம் அமெரிக்காவில் ஏற்படக்கூடியதாயிருந்த ஒரு பொருளாதார மந்தத்தைத் தடுத்துக் கொள்வதும், அதே சமயத்தில் போரினால் அழிவுற்ற ஐரோப்பிய நாடுகளின் மீட்சிக்கு உதவி புரிவதுமாகும் என்பது தெளிவு. இது தவிர, கடன்களின் வாயிலாகவும், தவணை விற்பனைகளின் மூலமாகவும் பல்வேறு நாடுகளுக்கும் நேரடியான பொருளாதார உதவிகளையும் அளிக்க அமெரிக்கா முன் வந்தது. மேலும், தன்னுடன் நட்பு கொண்ட நாடுகள் யாவற்றிற்கும் அமெரிக்கா தாராளமாகப் பொருளுதவியை வழங்கியது. இவ்வகையில் இரண்டாவது உலகப் போர் முடிவடைந்தது முதல், அமெரிக்கா பிற நாடுகளுக்கு நன்கொடையாக அளித்துள்ள தொகை மட்டும் 30 பில்லியன் டாலருக்கும் மிகையாகும். இது உலக வரலாற்றில் இதுவரை காணாததொரு பொருளாதார அருஞ்செயல் என்பதில் ஐயமில்லை. இவ்விந்தைச் செயல் அமெரிக்காவிற்குச் சாத்தியமாகியது என்றால் அமெரிக்காவின் பொருளாதார வலுவே அதற்குக் காரணமாகும். இத்தகைய ஆற்றலை அமெரிக்காவுக்கு அளித்தவை அந்நாட்டின் மிக உயர்ந்த தேசிய வருமானமும், தாவிச் செல்லும் உற்பத்தித் திறனுமேயாகும். அமெரிக்கப் பொருளாதார முறையில் இன்று ஒரு சாதாரண குடிமகன்கூட உயர்ந்ததொரு வாழ்க்கைத் தரத்தைப் பெற்றுள்ளான் என்றால் அது மனிதாபிமானத்தால் அவனுக்கு அளிக்கப்படுவதன்று.

உண்மையில் அமெரிக்க நாட்டின் பொருளாதாரத்திற்கே அது ஓர் இன்றியமையாத அடிப்படையாகும்.

## முடிவுரை

இதுவரை அமெரிக்காவின் 400 ஆண்டுக்கால பொருளாதார வரலாற்றுக் காட்சியினைக் கண்டோம். அந்நாட்டின் ஆரம்பக் குடியேற்றக்காரர்களும், எல்லையோடிகளும் பல்வேறு இடர்ப்பாடுகளுடனும் போராடி ஈடு இணையற்ற வளம் கொண்ட அமெரிக்கப் புதுக்கண்டத்தைத் தங்கள் சந்ததிக்கெல்லாம் வழிவழி உடைமையாக்கிக் கொண்டதையும் பார்த்தோம். அது போன்றே, நாகரிகங் குறைந்த ஆரம்ப விவசாய சமூகமொன்று காலஞ் செல்லச்செல்ல, தன்னுடைய குறிக்கோள்களை விரிவாக்கிக் கொண்டதையும், பின்னர்த் தன்னையே வல்லமை வாய்ந்த தொழில் பூதமாக உருமாற்றிக் கொண்டதையும், இதன் வாயிலாகத் தன்னை இத்தலைமுறையின் ‘வரம்பில்லாச் செல்வச் சமூகம்’ ஆக நிலைநாட்டிக் கொண்டதையும் கண்ணுற்றோம். இன்றோ அமெரிக்கா தன் சமூகத்திலேற்படக் கூடிய பொருளாதார அலை மாற்றங்களைக் கட்டுப்படுத்திக்கொள்வதற்கும், நாட்டின் ஆண்டு வருமானத்தையும் வேலையளிப்பையும் உயர்ந்ததொரு மட்டத்திலேயே நீடிக்கச் செய்தற்கும் தக்க துணை புரியும் கருவித்தொகுதி ஒன்றையும் பெற்றிருக்கின்றது என்பதையும் அறிந்தோம். உலகத்தில் எந்த ஒரு ஜனநாயக சமூகத்திலும், அதன் பெரும்பான்மை சமூகப்பொருளாதாரச் சிக்கல்களுக்கு, தனி மனிதனின் சுயேச்சையையும், கண்ணியத்தையும் பலியிடாமலேயே தக்க தீர்வுகள் காண முடியும் என்பதற்கு இவ்வரலாறு முக்கியமானதொரு சான்றாகும் என்பதில் ஐயமில்லை.[1]

அமெரிக்கப் பொருளாதார வரலாறானது இப்புது யுகத்தில் மனிதன் தனக்கேற்பட்ட பல்வேறு இடையூறுகள், தோல்விகள், தவறுகள் முதலியவற்றிற்கிடையேயும் சாதித்துள்ள வெற்றிகளைக் கூறும் சரிதையேயாகும். இவ்வரலாறானது பொருளாதார வளர்ச்சியில் பின்னடைந்த நாடுகளுக்கெல்லாம், மனித

1. Konsolves: Key to Economic Progress, p. 107.

சமுதாயத்தின் நலத்தை உயர்த்துதற்கு நாட்டின் மூலப்பொருள் வளங்களையும், இயந்திரப் பொறிகளையும் உச்ச அளவுக்குப் பயன்படுத்திக் கொள்ளுதற்கான வழி முறையைப் பற்றிய தொரு படிப்பினையாகும் என்றால் முற்றிலும் பொருந்தும்.

அமெரிக்கச் சமுதாயத்தின் வளர்ச்சி வரலாறு உலகத்திற்கு ஒரு பேருண்மை புகட்டுவதாகும். எங்கெங்கே மனிதர்கள் மிகக் கொடிய வறுமையில் வாழ்கிறார்களோ, எங்கெங்கே அவர்கள் தங்களைச் சோர்வடையச் செய்யக்கூடியதும், மனித இனத்திற்குத் தகாததும் ஆகிய பணியைச் செய்தாக வேண்டியுள்ளதோ, எங்கெங்கே தனி மனிதர் இழிவார்ந்த பாதுகாப்பின்மையிலும், பசி, ஏழ்மை, பிணி முதலியவற்றின் அச்சத்திலும் வாழவேண்டியுள்ளதோ அங்கெல்லாம் மனிதனின் ஆன்மா ஓர் இழிவுக்குள்ளாகின்றது ; மனிதனின் கண்ணியமும், அவனுடைய மனிதத் தன்மையின் புனிதமும் தீங்கிழைக்கப் படுகின்றன. ஆனால், எங்கெல்லாம் பெருந் தொழில்களும், இயந்திர சாதனங்களும் மனித ஆன்மாவிற்கு ஏற்பட்டிருக்கின்ற இழிநிலையைத் தணிக்கப் பயன்பட்டிருக்கின்றனவோ அங்கெல்லாம் மனிதனின் ஆன்மா, வாழ்வு முழுதும் பேணி வளர்க்கப்பட்டு வளமூட்டப்பட்டிருக்கின்றது என்பதற்கு இவ் வரலாறே சான்றாகும்.

இன்று சமுதாயம் புதியதொரு கனவு உலகைக் காண்கிறது. அவ்வுலகு பேரியந்திரப் பொறிகள் இயங்கிடும் உலகாகும். ஆயினும், இவற்றை மனிதனே அடக்கி ஆள்பவனாவன். இவ் வியந்திரப் பொறிகளைப் படைத்தும், இவ்வுயிரில்லாக் கைப் பாவைகளைப் பயன்படுத்தியும், புதியதொரு சுயேச்சை வாழ்வு, புதியதோர் அழகுணர்வு, புதுமையான தோழமையுணர்வு முதலியவற்றை உருவாக்கிக்கொள்வதில் மனிதன் முனைந்து காணும் உலகே அதுவாகும். தன் மூளையில் தோற்றமெடுத்த இவ்வியத்தகு இயந்திரப் பொறிகளை, மனிதன் தன்னுடைய அறிவாற்றலால் அடக்கி ஆண்டு, சுயேச்சை, பண்பாடு போன்ற மிக உயரிய குறிக்கோள்களை அடைதற்கு அவன் பயன்படுத்திக்கொள்வது சாத்தியமே.[1]

1. Lilienthal : Big Business, p. 198-199.

பிற்சேர்க்கை

# மார்சல் திட்டம்

மார்சல் திட்டம் உலக அமைதி, உலக சுயேச்சை, கண்ணிய மான வாழ்க்கைத்தரம் முதலிய இலட்சியங்களை அடிப்படை யாகக் கொண்டதோர் உலகப் பொருளாதாரக் கூட்டுறவைச் செயல்படுத்துதற்காகவே தயாரிக்கப்பட்ட ஒரு கைதேர்ந்த திட்டமாகும். இரண்டாவது உலகப் போரினல் ஐரோப்பாவில் ஏற்பட்டிருந்த பொருளாதார அழிவின் பிரம்மாண்டமானது அப்பகுதிகளின் சுயேச்சையான மீட்சியை இயலாததாக்கி விட்டிருந்தது. போருக்குப் பின்னர் ஐரோப்பாவில் தோன்றி யிருந்த இப்பொருளாதார நெருக்கடியைக் கண்ணுற்ற அமெரிக்கா, ஐரோப்பிய நாடுகளின் மறு சீராக்கத்திற்குத் தேவையான பொருளாதார உதவியை அளிக்கவேண்டுவது அத்யாவசியமாகியது. இதற்கென அமெரிக்கா உருவாக்கிய பொருளாதார உதவித் திட்டம் மிக்க வியப்பளிக்கக்கூடியதாகும். மார்சல் திட்டமெனப் பெயரிடப்பட்ட இத்திட்டத்தின் உடனடியான குறிக்கோள், போரினல் அழிவுற்ற ஐரோப்பிய நாடுகளின் மீட்சிக்கு உதவுவதேயாயினும், பின்னர் இதுவே உலகப் பொருளாதாரக் கூட்டுறவிற்கான ஒரு வளரியக்கத் திட்ட மாகவும் பரிணமித்துவிட்டது. ஆகவே, பின்னர் இத்திட்டம் போருக்குப் பிற்கால அமெரிக்க அயல்நாட்டுக் கொள்கையுடன் இணைக்கப்பட்டுவிட்டது என்பதையும் குறிப்பிடவேண்டும்.

இரண்டாவது உலகப் போர் 1945-ஆம் ஆண்டில் முடிவுற்ற போது ஐரோப்பாவின் பொருளாதார நிலை மிகவும் வருந்தத் தக்கதாயிருந்தது. சின்னபின்னமாக்கப்பட்டிருந்த தொழில் இயந்திர தளவாடங்களும், குண்டு வீச்சுக்கு இலக்காகி இடிந்த

நகரங்களும், போர் வடுக்கள் நிறைந்த விவசாய் நிலங்களும், சேதப்படுத்தப்பட்டிருந்த துறைமுகங்களும், எரிந்து சாம்பலா யிருந்த சரக்கு-இரயில் வண்டித் துறைகளும், தொய்வடைந்து தொங்கிய பாலங்களும், தேய்வுற்றிருந்த இரயில் உருள் கலங் களும் ஐரோப்பிய நாடுகளிலெங்கும் கோரக் காட்சியளித்தன. ஐரோப்பாவின் போக்குவரத்துத் தொடர்பு வசதிகள் முழுவதும் நிலைகுலைந்து, இயக்கமற்றிருந்தன. உற்பத்திக் கருவி சாதனம் யாவும் முறிவுறும் நிலையில் காட்சியளித்தன. ஐரோப்பிய மக்களுக்கோ உணவும், உடையும், இருப்பிடமும் உடனடியாகத் தேவைப்பட்டன. வெளிநாடுகள் அளித்திருந்த உதவிக் கடன்கள் முழுதும் நுகர்வுப்பண்டங்களையும், முதலீட்டுப்பண்டங் களையும் இந்நாடுகள் விரைந்து இறக்குமதி செய்ததில் தீர்ந்துவிட்டிருந்தன. துயருற்ற ஐரோப்பிய மக்களுக்குத் தேவைப்பட்ட உணவுப் பொருள்கள், மூலப்பொருள்கள், இயந்திரப் பொறிகள், மற்றப் பண்டங்கள் அத்துணையும் அமெரிக்க ஐக்கிய நாட்டில்தான் நிரம்ப இருந்தன. அந்நாடு ஒன்றே அதுபோது உலகத்திலேயே பிரம்மாண்டமான உற்பத்தியாளனுகவும், கடனீயும் வலிமைபெற்ற செல்வந்தனு கவும் விளங்கியது. வறுமையில் ஆழ்ந்திருந்த ஐரோப்பிய நாடுகளோ தங்களுடைய தேவைகளை அமெரிக்காவிடமிருந்து விலை கொடுத்து வாங்கிக்கொள்ளச் சக்தியற்றிருந்தன. காரணம், அந்நாடுகளிடம் டாலர் நிதி இல்லாதிருந்ததேயாம். இந்நிலையில் தான் பல அமெரிக்கர்கள், ஐரோப்பாவிற்குப் பொருளாதார வீழ்ச்சி நேரிட்டால் அதனால் போருக்குப் பிந்திய கால உலகிற்கு ஏற்படக்கூடிய பொல்லாங்குகளையெல்லாம் பற்றிய சிந்தனையிலீடுபட்டனர். இதன் விளைவே மார்சல் திட்டமாகும்.

இரண்டாவது உலகப் போரின் இறுதியில் உலகத்தின் பன்னுட்டு வாணிக நிலையில் அடிப்படையான தாறுமாறுகள் காணப்பட்டன. ஐரோப்பாவின் பழைய தொழில் விஞ்சிய நாடு களுக்கும், புதிதாகத் தோன்றியிருந்த புது உலகத் தொழில் பூதமாகிய அமெரிக்காவுக்குமிடையே வாணிக உறவுப்பாட்டில் விளைந்துகொண்டிருந்த மாற்றம் இதற்கு ஒரு காரணமாகும். சான்றாக, 1914-க்கும் 1945-க்கும் இடையேயுள்ள காலத்தில்

அமெரிக்க ஐக்கிய நாடு 270 பில்லியன் டாலர் மதிப்புள்ள பண்டங்களை ஏற்றுமதி செய்திருந்தது. அதே காலத்தில் அந் நாடு 169 பில்லியன் டாலர் மதிப்புடைய பண்டங்களை மட்டுமே இறக்குமதி செய்திருந்தது. ஆகவே, அமெரிக்கா 101 பில்லியன் டாலர் அளவுக்கு ஏற்றுமதி மிகுதிப்பாடு ஒன்றைப் பெற்றிருந்தது. இதன் விளைவாகப் பிற நாடுகளிலிருந்து பொன், அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குள் தொடர்ந்து பாய ஆரம்பித்தது. இதனல் அமெரிக்க ஐக்கிய நாட்டின் பொற்குவியல் இருப்பு மொத்தம் பிரம்மாண்டமாகப் பெருகி, அதன் மதிப்பு 21 பில்லியன் டாலரை எட்டிப் பிடித்துவிட்டது. இது உலக நாடுகளின் நாணயக் காப்புப் பொன் இருப்பு மொத்தத்தில் மூன்றில் இரண்டு பங்காகும். இவ்வாறு பன்னுட்டு வாணிகப் போக்கின் மாற்றத்தாலேற்பட்டிருந்த பொருளாதார நிலை பிறழ்வுதான் இரண்டாம் உலகப் போருக்குமுன் நிகழ்ந்ததாய உலக மகா பொருளாதார மந்தத்திற்கும், சமூகப் புரட்சிகளுக்கும், அரசியல் குழப்பத்திற்கும், இறுதியில் இரண்டாம் உலகப் போராகிய பெருந் துன்பத்திற்குங்கூட காரணமாகும் என்று பலராலும் கருதப்பட்டது.

இரண்டாவது உலகப் போரின் முடிவுக்கு முன்னரே அமெரிக்கா ஐரோப்பிய நாடுகளுக்கு உதவியளிக்க ஆரம்பித்திருந்தது. 1944-ஆம் ஆண்டுக்கும் 1947-ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் மட்டுமே இரண்டாம் உலகப் போரினல் சேதமுற்ற நாடுகளின் இடருதவிக்காக அமெரிக்கா 11 பில்லியன் டாலர் தொகையை அளித்திருந்தது. இத் தொகையில் ஒரு பகுதியானது ஐக்கிய நாடுகளின் ஓர் அமைப்பாகிய 'இடருதவி. மறுசிரமைப்புக் கழகம்' (UNRRA) மூலமாகப் பயன்படுத்தப் பட்டது. மேற்கூறிய தன் உதவி நிதியில் 70 சதவீதத் தொகையை அமெரிக்கா இக் கழகத்திடமே ஒப்படைத்தது என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும். மீதித் தொகையை அமெரிக்கா இடைக்கால உதவி என்னும் பெயரால் தொடர்ச்சியான பல திட்டங்களின் வாயிலாக, சம்பந்தப்பட்ட நாடுகளுக்கு நேரடியாகவே அளித்தது. ஆனல், இவ்வுதவிகளில் பெரும் பகுதி உண்மையில் மற்ற நாடுகளின் டாலர் பற்றுக்குறையைப்

போக்கி, அவைகளுக்குத் துணைபுரிதற்கான ஒரு தற்காலிக ஏற்பாடேயாகும் என்பதை அறிய வேண்டும்.

போருக்குப் பிந்திய ஐரோப்பாவின் பொருளாதாரக் கேடு களைப் போக்குதற்கும், அக் கண்டத்தின் பொருளாதார, சமூக, அரசியல் அடித்தளத்தை மறுசீரமைத்தற்கும் மேற்கொள்ளப் பட்ட ஒரு முன் மாதிரியான புத்தாக்க முயற்சியே மார்சல் திட்ட மாகும் என்ருல் மிகையாகாது. மேலும், ஐரோப்பாக் கண்டத்தின் மறுசீராக்கத்தின் மூலமாக உலகத்தின் சீரமைப் புக்கும் அமெரிக்கா மறைமுகமாகத் துணைபுரிதற்கானதொரு திட்டமே அதுவாகும் என்று கருத வேண்டும். தன்னுடைய உலகத் தலைமையின் காரணமாக, அமெரிக்கா, இரண்டாம் உலகப் போரினுல் சேதமுற்ற தன் சக நாடுகளின் மறுசீராக்கத்திற்கு உதவி செய்யவேண்டுவது தவிர்க்க முடியாததாயிற்று. மேலும், நியூ டீல் சோதனைகளும், கடன்-வாய்தா உதவித் திட்டமும், மக்கள் நல அரசுக் கருத்தும், கீன்சின் மரபில் வந்த பொரு ளாதார வல்லுநர்கள் அறிவுறுத்திய பொருளாதாரப் புதுமுறைப் பகுத்தாய்வும், நிதித்துறைக் கொள்கையும், இவை யாவும் சேர்ந்தே மார்சல் திட்டம் போன்ற அமெரிக்க உதவித் திட்டங்கள் உருவெடுத்தற்கு ஊக்கமளித்திருந்தன என்பதைக் குறிப்பிட வேண்டும். ஐரோப்பா பெருந் துயருக்கும், மன முறிவுக்கும் ஆளாகாது தடுத்து, அதன் மறுசீரமைப்புக்கொரு திட்டம் வகுக்க அமெரிக்காவைத் தூண்டியவை இவையே. ஐரோப்பாவிற்கு அதுபோது ஏற்பட்டிருந்த பேராபத்து நிலையை நன்கு உணர்ந்தவரான ஜெனரல் ஜார்ஜ் மார்சல் என்பார் தன்னுடைய புகழ்பெற்ற ஹார்வர்ட் சொற்பொழிவின் மூலம், ஐரோப்பாவின் நெருக்கடி நிலையை அமெரிக்கப் பொது மக்களின் கூரிய கவனத்திற்குக் கொண்டுவந்தார். அன்னாரின் சொற்பொழிவு ஐரோப்பாவில் உடனடியான ஒரு பரபரப்பை ஏற்படுத்தியது. இதன் பயனுக, ஐரோப்பிய நாடுகள் பலவற் றிற்குமிடையே நிகழ்ந்த ஆலோசனையும், ஆராய்வுமே மார்சல் திட்டத்தின் தோற்றத்திற்கு வழி செய்தன. இத் திட்டத்தில் ருஷ்யாவும், கம்யூனிஸ்டு ஆதிக்க நாடுகளும் எவ்விதப் பங்கும் எடுத்துக்கொள்ளவில்லை. அமெரிக்க ஐக்கிய நாட்டுக் காங்கிரசு சபை 1948-ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்களில் இத் திட்டத்திற்கான

"வெளிநாட்டு உதவி மசோதாவை' நிறைவேற்றியது. இச் சட்டத்தின்கீழ் 'பொருளாதாரக் கூட்டுறவு நிர்வாகம்' (*E. C. A.*) என்ற புதியதொரு அமைப்பு மார்சல் திட்டத்தைச் செயலாட்சிக்குக் கொண்டுவருவதற்கென நிறுவப்பட்டது.

மார்சல் திட்ட உதவியைப் பெற்றுக்கொள்ளும் பல்வேறு நாடுகளும், அவ்வுதவிக்கு ஒத்த பெறுமானமுள்ள நிதித் தொகையைத் தாங்களும் அத் திட்டத்திற்காக ஒதுக்கவேண்டியிருந்தது. தவிரவும், இத் திட்டத்தின்கீழ் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும் உதவிபெறும் நாடுகளுக்குமிடையே தகவல்களும், தொழில் வல்லுநர்களும் பரிமாறிக் கொள்ளப்பட்டனர். மேலும், உதவிபெற்ற நாடுகளுக்கெல்லாம் மார்சல் திட்டக் கண்காணிப்புக் குழுக்களை அமெரிக்கா அனுப்பி, அந் நாடுகளுக்குத் தேவையானவையும், சாத்தியமானவையுமான உதவிகள் யாவற்றையும் செய்துவந்தது. இவையே மார்சல் திட்ட நாடுகளின் விரைவான வளர்ச்சிக்குக் காரணமாயின. மார்சல் திட்டம் அமுலிலிருந்த மூன்றரை ஆண்டுக் காலத்தில், அமெரிக்க ஐக்கிய நாடு இத் திட்டத்திற்கான உதவியளிப்பில் 12 பில்லியன் டாலர் தொகையைச் செலவிட்டிருந்தது. அதே சமயத்தில் இத் திட்ட மூலம் உதவிபெற்ற நாடுகள் தங்கள் பங்கிற்கு 9 பில்லியன் டாலர் தொகையைத் திரட்டி, இத் திட்டத்தில் ஈடுபடுத்தின. அடுத்து, 1949-ஆம் ஆண்டில் 'வட அட்லாண்டிக் ஒப்பந்தம்' (*North Atlantic Treaty*) கையெழுத்தாகிய பின்னர், ஐரோப்பிய சுயேச்சை நாடுகளின் படைக்கலப் பலத்தைப் பெருக்குதற்காகவும் இத் திட்டத்தின்மூலம் பெருந் தொகைகள் அளிக்கப்பட்டன. 1951-ஆம் ஆண்டில் அமெரிக்கக் காங்கிரசு சபை 'ஐரோப்பியக் கூட்டுறவு நிர்வாகத்தை' நீக்கிக்கொண்டுவிட்டது. அது முதல் அமெரிக்கப் பொருளாதார உதவியைக் கையாளும் பொறுப்பானது பாதுகாப்பு இலாகாவின்கீழ்ப் பணியாற்றும் 'கூட்டுப்பாதுகாப்பு நிர்வாகம்' (*Mutual Security Administration*) என்ற அமைப்பின்பால் ஒப்படைக்கப்பட்டது.

மார்சல் திட்டம் ஐரோப்பாவில் மாபெரும் வளர்ச்சியை ஏற்படுத்தி விட்டதென்றால் மிகையாகாது. போரினால் சிதைவுற்றிருந்த தன்னுடைய பொருளாதாரத்தை மேற்கு ஐரோப்பா

மறுசீரமைத்துக் கொள்வதற்கும், தன் உற்பத்தியையும் வாணிகத்தையும் பெருக்கிக் கொள்வதற்கும், இத்திட்டம் பேருதவி புரிந்தது. இத்திட்டம் ஆரம்பித்த இரண்டு ஆண்டுக் காலத்திற்குள்ளேயே ஐரோப்பிய நாடுகளின் ஏற்றுமதி வாணிகம் 50 சதவீதம் அதிகரித்துவிட்டது. மேலும், அவை களின் உணவு உற்பத்தியும், தொழில் உற்பத்தியும், மின்சக்தி ஆக்கமும் போருக்கு முந்திய கால உற்பத்தியை விஞ்சிவிட்டன.

ஆயினும், மார்சல் திட்டம் இரண்டாவது உலகப் போருக்குப்பின் அமெரிக்கா மேற்கொண்ட மாபெரும் பொருளா தார உதவித் திட்டத்தில் ஒரு பகுதியேயாகும் என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். 1945-ஆம் ஆண்டி லிருந்து அமெரிக்கா பிற நாடுகளுக்கு அளித்திருந்த பொருளாதார உதவியின் மொத்தத் தொகை 42.5 பில்லியன் டாலர் என்று பியர்டு குழுவினரும் (*Byrd Committee*), 'கிரே அறிக்கை'யும் (*Grey Report*) கணக்கிட்டிருந்தன. கிரே அறிக்கையில் ஓர் ஆலோசனையும் தெரிவிக்கப்பட்டிருந்தது. அதன்படி, அமெரிக்காவின் வெளிநாட்டுப் பொருளாதார உதவியை, ஐரோப்பாவிற்கு ஆண்டிற்கு 2 பில்லியன் டாலர் தொகையாகவும், மற்றைய வளர்ச்சி - குன்றிய நாடுகளுக்கு ஆண்டுக்கு 1.5 பில்லியன் டாலர் தொகையாகவும் ஆக்கிக் கொண்டு, அயல்நாடுகளுக்கான அமெரிக்கப் பொருளாதார உதவியின் மொத்தத்தையே ஆண்டுக்கு 3.5 பில்லியன் டாலர் களென ஒரு மேல் உச்சத்தை வரையறுத்துக் கொள்ளலாமென்று இவ்வறிக்கை சுட்டியிருந்தது. பின்னர், ஜனாதிபதி ட்ரூமன் கொண்டு வந்த 'நான்காம் பிரிவுத் திட்டமும்' (*Point Four Programme*) இம்மார்சல் திட்டத்தின் நேரடியான விளைவே யாகும் என்பதையும் நாம் அறிய வேண்டும். மேற்கூறிய உதவித் திட்டங்கள் யாவும் அமெரிக்காவின் ஒரு தெள்ளிய கருத்தின் விளைவேயாகும். வறுமை எங்கு இருப்பினும் அது மற்ற நாடுகளின் செழுமைக்குப் பேராபத்தாகும் என்னும் பேருண்மையை அமெரிக்கா உணர்ந்திருந்தது. இவ்வுணர்வால் உருவாகியதே மார்சல் திட்டம். இத்திட்டமே மற்றப் பன்னாட்டுப் பொருளாதார முன்னேற்றத் திட்டங்கள் யாவற்றின் வளர்ச்சிக்கும் உறுதுணையாயிருந்தது. அதே சமயத்தில்,

உலகத்து நாடுகள் யாவும் மற்றோர் உண்மையையும் அறிந்து கொண்டுள்ளன. அதாவது, அமெரிக்காவில் ஏதேனும் பொருளாதார மந்தம் ஏற்படின், அது உலகத்தின் செழுமைக்கே ஒரு பேரிடராகிவிடக்கூடும் என்பதை இன்று உலகம் நன்கு உணர்ந்திருக்கிறது. இறுதியாக, இங்கிலேயிலிருந்து வருங்கால உலகத்தை நாம் நோக்குங்கால் ஒன்று நன்கு புலப்படும். கூட்டு அடிப்படையில் உலக நாடுகளின் தன்னுதவிக்கென உருவாக்கப் பட்டுள்ள இப்புது முறைத் திட்டங்கள் உண்மையில் வருங்கால உலக சமுதாயத்திற்குத் தொடக்கமாயிருக்கக்கூடும் என்றே தோன்றுகிறது. அப்படிப்பட்ட ஒரு புதிய உலக சமுதாயத்தின் எழுச்சி, 20-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியை, மனிதகுலத்தின் நாகரிக வளர்ச்சிப் பரிணமத்தில், அதையொரு மிக முக்கியப் படியாக ஆக்கிவிடவுங்கூடும் என்பது சொல்லாமலே விளங்கும்.

# மாணவரின் பார்வைக்குரிய நூல்களின் பட்டியல்

## BIBLIOGRAPHY


| | | |
|---|---|---|
| 1. | Beard, Charles | An Economic Interpretation of the Constitution of the U. S. |
| 2. | E. L. Bogart | Economic History of the United States. |
| 3. | Bogart and Thompson | Readings in the Economic History of the U. S. |
| 3(a) | Bowles, Chester | New Dimensions of peace. |
| 4. | H. J. Carman | Social and Economic History of the U. S. A. |
| 5. | G. S. Callender | Selections from the Economic History of the U. S. |
| 6. | J. R. Commons | History of Labour in the United States, 2 vols. |
| 7. | do | Documentary History of American Industrial Society - 10 vols. |
| 8. | Day, Clive | History of the Commerce of the United States. |
| 9. | R. W. Dunn | American Foreign Investments |
| 10. | D. R. Dewey | Financial History of the U. S. |
| 11. | C. Edward | History of the United States, 8 vols. |
| 12. | H. U. Faulkner | American Economic History. |
| 13. | FairChild | Immigration. |
| 14. | Flugel and Faulkner | Readings in the Economic and social History of the U. S. |
| 15. | Freeman Hunt | Lives of American Merchants, 2 vols. |
| 16. | George Zules | Leading American Inventors. |
| 17. | Horace White | Money and Banking. |
| 18. | Hacker and Kendrick | United States since 1865. |
| 19. | L. H. Jenks | Migration of British capital. |
| 20. | W. W. Jennings | A History of the Economic Progress of United States. |

| | | |
|---|---|---|
| 21. | E. R. Johnson | History of Domestic and Foreign commerce of the U. S., 2 vols. |
| 22. | Jenks and Clark | The Trust problem. |
| 23. | D. G. Kousonlas | Key to Economic Progress of U. S. A. |
| 24. | I. Lippincott | Economic Development of U. S. A. |
| 25. | E. D. Lilienthal | Big Business. |
| 26. | Charles and Mary Beard | The Rise of American Civilization. |
| 27. | Myers Gustave | History of Great American Fortunes 3 vols. |
| 28. | Nearing Scott and Freeman Joseph | Dollar Diplomacy. |
| 29. | E. P. Uberholtzer | History of the United States since the Civilization, 3 vols. |
| 30. | V. L. Parrington | Main currents in American Thought, 3 vols. |
| 31. | G. F. Redmond | Financial Giants of America. 2 vols. |
| 32. | Selig Perlman | A History of Trade Unionism in the United States. |
| 32.(a) | A. H. A. Sanford | Short History of Agriculture in USA. |
| 33. | F. W. Taussig | Tariff History of thc United States. |
| 34. | D. H. Wells | Recent Economic changes. |
| 35. | A. S. Bolles | Industrial History of the United States. |
| 36. | T. W. Van Metre | Economic History of the United States. |
| 37. | J. R. Craf | A Survey of American Economy 1940-46 |
| 38. | S. E. Harris | Prices and Related controls in the U. S. |
| 39. | Nelson, Donald | Arsenal of Democracy. |
| 40. | E. R. Stettinius | Lend Lease : Weapon for victory. |
| 41. | B. Mitchell | Depression Decade. |
| 42. | Rauch, Basil | The History of the New Deal. |
| 43. | S. A. Slichter | The American Economy. |
| 44. | John Galbraith | The Affluent society. |
| 45. | John Gunther | Inside U. S. A. |
| 46. | A. H. Hansen | America's Role in World Economy. |
| 47. | S. S. Alexander | The Marshall Plan. |
| 48. | Adams and Redners | American Foreign Assistance. |

# சென்னைப்

# பல்கலைக்கழக பி. ஏ. பட்டப் பரீட்சை

## வினாக்கள்

**பாகம் II — அமெரிக்க ஐக்கிய நாட்டின் நவீனப் பொருளாதார வளர்ச்சி**

### ஏப்ரல், 1960

1. அமெரிக்கச் சுதந்தரப் போர் விளைந்தமைக்குப் பொருளாதாரக் காரணங்களாய் அமைந்தவற்றை விவரி.

2. அமெரிக்க விவசாய முறைகளிலும், நுண்ணியலிலும் ஏற்பட்ட புரட்சியின் போக்கை வரைக.

3. தொழில் இணைப்புக்களின் வளர்ச்சிக்குக் காரணங்களாயிருந்தவை யாவை ?

4. பெடரல் ரிசர்வ் பாங்கு முறையின் தோற்றத்தையும், வளர்ச்சியையும், சாதனையையும் விவரி.

5. தற்கால உலகப் பொருளாதாரத்தில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் பங்கு யாது?

### செப்டம்பர், 1960

1. "அடிப்படையில் அமெரிக்க உள்நாட்டுப் போர், மாறுபட்ட பொருளாதார வகுப்புச் சுயநலங்களால் விளைந்ததொரு மோதுகையேயாகும்" — விவாதி.

2. உள்நாட்டுப் போருக்குப் பின் நிகழ்ந்த அமெரிக்க ஐக்கிய நாட்டின் விரைவான தொழில் வளர்ச்சிக்குக் காரணங் கூறுக.

3. அமெரிக்க ஐக்கிய நாட்டில் இரயில்வேக்களின் வளர்ச்சியைச் சித்தரி ; மேலும் அந்நாட்டின் பொருளாதாரத்தில் அவற்ருல் ஏற்பட்ட விளைவுகளைக் குறிப்பிடுக.

4. அமெரிக்க ஐக்கிய நாட்டில் தொழிற் சங்க இயக்கத்தின் முக்கிய அம்சங்களை விவரி.

5. நியூ டீல் திட்டத்தின் குறிக்கோள்கள் யாவை? அத் திட்டத்தின்கீழ்க் கையாளப்பட்ட ஏற்பாடுகளை விவரித்து, அவ்வேற்பாடுகளின் விளைவுகளையும் நிறையிட்டுக் கூறு.

## ஏப்ரல், 1961

1. உள்நாட்டுப் போருக்குப்பின் அமெரிக்க ஐக்கிய நாட்டின் விரைவான பொருளாதார வளர்ச்சிக்குக் காரணங் கூறுக.

2. அமெரிக்கச் சுங்கவரிக் கொள்கையை நுட்பமாக ஆராய்ந்து மதிப்பிடுக.

3. 1930-களில் ஏற்பட்ட பெரும் பொருளாதார மந்தத்திற்குக் காரணங்கள் யாவை? அமெரிக்க அரசாங்கம் அதைச் சமாளித்த விதம் யாது ?

4. பெடரல் ரிசர்வ் பாங்கு முறையின் வளர்ச்சியைச் சித்தரி.

5. அமெரிக்கத் தொழிற் சங்க முறையை நுட்பமாக ஆராய்ந்து கூறுக.

## செப்டம்பர், 1961

1. அமெரிக்கச் சுதந்தரப் போருக்குக் காரணங்கள் யாவை ?

2. இரயில்வேக்களின்பால் அமெரிக்க அரசாங்கத்தின் நோக்கமும் கொள்கையும் எவ்வாறிருந்தன என்று விவரி.

3. அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றில் பெருஞ்சாலை அமைப்பின் இரு உயரிய காலங்களெனப்படுவனவற்றிற்கிடையே தோன்றும் வேறுபாட்டை வரைக. நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு இவை ஒவ்வொன்றின் முக்கியத்வத்தையும் விளக்குக.

4. அமெரிக்காவில் 1870-களிலும், 1930-களிலும் நிகழ்ந்த விவசாயத்தின் மிதமிஞ்சிய உற்பத்தியை மட்டுப்படுத்திக் கொண்ட விதத்தை விவரி.

5. தொழில் இணைப்புக்களின்மாட்டு அமெரிக்க ஐக்கிய நாட்டு அரசாங்கம் கடைப்பிடித்த கொள்கையை விவரி.

## ஏப்ரல், 1962

1. அமெரிக்கச் சுதந்தரப் போரின் பொருளாதாரக் காரணங்களை வரைக.

2. அமெரிக்க ஐக்கிய நாட்டில் 19-ஆம் நூற்றுண்டில் நிகழ்ந்த விவசாயப் புரட்சியின் போக்கை ஆராய்க ; அதன் விளைவுகளையும் மதிப்பிடுக.

3. அமெரிக்க ஐக்கிய நாட்டில் தொழில் இணைப்புக்கள் தோன்றியமைக்குக் காரணங் கூறுக ; அவற்றைக் கட்டுப்படுத்த அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகளையும் பரிசீலனை செய்க.

4. நியூ டீல் திட்டத்தின் தன்மையையும், நோக்கங்களையும், ஏற்பாடுகளையும் தெளிவாக விவரி.

5. அமெரிக்கப் பொருளாதாரத்தின்பேரில் இரயில்வே வளர்ச்சியினுலேற்பட்ட விளைவுகளை மதிப்பிட்டுக் கூறுக.

# கலைச் சொற்கள்

| | |
|---|---|
| அனைத்துலக இயல்பு | Cosmopolitanism |
| அடிமைகள் வியாபாரம் | Slave trade |
| அரச விசுவாசிகளின் வெளியேற்றம் | Loyalist exodus |
| அமெரிக்க விடுதலைப் போர் | American war of Independence |
| அரச கட்டளை | Royal proclamation |
| அடிமை உடைமையாளன் | Slave owner |
| அமெரிக்க ஐக்கியம் | American union |
| அளவீடு முறை | Quota System |
| அமைப்புக் கோட்டம் | Assembly line |
| அயல் நாட்டுச் செலுத்துநிலை | Balance of payment position |
| அயல் நாணயப் பரிவர்த்தனை உறுதிப்பாட்டு நிதி | Exchange stabilisation fund |
| அறிஞர் குழு | Brain trust |
| ஆன்ம சுதந்தரம் | Freedom of spirit |
| ஆதிபத்திய இலட்சியம் | Imperial ideal |
| ஆணை நாணயச் செலாவணி | Fiat Money |
| ஆயத் தீர்வை | Excise Duty |
| ஆதரவுக் கொடை | Subsidy |
| ஆன்டி-பயாடிக் மருந்து வகைகள் | Anti-Biotic Drugs |
| இடைக் காலம் | Medieval age |
| இராசதானி | Metropolis |
| இல்லத் தொழில் முறை | Domestic stage of Industry |
| இணைப்புப்பாடு | Co-ordination |
| இணக்கச் சுங்கச் சட்டம் | Compromise Tariff |
| இளந்தொழில் பாதுகாப்பு வாதம் | Infant Industry Argument |
| இரட்டை நாணய முறை | Bimetallic Currency |
| ஈடு சுவாதீன நடவடிக்கை | Foreclosure |
| உயர்தர வகுப்பினர் | Aristocracy |
| உரிமைக் காப்புக்கள் | Patents |
| உலக பாங்கு | World Bank |
| உலக மகா பொருளாதார மந்தம் | Great Depression |
| ஊக வாணிகம் | Speculation |
| ஊழி | Era |
| எலுமிச்சைப் பழவகை | Citrus fruit |
| எல்லை வாசிகள் | Frontiermen |
| எந்திரமய வேளாண்மை | Mechanised farming |
| ஐரோப்பிய மறுமலர்ச்சி | Renaissance |
| ஐரோப்பிய மறியல் | Continental blockade |
| ஐரோப்பிய கட்டுப்பாடு முறை | Continental system |
| ஐ. நா. இடருதவி மறு சீரமைப்புக் கழகம் | UNRRA |

| | |
|---|---|
| ஒதுக்கல் கொள்கை | Policy of segregation |
| ஒப்பந்தத் தொழிலாளர் முறை | Indentured labour or contract labour |
| ஒற்றைப் பாங்கு முறை | Unit banking |
| கட்சி அரசியல் | Party politics |
| கலப்பினப் பயிர்கள் | Hybrids |
| கப்பல் சபை | Shipping board |
| கருவூலம் | Treasury |
| கடனாளி நிதி முறிவு | Bankruptcy |
| கட்டுக்குட்படுத்தப்பட்ட முதலாளித்துவம் | Controlled Capitalism |
| கடன்-வாய்தா முறைச் சட்டம் | Lend-Lease Act |
| கல்லெண்ணெய் | Gasoline |
| காற்றாடி மில் | Wind mill |
| காட்சிப் பண்ணைகள் | Demonstration farms |
| கால்வாய்ப் பித்து | Canal mania |
| காப்பு இருப்பு | Currency reserve |
| கிரீன் பாக்ஸ் | Green backs |
| குதிரையாற்றல் | Horsepower |
| குடியிறக்கம் | Immigration |
| குடும்பப் புலன் சட்டம் | Homestead Act |
| குடியேற்றக்காரர்கள் | Settlers |
| குறைந்தபட்ச வரி | Minimum Duties |
| குறித்தவீத வரி | Specific Duties |
| குறித்த துறைச் செலாவணிக் கட்டுப்பாடு | Selective credit control |
| குவார்டரிங் சட்டம் | Quartering Act |
| கூட்டாட்சி ரிசர்வ் பாங்கு | Federal Reserve Bank |
| கூட்டுப்பேர முறை | Collective bargaining |
| கூட்டாட்சி அரசாங்கம் | Federal Government |
| கூட்டுப் பங்குக் கம்பெனிகள் | Joint Stock Companies |
| கூட்டுமுறைத் தொழில் அமைப்பு | Corporate form of organization |
| கூட்டுப் பாதுகாப்பு நிர்வாகம் | Mutual Security Administration |
| சட்டச் செலாவணி | Legal tender |
| சர்வாதீனம் | Monopoly |
| சர்க்கரைச் சட்டம் | Sugar Act |
| சர்க்கரைப் பிரபுக்கள் | Sugar Lords |
| சர்வாதீன முதலாளித்துவ முறை | Monopoly capitalism |
| சமூகப் பாதுகாப்பு | Social security |
| சமயத் தூதர்கள் | Missionaries |
| சமயச் சீர்திருத்தம் | Reformation |
| சான்றோர் குழு விசாரணை முறை | Trial by Jury |
| சாதக வாணிகக் கொடுப்பல் நிலை | Favourable balance of trade position |
| சீவன விவசாயம் | Subsistence farming |

| | |
|---|---|
| சுட்ட நிலக்கரி | Coke |
| சுமைதாங்கிப் பட்டை | Mass conveyor platform |
| சுங்கவரித் திட்டம் | Tariffs |
| சுங்க வரிகள் | Tariff Duties |
| சுங்கவரிச் சுவர் | Tariff wall |
| சுங்க வசூல் சாலைகள் | Turnpikes |
| செலாவணித் திட்டம் | Currency system |
| செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகள் | Weapons of credit control |
| செல்வந்தர் வகுப்பாட்சி | Aristocracy of wealth |
| செயற்கை முறைக் கருத்தரிப்பு | Artificial insemination |
| சோளம் | Corn |
| டிரஸ்டுகள் | Trusts |
| தட்டெழுத்துப் பொறி | Typewriter |
| தலமனப்பான்மை | Parochialism |
| தலைவரி | Poll tax |
| தலையிடாக் கொள்கை | Laissez-faire policy |
| தயாரிப்புத் தொழில் | Manufacturing (industry) |
| தவணை ஒப்பந்தம் | Lend-lease agreement |
| தனி நபர் தன்மை | Individuality |
| தனிமைக் கொள்கை | Isolationism |
| தானியச் சட்டங்கள் | Cornlaws |
| தானிய விலை உறுதிப்பாடு கார்ப்பொரேசன் | Grain stabilisation corporation |
| தாள் பணம் | Currency notes |
| திட்டமிட்ட பொருளாதாரம் | Planned economy |
| திறந்த தொழில் மனை முறை | Open shop system |
| திறந்த அடுப்பு முறை | Open hearth process |
| திறனுடைத் தொழிலாளர் | Skilled labour |
| தீவனப் பயிர்கள் | Fodder crops |
| துணிவு முயற்சி | Enterprising spirit |
| தேர்ந்த சாகுபடி | Specialised farming |
| தேசியத் தொழிற் சங்கம் | National Trade Union |
| தேர்ந்தெடுக்கப்பட்ட இனவிருத்தி | Selective breeding |
| தொழில் மீட்சி | Industrial Recovery |
| தொழிற் சீரமைப்பு | Rationalisation |
| தொழிலாளர் இழப்பு ஈடு | Worker's compensation |
| தொழில்களின் தன்னாட்சிக் கொள்கை | Craft autonomy |
| தொழிற் புரட்சி | Industrial Revolution |
| தொழில் அமெரிக்கா | Industrial America |
| தொழிற் கட்டுக் குழுக்கள் | Guilds |
| தொழில் ஐக்கியங்கள் | Mergers of industries |
| தொழில் தொகுப்பு | Consolidation of industries |

| | |
|---|---|
| தொழில் சேர்ப்புக்கள் | Amalgamations of industries |
| தொழில் இணைப்புக்கள் | Combinations of industries |
| தொழிலாளர் உதவிச் சங்கங்கள் | Benevolent societies |
| தொழிற் கழகங்கள் | Trade associations |
| தொழிற் சங்கங்கள் | Trade unions |
| தொழில் துணிவோன் | Entrepreneur |
| நடுத்தர வகுப்பினர் | Bourgeois |
| நடப்பு வைப்புக்கள் | Demand Deposits |
| நலவழி முதலாளித்துவம் | Welfare capitalism |
| நடுநிலைமைச் சட்டம் | Neutrality Act |
| நாட்டின் ஆண்டு வருமானம் | Annual National Income |
| நாட்டின் மொத்த ஆக்கம் | National Product |
| நாணயங்களின் மதிப்பு உறுதிப்பாடு | Currency stabilisation |
| நான்காம் பிரிவுத் திட்டம் | Point Four Programme |
| நிதித் துறை பீதி | Financial panic |
| நிலப் பகிர்ந்தளிப்பு | Land distribution |
| நிர்வகிக்கப்பட்ட நாணய முறை | Managed currency |
| நுகர்வுக் குறைவு | Underconsumption |
| பற்றிடங்கள் | Settlements |
| பற்றுரிமை | Patent |
| பண முதலாளிகள் | Financiers |
| பண வீக்க நிலை | Inflation |
| பண வடிப்பு நலக் கொள்கையினர் | Contractionists |
| பண வீக்க நலக் கொள்கையினர் | Inflationists |
| பணத் துறைக் கொள்கை | Monetary Policy |
| பண்டகசாலைகள் | Warehouses |
| பண்புடை நண்பன் கொள்கை | Good neighbour policy |
| பண்டவழிப் பெறுமான டாலர் | Commodity dollar |
| பண்ணை அடைமான மீள் நிதிச் சட்டம் | Farm Mortgage Refinancing Act |
| பன்னாட்டுச் செலாவணி நிதி | International Monetary Fund |
| பற்றாக்குறை நிதி ஆக்கம் | Deficit Financing |
| பயிர்த் தொழில் பணிமனை | Bureau of Plant Industry |
| பரந்த விவசாயம் | Extensive cultivation |
| பரிவர்த்தனை உண்டியல்கள் | Bills of Exchange |
| பங்குப் பத்திர சந்தைச் சட்டம் | The Securities Exchanges Act |
| ஃபர் தோல் | Fur |
| பழைய காலனி முறை | Old colonial system |
| பழமை விரும்பிகள் | Conservatives |
| பாதக வாணிகக் கொடுப்பல் நிலை | Unfavourable balance of trade |
| பாங்கர்களின் பாங்கு | Bankers' Bank |
| பாதுகாப்பாண்மை | Protectorate |

| | |
|---|---|
| பிணைவு டைரக்டர் முறை | Interlocking directorship |
| பிரகடனச் சட்டம் | Declaratory Act |
| பிளாங்கெட்டு விதிக்கோவை | Blanket code |
| புகலிடம் | Refuge |
| புத்தாக்கத் திறன் | Inventive genius |
| புத்தமைப்பு | Invention |
| புத்தாக்கத்திற முதலாளித்துவம் | Creative capitalism |
| புனரமைப்பு நிதிக் கார்ப்பொரேசன் | Reconstruction Finance Corporation |
| புனித விதிகள் | Canons |
| பூல்கள் | Pools |
| பேதங்காட்டும் சுமப்புக் கட்டண வீதங்கள் | Discriminating railway freights |
| பேறு | Heritage |
| பொருளாதார ஆதிபத்தியம் | Economic Imperialism |
| பொதுத் தடை உத்தரவுகள் | Blanket injunctions |
| பொது வசதிப் பணிகள் | Utility business |
| பொது வசதித் தொழில் | Public utilities |
| பொது வசதிக் கார்ப்பொரேசன் | Public utility corporation |
| பொதுநல அரசு | Welfare State |
| பொன் இருப்புப் பத்திரங்கள் | Gold certificates |
| பொருளாதாரக் கூட்டுறவு நிர்வாகம் | Economic Co-operation Association (E. C. A.) |
| போட்டி முதலாளித்துவம் | Competitive Capitalism |
| போர் உற்பத்தி சபை | War Production Board |
| போர் நிதி | War Finance |
| மக்களின் முதலாளித்துவம் | Peoples' capitalism |
| மண்காப்பு | Soil conservation |
| மதிப்பின்மூல அலகு | Standard unit of Value |
| மன்ரோ கொள்கை | Munro Doctrine |
| மறுகழிவு செய்தல் | Rediscounting |
| மறுசீராக்க நிதிக் கார்ப்பொரேசன் | Reconstruction Finance Corporation |
| மாறும் காப்பு இருப்பு விகிதம் | Variable reserve ratio |
| மிருக வேளாண்மை | Animal husbandry |
| மீட்சிப் பணப்பெருக்கக் கொள்கை | Policy of Reflation |
| முதலாக்கம் | Capitalisation |
| முதலாளித்துவ முறைச் சாகுபடி | Capitalist farming |
| முதலீட்டுப் பண்ட உற்பத்தித் தொழில்கள் | Capital industries |
| முதலுரிமைச் சட்டங்கள் (வாங்குகை) | Pre-emption Acts |
| முத்திரைச் சட்டம் | Stamp Act |
| முத்திசை வாணிகம் | Triangular trade |

| | |
|---|---|
| மூலக்கூடு | Chassis |
| மெர்க்கன்டிலிசக் கொள்கை | Mercantilist Policy |
| மேற்குப்புற முன்னேற்றம் | Westward Expansion |
| மேற்குப்புறப் பெயர்ச்சி<br>மேற்குப்புற ஓட்டம் | Westward movement |
| மையப் பாங்கு | Central Bank |
| மையத் திட்டமுறை | Centralised planning |
| யாத்திரைப் பெரியோர்கள் | Pilgrim Fathers |
| ரூஸ்வெல்ட் துணை முடிவு | Roosevelt Corollary |
| வட்டார ஆட்சி நிர்வாகங்கள் | Local Govt. Authorities |
| வர்த்தக போர்டு | Board of Trade |
| வாணிகத் துறை நீதிமன்றம் | Commerce court |
| வாணிகத் துறைப் பொது ஒப்பந்தங்கள் | General Agreement on Tariffs and Trade (GATT) |
| வாணிபக் கொடுப்பல் நிலை | Balance of Trade |
| வால் தெரு முறிவு | Wall Street Collapse |
| வாழ்க்கைத்தரம் | Standard of living |
| வியாபாரத்திற்கென்ற விவசாயம் | Commercial Agriculture |
| விலக்கம் | Suspension |
| விலைப் பேதம் | Price Discrimination |
| விலைவாசி நிர்வாக அமைப்பு | Organisation for Price Administration |
| விவசாய அமெரிக்கா | Agricultural America |
| விவசாயத் தொழில் நுண்ணியல் | Agricultural Technology |
| விவசாயப் புரட்சி | Agricultural Revolution |
| விவசாயப் பரிசோதனை நிலையங்கள் | Agricultural Experimental Stations |
| விவசாய அபிவிருத்தி விஸ்தரிப்புப் பணி | Agricultural Extension Service |
| விவசாயிகள் அணி | Farmers' Alliance |
| விவசாயத்துறை ஒழுங்குபாடு நிர்வாகம் | Agricultural Adjustment Administration (A.A.A.) |
| வேலையில்லாதோர் இடருதவித் திட்டம் | Unemployment relief |
| ஹோல்டிங் கம்பெனிகள் | Holding Companies |

# அகரவரிசை